8-1

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

திருக்கைலாயபரம்பரை,

பொம்மபுரம்.

ஸ்ரீசிவஞான பாலையதேசிகராதீனத்துச்

சிதம்பரம் ஈசானியமடம்.

ஸ்ரீமது இராமலிங்கசுவாமிகளவர்களால்

இயற்றப்பட்டது.

பதினைந்துசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துதியெழிலா ரூர்க்குரிய வன்மீக புரமெனுந்
    தொல் பெயர்தனக்கே
சூழ்தரவளஞ்சான்றப் பதிக்கொருசார்
    துன்னியபதி யிடைக்கருணை
நிதியென வதியுந் தக்ஷிணாமூர்த்தி
    நிமலதேசிகர் பரம்பரையி
னிகழுறுமுதன்மைச் சிவானந்த விபுத
    னேசமாதிய நிறைகுணத்தன்




## சிறப்புப்பாயிரம்.

பகஞ்சனத்திற் காணுறக்களுற்றின *னிபந்தான்
மதியெழுச்சியுறு மாண்புளோரொருங்கம் மலிபொ
றமுணர்ந்தவற்றின் மாட்சியினெழுகி வீடு [ருட்
பேறடைவான் வாஞ்சித்தவேட்கையேமன்னே.

---

சிதம்பரம்.

ஸ்ரீமௌனதேசிகராதீனத்துச்

செல்லப்ப சுவாமிகளால் இயற்றப்பட்டது.

திருவளர்செங்கேழ்மருமலர்த்தவிசி
னுருவளர்திசைமுகத்தொருவன்பயந்த
கடஅுடையுடஇயபுடவிமாமகட்கு
வடிவுடையிதையவாரிசமதுவாய்ப்
பஞ்சபூதங்களின்பகுதியதலங்களுள்
விஞ்சுமுற்றலமெனவிளம்பிடப்பட்டதாய்க்
காப்புடைக்கடவுடன்மாப்பெருந்தேவி
யோப்பியைம்புலனுமொருங்கியமனத்தோ
டானுவினமர்ந்தேயறந்தலைநின்று
பூணரவார்த்தபொதியிருள்களத்து
நாதனைத்தெய்வநாயகன்றன்னை

---

* விபம்-காரணம்.

# விளம்பரம்.

இதனால் சகலருக்கும் அறிவிப்பது வேதாந்தசாத்திரங்களி லொன்றாகிய ஞானசிவவாதக்கட்டளை யென்னும் சாத்திரம் கோவிலூர் சிதம்பர சுவாமிகள் மாணாக்கராகிய திருவாரூர் சிவானந்த சுவாமிகளால் வியாக்கியானம் செய்யப்பட்டு வெளிவந்துள்ளது. இது வேதாந்தநூல்கள்போல் ஒவ்வொருவருக்கும் அவசியமானது. பலநூல்களை பலகாற் பயின்று தெரிந்துகொள்ளத்தக்க எல்லா வேதாந்த விஷயங்களும் இவ்வொருநூலின் வியாக்கியானத்தை ஒருகாற் பார்ப்பதனாலேயே தெரிந்துகொள்ளத்தக்கவாறு விரிவாயும் தெளிவாயும் எழுதப்பட்டுள்ளது. உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் போடப்பட்டு நல்ல உறுதியான காலிகோபைண்டுஞ் செய்யப்பட்டது. இப்புத்தகம்வேண்டுபவர்கள் திருவாரூர் போஸ்டைச் சேர்ந்த வன்மீகபுரம் தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடத்திலும் தஞ்சை மாநகரம் வடக்குராஜவீதி வித்தியாவினோதினி பிரசிலும், சிதம்பரம் மௌனசுவாமிகள் மடத்திலும், மதுரைப்புதுமண்டபம் மு. கருப்பண்ணபிள்ளை புத்தகஷாப்பிலும், நாகப்பட்டணம் புதுத்தெரு செ. மு. அமீதுசாயப்புஅவர்களிடத்திலும் திருச்சினாப்பள்ளி புத்தகஷாப் தி. சபாபதிபிள்ளை யிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம். ஒரேதடவையில் 10 புத்தகம் வாங்குபவர்களுக்கு 1 புத்தகம்இனாம் கொடுக்கப்படும். இதன் விலை ரூ க ௨. தபால்கூலி முதலியன பிரத்தியேகம்.

இங்ஙனம்,

சிவானந்தசுவாமி.




உ

சிவமயம்.

ஓம் தத்ஸத்பிரஹ்மணேநம:

ஸ்ரீமத் சேஷாத்திரிசிவனாரருளிச்செய்த

# நானாசீவவாதக் கட்டளை

மூலமும்,

கோவிலூர்

ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள் மாணாக்கரும்

திருவாரூர்

தெக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் ஆதீனஸ்தருமாகிய

மதுரை

சிவானந்தசுவாமிகளியற்றிய

வியாக்கியானமும்.

---

ஸ்ரீமத் கோ. பொன்னம்பலசுவாமிகள்

மாணாக்கராகிய

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பராயசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

ஷை சிவானந்த சுவாமிகளால்

தஞ்சை ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

இதன் விலை ரூ ௧௨.

1905





வாதனைதிரியவழிபடப்பெற்ற
காரணமுறுதலிற்கமலாலயமென
வாரணமொழிதருமமலமேவியதாய்
நிகிலமும்புரக்குநீணெறியாதிய
வகிலமும்புரக்குமரசர்கடெளிவான்
செம்பொற்றியாகராயப்பெயர்திகழ்தர
வம்பொற்றவிசினரியணைமீமிசை
பரசமர்கரதலப்பண்ணவனுலகெலாம்
பரசுறவனுதினமரசுவீற்றிருப்பதாய்
வினையாலணைதராமெய்ப்பொருள்வெஃகாது
வினையாலணைதருமெய்ப்பொருள்வெஃகி
நேமிவான்கறங்கெனநிலைதடுமாறுபு
பூமியந்தரசுவர்க்கங்களிற்புகுதா
வலைதருபவத்தொடர்பார்ந்ததோர்பிறப்பினி
லுலைதரலகற்றுபுவுறுகதியளிப்பதாய்
விளங்குறுஞ்செல்வவளங்கொளாரூரிற்
றுளங்குவன்மீக்களங்கமில்புரத்திற்
றிகழுறுஞ்சீர்சாறெக்ஷிணாமூர்த்தியின்
புகழுறுமடத்தின்பொற்பமர்தலைவ
னரியவேதாந்த






தவமருள்பொறுமைதக்கசீர்வாய்மை
பவந்தெறுதூய்மைபான்மையினேய்ந்தோன்
சிவானந்தத்தேசிமிழ்ப்புறுசிந்தையி
னவானந்தச்செய்சிவானந்தநாம
மிடுகுறியன்றுகாரணக்குறியென்னப்
படுகுறியாகப்படைத்துயர்பரிசினன்
தாமின்புறுவதுலகின்புறக்கண்டு
காமுறநுறுவர்கற்றறிந்தாரெனும்
மெய்மமொழிப்புலவர்தம்வியனுரைப்படியே
சேய்முறையிதுவெனச்சிந்தையினுடிச்
சேடாத்திரிசிவனெனப்பெயர்சிறந்த
வாடாத்தவமுறுவாய்மையனுரைத்த
கட்டளையென்னுங்காமருநூற்குப்
பெட்புறவெவரும்பேருரைசெய்து
கற்பவருளமிகக்களியொடுமிளிர
விற்பனர்தானனிவிருந்தாட்டயரக்
கிளக்கரும்பொருணுணுக்கங்கண்மீக்கிளர
விளக்கலிற்றம்புகழ்விளக்கினனிலத்தே



திருச்சிராப்பள்ளி தாலூக்கா திருநயம்
பிரஹ்மஸ்ரீ அ. நரசிம்மபாரதியாரவர்கள்
இயற்றிய.
(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

நீர்தூக்கு நிலவலையத்துயிர் பாசம்
  வீட்டியின்ப நிலைமைத்தாய
பார்தூக்குமைம் பூதப்பான்மைய
  தூலத்தனுவின்பரிசுகாட்டிச்
சீர்தூக்குஞ்சே ஷாத்ரியெனும்
  பெரியோன் சொன்னசைவவாதங்
கூர்தூக்குங்கட்டளைக்குக் கொண்டபொரு
  டெருட்டிவிக்குங்கொள்கையெண்ணி. (1)

கோடன்மரபேய்ந்துற மாணவகருக்கல்லா
  லுண்மைகுறிக்கொணமை
யாடலினுற்றனதனு பூதிச்சுருதியருத்த
  மெலாமாங்காங் குற்ற
வேடகத்துமெழுத வொணம னேலயத்தை

## சிறப்புப்பாயிரம்.

### கோவிலூர்.

ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள் மாணாக்கர்களிலொருவராகிய

புதுவயல் ஸ்ரீலஸ்ரீ

**அழகப்பய்யா அவர்கள் இயற்றியது.**

### வெண்பா.

சீரார்கமலைத் தெக்ஷி ணாமூர்த்திமர
பாராரிய சிவானந்தனாய்ந்—தோருபொருள்
செய்தளித்த னன் ஞானசிவவாதக் கட்ட
ளையிதுவென் னானு மென்னவாம்.





## நூலின்வரலாறு.

தெக்ஷிணகைலாயமெனப் புராணாதிகளிற் கூறப்படும் ஸ்ரீ. காளத்திப்பதியின்கண் மறையவர்குலத்தி லவதரித்துச் சேஷாத்திரி சிவனாரெனும் பிள்ளைத்திருநாமமுற்ற வோர் தவசிரேட்ட ரிளமையிற்றானே வடமொழியில் வல்லுனராய், அறிவு, அடக்கம், வைராகமாதிய சற்குணங்களைப் பொருந்திப் பதினாறு வயதுக்குள் அரிய அற்புதங்கள் தம்பாற்றோன்ற ஞானசூரியனாய் விளங்கிக் கொண்டிருந்தனர். பின்னர்த்தாமின்புறல்போ லுலகின்புறும்வணங் கருணைகூர்ந்து பொன்முகரிதீரத் தெழுந்தருளி யாங்களவில் மாணவர்கட்கு ஞானோபதேசங்கள் செய்து வேதாந்த சாஸ்திரார்த்தங்களை யினிதுவிளக்கும் பலநூல்களியற்றியதோடு பாலகர்கட்குமெளிதிற் போதமாகும்நிமித்தந் தைத்திரீய சாந்தோக்கியமாதிய வுபநிடதானுசாரமாக ஞானசிவவாதமென்னு மோரரிய கிரந்தம் வடமொழியி லியற்றியருள அதனையவர் மாணாக்கர்களிற் சிறந்தவரும், வடமொழியிலும், தென்மொழியிலும் வல்லாருமாகிய நாராயணசிவனா ரென்பவர் நமஸ்கரித்து சுவாமி இவ்வரிய கிரந்தம் தென்மொழியினுமிருப்பின் தென்னாட்டவர்கட்கும் பயன்படுமென்றெண்ணுகின்றனன் இதனைத் திருவுளம்பற்றவேண்டுமென்ன ஆசிரியர் அங்ஙனமாயின் நம்முன்னர் நீயே மொழிபெயர்க்கக்கடவாயென் றருளினர். அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டங்ஙன மொழிபெயர்த்து ஞானசிவவாதமென்னும் பெயரையே வைத்துத் தமது ஆசிரியராற்றானே ஈதும் வெளிப்பட்டதாகக் கூறியருளினர். அது காரணமாகவே இந்நூலானது சேஷாத்திரிசிவனாரால் தென்மொழியில் அருளிச் செய்யப்பட்டதாக வழங்கிவருகின்றது.

உ

# அறிவிப்பு.

அகண்டபரிபூரண சிதாகாச சொரூப பரமகிருபாநிதியாகிய சிதம்பரதேசிகன் திருவடித்தொண்டர்களிலொருவன் போலபிநயித்துக் காட்டிக்கொள்ளாநின்ற கல்வியறிவின்றிய ஏழைமதியிற் சிறந்த எனது சித்தத்தில் சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞையோடுகூடிய சுவாநுபூதிமான்களாயுள்ள பெரியோர்களால் வியாக்கியானஞ் செய்யத்தக்க வேதாந்தசாஸ்திரங்களி லொன்றாகிய நானாசீவவாதக்கட்டளையென்னும் இந்நூலுக்குப் புகழ் விரும்புதலாதிய உலக வாசனா ஸம்ஸ்காரம்பற்றி வொன்றினாலு மறிபடாமல் அதிகரித்தெழுந்த ஆசையால் வியக்கியானஞ் செய்துளேன். பெரியோர்கள் சிறுவர்கள் வசனிக்கும் வழுக்களுள்ளனவாகவும் நிரம்பாமொழிகளாகவுமுள்ள மழலைச்சொற்களைக்கேட்டு வெறுப்புறாமல் வழுக்குகளில்லனவாகவும் நிரம்பியமொழிகளாகவுமுள்ள தெளிசொற்கட்காண பொருள்கொள்வதுபோலும், மேகமானது சமுத்திரசலத்தைக் கைக்கொண்டு அதிலுள்ள உவர்ப்பிணிநீக்கி நன்னீராக உலகமுய்யும்பொருட்டு வருடிப்பதுபோலும் பெரியோர்கள் இவ்வியாக்கியானத்திலுள்ள சொற்குற்றம் பொருட்குற்றமாதிகளை நோக்கி வெறுப்புறாமற் கைக்கொண்டு குற்றங்களை நீக்கிக் குணமுள்ளதாக அதிகாரிகளுய்யும்பொருட்டு கிரு



பையோடு போதித்தருளவேண்டுமெனவும் அதிகாரிகட்கு இந்நூலிற் பிரவிருத்தி யுண்டாகும்நிமித்தம் ஆவசியகமாகக் கூறவேண்டிய அநுபந்த சதுட்டயம் சாதன சதுட்டயங்களை முன்னர் விரித்திருப்பதோடு இந்நூலிலில்லாத சிற்சில அருத்த விசாரங்களை வேறு நூன்முகமாக விசாரித்துத் தெரிந்து கொள்ளுஞ் சாமர்த்தியமின்றிய மந்தாதிகாரிகளும் இந்நூலிற்றானே எளிதாகத் தெரிந்துகொள்ளும்நிமித்தம் சமயம் நேர்ந்தபோது நேர்ந்தபோது ஒரோரிடத்து விரிக்கப்பட்டிருப்பதையும், மற்றொன்றுவிரித்தலென்னுங் குற்றத்துக் கிலக்காக்காமல் அங்கீகரித்துக்கொள்ளவேண்டுமெனவும் பிரார்த்திக்கின்றேன்.



உ

## அநுபந்தசதுட்டயநிரூபக
## விஷய அநுக்கிரமணிகை வினு.







முற்றும்.

## சாதனசதுட்டயநிரூபக விஷய அநுக்கிரமணிகை. வினு

முற்றும்.

வினா





வினா

முற்றிற்று.

## திதிநிரூபகவிஷய அநுக்கிரமணிகை.

முற்றும்.

## அபவாத நிரூபக விஷய அநுக்கிரமணிகை.

முற்றும்.

## தத்துவவிவேசன நிருபக விஷய அநுக்கிரமணிகை.

முற்றும்.

சீவன்முத்தி நிருபக விஷய அநுக்கிரமணிகை.

முற்றும்.

உ

சிவமயம்

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 18 | முள்ளதுரபி | முள்ளதுபிர |
| 10 | 14 | பிரஹ்மாத்தம் | பிரஹ்மாத்ம |
| 11 | 17 | தாய்ப்சைத்தி | தாய்சைத்தி |
| ,, | 20 | நிவிருத்தி நிவிருத்தி | நிவர்த்தி-நிவர்த்தி |
| ,, | 21 | நிவிருத்தி | நிவர்த்தி |
| ,, | 22 | நிவிருத்தி | நிவர்த்தி |
| 12 | 1 | நிவிருத்தி | நிவர்த்தி |
| ,, | 2 | நிவிருத்தி | நிவர்த்தி |
| 22 | 8 | பலத்தால | பலத்தால் |
| 26 | 2 | யாது | யாதினுல் |
| 31 | 13 | மயானப்பிரசவ | மயாணபிரசவ |
| 34 | 6 | சவுக்கினும் | சவுக்கிஞனும் |
| 42 | 21 | தமஞ் | சமஞ் |
| ,, | 22 | சமஞ் | தமஞ் |
| 44 | 18 | 2 | 32 |
| 47 | 1 | முமூட்சுவத்திற்கு | முமுட்சுவத்துவத்திற்கு |
| 55 | 14 | 5 | 57 |
| 63 | 4 | கங்களடைந்து | கங்களையடைந்து |
| 71 | 4 | உலகமடை | உலகமுமடைந்து |
| 74 | 13 | புளுகா | புழுகா |
| 75 | 12 | பலபல | பலம்பல |
| 79 | 16 | ஆரம்பிய | ஆரப்பிய |
| 82 | 7 | யது | யதும் |



| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 84 | 12 | தத்தினுள்ள | தத்திலுள்ள |
| 85 | 2 | 38 | 33 |
| ,, | 22 | அஞ்ஞானதற் | அஞ்ஞானம் அஞ்ஞானதற் |
| 90 | 16 | பிரா கவமாவ | பிராகபாவம் |
| 92 | 17 | 47 | 48 |
| 94 | 10 | து ரா | துவாரா |
| 96 | 2 | ரோக்ஷமாயிருத்தலின்<br>அறியப்பட்டதெனும்<br>புத்தமாமென | ரோக்ஷமாய் எக்காலத்<br>தும்புத் என்னும் அறி<br>வுவடிவமாக இருத்தலி<br>னென |
| ,, | 8 | கலும்மை | கடம்மை |
| 97 | 17 | ஏகச்சக்கிராதி | ஏகசக்கிராதி |
| 100 | 6 | வெதமறு | வேதமறு |
| 107 | 15 | தீம | தீய |
| 108 | 22 | 74 | 73 |
| 111 | 2 | சுககில | சுக்குல |
| ,, | 16 | பலங்களின்பாவம் | பலஙகளினபாவம் |
| 118 | 18 | துள்ளது | நதுள்ளதும் |
| 124 | 6 | நாம | புாம் |
| 128 | 14 | வன்னியில்லை | கையில்லை |
| 129 | 10 | மரணஞ்செய்து ஆவொப்<br>புடமையுடைய பிண்ட<br>த்தைப்பார்த்தபின் இது<br>மரையென | மரணானந்தரமிதுமரை<br>யென |
| 140 | 9 | வுன்றேயாகும் ஆதலால் | ஆதலால் |
| 144 | 10 | பிரமாணந்தமென் | பிரமானந்தரென் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 145 | 17 | பூரணமயமாகி | பூரணமயமாக |
| 147 | 3 | உலகாயதம் | உலகாயிதம் |
| 150 | 11 | வஸ்துவிஞற்ப | வஸ்துவிஞனும் |
| 166 | 1 | பின்னமமையாதி | பின்னமாயி |
| 170 | 15 | பிரஹ்மும் | பிரஹ்மமு |
| 171 | 2 | பிரஹமும் | பிரஹ்மமும் |
| ,, | 16 | ராஜஸ் | ராஜஸ |
| 172 | 4 | குணசஹிதரா | குணசஹிதஞ |
| ,, | 22 | சகிப | சகித |
| 173 | 1 | விஞ | விடை |
| 175 | 22 | பொய்யுருவினது | ொய்யுருவி |
| 176 | 4 | விரோதமின்மையின் | விரோதமானமையின் |
| 186 | 4 | ஒந்திரி | அந்தரி |
| 190 | 11 | அதஞல் | அவஞல் |
| 195 | 16 | சாமேயனென்பதுநாய் | சாரமேயனென் பதுசாதிப்பெயர்(அதாவது நாய்) |
| 204 | 7 | முக்த்தசிவஞகுமெளின் | துக்க சிைனராகுமெ |
| 206 | 5 | சாமக்கிரிகள் | சாமக்கிரிகைகள் |
| ,, | 12 | விடிற்சோ | மன்றிச்சோ |
| 208 | 15 | தேமன்னு | தமென்னு |
| 209 | 20 | இயல்ப | இயல்பா |
| 217 | 4 | முழுதனேயும் | முழுவதையும் |
| ,, | 14 | தாமத | இராஜத |
| ,, | 22 | யுடையவன் | யடைவன் |
| 218 | 17 | சொல்லப்பட்டது | சொல்லப்பட்டன |



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 231 | 4 | அவைகளுக்கு | அவைகளை |
| 232 | 1 | சட்வித | சடுவித |
| ,, | 7 | சட்வித | சடுவித |
| 235 | 6 | ஷட்வித | சடுவித |
| 244 | 21 | சத்தியில் | சத்தியால் |
| 250 | 2 | சாரோபநித்து | சாரோபநிஷத்து |
| ,, | 9 | நிவிருத்தி | நிவர்த்தி |
| 253 | 6 | சிஷயர் | சிஷ்யர் |
| 254 | 12 | சரீரத்தியம் | சரீரத்திரயம் |
| 264 | 3 | அந்தக் | அந்தர் |
| 278 | 12 | போதவா | போதகவா |
| 281 | 11 | விஷயம் | ட்ட |
| 289 | 8 | விஷப்பபிரஞ்ஞை | விஷயப்பிரஞ்ஞை |
| 292 | 14 | சத்துவாமச | சத்துவாம்ச |
| 299 | 18 | உதானவென | உதானமென |
| 306 | 6 | சாதங்கள் | சாதனங்கள் |
| ,, | 16 | இடமாகு | இடவாகு |
| 310 | 13 | ஆச்காரணம் | ஆக்கிராணம் |
| ,, | 17 | சப்த்தருபங்களை | சப்த்தருபகந்தங்களை |
| 314 | 3 | உவமேயமும் | உபமேயம் |
| ,, | 17 | ச:ணப்படா | காணப்படா |
| 315 | 5 | வங்கி | வாங்கி |
| 318 | 16 | மெளின் | மெனின் |
| ,, | 12 | குழிருதி | குழியாதி |
| 320 | 10 | யதிரம் | உதிரம் |
| 323 | 3 | திருக்கவினென | திருத்தவினென |
| 331 | | | |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 333 | 7 | களபடையும் | களையடையும் |
| ,, | 21 | பட் | பட்சி |
| 337 | 5 | கரையுண்டாயி | கரையுண்டாயின் |
| 339 | 10 | சரீரத்திரங்களை | சரீரத்திரயங்களை |
| ,, | 17 | பொருளாகயிரா | பொருளாக இரா |
| 340 | 6 | சுசது | சுகது |
| ,, | 17 | தெளியுருனெ | தெளிவுருனெ |
| 349 | 2 | மின்மையதாய் | மின்மையதாயு |
| 350 | 8 | மனுஷடனென் | மனுஷ்யனென் |
| 352 | 14 | அன்னிமக | அன்னியமாக |
| ,, | 19 | டுவால் | டுவதால் |
| 355 | 15 | அகம்விரு | அகவிரு |
| 357 | 10 | அன்னியமெனின் | அனனியமெனின் |
| ,, | 12 | பிராணனென | என்பிராணனெ |
| ,, | 21 | யுமள்ள | யுமுள்ள |
| 358 | 8 | அறியாத | அறியாதத் |
| ,, | 12 | வென்பரோ | வென்பரே |
| 361 | 17 | அகம்விரு | அகவிரு |
| 363 | 9 | அன்னியம் | அனனியம் |
| 364 | 11 | வென்றும் | வென்னும் |
| 379 | 11 | கின்றமையென | கின்றமையின் |
| 382 | 18 | அன்னியம் | அனனியம் |
| 384 | 17 | பிரதிவிம்பித்திராநின்ற | பிரதிவிம்பமாகவுள்ள |
| 401 | 19 | செம்புப்பத்திரோ | சேம்புப்பத்திரோ |
| 413 | 5 | மதுர | மதுர |
| 218 415 | 6 | ஆகிரய | ஆசிரிய |



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 415 | 21 | தாளமொலி | தாளவொலி |
| 428 | 2 | தைபிற்பாய்பு | தைப்பாம்பு |
| 434 | 3 | சிறியவாகிப | சிறியனவாகிய |
| 441 | 3 | பரிச்சன்ன | பரிச்சின்ன |
| 455 | 3 | பிருதியாதி | பிருதிவியாதி |
| 467 | 20 | தோன்றுமே | தோன்றுமோ |
| 476 | 3 | இருப்பின் | இரும்பின் |
| 484 | 16 | ரஜசு | ரஜம் |
| 489 | 4 | பூரவமா | பூரவதமா |
| 498 | 13 | விசுமென | விதமன்றென |
| 499 | 18 | திபண—விசேட | பண—விசேடத் |
| 501 | 1 | பண்ணிா | பண்ணிய |
| ,, | 18 | வளினு | வங்களினு |
| 507 | 2 | பொருளைவைத்துவலு | பொருளைவலு |
| 508 | 15 | மிகுந்து | மிருந்து |
| 519 | 21 | பிரமயா | பிரமையா |
| 521 | 9 | அவித்தைவித்தை | அவித்தை அவித்தை |
| 522 | 4 | வாச்சியத்துக்கு | வாச்சியார்த்தத்துக்கு |
| 526 | 19 | இடண்டாவது | இரண்டாவது |
| 531 | 6 | பிரஹ்மண | பிராமண |
| ,, | 15 | கிர்குண | நிற்குண |
| 538 | 2 | கூறுகின்றனமை | கூறுகின்றமை |
| ,, | 14 | புத்திரவா | புத்திவா |
| 560 | 15 | தனுமாசி | தனுமானசி |
| 597 | 14 | ஆச்சிரகு | ஆச்சிரமரு |
| 598 | 19 | சிவன்முத்திசுக | சீவன்முத்திச்சுக |

| பக்கம். | வரி, | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 615 | 18 | அடிக்கி | அடங்கி |
| 639 | 13 | யேதிரும்ப | யைத்திரும்ப |
| 646 | 1 | கொன்றுன்று | கொன்றுமுன்று |
| 648 | 20 | நிருவிசற்பக | நிருவிகற்பச |





| பக்கம் | பிழை. | திருத்தம். |
|---|---|---|
| 487 | ௪. அபவாத | ௫. தத்துவவிவேசன |
| 503 | ௪. | ௫. |
| 511 | (௪௫) | (௪௬) |
| 5.3 | ௪. (௪௫) | ௫. (௪௬) |
| 515 | (௪௫) | (௪௬) |
| 517 | (௪௫) | (௪௬) |
| 519 | (௪௪) | (௪௬) |
| 521 | (௪௫) | (௪௬) |
| 523 | (௪௫) | (௪௬) |
| 525 | (௪௫) | (௪௬) |
| 527 | (௪௪) | (௪௬) |
| 529 | (௪௩) | (௪௬) |
| 531 | (௪௩) | (௪௬) |
| 533 | (௪௩) | (௪௬) |
| 535 | (௪௪) | (௪௬) |
| 537 | (௪௩) | (௪௬) |
| | (௪௩) | (௪௬) |
| 539 | (௪௩) | (௪௬) |
| 541 | அபவாத (௪௩) | தத்துவவிவேசன ௪௬) |
| 543 | (௪௪) | (௪௬) |
| 547 | | ௬. |
| 551 | ௫. (௪௪) | ௬. (௪௭) |
| 553 | (௪௫) | ௬. (௪௭) |
| 555 | ௫. (௪௫) | ௬. (௪௭) |
| 557 | ௫. (௪௫) | ௬. (௪௭) |
| 559 | ௫. (௪ ) | (௪௭) |

உ

சிவமயம்.

ஓம்பரப்பிரஹ்மணேநமஃ

சிதம்பரதேசிகன் திருவடிவாழ்க.

# நானசிவவாதக்கட்டளை வியாக்கியானம்.

## பாயிரம்.

:-:-:0-:-:

### கடவுள் வணக்கம்.

பிரணவப் பொருளாய் நிற்கும் பெற்றியன் கணேசன்றேவ ர்
கரணமின் புறவே சூரைக்காய்ந்தருள் குமரன் றாயோ ர்
மரணமுற் பவங்கணீக்குமகேசன் மாலயனின்னோர்க ள்
சரணவாரி சங்கடம்மைச் சந்ததஞ் சிந்தை செய்வா ம்.

### வியாசாசாரியர்கள் வணக்கம்.

திகழு மிருக்கெசுர்சாம மதர்வண நான்காகத்திருமறையை வகுத்தவையின் பொருள் கணனிவிளங்கத், தருபிரமசூத்திர நற்கிரண வொளி பரப்பித்தமமெனுமோர் பேரிருளைச் சலனமிலா ஞானப், பகலவனாயிருந்த கற்றியதிச்சுகமெவர்க்கும் பாலிக்கும் வியாசகுரு பதமலரொஞ்சிரத்தில், மகிழுற வைத்தானந்த நடனமிட்டுத் தூயமலர் தூவியருச்சித்து மனத்தினும் வைப்பாமே.

## சங்கரபகவத்பாதாசாரியாள் வணக்கம்.

பரமதிமிரமகற்றிடுஞானபாஸ்கரனெனப்பவக்கடற்
குத், திரமுறுவிசாலப்புணை யெனவெழுந்து செகமெலாந்
தெளிவு பெற்றோங்கச், சரத நன்ஞான வருள்செயும் பரம
சங்கரகுரு பதமலரொஞ், சிரமதிற்றாங்கிப் பூசனைபுரிந்துதி
னந்தினம் பணிகுதும்யாமே.

## உகந்ததேசிகர் வணக்கம்.

சகந்தன தறிவிற் கிதரமின்றென்னத்தனி மறை முழங்கி
யபடியே, யிகந்தனிற்சித்தசுத்தியரொவர்க்கு மெழிற்சராமலக
மாயுணர்த்தச், சுகந்தரு நிதியாய்ச் சச்சிதானந்த சொரூபமா
ய்ப்பொருள்வை மாககர்வா, மூகந்த தேசிகன்றனெண்மலர்ப்
பதத்தை யுளத்திவைத்தனுதின முனுவாம்.

## முத்திராமலிங்கதேசிகர் வணக்கம்.

சுத்தமதாய்ப் பூரணமாய்த் துரியா திதச் சுயஞ்சுடரா
யெவ்வுயிர்க்குத்துணையாய் நிற்குஞ், சத்தியமாய்ச் சுகமயமாய்
நிமலஞான சற்குருவாய் விளங்கு முத்திராமலிங்கப், புத்தமு
தாமெமது பெருங்கருணைவாழ் வின்பொற்பு நிறைபதமலர்கள்
சிரமேற்கொண்டு, நித்தியமும் நடம்புரிந்து துதிகள்பாடி நெ
[illegible]னில் வைத்தயராமனினைகுவோமே.



## சிதம்பரதேசிகன் வணக்கம்.

ஆரணமாதிகளனைத்து மறிதற்கொண்ணு வரும்பொருளா
ய்ச் சாந்தமதாயனைத் தினுக்குங், காரணமா யுயிர்க்குயிராயறி
வாயின்பக் கட லுருவாயெவற்றினையுங் கடந்த நித்த, பூரணமா
யிருந்தும் பேருளாலென்றன் புன்மதியை மருட்டிய பொ
ய்ப் பொருளை யெல்லாஞ், சீரணஞ் செய்தாட்கொள்ள வெளி
வந்துற்ற சிதம்பரதேசிகன் மலர்த்தாள் சிரமேற் கொள்வாம்.

## தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் வணக்கம்.

ஒருருமோருருவுமோர் பெயருமுணாத்தற் குவமையுமில்பி
ரமமதாயிருந்துமுனமருளாற், சீரூர் கல்லாலடி யிற்சனகாதிக
ட்காத்திருவுருக் கொண்டது தானென்றறிய விந்நாடனிலு, மே
ரூரப் பெயர் பூண்டுதிகம்பரனுயடிய ரெவரும் வழிபட்டரிய
முத்தியுறக்குருவா, யாரூரின்பாலொளிர் வன்மீக புறத்தெழி
லாயமர்ந்த தக்ஷிணாமூர்த்தி யடியிணை போற்றிடுவாம்.

## இதுவுமது.

முத்துக் கக்கடல் கடத்தும் புணையதாகி மோனமெலாங்
கடந்த பரமோனமாகி, யெத்திக்கும் நிறைந்த பரிபூரணமாகி
யிகபரமா முலகனைத்து மெழுதற்கான, வித்துக்கும் வித்தாகிப்
பரமாய்ச் சுத்தவெளியாகி வன்மீகபுரத்தின்மேவிச், சத்துச்
சித்தானந்த மயமாய் நிற்குந் தக்ஷிணாமூர்த்தி பதந் தலைமேற்
கொள்வாம்.

## அவையடக்கம்.

பருதிவிளக் குறுசகத்தை மின்மினிதான் விளக்க வெழு பான்மை போலச், சுருதியுணர் பெரியோர்கள் விரித்துரைக் கத்தக்கதுவாய்த் துலங்கு மிந்நூற், பொருளதனைக் கல்வியறி வின்றிய யான் விரித்துரைக்கப் புகுந்தோவென், மருள தனை யாவர்கட்கும் வெளிப்படையாய்க் காட்டினனிவ் வையத் தன்றே.

## கோ. பொன்னம்பல சுவாமிகளியற்றியது.

### நூலாசிரியர் பெயர்.

இப்பியினிடையே யெழுமிரசதம்போலென்றுமா யிலகி யின்பாகி, யொப்பிடவேது மின்றிய பிரமத்துற்றிடும் பகுதி முன்னாட், அப்பிரபஞ்ச முறைமையைத் தூல அருந்ததிநியாயமே யென்னச், செப்பினன் யாருந்தெளிவுறச் சேஷாத்திரி சிவனென்னு மாதவனே.

---



உ

ஓம் பரப்பிரஹ்மணேநம:

சிதம்பரதேசிகன் திருவடிவாழ்க.

# நானாசீவவாதக் கட்டளை

## வியாக்கியானம்.

---

## அநுபந்தசதுட்டயநிரூபகம்.

### அவதாரிகை

ஔடதத்தைக்கண்ணுற்றபோது இது இன்னஔடதமென்றும் இத்தன்மையகுணங்களையுடையதென்றும், இதைப் புசிக்கத்தக்கவர்களின்ன வியாதியாளர்களென்றும், தெரிந்து கொள்ளும்பரியந்தம் அதனை எவரும் புசித்தற்கு முயற்சியார்கள். அதுபோல, இது இன்னசாத்திரமென்றும் இதன் விஷயாதி அனுபந்தங்களிவை யென்றும் தெரிந்துகொள்ளும்பரியந் தமிச் சாத்திரத்திலதிகாரிகள் பிரவிருத்தியார்கள். அதுபற்றி இச்சாத்திரத்துக்குரிய அநுபந்தசதுட்டயங்கள் இவையென அதிகாரிகட்கு அநாயாசமாகப்போதமாகும் நிமித்தம் அவற்றைக் குருசிடசம்வாதரூபமாகவெளியிடக்கருதி முன்னர்ச் சாத்திரப்பெயரும் அப்பெயர்ப்பொருளு முணர்த்துகின்றார்:—

வினா:—இந்நூலின் பெயர் யாது? (1)

விடை:—நானாசீவவாதக்கட்டளையென அறிக.

வினா:—இந்நூலுக்கு நாநாசிவவாதக் கட்டளையெனப் பெயர் கூறியது எதனால்? (2)

விடை:—வாதியென்பவன் செம்பு முதலியவற்றிலுள்ள களிம்புமுதலிய மலினங்களைப் பரிசனவேதியால் வேதித்து அச்செம்பு முதலியவற்றைச் சுவர்ணமாகக் காணுதல்போல் ஆக்மசொரூபமாகிய தன்னிடத்தில் அத்தியாசமாகத் தோன்றிய "நான் கர்த்தா, போக்தா, ஞாதா" வெனல் முதலியநாநாவித சீவத்துவங்களை "நான் அகர்த்தா, அபோக்தா, அசங்கன், சின்மாத்திர" னென்னுந்தத்துவஞானத்தால் வாதித்துத் தன்னைச் சச்சிதாநந்த சிவசொரூபமாகத் தரிசித்தற்குரிய முறையைக் கிரமமாகப் போதிக்கின்றமையினென அறிக.

வினா:—அங்ஙனமாயின் செப்பாதிகளிலுள்ள களிம்பாதிய மலினங்களைக் கெடுத்தற்கு வாதியானவன் காரணமாயிருத்தல்போலத் தன்பாற்றோன்றிய சீவத்துவாதி மலினங்களைக் கெடுத்தற்கு வேறு காரணன் வேண்டுமேயெனின். (3)

விடை:—செம்பாதிகள் சடமாதலின் அவை தம்பாலுள்ள களிம்பாதி மலினங்களைக் கெடுத்தற்கு வேறுகாரணன் வேண்டின. ஆத்மாவாகிய தான் சித்தாதலால் தன்... த்தோன்றிய சீவத்...



அவதாரிகை.

இந்நூலாசிரியர் கூறாதுவிடுத்த இந்நூலுக்குள்ள அநுபந்த சதுட்டயங்களிவையென அதிகாரிகளறிந்து நூலிற் பிரவிருத்திக்கும் நிமித்தம் பிரசிநோத்தரரூபகமாக வுணர்த்தப்படுகின்றன.

வினா:—இச்சாத்திரத்துக்கு அநுபந்தங்களுளவோ? (4)

விடை.—விஷயம், சம்பந்தம், பிரயோசனம், அதிகாரிகளென நான்கநுபந்தங்களுளவென அறிக.

வினா:—இச்சாத்திரத்துக்குள்ள விஷயம் யாது? (5)

விடை:—சீவப்பிரஹ்ம அபேதமாகியஐக்கியம் விஷயம்.

வினா:—இச்சாத்திரம் சீவப்பிரஹ்ம அபேதங்கூறுதல்போலச் சகசீவபரங்களாகிய ௬-தத்துவங்களின் பேதங்களையுங் கூறுவதாயிருக்க இந்நூலுக்கு விஷயமாகச் சீவப்பிரஹ்ம அபேதத்தைமாத்திரங்கூறி மற்றத் தத்துவங்களின் பேதங்களைக் கூறாது விடுத்ததென்னை? (6)

விடை:—கானலிற் சலந்தோன்றியபோது சலத்தோற்றங் கற்பிதம்; அது கானலையன்றி யோர்பொருளன்றென அபவாதித்து இருப்பது கானலேயென்று திடமாக அறிந்த புரு...

கிய நடு-தத்துவங்களும் கற்பிதமாகத் தோற்றுகின்றன. தோற்றினும் அத்தோற்றம் பிரஹ்மத்தையன்றி யோர்பொருளாக இல்லையென அபவாதித்து இருப்பது பிரஹ்மமே, அந்தப் பிரஹ்மமே சிவனென்று சித்தாந்தஞ்செய்கின்றசாத்திரத்துக்குச் சிவப்பிரஹ்மஐக்கியமே விஷயம்; மற்ற நடுதத்துவங்களும் விஷயமல்ல; அவற்றின் பேதங்களும் விஷயமல்ல.

வினா:—சம்பந்தம் யாது? (7)

விடை:—சம்பந்திகளின் வேறாய் இருபொருள்களினுமுள்ளதாய் ஒன்றையொன்று பற்றியுள்ள இணைக்கம், அல்லது ஒற்றுமையென்னும் உணர்ச்சியைத் தருவது.

வினா:—அஃதெத்தனைவிதம்? (8)

விடை:—பிரதிபாதகப்பிரதிபாத்தியபாவம், ஜநகஜந்யபாவம், கர்த்திருகர்த்தவ்வியபாவம், பிராபகப்பிராப்பியபாவமெனப் பலவிதமாம்.

வினா:— இவைகளெவைகளுக்குள்ள சம்பந்தங்களெனின். (9)

விடை:—சாத்திரத்துக்கும் விஷயத்துக்குமுள்ளது பிரதிபாதகப் பிரதிபாத்திய பாவசம்பந்தம். சொல்லுகிறது பிரதிபாதகம். சொல்லப்படுகிறது பிரதிபாத்தியமாதலின் விஷ[illegible]க விளங்கச்சொல்லுகிற சாத்திரம் பிரதிபாதகம்; [illegible]ப்படுகிற விஷயம் பிரதிபாத்தியமாம். சாத்திரத்துக்



கும் ஞானத்துக்குமுள்ளது ஜனகஜந்ய பாவசம்பந்தம். உற்பத்திசெய்கிறது ஜனகம், உற்பத்தியாகிறது ஜந்யமாதலின் சாத்திரம் விசாரமூலமாக ஞானத்தை யுற்பத்திசெய்கின்றமையால் ஜநகம். ஞானம் விசாரமூலமாக உற்பத்தியாகின்றமையால் ஜந்யமாம். அதிகாரிக்கும் விஷயத்துக்குமுள்ளது கர்த்திருகர்த்தவ்விய பாவசம்பந்தம். செய்கிறவன் கர்த்திரு செய்யத்தக்கது கர்த்தவ்வியமாதலின் விசாரஞ்செய்யும் அதிகாரி கர்த்திரு; செய்யத்தக்க விசாரம் கர்த்தவ்வியமாம். அதிகாரிக்கும் பலத்துக்கு முள்ளது பிராபகப்பிராப்பியபாவசம்பந்தம். அடைகிறவன் பிராபகன் அடையப்படுகிறது பிராப்பியமாதலின் பலத்தையடைகிற அதிகாரி பிராபகன் அடையப்படுகிற பலம் பிராப்பியமாம். இவற்றையன்றி வேறு சம்பந்தங்களுமுள.

வினா:—அதிகாரித்துவம் விஷயம் பலமாகிய மூன்றும் அறிந்தநுட்டித் தடையவேண்டியவைகளானமையால் அவைகளையனுபந்தமாகக் கூறியது உபயோகமாம். அறிந்தநுட்டித் தடையவேண்டியதல்லாத சம்பந்தத்தை யனுபந்தமாகக் கூறியது வியர்த்தமாமெனின். (10)

விடை:—எந்தவஸ்துவுக்கெதனுடன் சம்பந்தமுளதோ அந்தவஸ்துவுக்கதுவிஷயத்திலுபயோகமுண்டு. எந்தவஸ்துவுக்கெதனுடன் சம்பந்தமில்லையோ அந்தவஸ்துவுக் கதுவிஷயத்திலுபயோகமுண்டாகிறதில்லை. குலாலாதிகளுக்கு[illegible] விஷயத்திற் சம்பந்தமுண்டு. ஆகலின், குலாலாதிக[illegible]

ஷயத்தி லுபயோகப்படுகின்றன. கண்ணுக்குக் காற்றுடனும் ஆகாயத்துடனும் சம்பந்தமின்று. ஆதலின் கண்ணானது காற்றாகாய விஷயத்திலுபயோகப்படுகிறதில்லை. இங்ஙனம் சாத்திரத்துக்கும் பிரஹ்மத்துக்கும் பரஸ்பர சம்பந்தமில்லையாயின் பிரஹ்மவிஷயத்தில் சாத்திரம் உபயோகப்படமாட்டாது. அங்ஙனமே சாத்திரவிஷயத்தில் பிரஹ்மத்தினுபயோகஞ் சித்திக்கமாட்டாது. பரஸ்பரவுபயோகநிச்சயவேதுவாகக் கூறியிருத்தலால் வியர்த்தமல்ல.

வினா :—இச்சாத்திரத்துக்குப் பிரயோசனம் யாதெனின்.

விடை:—பரமப்பிரயோசனம், அவாந்தரப் பிரயோசனம் எனப் பிரயோசனம் இரண்டாம். இவ்விரண்டில் துக்கநிவிருத்தி சுகப்பிராப்திமயமாகிய மோக்ஷம் பரமப்பிரயோசனமாகும். பிரஹ்மாத்ம ஐக்கியஞானம் அவாந்தரப்பிரயோசனமாகும். (11)

வினா:—மோக்ஷம் பரமப்பிரயோசனம், ஞானம் அவாந்தரப்பிரயோசனமென்றதென்னை?

விடை :—சகல சீவர்களின் பிரியத்துக்கும் எது எப்போதும் விஷயமாயிருக்கிறதோ அது பரமப்பிரயோசனமாகும். அப்பரமப்பிரயோசனம் எதன்மூலமாக அடையப்படுகிறதோ அது அவாந்தரப்பிரயோசனமாகும் (12)
...தி சுகப்பி...



பிரியத்துக்கும் விஷயமாயிருத்தலால் அதனைப் பரமப்பிரயோசனமென்றும் ஞானவாயிலாகவே மோக்ஷமடையப்படுகின்றமையால், ஞானத்தை அவாந்தரப்பிரயோசனமென்றும்கூறப்பட்டது.

வினா:–மோக்ஷம் பரமப்பிரயோசனமும் ஞானம் அவாந்தரப் பிரயோசனமு மாகுமென்பதெதுபோலுமெனின். 13

விடை:—வாழைக்கன் வைத்தவனுக்கு வாழைக்கனி பரமப்பிரயோசனமும் அதனைத் தரத்தக்க தண்டு இலை நாருருவமாகிய மரம் அவாந்தரப்பிரயோசனமுமாவதுபோலாம்.

வினா:—பிரஞ்ஞானமாகிய சிவன் ஆனந்தமாகிய பிரஹ்மமாயிருக்கிறானெனச் சகலவேதங்களும் வருணிக்கின்றன. இஃதன்றிச் சுவர்க்காதிகள்போல யாது அப்பிராப்தவஸ்துவாயிருக்கிறதோ அதன் பிராப்தி யொருவனுக்குண்டாகக் கூடும்; சதாப்பிராப்தமாயிருக்கிற வஸ்துவின் பிராப்தியுண்டாகமாட்டாது. ஆகலால், சதாசைத்திய சொரூபமாயிருக்கிற சலத்துக்குப் புதிதாய்ச் சைத்தியப்பிராப்தியுண்டாகுமெனல்போல் சதாபரமானந்தசொரூபமாயிருக்கிற ஆத்மாவுக்குப் புதிதாய்ப் பரமாநந்தப் பிராப்தியுண்டாகுமெனலும், ...த்தி அல்லது அந்தகாரநி...

த்தநிவிருத்தியாயிருக்கிற ஆத்மாவுக்குப் புதிதாய் அநர்த்த
நிவிருத்தி யுண்டாகுமெனலும் அசங்கதமாமே? (14)

விடை:—தன்மூக்கிற் கண்ணாடியிருக்க அது காணாமற்
போய்விட்டதாகப் பிரமத்தினாற் றேடாநின்றவனுக்குப் பின்
அந்நியன் வார்த்தையால் அக்கண்ணாடி கிடைத்ததாக ஞான
முதயமாவதுபோலச் சதாபரமானந்தசொரூபமாயிருக்கிற
ஆத்மாவுக்குத் தான் ஆநந்தசொரூபமல்லவென்றும் பிரஹ்ம
மே ஆநந்தசொரூபமென்றும் பிரஹ்மந் தனக்கந்நியமென்றும்
உபாசனையாற் பிரஹ்மத்தை யடையலாமென்றும் அவித்
யாபலத்தால் பிராந்தியுண்டாகிறது. பின்னர் வேதாந்தசிர
வணத்துக்குப் பூர்வமில்லாதது போலிருந்த பிரஹ்மானந்தம்
குருகிருபையினாலும் சிரவண மனனாதிகளினாலும் பிராப்த
மானதாகப் புத்தியில் விளங்குகிறது. ஆதலின் அடைந்தி
ருப்பதையும் அடையக்கூடியதாகக் கூறுதலும், அப்படியே
இரச்சுவினிடத்திற் சதாநிவிருத்தியாயிருக்கிற சர்ப்பத்துக்குத்
தீபப்பிரபையால் நிவிருத்தி கூறுதல்போல ஆத்மாவினிடத்
திற் சதாநிவிருத்தியாயிருக்கிற அநர்த்தத்துக்கு ஞானத்தால்
நிவிருத்தி கூறுதலும் அசங்கதமல்லவென அறிக.

வினா:— அநர்த்தநிவிருத்தி பரமாநந்தப்பிராப்தி
யாகிய இரண்டில் அநர்த்தத்தின் நிவிருத்தியென்பது அபாவ
ரூபமாம். பரமானந்தப்பிராப்தியென்பது பாவரூபமாம்.
…ம் பாவமும் ஒன்றற்கொன்று விரோதிகளானமை
…ன்றிஞ்சேர்ந்து மோக்ஷமாக ஓரேயிடத்தில் ஓரே



காலத்திலிரா. ஆதலின் சாத்திரத்துக்குச் சொன்ன பிர (15)
யோசனஞ் சித்தியாதெனின்.

விடை:-சர்ப்பநிவிருத்தி யதிட்டான இரச்சுரூபமாகவே
சித்திக்கின்றமையால் அது பாவரூபமே யாவதுபோலக் கார
ணசகிதசகத்து நிவிருத்தியும் அதிட்டானப் பிரஹ்மமேயா
மெனச் சுருதிகள் கூறுகின்றமையால் அநர்த்தநிவிருத்தியும்
பாவரூபமாகிய பிரஹ்மமேயாம். ஆதலின் அது பிரஹ்மத்
தோடு விரோதமின்றி அபேதமாகிச் சாத்திரத்துக்குப் பிர
யோசனமாகச் சித்திக்கும். இஃதன்றி ஒரேவஸ்துவின் பாவ
ரூபமும் அபாவரூபமும் ஒரேயிடத்தி லொரேகாலத்திற் பிர
தீதி யாகுமென்பது விரோதமேயன்றி ஒன்றின் பாவரூப
மும் மற்றொன்றின் அபாவரூபமும் ஒரேயிடத்தில் ஒரே
காலத்திற் பிரதீதியாகுமென்பது விரோதமன்றாம். எங்ஙன
மெனின் கடம்படமன்றென அந்நியோந்நியாபாவம் நிகழு
மிடத்தில் கடத்தின் பாவரூபமும் படத்தின் அபாவரூபமும்
ஒரேயிடத்தில் ஒரேகாலத்திற் பிரதீதியாகின்றன. இங்ஙனமே
சுழுத்தியில் சுகத்தின் பாவரூபமும் துக்கத்தின் அபாவரூப
மும் ஒரேயிடத்தில் ஒரேகாலத்திற் பிரதீதியாவது சருவ
சீவர்களின் அநுபவமாக இருக்கிறது. ஆதலின் பரமானந்தப்
பிராப்தியும் அநர்த்தநிவிருத்தியுமாகிய பிரயோசனஞ்சித்திக்
குமென்பதற் கையமின்றென அறிக.

சகத்துநிவிருத்தி யதிட்டானப்பிரஹ்மமேன்பதற்குப்
பிரமாணம் வருமாறு.

ரிபுகீதை ௩௬-வது அத்தியாயம்.

அரவுமுதற்பலவிதமாய்த் தோன்றினும் மதிட்டான விரச்சுவினை யாய்ந்தறிந்தால், மருள்வடிவா மரவுமுதலனைத் துமசத்தமாசற்ற விரச்சுவடிவாவதேபோல், விரவுசகமுதலிய வாய்த் தோன்றினும் விமலவதிட்டான பரப்பிரமந்தன்னை, யருமையுடன் நன்ருக வாய்ந்தறிந்தாலவையாவு மகண்டபரப் பிரமமாமே.

வினா:—இந்நூலுக் கதிகாரியாவன்? (16)

விடை:—மலம், விக்ஷேபம், ஆவரணமென்னும், மூன்று தோடங்களில் மல விக்ஷேபமின்றி ஆவரணதோட மாத்திர முள்ளவனும் சாதனசதுட்டய சகிதனும் யுத்தி சாமர்த் திய புத்திமானுமிருப்பவன். இவன் சாத்திரவிசார மூலமாக ஆத்மஞானத்துக்கும் ஆத்மஞானமூலமாக மோக்ஷத்துக்கும் அதிகாரியாவனென அறிக.

வினா:—சீவர்கட்கு மல விக்ஷேப ஆவரணமென்னும் மூன்று தோடங்களும் அவைகளை நிவிருத்தித்தற்குரிய சாத னங்களும் உளவென்பதற்குப் பிரமாணங்களுளவோ. (17)

விடை:—தூலசரீரத்திற் சகலரோகங்களுக்கும் காரண மாக வாதபித்த சிலேட்டுமமாகிய மூன்று தோடங்களும் அவைகளை நிவிருத்தித்தற்குரிய ஔடதாதிகளுமுள வென் ...சுவரனாலும் தன்வந்திரிமுதலிய முனீசுவரர்களாலும்



வெளியிடப்பட்ட ஆயுள்வேதாதிகள் எங்ஙனம் பிரமாணங்க ளாகுமோ, அங்ஙனம் அந்தக்கரணத்தில் சகல சம்சாரங் கட்குங் காரணமாக மல விக்ஷேப ஆவரணமென்னும் மூன்று தோடங்களும் அவைகளை நிவிருத்தித்தற்குரிய கருமம் உபா சனை ஞானமென்னும் மூன்று சாதனங்களும் உளவென்பத ற்குச் சருவஞ்ஞனாகிய ஈசுவரனால் வெளியிடப்பட்ட கருமம் உபாசனை ஞானமென்னுங் காண்டத் திரயரூபமாகிய இருக் காதி வேதங்களே பிரமாணங்களென அறிக. (18)

வினா:—மலதோடமாவது யாது?

விடை:—தான் பூர்வசன்மங்களிற்செய்த நிஷித்தகன்ம பலமாகச் சித்தத்திற் பொருந்தியுள்ள பாவசம்ஸ்காரமாகிய அசுபவாசனைகளாம்.

வினா:—வாசனைகளைப் பிரத்தியக்ஷமாக அறியக்கூடு மோ? (19)

விடை:—வாசனைகளனைத்தும் பரோக்ஷமெனச் சாத் திரங்கள் கூறுகின்றமையினாலும், சித்தத்திற் சூட்சுமமாக அடங்கியிருத்தலானும் பிரத்தியக்ஷமாக அறியக்கூடாதன வாம். ஆயினும் அவற்றை அநுமானத்தாலறியலாம்.

வினா:—அசுபவாசனைகளை அநுமானத்தாலெங்ஙன மறி யலாமெனின். (20)

விடை:—தூமந்தோன்றியவிடத்துத் தூமகாரணமான அக்கினியுளதென் றறிதல்போலச் சித்தத்தில் நிஷித்த...

பிரவிருத்தி அல்லது விடய இச்சைகள் தோன்றுமாயின் அவைகட்குக்காரணமான அசுபவாசனைகள் சித்தத்துள்ளன வென அநுமானத்தாலறியலாம்.

வினு:—மலதோடம் எந்தச்சாதனங்களால் நிவிருத்தி யாகுமெனின். (21)

விடை:—வேதயுக்தமான கன்மகாண்டங்களிற் கூறிய நிஷ்காமகன்மம் சகலசீவர்களிடத்தினும் வைக்கப்பட்ட தயை ஈசுவரநாம உச்சாரணமாகிய சாதனங்களால் நிவிருத்தியாகு மெனவறிக.

வினு:—விக்ஷேபதோடமாவது யாதெனின். (22)

விடை:—சித்தவிருத்தி சிரவணாதிகளிலேனும் ஆத்ம சொரூபத்திலேனும் நிலைபெறுமலந்திய விடயங்களைப்பற்றி நாநாக்கிரமமாகச் சலித்தலெனவறிக.

வினு:—விக்ஷேபதோடம் எந்தச்சாதனங்களால் நிவிருத்தி யாகுமெனின். (23)

விடை:—வேதயுக்தமான உபாசனகாண்டத்திற் கூறிய ஈசுவரத்தியானம் குருத்தியானம் அஜபாமந்திரம் மகாவாக்கியம் பிரணவம் ஈசுவரநாமோச்சாரணமாகிய சாதனங்களால் நிவிருத்தியாகுமெனவறிக.

வினு:—அஜபாமந்திரமாவது யாதெனின். (24)



விடை:—வாக்கினுல் ஜெபிக்கப்படாமல் சுவாசம் வெளிப்படும்போது ஸோஎன்னும்ஒலியோடும், உட்செல்லும் போது ஹம் என்னும் ஒலியோடும் தானே உதயமாகிக்கொண்டிருப்பதும் மகாவாக்கியப் பொருளையுடையதும் குருமுனிலையிற் றெரிந்துகொள்ளத் தக்கதுமாகும் அதனையே சோபாதிக அஜபாகாயத்திரி யென்பரெனவறிக.

வினு:—அஜபாமந்திரம் வாக்கினுற் ஜெபிக்கப்படாததா யெதுமுதற்றுனே யுதயமாகிக் கொண்டிருக்கிறதெனின். 25

விடை:—சரீரமுண்டாகிய காலமுதலென அறிக.

வினு:—அற்றேல் அளவில்கால மளவில்சரீரங்களே றும் சகலசீவர்களுக்கும் சமமாக உதயமாகிக்கொண்டிருப் பதானமையால் சகல சீவர்களுக்குமுள்ள விக்ஷேபதோடங் களை முன்னமே நிவர்த்திசெய்திருக்கவேண்டும். அங்ஙனங்கா ணப் படாமையினுனும், புருடப் பிரயத்தனத்தா லப்பியாசிக் கத்தக்கதல்லாமையினுனுமதனை அதிகாரிகளப்பியாசிக்கத் தக்க சாதனங்களி லொன்றுகக் கூறியது அசம்பாவிதமெ னின் (26)

விடை:—சகலர்க்கும் பிரயத்தனமின்றிச் சமமாகத் தானே யுதயமாகின்ற மந்திரமாக விருக்கினும் அது சகலர்க் கும் விக்ஷேபதோடத்தை நிவிருத்திக்குஞ் சாதனமாக

டாது கடம்படமென்னுஞ் சத்தத்தைக் கேட்பவனது சித்தவிருத்தி கடாகாரம் படாகாரமாவதுபோல அஜபாமந்திரமுதயமாகுந்தோறு மெவனுடைய சித்தவிருத்தி ஸோஹம் என்னும் அம்மந்திராகாரத்தை அடைந்துகொண்டிருக்கிறதோ அவனுக்கு அது விக்ஷேபதோடத்தை நிவிருத்திசெய்வதும் அப்பியாசிக்கத்தக்கதுமாகிய சாதனமாகும். ஆதலின் அதனைச் சாதனமாகக் கூறியது அசம்பாவித மல்லவென அறிக.

வினா:—ஆவரணதோடமாவது யாதெனின். (27)

விடை:—உருவவிஷயங்களை அந்தகாரமுஞ் சூரியனை மேகமுஞ் சலத்தைப் பாசியும் மறைத்திருப்பதுபோலச் சுயம்பிரகாசமாகிய ஆத்மாவை அறியக்கூடாதவண்ணம் மறைத்திருப்பதென அறிக.

வினா:—இஃதெதனால் நிவர்த்தியாகுமெனின். (28)

விடை:--அந்தகாரஞ் சூரியோதயத்தால் நிவர்த்தியாதல்போல, ஞானோதயத்தால் நிவிருத்தியாகுமென அறிக.

வினா:—இவ்வதிகாரிக்குள்ள சாதனங்கள் ஞான சாதனங்களா? அல்லது கன்ம சாதனங்களா? (29)

விடை :—இச்சா திரத்துக்



ன்பாலுள்ள சாதனங்கள் ஞான சாதனங்களே யன்றிக் கன்ம சாதனங்களல்லவென அறிக.

வினா:—ஞான சாதனங்களெத்தனை வகைப்படும்? (30)

விடை:—சிரவணத்தை அல்லது ஞானத்தைப் பிரத்தியக்ஷபலமாகவுடைய சாதனங்கள் அந்தரங்க சாதனங்களெனவும், அங்ஙனமின்றி அந்தக்கரண சுத்தியை மாத்திரம் பலமாகவுடைய சாதனங்கள், பகிரங்க சாதனங்களெனவும் இருவகைப்படும். இவைகளில் விவேகாதிகள் ௪, சிரவணாதிகள் ௩, மகாவாக்கிய விசாரம் ௧, ஆகிய எட்டும் அந்தரங்க சாதனங்களாம். யஞ்ஞாதி கர்மங்கள் பகிரங்க சாதனங்களாம். யஞ்ஞாதிகளை அபேக்ஷித்து விவேகாதிகளும், விவேகாதிகளை யபேக்ஷித்துச் சிரவணாதிகளும், சிரவணாதிகளை யபேக்ஷித்து மகாவாக்கிய விசாரமும் அந்தரங்கசாதனமாம். இங்ஙனமே மகாவாக்கிய விசாரத்தை யபேக்ஷித்துச் சிரவணாதிகளும், சிரவணாதிகளை யபேக்ஷித்து விவேகாதிகளும், விவேகாதிகளை யபேக்ஷித்து யஞ்ஞாதிகளும் பகிரங்கசாதனங்களாகுமென அறிக.

வினா:—அங்ஙனமாயின், மகாவாக்கிய விசாரத்தை மாத்திரம் அந்தரங்க சாதன மெனவும் மற்றவைகளைப் பகிரங்க

யஞ்ஞாதிகளைமாத்திரம் பகி

ங்கசாதனங்களெனவும் மற்றவைகளனைத்தையும் அந்தரங்க சாதனங்களெனவுங் கூறியதென்னை யெனின். (31)

விடை:—அந்தரங்கமென்பது சமீபத்திருப்பது. பகிரங்கமென்பது தூரத்திருப்பது. விவேகாதிகளைப்பற்றிச் சிரவணாதிகளும், சிரவணாதிகளைப்பற்றி ஞானமும் அப்படியே மகாவாக்கிய விசாரத்தைப்பற்றி அபேத ஞானமுஞ் சித்திக்கின்றமையால், ஞானாதிகாரி யிடத்தில் விவேகாதிகளெட்டும் விலகியிராமல்சேர்ந்திருக்கின்றனவேயாம். ஆதலின் இவைகளைச் சமீபத்திருப்பனவாகிய அந்தரங்க சாதனங்களெனவும் யஞ்ஞாதி கர்மங்களையும் அவைகட்குச் சாதனங்களாகிய மனைவி புத்திரதனாதிகளையும் தியாகஞ் செய்தவன் ஞானாதிகாரியானமையால் அவனிடத்தில் யஞ்ஞாதி கர்மங்கள் சேர்ந்திராமல் விலகியுள்ளனவேயாம். ஆதலின் யஞ்ஞாதிகளைத் தூரத்திருப்பதாகிய பகிரங்க சாதனமெனவுங் கூறியதென அறிக.

வினா:—இவைகளெது போலும் அந்தரங்க பகிரங்க சாதனங்களெனின். (32)

விடை:—வில்லிற் பூட்டிவிடப்பட்ட பாணம் லக்ஷியசமீபத்தைச் சென்றடைவதால் அது லக்ஷியத்தைக் [illegible]
விஷபத்தில் அந்தரங் [illegible]



அந்தரங்க சாதனங்களாகவும், வில்லானது தூரத்திருந்துகொண்டு பாணத்தைப் பிரயோகித்தல்வாயிலாக லக்ஷியத்தையடிக்கும் விஷபத்தில் பகிரங்க சாதனமா யிருப்பதுபோல யஞ்ஞாதி கருமங்கள் சகுணோபாசனாதிகள் தூரத்திருந்துகொண்டு மல விக்ஷேபங்களைப் போக்கிச் சித்தசுத்தித் துவாரா ஞானேச்சையை யுதிப்பிக்கின்றமையால் ஞானத்துக்குப் பகிரங்க சாதனங்களாகவு மிருக்கின்றன. இவைகளில் அந்தரங்க சாதனத்தைச் சம்பாதித்துக் கொண்ட பின்னர்ப் பகிரங்க சாதனத்தைக் கைவிடவேண்டுமென அறிக.

வினா:—அந்தரங்க சாதனத்தைச் சம்பாதித்தற்கு முன்னர்ப் பகிரங்க சாதனத்தைக் கைவிடலாகாதென்றது எதனாலெனின். (33)

விடை:—கிணற்றில் வீழ்ந்து ஓராதாரத்தைப் பிடித்துக்கொண்டு தொங்குகின்ற புருடன் தன்னைவெளிப்படுத்துவதற்காக விடப்பட்ட கயிற்றை நன்றாகப் பிடித்துக் கொள்ளுதற்கு முன்னரே தான்முன் பிடித்திருந்த ஆதாரத்தைக் கைவிடுவானாகில் அவன் எங்ஙனம் கிணற்றில் வீழ்ந்து சலத்தில் மூழ்கித் துன்புறுவனோ, அங்ஙனம் விவேகமுதலிய மேற்சாதனங்களைச் சம்பாதித்தற்கு முன்னர்த் தான் பூர்வம் கைக்
[illegible] கைவிடுவானாகில் உபயப்பி

மல் நரகத்தில் மூழ்கித் துன்புறுவன். ஆதலிற் கைவிடலாகா தென அறிக.

வினா:—இச்சாத்திராதிகாரியை அந்தரங்க பகிரங்க சாதனங்களனைத்துமுள்ளானெனக் கூறாமல் சாதன சதுட்டய மாத்திரமுள்ளானெனக் கூறியது எதனாலெனின். (34)

விடை:—இவ்வதிகாரி யஞ்ஞாதி கர்மங்களை முன்னமே தியாகஞ் செய்துவிட்டவனானமையினாலும், இப்போதுள்ள சாதன சதுட்டய பலத்தால் குருவையடைந்து பின்னர்ச் சிரவணாதிகளை யனுட்டிக்கத் தக்கவனானமையினானும் யஞ்ஞாதி கர்மங்களையும் சிரவணாதிகளையு முடையவனெனக் கூறாமல் சாதன சதுட்டய மாத்திர முள்ளோனெனக் கூறியதென அறிக.

வினா:—சாதன சதுட்டயமின்றிய கன்மகாண்டிகள் உபாசனாகாண்டிகள் இச்சாத்திரத்துக் கதிகாரிகளல்லரோ? (35)

விடை:— பிரகஸ்பதிசவனமென்னும் யாகத்துக்குப் பிராமணர்களதிகாரிகளன்றி க்ஷத்திரியர்களும் வைசியர்களும், இராஜசூய யாகத்துக்கு க்ஷத்திரியர்களன்றிப் பிராமணர்களும் வைசியர்களும், ஸ்தோம யாகத்துக்கு வைசியர்களன் [illegible]ராமணர்களும் க்ஷத்திரியர்களும் எங்ஙனம் அதிகாரி [illegible]ரா, அங்ஙனம் வேதாந்த சாத்திரத்துக்குச் சாதன



சதுட்டய முள்ளவர்களே யதிகாரிகளன்றிக் கன்மகாண்டிகள் உபாசனாகாண்டிகள் அதிகாரிகளல்லரென அறிக.

வினா:— இச்சாத்திரத்துக்கு நான்கநுபந்தங்களுளவாயின்; இந்நூலாசிரியர் கூறாமலேன் விடுத்தனரெனின். (36)

விடை:—இந்நூல் வேதாந்த சாத்திரமாதலால் மற்ற வேதாந்த சாத்திரங்கட்குள்ள அநுபந்தங்களிந்நூலுக்கு முளதாதலினானும், இந்நூல் குருமுகமாகவே சிரவணஞ்செய்து தெளியத்தக்கதானமையினாலும், சிரவணஞ்செய்யும் அதிகாரிகட்கு ஆசிரியர்களெடுத்துக் கூறுவார்களென்பது பற்றிக் கூறாது விடுத்தனர். யாம், கிரகங்கள் நாலு பாதங்களின்றி நிலைபெற்றுச் சிறப்புறாதது போலச் சாத்திரங்களும் நான்கநுபந்தங்களின்றி நிலைபெற்றுச் சிறப்புறா வென்பது பற்றியும், மற்ற வேதாந்த சாத்திரங்கட்குள்ள அநுபந்த சதுட்டய மிந்நூலுக்குமுள தென அதிகாரிகள் தெரிந்துகொள்ள வேண்டுமென்பது பற்றியும் அநுபந்தங்களை விரிவஞ்சிச் சங்கிரகமாகக் கூறினாமென அறிக.

இதன் விரிவையறிய விரும்பில் விசாரசாகரத்திற் காண்க.

வினா:—அநுபந்தங்களில்லையாயின் சாத்திரங்கள் நிலை பெற்றுச் சிறப்புறாவென்பது எதனாலெனின்

விடை:—எது தன்னையறிந்தபின்னர் முமுட்சுவைக் கிரந்தத்தோடு சம்பந்தப்படுத்துகிறதோ அது அநுபந்தமெனச் சாத்திரங்களிற் கூறப்படுகின்றமையால், முமுட்சுக்கள் கிரந்தத்தோடு சம்பந்தப்படுவதற்கேதுவான அநுபந்தங்கள் கிரந்தத்துக்கில்லையாயின் முமுட்சுக்களோடு கிரந்தம் சம்பந்தமில்லாததாகும். அங்ஙனமாயின், பாரம்பரியமாகச் சிரவணஞ்செய்யப்பட்டு வருதலாகிய நிலைபெற்றுப் பிரபலப்படும் சிறப்பினையுறாமல் செல்லுண்டு சிதறிப் போவதாயிருத்தலினென அறிக.

அநுபந்தசதுட்டயநிருபகம்முற்றிற்று.

சிதம்பரதேசிகன் றிருவடிவாழ்க.



உ

ஓம் பரப்பிரஹ்மணேநம:

## சாதனசதுட்டய நிருபகம்.

அவதாரிகை.

முற்கூறிய அநுபந்தங்களிலொன்றாகிய அதிகாரியின் பாலுள்ள சாதன சதுட்டயங்களிவையென வுணர்த்துகின்றார்:—

வினா:—சாதனசதுட்டயமாவது யாதெனின். (1)

விடை:—நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிசட்க சம்பத்தி, முமுட்சுத்துவமாகிய நான்குமென அறிக.

வினா:—இவைகளில் நித்தியாநித்தியவஸ்து விவேகமாவது யாதெனின். (2)

விடை:—நித்தியமாகவும் சலனரகிதமாகவுமுள்ளது பிரஹ்மமெனவும் அநித்தியமாகவும் சலனசகிதமாகவுமுள்ளவை தேகாதிப் பிரபஞ்சங்களெனவும், அன்னம் பாலையும் நீரையும் பிரிப்பதுபோலப் பிரித்துப் பார்ப்பது விவேகமென அறிக.

வினா:—பிரஹ்மம் நித்தியம்; தேகாதிப் பிரபஞ்சம் அநித்தியமென்பது யாதில் (3)

விடை:—பிரஹ்மம் காரணமாயும் அகண்டமாயும் அவயவரகிதமாயும் அதிருசியமாயும் உற்பத்தி நாசமின்றியதாயுமிருத்தலால் நித்தியமெனவும், தேகாதிப் பிரபஞ்சம் பிரஹ்மத்தின் காரியமாயும் கண்டமாயும் அவயவசகிதமாயும் திருசியமாயும் நாசமுடையதாயுமிருத்தலால், அநித்தியமெனவுங் கூறியதென அறிக.

(பிரஹ்மம் நித்தியமேன்பதற்குப் பிரமாணம் வருமாறு)

கூர்மபுராணம் சாங்கியயோகமுணாத்த அத்தியாயம்:—
ஆதலாற் பிரம மொன்றே நித்திய மலகைத் தேரிற் பேதறத்தோன்றும் நீரிற் பிரப்ஞ்ச மருண்டு தோன்றும்.

வினா:—சகத்துப் பிரஹ்மத்தின் காரியமென்பதற்குப் பிரமாணம் யாதெனின். (4)

விடை:—ஆத்மாவினின்றும் ஆகாசாதி பஞ்சபூத சகத்துத் தோன்றியதென்று எசுர் வேதத்தில் வருணன் பிருகுவுக்குச் சொல்லியிருக்கிறதே பிரமாணம். ஆதலின் காரியமாகிய சகத்து அநித்தியமென்பதற் கையமின்றென அறிக. (வே—சா)

வினா:—ஆனால் வைகுண்டாதி யுலகங்களைச் சிலர் நித்[illegible]னக்கொண்டு விரும்புகின்றனரே யெனின். (5)



விடை:— சாவயவப் பொருள்களாகிய அனைத்தும் அழியும் பொருளென்பது துணிபாதலின் சாவயவமாகிய வைகுண்ட கைலாயங்களனைத்தும் அநித்தியமே யாகும் அவைகளை நித்தியமென விரும்புதல் புத்திப் பிரமமாமென அறிக. (சர்வ வேதாந்த சித்தாந்த சாரம்)

வினா:—நித்தியாநித்திய வஸ்து விவேகத்துக்கு ௧. ஏது, ௨. சொரூபம், ௩. காரியம், ௪. அவதி, ௫. பலம் எவையெனின். (6)

விடை:— ௧. அநந்த சன்மங்களிற் செய்யப்பட்ட நிஷ்காமபுண்ணிய புஞ்ச பரிபாகத்தாலும், ஈசுவரோபாசனையினாலும், உதயமாகின்ற சித்தசுத்தி சித்தஏகாக்கிரமே ஏது. ௨. பிரஹ்மம் நித்தியம் தேகாதிப் பிரபஞ்சங்கள் அநித்தியமெனச் சாத்திராதிகளாலுண்டாகிய நிச்சயமே சொரூபம். ௩. அதனையே சதா உபக்கிரம உபசம்ஹாரமாதிய யுத்திகளோடு சிந்தித்தலே காரியம். ௪. மதவாதிகள் கண்டிக்கினும் மத சாஸ்திரங்களைப் பார்க்கினும் பசுவைப்போலும் படிகத்தைப்போலும் அவ்வவ்வாகாரமாய்ப் போகாமல் மாணிக்கத்தைப்போலப் பிரஹ்மம் நித்தியம் தேகாதிப் பிரபஞ்சம் அநித்தியமென்றுள்ள நிச்சயம் ஒன்றினாலும் மாறுபடாமற் றிடமாயிருத்தலே அவதி. ௫. பிரமலோகப் பிராப்தியே பலமென அறிக.

வினா:—நித்தியாநித்திய வஸ்துக்களின் சிந்தனம் யாதெனின்.

விடை:—தேகம் சுக்கிலசுரோணிதரூபமாகக் கருப்பத்திற் றரிக்குங்காலத்தில் புழுத்தின்னலாதிகளாலேனும், அல்லது கருப்பத்துள்ள பத்து மாதங்களினுள் இடையிடையே யுண்டாகுஞ் சிலதோடங்களால் கருவழிந்து விழுதலாலேனும் பிறந்தபின்பு பசுபட்சிபாலக் கிரகண தோடங்களாலேனும், அல்லது கணைசுரமாதிய ரோகங்களாலேனும், அல்லது சர்ப்ப கஜ வியாக்கிர பைசாச சோர சத்துரு சல அக்கினி இடியாதிகளாலேனும், அல்லது இராசதண்டனையாலேனும் சைசவ கௌமார யௌவன வார்த்திகங்களில் நியமமின்றி நாசமடைதல்போல எழுவகைத் தோற்றங்கள் யாவும் நாசமடைவது பிரத்தியக்ஷம். இஃதன்றிப் பிரஹ்மப்பிரளய காலத்தில் பன்னிரண்டு சூரியர்களும் உதயமாய் நூறு வருடம் மழைக்கிரணத்தையும் பனிக்கிரணத்தையும் அடக்கிக்கொண்டு உஷ்ணகிரணத்தாலெரித்துப் பிருதிவியாதிய சகலப் பிரபஞ்சங்களையும் பஸ்மம் பண்ணி ஆதிசேடன் மகுடங்களையும் பஸ்மம் பண்ணும்போது ஆதிசேடன் முகத்திலிருந்து காலகூட விஷாக்கினி பிறந்து சூரியாக்கினிகளோடு சேர்ந்து ஆதிசேடன்முதற் றுவாதசாதித்தர்களையும் பஸ்மம் பண்ணி அக்கினிமாத்திரமாகச் சொலிக்கும். அப்போது, அவ்வக்கினியினின்றும் சப்த மகா மேகங்களும் பிறந்து நூறு வருடம் யானைத் துதிக்கைபோல வருஷதாரைகளை வருஷிக்க, அதனல் எங்குஞ் சலமயமாகவே நிறைந்து முன்பக்கினி[illegible]லெரிபட்ட பூமியாதிய பிரபஞ்ச பஸ்மங்களைக் கரைத்



துத் தன் மயமாக்கிக்கொண்டு பிரளயகால மகோததியாகி வாயுத் தம்பனத்தால் நிற்கும். அங்ஙனம் நிற்கும் சலத்தில் ஊழித்தீயாகிய வடவானலம் பிறந்து அச்சலங்களையெல்லாம் கிரகித்துவிட்டு உகாந்தகாலப் பிரசண்ட வாயுவிலணைந்து லீனமாம். அவ்வாயுவும் மகாகாயத்திலோய்வுற்று லீனமாம். அவ்வாகாயமும் அஞ்ஞானத்தில் லீனமாம். அவ்வஞ்ஞானமும் மாயையும் பிரஹ்மத்தில் லீனமாம். பிரஹ்மம் ஒன்றினுலும் லீனமாகாமல் எப்போதுஞ் சேடித்து நிற்கும் பொருளெனச் சாத்திரங்கள் கூறுகின்றமையால் பிரஹ்மமொன்றுமே நித்தியம். தேகாதிப் பிரபஞ்சமனைத்தும் அநித்தியமெனச் சித்தத்தில் மாறுபடாமற் பதிவுறும்படி மேலும் மேலும் பலபல சுருதி யுத்திகளோடு நினைவுக்குக் கொண்டு வருதலென அறிக.

வினு:—நான்கு சாதனங்களில் நித்தியாநித்திய வஸ்து விவேகத்தைச் சகல நூலாசிரியர்களும் முதன்மையாக வைத்துங் கூறியதென்னையெனின்.

விடை:—நித்தியாநித்தியவஸ்து விவேகமுதிக்கில் அநித்திய வஸ்துக்களின் தோட திருட்டியால் வைராகமு[illegible], அதனுல் சமாதிசட்க சம்பத்தியும், அதனல் முமுட்சுத்துவமும் ஆகிய மேற்சாதனங்கள் மூன்று முதயமாம். அஃ[illegible]யாவிடின் மேற்சாதனங்கள் மூன்று முதயமாகாவாம். ஆதலின் நித்தியாநித்திய வஸ்து விவேகமே மற்றச் சாதன[illegible]

(8)

தற்குக் காரணமென்பது தோன்ற முதன்மையாக வைத்துக்
கூறினார்களென அறிக.

வினா:—பூஜை நிமித்தமும், பொருணிமித்தமும், கீர்
த்தி நிமித்தமும், அந்நியர்கட்குப் போதிக்கும் பண்டிதர்பா
லிராநின்ற நித்தியாநித்திய வஸ்து விவேகம் மேற்சாதனங்
கட்குக் காரணமாகாதது எதனாலெனின். (9)

விடை:—பண்டிதர்கட்குச் சாத்திரப் பழக்கத்தால் நித்
தியாநித்திய வஸ்துவிவேக முண்டாயிருப்பினும் அது நிட்
காமகன்ம உபாசனைகளாலாகிய சுத்தியில்லாத மலின அந்
தக்கரணத்தி லுதயமாயிருத்தலால், சல சம்பந்தமின்றிய
ஊஷர பூமியில் வைக்கப்பட்ட கதலி விருக்ஷமானது கீழ்க்
கன்றுக வரத்தக்க அந்நிய விருக்ஷங்கட்குக் காரணமாகாதது
போல வைராக முதலிய மேற்சாதனங்களுற்பத்தியாதற்குக்
காரணமாகாமல் வாக்குமாத்திரமாகவே யிருக்கும். அங்
ஙனமிராநின்ற விவேகம் அவிவேகமேயாகுமென அறிக.

வினா:—நித்தியப் பொருள் சத்தியம்; அநித்தியப் பொ
ருள் மித்தையென அதிகாரி, பிரதம சாதனமாகிய விவேக
காலத்திற்றானே யறிந்துகொள்ளுகின்றமையால் அவன் பின்
னர்ச் சத்தியமித்தியாபாவனை யென்னும் தத்துவ ஞானத்
தைச் சம்பாதிக்க முயலுதல் வீண் சிரமமாமெனின்? (10)

விடை:—பிரஹ்மம், சத்தியம், சக்த்து மித்...



க்ஷமாக் அறிந்ததேயன்றி அபரோக்ஷமாக அறியாமையினா
லும், அபரோக்ஷ ஞானத்தால் பந்த நிவிருத்தி முத்திப்
பிராப்தி சித்திக்குமேயன்றிப் பரோக்ஷ ஞானத்தால் சித்தி
யாதென்பது துணிபாதலினாலும் பின்னர் அதிகாரி அப
ரோக்ஷ ஞானத்தைச் சம்பாதிக்க முயலுதல் வீண் சிரம
மல்லவென அறிக.

வினா:—இகமுத்திரார்த்த பலபோகவிராகமாவது யா
தெனின்? (11)

விடை:—இவ்வுலகமுதற் பிரஹ்மலோகபரியந்தமாகிய
சகலலோகபோகங்களினுமுள்ள நிராசையாம். இவ்வைராகம்
மந்தம், தீவிரம், தீவிரதரமென மூன்றாயிருக்குமென அறிக.

வினா:—மந்தவைராகமாவது யாதெனின். (12)

விடை:—மயான பிரசவ புராண வைராகங்கள்போலப்
புத்திரதாரதனாதிகட்கு நாசம் வந்தபோது துக்கஞ்சகிக்க
மாட்டாமல் சம்சாரங் கொடியதெனத் தற்காலமாத்திரம் புத்
தியிற்றோன்றுவதென அறிக.

வினா:—தீவிரவைராகமாவது யாதெனின். (13)

விடை:—சொற்ப புண்ணியத்தால் புத்திரதாரதனாதி
கள் துக்ககாரணமென வெறுப்புற்று அவைகளாலுண்டாகு
ஞ்சுகத்தைச் சரீரமுள்ளபரியந்தமிச்சியா திருப்பதென அறிக.

விடை :—மிகுந்த புண்ணியத்தால் பிரஹ்மலோகபரியந்
தமான சகலலோக போகங்களும் சனனமரண சம்சாரங்களை
மென்மேலுந்தரத்தக்கவைகளெனத் திடமாக அறிந்து வெறுப்
புற்று அவைகளில் அத்தியந்தமிச்சையுதியாது உபேக்ஷயா
யிருத்தலென அறிக.

வினு :—வைராகத்துக்கு 1 ஏது 2 சொரூபம் 3 காரியம்
4 அவதி 5 பலம் எவையெனின்? (15)

விடை 1 :—இகத்திலுள்ள புஷ்பசந்தனுதி விஷயங்க
ளும், பரத்திலுள்ள அப்ஸரஸ்திரீ அமிர்தாதி விஷயங்களும்
அநித்தமாயும் அசுத்தமாயும் இருத்தலால் சுவானவாந்தியசன
மல மூத்திரங்கட்கும், மென்மேலும் இராகத்துவேஷங்களை
யுதிப்பித்து ஆகாமிய சஞ்சிதமென்னும் முதலைவாய்ப்படுத்திச்
சன்மசாகரத்தமிழ்த்தச்செய்வித்து அளவின்றிய துக்கங்களைத்
தரத்தக்கவைகளானமையின் காளகூட விஷம், அக்கினி;
நரகங்களுக்கும் சமானமென நிரந்தரம் விசாரித்துப்பார்க்குந்
தோட்டிருட்டியே ஏது. 2 விஷயங்களில் அருவருப்பும் பயமு
முற்று அவைகளை விட்டுவிடுதலே சொரூபம். 3 பிணியினிமித்
தம் புசிக்கப்படும் ஔடதங்களிலிச்சையுதியாதிருப்பதுபோல
விட்டவிஷயங்களிற் தேகதாரண நிமித்தம் புசிக்கத்தக்க சில
வற்றினுமிச்சையுதியாதிருத்தலே காரியம். 4 [illegible]சித்திர
ணங்களில் பிரியாப்பிரி[illegible]



அறிக. விஷயங்களினுள்ள தோஷங்களை விரிவஞ்சி விரி[illegible]
லேம். அறிய விரும்பில் வாசிட்டம் வைராக்கிய பிரகரணத்தி
னும் விசாரசாகரம் (5) வது தரங்கம் பர்ச்சுவின் வைராக்கி
யப் பிரசங்கத்தினுங் காண்க.

வினு :—சட்சம்பத்தியாவது யாதெனின், (16)

விடை :—சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சமாதானம்,
சிரத்தை ஆகிய ஆறுமென அறிக.

வினு :—இவைகளிற் சமமாவது யாதெனின். (17)

விடை :—விடயவாசனையாகிய மதத்தினையுற்று அதனுல்
இறப்பு, எதிர்வு, நிகழ்வென்னும் முக்காலத்தையுங் குறித்து
விடய சமூகங்களாகிய காட்டிற் சஞ்சரிக்க எழாநின்ற
மனமென்னும் மதயானையானது சென்ற காலத்தைப் பற்றி
யெழுமாயின் அதனுற் பிரயோசனமில்லை யெனவும், வருங்
காலத்தைப்பற்றி யெழுமாயின் தேகம் அநித்தியமெனவும்,
நிகழ்காலத்தைப்பற்றி யெழுமாயின், பிராரப்தத்தின்படி சித்
திக்குமேயன்றி அதற்கு வேருக யாதொன்றுஞ் சித்திக்கா
தெனவும், சுருதியாதிகளுக்கேற்க விசாரித்துப் பார்ப்பதாகிய
விவேகமும், விடய ஆராய்ச்சியினின் றெழுந்த விடய தோட

முன்னங்கமாகவும் ஜீவகாருண்ய மாதியைப் பின்னங்கமாகவுமுடையதென அறிக.

வினா:—தமமாவது யாதெனின்? (18)

விடை:—சப்தமாதிய விடயசமூகங்களாகிய பாலைவனங்களிற் செல்லுதலையுடைய பஞ்சேந்திரியங்களாகிய அசுவங்களை விடயதோடதிருட்டியாகிய சவுக்கினும் அகரோக்கமாகிய கடிவாளத்தினும் திருப்பி, கூர்மம் திங்குசேரிடுங்காலத்தில் அவை தன்னைச் சாராதிருக்கும்பொருட்டு அவயவங்களைத் தன்னிலடக்கிக் கொள்ளுவதுபோல விஷயங்களாலுண்டாகும் தீங்குகள் சேராதிருக்கும் பொருட்டும் சிரவணாதிகளை யுத்தேசித்தும் தத்தம் கோளகங்களாகிய இலாயங்களில் நிறுத்துதலென அறிக.

வினா:—உபரதியாவது யாதெனின். (19)

விடை:—நீக்கப்பட்ட மனைவி புத்திர தனாதி விஷயங்கள் முன்னிடில் வாந்தாசனமலமூத்திரம் போலவும், பின்றொடர்ந்துவரும் சர்ப்பவியாக்கிராதிகள் போலவும், கண்டுமிகுந்த அருவருப்பும் மிகுந்தபயமுமுற்று விட்டுவிடுதலும், சகல கன்மங்களும் சனன மரண சம்சாரங்கட்குக் காரணமென்வ[illegible]ஞ்சிப் பரிசியாதுவிடுத்து, அவைகளில் ஆச்சிரமத்துக்குத் [illegible]தாக அவசியஞ் செய்யத்தக்க விதியாயுள்ள சிலவற்றை



மாத்திரம் விஸ்தரியாது சங்கரமாகப் பலாபேக்ஷையின்றிச் செய்து ஈசுவரப் பிரீதியாக்குதல் அல்லது வியவகாரமற்றிருத்தலென அறிக.

வினா:—திதிக்ஷையாவது யாதெனின். (20)

விடை:—சிரவணாதிகட்கு விரோதிகளாக வாராநின்ற காமக்குரோத சீதோஷ்ண பசிதாக ஹானிலாப துவந்துவாதி தாபத்திரய துக்கங்களாகிய இவைகளில் காமக்குரோதாதிகளைத் துக்ககாரணமெனக்கண்டு விடுத்து மற்றவைகள் பிராரப்த கன்மகாரியங்களானமையால் அநுபவித்தே தீர்க்கவேண்டுமெனத் தெரிந்த நிச்சயபுத்தியால் சஞ்சலப்படாமற் சகித்துக் கொள்ளுவதென அறிக.

வினா:—சமாதானமாவது யாதெனின். (21)

விடை:—பூர்வாப்பியாச பலத்தால் விஷயங்களினின்றுந் திருப்பப்பட்டு முக்காலத்தையுங் குறித்தெழாதடங்கியிருக்கின்ற மனதை வெளிப்படுத்தி லக்ஷியவஸ்துவில் ஏகாக்கிரமாக நிலைபெற்றிருக்க அல்லது குருமுகமாகச் செய்யும் சிரவணார்த்தங்களைச் சிந்திக்கச் செய்குதலென அறிக.

வினா:—சிரத்தையாவது யாதெனின். (22)

விடை:—சுருதி, குரு, ஈசுவரன் இவர்களிடத்தில் இளங்கன்றீன்ற பசுவிற் பிரியம் வைப்பதுபோல வை

பிரியத்தோடு சுருதிவாக்கிய குருவாக்கியங்கள் சத்தியமென்றுள்ள விசுவாசமென அறிக.

வினா:—சுருதியின்பாற் சிரத்தைவைப்பது எதற்கு எனின்.

விடை:—பவசாகரத்துக்குக் கப்பலாயும் தாபத்திரயாக்கினிக்கு அமிர்தவருஷமாயும் சலத்தின் கலங்கலாதி மாசுகளை நீக்கிச் சாயை தோன்றும்படி தெளியச்செய்யாநின்ற கதகரேணுவைப்போல மனதிலுள்ள சகல சந்தேகங்களையும் போக்கிப் பொருணிச்சயந்தோன்றும்படி மனதைத் தெளிவுபெறச் செய்வதாயுமிருத்தலினென அறிக. (23)

வினா:—குருவின்பாற் சிரத்தைவைப்பது எதற்கெனின்.

விடை:—அஞ்ஞானாந்தகாரத்துக்கு ஞானசூரியனாகவும் மாயாமேகத்துக்குப் பிரசண்டமாருதமாகவும் மகாபாபிகளும் பேதவாதிகளும் தரிசன பரிசனத்தாற் சகலபாவங்களும் சகல பிராந்திகளும் நீங்கி முத்தியடைவதற் கேதுவாக கருணை பத்தி வைராகப் பிரஹ்மஞானமே சொரூபமாகவும் எழுந்தருளியிருத்தலினென அறிக. (24)

வினா:—குருவென்பவர் வேதாதிகள் கூறுவதையே கூறுகின்றவரன்றி வேறு கூறுகின்றவரல்லாமையினானும், வேதவ[illegible]ங்களே முத்தியடைவிப்பதற்கு காரணமாயிருவித்த [illegible]



னானும் அவைகளிற் சிரத்தைவைப்பது முக்கியமேயன்றிக் குருவின்பாற்சிரத்தைவைப்பது முக்கியமல்லவே எனின் (25)

விடை:—சமுத்திரத்தில் உள்ளவன் அச்சலத்திலுள்ள கைப்பினை நீக்க அறியாமற் பானஞ்செய்து தாகம்நீங்காமற் துக்கமநுபவிப்பதுபோலக் குருவின்றி வேதார்த்தங்களை விசாரிப்பவன் பூருவம் சித்தாந்தமாகிய வாக்கியார்த்தங்களில் தள்ளத்தக்கவை கொள்ளத்தக்கவை யிவையென அறியாமற் கிரகணஞ் செய்வதால் ஐயமாதிகள் நீங்காமற்றுன்பமேயநுபவிப்பன். இஃதன்றிச் சமுத்திரசலம் கரத்தாற் கிரகிக்கப்படின் கைப்பாயும், மேகத்தாற் கிரகிக்கப்பட்டு வருஷிக்கின் மதுரமாயுமிருப்பதுபோல வேதார்த்தங்கள் தானே கிரகிக்கப்படின் சித்தாந்தமான பொருளிஃதென அறியாமற் சலனமுற்றுத் துக்கித்தற் கேதுவாயும் பிரஹ்மஞானியாகிய குருவினாற் கிரகிக்கப்படின் சித்தாந்தமானபொருளைக் கரதலாமலகமாக அறிந்து சலனம் நீங்கிச் சுகமுறுதற்கேதுவாயுமிருத்தலால் குருவினிடத்துஞ் சிரத்தை வைக்கவேண்டுவது முக்கியமாமென அறிக.

வினா:—குருவென்பவர் வேதங்களின் உண்மைப்பொருளை மற்றொரு குருவால் கிரகித்தனரா? அல்லது தானே கிரகித்தனரா? வென ஆசங்கைநிகழ்ந்தபோதுமற்றொரு குருவாலெனின், அவரும் மற்றொரு குருவால், அ

றொரு குருவாலென எல்லையின்றிச் செல்லுகின்றமையால் அநவஸ்தாதோஷம் நேரிடும். அற்றன்று. சுருதிமூலமாகத் தானே கிரகித்துக்கொண்டாரெனின், அதிகாரிகளும் அங்ஙனம் கிரகித்துக்கொள்ளக்கூடும். குரு வேண்டுவதின்று. ஆதலின் சுருதியின்பாலன்றிக் குருவின்பாற் சிரத்தைவைப்பது முக்கியமல்லவா மெனின். (26)

விடை:—சகலவேதங்களையும் வெளியிட்டருளிய ஈசுவரனே குருமூர்த்தமாக எழுந்தருளியிருப்பவரெனச் சுருதிகள் கூறுகின்றமையால் குருவே வேதாதிகளின் உண்மைப்பொருளை ஐபவிபரீதங்களின்றி வெளியிட்டவராகும் அவரையன்றி யளவில்நூல்களை யளவில்காலம் வாசித்துணரினும் உண்மைப்பொருள் விளங்காது. ஆதலின் குருவினிடத்தும் சிரத்தைவைப்பது முக்கியமாமென அறிக.

(குருவையன்றிச் சாத்திரத்தால் பொருள் விளங்காதென்பதற்குப் பிரமாணம்)

சூதசங்கிதை பணாபூசாவிதியுரைத்த அத்தியாயம்.

அத்தகு சொரூபஞ்சற்குரு முகத்தினறிதல்வேண்டு மஃதன்றி யெத்தனை நூல் கற்றுணரினுமறிதலியலுறாதால்.

பராசர ஸ்மிருதி ஆசாரகாண்டம். க-வது அத்தியாயம்.

எழுதப்பட்ட ஏட்டின் நம்பிக்கையால் குருமுகமில்லாமல் ஓதப்பட்ட கல்வி கள்ளப்புருடனைச் சேர்ந்தவள் கருப்பம் வி[illegible]சபையில் விளக்கத்தை [illegible] யடையமாட்டாது.



வினா:—ஈசுவரனுக்கேனும் வேதாதிகளினுண்மைப்பொருளை யுபதேசித்தற்குக் குருவாக முன்னொரு ஈசுவரனிருந்திருக்கலாமெனின். (27)

விடை:—சகலசுருதிகளும் ஈசுவரனை அநாதியேகமெனக் கூறுகின்றமையால் அவர்களுக்குப் பூர்வம் வேறாக ஒரு ஈசுவரனிருந்திருக்கலா மென்பதும், சர்வஞ்ஞனெனக் கூறுகின்றமையால் அவருக் குபதேசிக்கத்தக்க குருவிருந்திருக்கலாமென்பதும் அறியாமையென அறிக.

வினா:—ஈசுவரனே குருவானால் குருவினிடத்துமாத்திரஞ் சிரத்தை வைக்கவேண்டுமெனக் கூறாது, குருவுக்கு அன்னியமாக ஈசுவரன் உளனென்பது தோன்ற ஈசுவரனிடத்துஞ் சிரத்தை வைக்கவேண்டுமெனக் கூறியது விரோதமாமெனின். (28)

விடை:—ஈசுவரன் வியாபக சொரூபமா யிருந்துகொண்டு பரிச்சின்னமாகிய குருமூர்த்தமாக ஓரோர்காலத்து ஓரோரிடத்திற் றோற்றமாகிறது ஈசுவரனது ஓரமுசமேயாகும். அங்ஙனங் குருமூர்த்தமாகத் தோற்றுவதும் ஈசுவரனாகிய தன் ஐந்தொழில்களில் ஒன்றாகிய அனுக்கிரகத்தொழில் செய்தற்கு மாத்திரமன்றி மற்றைய சிருட்டி திதி சங்காராதித் தொழில்கள் செய்தற்கன்று. ஈசுவரன் ஆணவத்தில் மறைப்புண்டிருக்கு முயிர்கட்குத் தனு கரண புவன போகங்களைச் சிருட்டித்துக் கொடுத்து அவ்வுயிர்கள் சித்தசுத்திமுதல் மே

க்ஷபரியந்தமான பலன்களையடைதற்கு ஏதுவாக இரக்ஷித்துக்
கொண்டிருப்பவராகும். ஆகலால் குருவின்றி ஈசுவரனிடத்
துஞ் சிரத்தை வைக்கவேண்டுமெனக் கூறியது விரோதமா
காதென அறிக.

வினா:—சமாதி சட்க சம்பத்திக்கு க. ஏது, உ. சொரூ
பம், ௩. காரியம், ௪. அவதி, ௫. பலம் எவையெனின். (29)

விடை:—க. இயமநியமாதிகள் ஏது, உ. பிரவிருத்தியின்
றியிராகின்றசித்தவிரோதம் சொரூபம், ௩. விவகாரக்ஷயம் காரி
யம், ௪. சுழுத்தியிற் சாக்கிரசொப்பனங்களை மறந்திருப்பது
போலச் சரீராதி சகலவிடயங்களையும் மறந்திருத்தல் அவதி,
௫. பிரஹ்மலோகசாரூபம் பலமென அறிக.

வினா:—சமாதி சட்கசம்பத்தி ஆறு சாதனங்களாக இரு
க்கச் சகலநூலாசிரியர்களும் ஒரேசாதனமாகவைத்துக் கூறி
யதென்னை யெனின். (30)

விடை:—சொர்ணத்தாற் செய்யப்பட்ட அநேகமணி
கள் சேர்ந்துள்ள மாலையை ஒரேபூடணமாகக் கூறுதல்போல,
சம முதலிய ஆறு சாதனங்களும் ஒன்றற்கொன்று சககாரிக
ளாக இருத்தலின் அவற்றை ஒரேசாதனமாகக் கூறினரென
அறிக.

வினா:—இவ்வாறுசாதனங்களும் ஒன்றற்கொன்று சககா
மல [illegible] ளென்பது எதனாலெனின். (31)
விஷ [illegible]
[illegible] த



விடை:—விஷயங்களிற் சலியாமல் மனமடங்கியிருப்ப
தாகிய சமஞ்சித்தியாதவரையில் இந்திரிய நிக்கிரகமுண்
டாகாது. அதனால்தமஞ்சித்தியாது. பால் வார்த்து வளர்க்கப்
பட்ட பூனையாயிருக்கினும், கட்டில் அகப்படாவிடின் எலி
யைக்காணில் அதன்மேற் பாய்வதுபோல, விஷயங்களினி
ன்றுந்திருப்பப்பட்ட மனதாயிருக்கினும், அடக்கமுறாவிடின்
புதிதாகிய போகங்களை விரும்பிக் கன்மங்களிற் பிரவிருத்திக்
கும். அதனால் உபரதி சித்தியாது. அந்தர்முகமாகிய
மனதால் சீதோஷ்ணாதிகளைச் சகிக்கமுடியுமேயன்றிப் பகிர்
முகமாகிய மனதால் சகிக்கமுடியாது. அதனால் திதிக்ஷை
சித்தியாது. விஷயங்களிற் சலிக்கு மனதுக்கு லக்ஷியவஸ்து
வில் ஏகாக்கிரமுண்டாகாது. அதனால் சமாதானஞ் சித்தி
யாது. ஸ்திரீ புத்திரதனேச்சையாற் சலிக்கும் மனதுக்குக்
குரு சாஸ்திரங்களில் விசுவாசமுதியாது. அதனால் சிரத்தை
சித்தியாது. சித்தியாதற்குச் சமத்தைத் தமமாதிய சாதனங்
களைந்தும் அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) இந்திரிய நிக்கிர
கமாகிய தமஞ்சித்தியாதவளாயில் விடயதரிசனத்தால் மன
ம் பகிர்முகப்படும். அதனால் சமஞ்சித்தியாது. விடயதரிச
னமுள்ளவளாயில் மனது விடய போகங்களைக் கருதி கன்ம
ங்களிற் பிரவிருத்திக்கும். அதனால் உபரதி சித்தியாது. இந்தி
ரியவழித்தாய்ச் சலிக்கு மனது சீதோஷ்ணாதிகளைச் சகிக்க
முடியாது. அதனால் திதிக்ஷை சித்தியாது. இந்திரியப்பிர
விருத்தியுள்ளவளாயில், மனது லக்ஷிய வஸ்துவில் நி[illegible]

றாது. அதனால் சமாதானஞ்சித்தியாது. ரூபாதி விஷயங்களில்
ஆசக்தியுள்ள மனது குரு சாஸ்திரங்களை விசுவாசியாது.
அதனால் சிரத்தை சித்தியாது. சித்தியாதற்குத் தமத்தைச்
சமமாதிய ஐந்து சாதனங்களும் அபேக்ஷிக்கின்றன. (இங்ங
னமே) சகல கன்ம பரித்தியாகமாகிய உபரதி சித்தியாவிடின்
மனது போகவிருப்பத்தால் கன்மங்களிற் பிரவிருத்திக்கும்.
அதனால் சமஞ்சித்தியாது. இந்திரியங்களும் கன்மசாதனங்
களை நாடும். அதனால் தமஞ்சித்தியாது. தனத்தை விரும்
பித் தொழில் செய்பவன் தன நஷ்டங்களைச் சகியாதது
போலச் சுகத்தை விரும்பிக் கன்மத்திற் பிரவிருத்திக்கும்
மனது சீதோஷ்ணாதி துவந்துவங்களைச் சகியாது. அத
னால் திதிக்ஷை சித்தியாது. கன்மப்பிரவிருத்தியுள்ள மனது
லக்ஷியவஸ்துவில் நிலைபெறாது. அதனால் சமாதானஞ்சித்தி
யாது. போகேச்சையால் கன்மங்களிற் பிரவிருத்திக்கும்
மனதுக்கு அவைகளின் நிவிருத்தியைப் போதிக்கும் குரு
சாஸ்திரங்களில் விசுவாசமுதியாது. அதனால் சிரத்தை சித்
தியாது. சித்தியாதற்கு உபரதியைச் சமமாதியஐந்து சாதன
ங்களும் அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) சீதோஷ்ணாதி
களைச் சகிக்கும் திதிக்ஷைசித்தியாதவரையில், மனது அவை
களை நிவர்த்திக்கும் சாதனங்களைக் கருதிப் பகிர்முகப்படும்.
அதனால் சமஞ்சித்தியாது. அதுபற்றியே இந்திரியங்களும்
...ர்முகப்படும். அதனால் தமஞ்சித்தியாது. தலைநோய்



சகிக்காதவன் அதன நிவிருத்திக்கான பற்றுகளைத் தலைக்
கிடுவதுபோல சீதோஷ்ணாதிகளைச்சகிக்க முடியாத மன
து அதன் நிவிருத்திக்கான கிரியைகளிற் பிரவிருத்திக்
கும். அதனால் உபரதி சித்தியாது. சீதோஷ்ணாதி து
வந்துவங்களிற் றபிக்கும் மனது லக்ஷியவஸ்துவில் நிலை
பெறாது. அதனால் சமாதானஞ் சித்தியாது. சகிப்பின்
றித் தாபப்படும மனதுக்குக் குருசாஸ்திரங்களில் விசுவா
சமுதியாது. அதனால் சிரத்தை சித்தியாது. சித்தி
யாதற்குத் திதிக்ஷையைச் சமமாதிய சாதனங்கள் ஐந்தும்
அபேக்ஷிக்கின்றன. [இங்ஙனமே] லக்ஷிபத்தில் நிலைபெற்
றிருக்குஞ் சித்தயேகாக்கிரமாகிய சமாதானஞ் சித்தியாத
வரையில் வெளியில் நின்றுக் திருப்பப்பட்ட பட்டிமாடா
னது கட்டுப்படாவிடின் பின்னும் வெளியிலோடுவதுபோல
விஷயங்களினின்றுந் திருப்பப்பட்ட மனதாயிருக்கினும்,
லக்ஷியவிஸ்துவில்நிலைபெறாவிடின் பின்னும் பகிர்முகப்படும்.
அதனால் சமஞ்சித்திபாது. அதுபற்றியே இந்திரியங்களும்
பகிர் முகப்படும். அதனால் தமஞ்சித்தியாது. லக்ஷியத்தில்
நிலைபெறாத மனது போகேச்சையால் கன்மங்களிற் பிரவி
ருத்திக்கும். அதனால் உபரதி சி;த்தியாது. நியாயத்திற்
கட்டுப்படாதவன் தண்டனையாதிகளை யேற்றுக்கொள்ளாதது
போல லக்ஷிபத்தில் நிலைபெறாத மனது சீதோஷ்ணாதி துவ
ந்துவங்களைச் சகிக்கமுடியாது. அதனால் திதிக்ஷை சித்தி
யாது. அரசன் சந்திப்பை விரும்பாதவன் மந்திரி முத...

யோர்களைச் சிநேகியாததுபோல லக்ஷியவஸ்துவையடைய விரும்பாத மனது குருசாஸ்திரங்களை விசுவசியாது. அதனால் சிரத்தை சித்தியாது. சித்தியாதற்குச் சமாதானத்தைச் சமமாதிய ஐந்து சாதனங்களும் அபேக்ஷிக்கின்றன. [இங்ஙனமே] சற்குரு சாஸ்திர வசனங்களில் விசுவாசரூப சிரத்தை சித்தியாவிடின் புருடனானவன் விதவையானவள் தன்னழகைப் பார்ப்பதற்குபயோகமாகிய சிங்காரங்களைச் சிங்காரித்துக்கொள்ளாததுபோலச் சிரவணத்துக்குபயோகமாகிற சமமுதலிய சாதனங்களி லொன்றையும் தாரணஞ் செய்து கொள்ளுகிறதில்லை. மற்றும் சிரத்தையின்றித் தாரணஞ் செய்துகொண்ட சகல சாதனங்களும் விதவை. செய்துகொண்ட சிங்காரம்போல வியர்த்தமாம். ஆகலால் சிரத்தையைச் சமமாதிய ஐந்து சாதனங்களும் அபேக்ஷிக்கின்றன. இங்ஙனம் சமமுதலிய ஆறு சாதனங்களும் ஒன்றற்கொன்று சககாரிகளாயுள்ளனவென அறிக.

வினா:—இந்த ஆறுசாதனங்களில் சமத்தை முதலினும் சிரத்தையை அந்தத்தினும் வைத்துக் கூறியதென்னை யெனின். (32)

விடை:—விருக்ஷமானது சாகை தளிர் இலை மலர் காய் பலமாதியவைகட்கு ஆதாரமாயிருத்தல்போல மனமானது சமமாதிய சகல சாதனங்கட்கும் ஆதாரமாயிருத்தலால் மனநிக்கிரகமாகிய சமம் முதலில் வைத்துக் கூறப்பட்டது.



விருக்ஷத்தின் அந்தத்திலுள்ள பலத்தின் பரிபாக அவஸ்தையில் மாதுரியமான இரசமுண்டாவதா யிருத்தலால் விருக்ஷத்தின் சர்வ அங்கங்களினும் பலம் சிரேஷ்டமாவதுபோல விவேக வைராக சமமாதிய சகல சாதனங்களினும் சிரத்தையால் முமுட்சுத்துவ முண்டாகின்றமையால் சிரத்தையே சிரேஷ்டமாம். ஆதலால் சிரத்தை அந்தத்தில் வைத்துக் கூறப்பட்டது. இப்படியே பலத்தின் உற்பத்திக்குப் பின்னர் மாதுரியமான இரசமுண்டாவதுபோலச் சிரத்தையின் உற்பத்திக்குப் பின்னர் முமுட்சுத்துவ முண்டாகின்றமையால் முமுட்சுத்துவத்தைச் சிரத்தைக்குப் பின்னர்வைத்துக் கூறியதென அறிக.

வினா:—சிரத்தையுண்டாகிய பின்னர் தான் முமுட்சுத்துவமுண்டாகுமென்றது எதனாலெனின். (33)

விடை:—மோக்ஷமொன்றுளது, அதனையடைந்தவர் சகல துக்கங்களுமின்றி யெப்போதும் பிரஹ்மானந்த சொரூபமாக அழிவின்றி யிருப்பர்களெனக் கூறுகின்ற குரு சாஸ்திர வசனங்களிற் கேட்பவனுக்கு நம்பிக்கை யுண்டானாலன்றி மோக்ஷத்தையடைய வேண்டுமென்னு மிச்சை யுதயமாகிறதில்லையாகலினென அறிக.

வினா:—முமுட்சுத்துவம் யாதெனின். (34)

விடை:—சிலதின வுபவாசத்தாற் பசியதிகரித்தவன் ஸ்திரீயையும், நடனாதிகளையும் விரும்பாமல் அன்

தைமாத்திரமும் சிரரோமத்தில் நெருப்புப்பற்றப்பெற்றவன் சேற்றையும், பனித்துளியையும் விரும்பாமல், இறங்குதுறையில் அமிழ்த்தத்தக்க சலத்தைமாத்திரம் விரும்புவதுபோலத் தாபத்திரய துக்கங்களை நிவிருத்திக்கும் பொருட்டு, அநித்தியமாகிய சாலோகாதிபத மோக்ஷங்களைத் தரத்தக்க கன்மம் பத்தியுபாசனையாதிகளை விரும்பாமல் நித்தியமாகிய ஐக்கிய மோக்ஷத்தை மாத்திரம் அதிதீவிரமாக விரும்புதலாம். இம்முமுட்சுத்துவம் சகல சாதனங்களுமுண்டாதற்குப் பூர்வம் மந்தரூபமாக வுள்ளதென அறிக.

வினு :—முமுட்சுத்துவம், சகல சாதனங்களுமுண்டாதற்கு முன்னம் மந்தரூபமாக வுள்ளதென்றது எதனுலெனின். (35)

விடை :—மந்தரா யிருப்பவர்கட்கும், பிரயோசன வுத்தேசமின்றி பெந்தப் பிரவிருத்தியும் உண்டாகாது. இப்படியே, மோக்ஷரூப பல இச்சையன்றி நிஷ்காமகன்ம முதலிய சாதனங்களில் எவர்களுக்கும் பிரவிருத்தி யுண்டாகாது. ஆதலால் மந்த முமுட்சுத்துவம் சர்வ சாதனங்களுக்கும் முன்னரே யுண்டாயிருக்கிறது; ஆயினும் அது தீவிரமாக இல்லை. நிஷ்காம முதலிய அன்னிய சாதனங்கள் சித்தியான பின்னர்த் தீவிர முமுட்சுத்துவ முண்டாகிறது. இது வே குருசரணசேவை, சிரவணம் முதலிய மேற்சாதனங்களிற் பிரவர்த்திப்பதற்கு ஏதுவாயுள்ளதென அறிக.



வினு :—முமுட்சுவத்திற்கு க. ஏது, உ. சொரூபம், ந. காரியம், ச. அவதி, ரு. பலமாகிய ஐந்துமெவை யெனின். (36)

விடை :—க. சாதுசங்கம் ஏது. உ. இகபரசுக இச்சையின்றி மோக்ஷ சுகத்தில் மாத்திரமுள்ள இச்சை சொரூபம். ந. சற்குருவைத்தேடி யடைதல் காரியம். ச. சர்வகன்ம பரித்தியாகம் அவதி. ரு. பிரஹ்மலோக சாயுச்சியம் பலமென அறிக.

வினு :—முமுட்சுக்களெத்தனை பிரிவினரெனின். (37)

விடை :— தீவிரன், மத்திமன், மந்தன், அதிமந்தனென நான்கு பிரிவின ராவரென அறிக.

வினு :— தீவிர முமுட்சு யாவனெனின். (38)

விடை :— தாபத்திரய துக்கங்களைச் சகிக்கமுடியாதவனுய்த் துக்ககாரணமாகிய ஈடணாத்திரயங்களையும், சுட்ட சட்டியைக் கைவிடுவதுபோல அதிவிரைவாய் விட்டுத்துறந்து வியாதியாற் றுன்புறுபவன் தகுதியாகிய வைத்தியனைத்தேடி யடைவதுபோலச் சற்குருவைத்தேடி யடைபவனுகும். இவன் இச்சன்மத்திற்றுனே சீவன்முத்தனுவனென அறிக.

வினு:—மத்திமமுமுட்சு யாவனெனின். (39)

விடை:—ஈடணாத்திரயாபிமானமே சர்வ துக்ககா
மென்பதையும் பிரமாத்மைக்கிய ஞானமே இலை

ர்த்தித்து அதிதானந்தமய மோக்ஷத்தைத் தரத்தக்கதென்பதையும் சாத்திரத்தாலும் சற்சங்கவசனத்தாலும், யூகத்தாலும், அறிந்தபின்னும், மனைவி, புத்திராதி குடும்பங்களைவிட்டொழியமாட்டாமல் சஞ்சலம் பொருந்திய பாசமனதுடன் கூடியிருப்பவனாவன். இவன் மூன்று சன்மத்திற் சீவன்முத்தனாவனென அறிக.

வினா:—மந்தமுமுட்சு யாவனெனின். (40)

விடை:—மோக்ஷமடைதற்குக் காலம் பின்னிருக்கின்றது, இப்போதேன் அவசரப்படவேண்டும், புசிக்கத்தக்க போகங்களனைத்தையும் புசித்துச் செய்யத்தக்க விவகாரங்களனைத்தையுஞ் செய்து முடித்துவிட்டு அதற்குமேல் மோக்ஷ எத்தனஞ் செய்வோமென்றெண்ணிக் கொண்டிருப்பவனாவன். இவன் யுகாந்தத்தில் முத்தனாவனென அறிக.

வினா:—அதிமந்தமுமுட்சு யாவனெனின். (41)

விடை:—வருவது சும்மாவிருக்கினும் வரும், வராதது எந்த எத்தனம் பண்ணினும் வராது, மார்க்கத்திற் செல்பவனுக்கு யாதொரு பிரயத்தனமுமின்றி யெதிரே மாணிக்கமிருந்து கிடைத்தாற்போல நமக்கும் மோட்சம் கிடைக்குமானாற் கிடைக்குக, பிரயத்தனம் பண்ணவேண்டாமென்றும் மூடபுத்தியோடிருப்பவன். இவன் பலயுகங்கள் செல் [illegible]லும் முத்தியடையாதவனாய்ப் பலவிததுக்காநுபவியாகவே [illegible]னென அறிக.



வினா:—துக்கங்களெத்தனை விதமாமெனின் (42)

விடை:—அத்தியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்வீகம் என மூவிதமாமென அறிக.

வினா:—இவைகளில் அத்தியான்மிக துக்கமாவது யாதெனின். (43)

விடை:—ஆத்மாவை யாசிரயித்திராநின்ற தூலசூட்சமசரீரங்களைப் பற்றி வராநின்ற துக்கமாகும். இதுவும் க்ஷய, குன்ம சுர மேக குஷ்ட காச வலிப்பாதிய ரோகம் பசி, தாகம்என்பவற்றினால் வருந்துக்கங்களாகிய காயிகமும், காமமுதலியவற்றால் வருந்துக்கங்களாகிய மானஸிகமுமென இரண்டுவிதமாமென அறிக.

வினா:—ஆதிபௌதிக துக்கங்களெவை யெனின். (44)

விடை:—தனது சேர்க்கைக்கு வேறாயும், இந்திரியங்கட்கு விஷயமாயும் உள்ள சத்துரு, சோர, கஜ, வியாக்கிர, சுவான, சர்ப்ப, முதலையாதிய அந்நியப் பிராணிகளே ஆதிபௌதிகங்களாம். இவைகளைப்பற்றி வராநின்ற துக்கங்களென அறிக.

வினா:—ஆதிதெய்வீக துக்கங்களெவையெனின். (45)

விடை:—தனது சேர்க்கைக்கு வேறாயினவாய[illegible] சுவிந்திரியத்துக்கு விஷயமல்லாதனவாயும், [illegible]

ர்த்தித்து அதிதானந்தமய மோக்ஷத்தைத் தரத்தக்கதென்பதையும் சாத்திரத்தாலும் சற்சங்கவசனத்தாலும், யூகத்தாலும், அறிந்தபின்னும், மனைவி, புத்திராதி குடும்பங்களைவிட்டொழியமாட்டாமல் சஞ்சலம் பொருந்திய பாசமனதுடன் கூடியிருப்பவனானவன். இவன் மூன்று சன்மத்திற் சீவன்முத்தனாவனென அறிக.

வினா:—மந்தமுமுட்சு யாவனெனின். (40)

விடை:—மோக்ஷமடைதற்குக் காலம் பின்னிருக்கின்றது, இப்போதேன் அவசரப்படவேண்டும், புசிக்கத்தக்க போகங்களனைத்தையும் புசித்துச் செய்யத்தக்க விவகாரங்களனைத்தையுஞ் செய்து முடித்துவிட்டு அதற்குமேல் மோக்ஷ எத்தனஞ் செய்வோமென்றெண்ணிக் கொண்டிருப்பவனானவன். இவன் யுகாந்தத்தில் முத்தனாவனென அறிக.

வினா:—அதிமந்தமுமுட்சு யாவனெனின். (41)

விடை:—வருவது சும்மாவிருக்கினும் வரும், வராதது எந்த எத்தனம் பண்ணினும் வராது, மார்க்கத்திற் செல்பவனுக்கு யாதொரு பிரயத்தனமுமின்றி யெதிரே மாணிக்கமிருந்து கிடைத்தாற்போல நமக்கும் மோட்சம் கிடைக்குமானாற் கிடைக்குக, பிரயத்தனம் பண்ணவேண்டா[illegible]றும் மூடபுத்தியோடிருப்பவன். இவ[illegible] [illegible]னும் முத்தி[illegible]



வினா:—துக்கங்களெத்தனை விதமாமெனின் (42)

விடை:—அத்தியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்வீகம் என மூவிதமாமென அறிக.

வினா:—இவைகளில் அத்தியான்மிக துக்கமாவது யாதெனின். (43)

விடை:—ஆத்மாவை யாசிரயித்திராநின்ற தூலசூட்சமசரீரங்களைப் பற்றி வாராநின்ற துக்கமாகும். இதுவும் க்ஷய, குன்ம சுர மேக குஷ்ட காச வலிப்பாதிய ரோகம் பசி, தாகம்என்பவற்றினால் வருந்துக்கங்களாகிய காயிகமும், காமமுதலியவற்றால் வருந்துக்கங்களாகிய மானஸிகமுமென இரண்டுவிதமாமென அறிக.

வினா:—ஆதிபௌதிக துக்கங்களெவை யெனின். (44)

விடை:—தனது சேர்க்கைக்கு வேறாயும், இந்திரியங்கட்கு விஷயமாயும் உள்ள சத்துரு, சோர, கஜ, வியாக்கிர, சுவான, சர்ப்ப, முதலையாதிய அங்கியப் பிராணிகளே ஆதிபௌதிகங்களாம். இவைகளைப்பற்றி வராநின்ற துக்கங்களென அறிக.

கள் ஆதிதெய்வங்களாம். இவைகளால் நடத்தப்பட்ட யக்ஷ ராக்ஷச பிசாச கிரகாதிகளாலும், மிகுபனி மிகுமழை இடி காற்று வெயிலாதிகளாலும், மதிலிடிந்துவிழுதல் மரமொடிந்துவிழுதலாதிகளாலும் வராநின்ற துக்கங்களென அறிக.

வினா:—அதிகாரிகட்குச் சாதனங்கள் ஒன்றிரண்டு குறைவுபடாமல் நான்கும் வேண்டுமோவெனின். (46)

விடை:—முதற்சாதனமட்டுமுள்ளார்கள் விஷயாசக்தராய் காமியகன்மங்களிற் பிரவர்த்திக்கின்றமையால் வைராகமாகிய இரண்டாஞ் சாதனமும் வேண்டும். இவ்விரண்டுசாதனங்களுமுள்ளாரும் கோபாதிகளாற் றபிக்கின்றமையால் சமாதிசட்கசம்பத்தியாகிய மூன்றாஞ் சாதனமும் வேண்டும். இம்மூன்று சாதனங்களுமுள்ளாரும் குருவையடைந்து சிரவணாதியில் பிரவிருத்தியின்றியிருத்தலால், முமுட்சுத்துவமாகிய நான்காஞ் சாதனமும் வேண்டுமென அறிக.

வினா:—இந்நான்கு சாதனங்கட்கும் பலம் யாதெனின். (47)

விடை—நான்கு சாதனங்களும் அவதிபரியந்தம் ஒத்திராமல் ஒன்றற்கொன்று தாரதம்மியமா...



வினா:—சாதனங்களின்றிச் சிரவணஞ் செய்பவனுக்கு ஞானஞ் சித்தியாதோவெனின். (48)

விடை:—சூத்திரன் உபநயனஞ் செய்யினும் அவனுக்குப் பிராஹ்மணத்துவஞ் சித்தியாததுபோலச் சாதனங்களில்லாதவன் சிரவணஞ்செய்யினும் சிரவணந் திடப்படாது. திடப்படாத சிரவணத்தால் ஞானஞ் சித்தியாது. ஆதலின் சிரவணகாலத்திலேனும் சாதனங்களையப்பியாசித்தடையவேண்டுமென அறிக.

வினா:—நான்கு சாதனங்களுமுள்ளவர்களே அதிகாரிகளென்பது துணிபாயிருக்க, அவர்களை மூன்று சாதனங்களுமுள்ளவர்களென்பதுந் தோன்றப் பெயர்கூறாமல் பிந்திய ஒரு சாதனமாத்திரமுள்ளார்களென்பது தோன்ற முமுட்சுக்களெனச் சாத்திரங்களிற் பெயர்கூறுவது எதனாலெனின். 49

விடை:—முமுட்சுத்துவமானது நிஷ்காமகன்மங்களும் விவேகாதி மூன்று சாதனங்களும் உண்டாவதற்குப் பூர்வம் மந்தரூபமாகவும், விவேகம், வைராகம், சமாதிசட்கசம்பத்திகளுதயமாகியதற்குப் பின்னர் தீவிரரூபமாகவும் முன்பின் வியாபித்திருப்பதென்பதும், முமுட்சுத்துவமின்றி மற்றமூன்று சாதனங்களுடையராயிருப்பினும் அவர்களதிகாரிகளல்ல

கள் ஆதிதெய்வங்களாம். இவைகளால் நடத்தப்பட்ட யக்ஷ ராக்ஷச பிசாச கிரகாதிகளாலும், மிகுபனி மிகுமழை இடி காற்று வெயிலாதிகளாலும், மதிலிடிந்துவிழுதல் மரமொடிந்துவிழுதலாதிகளாலும் வராநின்ற துக்கங்களென அறிக.

வினா:—அதிகாரிகட்குச் சாதனங்கள் ஒன்றிரண்டு குறைவுபடாமல் நான்கும் வேண்டுமோவெனின். (46)

விடை:—முதற்சாதனமட்டுமுள்ளார்கள் விஷயாசக்தராய் காமியகன்மங்களிற் பிரவர்த்திக்கின்றமையால் வைராகமாகிய இரண்டாஞ் சாதனமும் வேண்டும். இவ்விரண்டுசாதனங்களுள்ளாரும் கோபாதிகளாற் றபிக்கின்றமையால் சமாதிசட்கசம்பத்தியாகிய மூன்றாம் சாதனமும் வேண்டும். இம்மூன்று சாதனங்களுள்ளாரும் குருவையடைந்து சிரவணாதியில் பிரவிருத்தியின்றியிருத்தலால், முமுட்சுத்துவமாகிய நான்காஞ் சாதனமும் வேண்டுமென அறிக.

வினா:—இந்நான்கு சாதனங்கட்கும் பலம் யாதெனின். (47)

விடை—நான்கு சாதனங்களும் அவதிபரியந்தம் ஒத்திராமல் ஒன்றற்கொன்று தாரதம்மியமாக இருக்கிற் புண்[illegible]லோகமும், அவதிபரியந்தம் ஒத்திருக்கில் இவ்வுலகிற் [illegible]ண்டாகின்ற சிரவணாதிகளும் பலமாமென அறிக.



வினா:—சாதனங்களின்றிச் சிரவணஞ் செய்பவனுக்கு ஞானஞ் சித்தியாதோவெனின். (48)

விடை:—சூத்திரன் உபநயனஞ் செய்யினும் அவனுக்குப் பிராஹ்மணத்துவஞ் சித்தியாததுபோலச் சாதனங்களில்லாதவன் சிரவணஞ்செய்யினும் சிரவணந் திடப்படாது. திடப்படாத சிரவணத்தால் ஞானஞ் சித்தியாது. ஆதலின் சிரவணகாலத்திலேனும் சாதனங்களையப்பியாசித்தடையவேண்டுமென அறிக.

வினா:—நான்கு சாதனங்களுமுள்ளவர்களே அதிகாரிகளென்பது அணிபாயிருக்க, அவர்களை மூன்று சாதனங்களுமுள்ளவர்களென்பதுந் தோன்றப் பெயர்கூறாமல் பிந்திய ஒரு சாதனமாத்திரமுள்ளார்களென்பது தோன்ற முமுட்சுக்களெனச் சாத்திரங்களிற் பெயர்கூறுவது எதனாலெனின். 49

விடை:—முமுட்சுத்துவமானது நிஷ்காமகன்மங்களும் விவேகாதி மூன்று சாதனங்களும் உண்டாவதற்குப் பூர்வம் மந்தரூபமாகவும், விவேகம், வைராகம், சமாதிசட்கசம்பத்திகளுதயமாகியதற்குப் பின்னர் தீவிரரூபமாகவும் முன்பின் வியாபித்திருப்பதென்பதும், முமுட்சுத்துவமின்றி மற்றமூன்று சாதனங்களுடையராயிருப்பினும் அவர்களதிகாரிகளல்லரென்பதும், முமுட்சுத்துவமின்றியமற்றச் சாதனங்கள் பயன்படாவென்பதும், முமுட்சுத்துவமே குருசேவை

முதலியவற்றிற் பிரவர்த்தித்து மோக்ஷமடைதற்கு முக்கிய காரணமென்பதும் தோன்றும் நிமித்தமென அறிக.

வினா:—நான்குசாதனங்களையும் அடைந்துள்ள அதிகாரிகள் மேற்செய்யத்தக்கது யாதெனின். (50)

விடை:—பிணியாளர்கள் பிணியை நிவர்த்திப்பதாகிய ஔஷதந்தரத்தக்க பண்டிதனைத் தேடியடைவதுபோல் சம்சாரபந்தங்களை நிவர்த்திப்பதாகிய ஞானானுக்கிரகஞ் செய்யத்தக்க சற்குருவைத் தேடியடைகுதலென அறிக.

வினா:—அதிகாரிகள் குருவைத் தேடியடையுங் கிரமம் யாதெனின். (51)

விடை:—கிராதர்வலையிலகப்பட்டு அவ்வலையைக் கிழித்துக்கொண்டு ஓடாநின்ற மானானது, பின்னும் வேடர்குடிசிலாதிய கிராமங்களையும், புலியாதிய மிருகங்கள் வசிக்கும் மலை குகை பெருங்காடாதிகளையும், பாலைவனங்களையும், நாடாமல், சீதளமாகவும் நிர்ப்பயமாகவுமுள்ள நல்லாரணியங்களை நாடிச்செல்வதுபோலச் சனன மரண சம்சார துக்கங்கட்குப் பயந்து ஸ்திரீ தன புத்திராதிகளின் அபிமானங்களைத் துறந்து வெளிப்பட்ட முமுட்சுவானவன் பின்னும் ஸ்திரீயாதிகளையும், உலோகாயதராதிய பேதவாதிகள் சங்கங்களை[illegible]ம், சன்ம ஏதுவான சரியை கிரியை [illegible]



திரங்களைப் போதிப்பவருமாகிய அநாசாரியர்களையும் நாடாமல், பிரதிப்பிரயோசன விருப்பமின்றிக் கிருபாநிமித்தம் ஞானானுக்கிரகஞ் செய்பவராயும், கல்வி அறிவு அடக்கம் வைராகம் சீவகாருண்ணியங்களுள்ளவராயும் பிரஹ்மஞானியாயுமுள்ள சற்குருவை மனத்திலன்பும் வாக்கிற்றோத்திரமும் கரத்திலாராதனைக்குரிய பத்திர புட்பாதிகளுமாகிய இவைகளோடு அதிவிரைவாகத் தேடியருகிற்சென்று அவர் திருவடியைத் தரிசித்துப் பத்திரபுட்பங்களாலருச்சித்துச் சிரமேற்குவித்த அஞ்சலியஸ்தனாய்ப் பலதரம்வலம்வந்து நமஸ்கரித்தெழுந்து நின்று வாக்காற்றுதித்து மனதாற்றியானிப்பது குருவையடையுங் கிரமமென அறிக.

வினா:—குருவையடைந்த அதிகாரிகள் மேற்செய்யத்தக்கதுயாதெனின். (52)

விடை:—பெருவியாதியாற் றுன்புறுபவன் அவ்வியாதியை நிவர்த்திக்கவல்ல பண்டிதர்பால் தன் வியாதியை நிவர்த்திசெய்யவேண்டுமெனப் பிரியவசனங்கள் கூறிப் பொருளாதிகளைக்கொடுத்துப் பிரியமுண்டாகும்படி அவர்க்குபசரணை செய்துகொண்டிருப்பதுபோலச் சம்சாரபந்தங்களை நிவர்த்திக்கவல்ல சற்குரு சன்னிதானத்தில் நமஸ்கரித்தெழுந்து கிருபாசொரூபியாகிய சற்குருவே! ஓ சுவாமி! ஓ பகவானே! நானார்? இந்த நாநாவாகிய உலகம் யாது. இது யாருடையது? எனக்குச் சனனமரண சம்சாரம் வந்தவாறேது? இது [illegible]

முதலியவற்றிற் பிரவர்த்தித்து மோக்ஷமடைதற்கு முக்கிய
காரணமென்பதும் தோன்றும் நிமித்தமென அறிக.

வினா:—நான்குசாதனங்களையும் அடைந்துள்ள அதிகாரி
கள் மேற்செய்யத்தக்கது யாதெனின். (50)

விடை:—பிணியாளர்கள் பிணியை நிவர்த்திப்பதாகிய
ஔஷதந்தரத்தக்க பண்டிதனைத் தேடியடைவதுபோல் சம்
சாரபந்தங்களை நிவர்த்திப்பதாகிய ஞானனுக்கிரகஞ் செய்யத்
தக்க சற்குருவைத் தேடியடைகுதலென அறிக.

வினா:—அதிகாரிகள் குருவைத் தேடியடையுங் கிரமம்
யாதெனின். (51)

விடை:—கிராதர்வலையிலகப்பட்டு அவ்வலையைக் கிழித்
துக்கொண்டு ஓடாநின்ற மானானது, பின்னும் வேடர்குடிசி
லாதிய கிராமங்களையும், புலியாதிய மிருகங்கள் வசிக்கும்
மலை குகை பெருங்காடாதிகளையும், பாலைவனங்களையும், நா
டாமல், சீதளமாகவும் நிர்ப்பயமாகவுமுள்ள நல்லாரணியங்
களை நாடிச்செல்வதுபோலச் சனன மரண சம்சார துக்கங்
கட்குப் பயந்து ஸ்திரீ தன புத்திராதிகளின் அபிமானங்க
ளைத் துறந்து வெளிப்பட்ட முமுட்சுவானவன் பின்னும் ஸ்தி
ரீயாதிகளையும், உலோகாய



திரங்களைப் போதிப்பவருமாகிய அசாசாரியர்களையும் நாடா
மல், பிரதிப்பிரயோசன விருப்பமின்றிக் கிருபாநிமித்தம்
ஞானனுக்கிரகஞ் செய்பவராயும், கல்வி அறிவு அடக்கம்
வைராகம் சீவகாருண்ணியங்களுள்ளவராயும் பிரஹ்மஞா
னியாயுமுள்ள சற்குருவை மனத்திலன்பும் வாக்கிற்ஸ்தோத்திர
மும் கரத்திலாராதனைக்குரிய பத்திர புட்பாதிகளுமாகிய
இவைகளோடு அதிவிரைவாகத் தேடியருகிற்சென்று அவர்
திருவடியைத் தரிசித்துப் பத்திரபுட்பங்களாலருச்சித்துச் சிர
மேற்குவித்த அஞ்சலியஸ்தனாய்ப் பலதரம்வலம்வந்து நமஸ்க
ரித்தெழுந்து நின்று வாக்காற்றுதித்து மனதாற்றியானிப்பது
குருவையடையுங் கிரமமென அறிக.

வினா:—குருவையடைந்த அதிகாரிகள் மேற்செய்யத்தக்
கதுயாதெனின். (52)

விடை:—பெருவியாதியாற் றுன்புறுபவன் அவ்வியாதி
யை நிவர்த்திக்கவல்ல பண்டிதர்பால் தன் வியாதியை நிவர்த்
தி செய்யவேண்டுமெனப் பிரியவசனங்கள் கூறிப் பொருளா
திகளைக்கொடுத்துப் பிரியமுண்டாகும்படி அவர்க்குபசரணை
செய்துகொண்டிருப்பதுபோலச் சம்சாரபந்தங்களை நிவர்த்
திக்கவல்ல சற்குரு சன்னிதானத்தில் நமஸ்கரித்தெழுந்து
கிருபாசொரூபியாகிய சற்குருவே! ஓ சுவாமி! ஓ பகவானே!
நானார்? இந்த நாநாவாகிய உலகம் யாது. இது யாராலுடை
யது? எனக்குச் சனனமரண சம்சாரம் வந்தவாறேது? இது
செய்தருள

டுமெனச் சமயம் நேர்ந்தபோது, நேர்ந்தபோது விண்ணப்பித்துத் தன் திரவிய சரீர வாக்கு மனங்களைப் பாதகாணிக்கையாக அர்ப்பணஞ்செய்து, குருபரிவாத நிந்தையின்றியவனும் அவைகளை கேட்கச் சகியாதவனும், நவவிதபக்தியுடையவனும் குருவுக்குத் தன்பாற் கிருபையுண்டாகும்படி ஆத்தம் அங்கம் தானம் சத்பாவமென்னும் பணிவிடையாதிகளைச் செய்துகொண்டு, உடற்சாயைபோலும், ஊசிநூல்போலும், குளிர்காய்வான்போலும் குருவைவிட்டு நீங்காமலிருப்பதென அறிக.

வினா:—குருவுக்குச் செய்யும் திரவியார்ப்பணமாவது யாதெனின். (53)

விடை:—மனைவி, புத்திரன், பூமி, பசு, தாசி, தாசன், திரவியம், கிரகம், தானியம் ஆகிய இவைகட்குத் திரவியம் எனப்பெயராம். குருவானவர் சர்வ சங்கப்பரித்தியாகஞ் செய்த துறவியாயின் அவர் இவைகளிலொன்றையும் விரும்பாதவரும் சர்வசங்கப்பரித்தியாகிகளிடத்திற் பிரியருமாக இருப்பவரானமையால் அவர் கருத்துக்கிணங்க இவைகளனைத்தையும் பரித்தியாகஞ் செய்துவிடுதல், அல்லது கிரகாச்சிரமியாயின் இவைகளனைத்தையும் அவருக்கே உபயோகமாகும்படி தத்தஞ் செய்துவிடுதலென அறிக.

வினா:—பிரஹ்மவித்துக்களாகிய ஆசாரியர்கள் கிரகாச்[illegible]த்தினுமிருப்பார்களோவெனின். (54)



விடை:—யாஞ்ஞுபவல்கியர், உத்தாலகர், வசிட்டர் முதலிய ஆசாரியர்கள் கிரகாச்சிரமத்திலிருந்ததாகச் சாத்திரங்கள் கூறுகின்றமையால் கமலபத்திரோதகங்கள்போலக் கிரகாச்சிரமத்திலும்பற்றியும் பற்றாமலிருப்பார்களென அறிக.

வினா:—சரீரார்ப்பணமாவது யாதெனின். (55)

விடை:—சரீரத்தைச் சதா குருபணியினும் அவர் கட்டளைக்குக் கொஞ்சமேனும் மாறாமலும் இருக்கும்படி செய்குதலென அறிக.

வினா:—வாக்கர்ப்பணம் யாதெனின். (56)

விடை:—குருவாக்கியமே சகல தாபங்களையுஞ் சாந்தஞ் செய்வதாகிய தேவாமிர்தமென்னுந் திடநம்பிக்கையால், அற்பமேனுந்தோடதிருஷ்டியின்றி வாக்கிந்திரியம் குருவையே சதா கீர்த்தித்துக்கொண்டிருக்கும்படி செய்குதலென அறிக.

வினா:—:—மனார்ப்பணம் யாதெனின். (57)

விடை:—சச்சிதானந்த பரிபூரண சிவசொரூபமே நம்மையாட்கொண் டிரக்ஷிக்கும்பொருட்டுக்கிருபையினாற் குருமூர்த்தமாக எழுந்தருளியிருக்கிறதென்னும் நம்பிக்கையால் ஆசாரியர் தன்பாற் பிரியமாக இருக்கும்போது இரக்ஷகசர்த்தராகிய விஷ்ணுசொரூபமாகவும், கோபமாக இருக்கும்போது சம்ஹாரகர்த்தராகிய உருத்திர சொரூபமாகவும், இராசதவிவகாரத்திருக்கும்போது, சிருஷ்டிகர்த்தராகி[illegible]

முதலியவற்றிற் பிரவர்த்தித்து மோக்ஷமடைதற்கு முக்கிய காரணமென்பதும் தோன்றும் நிமித்தமென அறிக.

வினா:—நான்கு சாதனங்களையும் அடைந்துள்ள அதிகாரிகள் மேற்செய்யத்தக்கது யாதெனின். (50)

விடை:—பிணியாளர்கள் பிணியை நிவர்த்திப்பதாகிய ஔஷதந்தரத்தக்க பண்டிதனைத் தேடியடைவதுபோல் சம்சாரபந்தங்களை நிவர்த்திப்பதாகிய ஞானனுக்கிரகஞ் செய்யத்தக்க சற்குருவைத் தேடியடைகுதலென அறிக.

வினா:—அதிகாரிகள் குருவைத் தேடியடையுங் கிரமம் யாதெனின். (51)

விடை:—கிராதர்வலையிலகப்பட்டு அவ்வலையைக் கிழித்துக்கொண்டு ஓடாநின்ற மானானது, பின்னும் வேடர்குடிசிலாதிய கிராமங்களையும், புலியாதிய மிருகங்கள் வசிக்கும் மலை குகை பெருங்காடாதிகளையும், பாலைவனங்களையும், நாடாமல், சீதளமாகவும் நிர்ப்பயமாகவுமுள்ள நல்லாரணியங்களை நாடிச் செல்வதுபோலச் சனன மரண சம்சாரதுக்கங்கட்குப் பயந்து ஸ்திரீ தன புத்திராதிகளின் அபிமானங்களைத் துறந்து வெளிப்பட்ட முமுட்சுவானவன் பின்னும் ஸ்திரீயாதிகளையும், உலோகாயதராதிய பேதவாதிகள்



திரங்களைப் போதிப்பவருமாகிய அநாசாரியர்களையும் நாடாமல், பிரதிப்பிரயோசன விருப்பமின்றிக் கிருபாநிமித்தம் ஞானனுக்கிரகஞ் செய்பவராயும், கல்வி அறிவு அடக்கம் வைராகம் ஜீவகாருண்ணியங்களுள்ளவராயும் பிரஹ்மஞானியாயுமுள்ள சற்குருவை மனத்திலன்பும் வாக்கிற்ஸ்தோத்திரமும் கரத்திலாராதனைக்குரிய பத்திர புட்பாதிகளுமாகிய இவைகளோடு அதிவிரைவாகத் தேடியருகிற்சென்று அவர் திருவடியைத் தரிசித்துப் பத்திரபுட்பங்களாலருச்சித்துச் சிரமேற்குவித்த அஞ்சலியஸ்தனாய்ப் பலதரம்வலம்வந்து நமஸ்கரித்தெழுந்து நின்று வாக்காற்றுதித்து மனதாற்றியானிப்பது குருவையடையுங் கிரமமென அறிக.

வினா:—குருவையடைந்த அதிகாரிகள் மேற்செய்யத்தக்கதுயாதெனின். (52)

விடை:—பெருவியாதியாற் றுன்புறுபவன் அவ்வியாதியை நிவர்த்திக்கவல்ல பண்டிதர்பால் தன் வியாதியை நிவர்த்திசெய்யவேண்டுமெனப் பிரியவசனங்கள் கூறிப் பொருளாதிகளைக்கொடுத்துப் பிரியமுண்டாகும்படி அவர்க்குபசரணை செய்துகொண்டிருப்பதுபோலச் சம்சாரபந்தங்களை நிவர்த்திக்கவல்ல சற்குரு சன்னிதானத்தில் நமஸ்கரித்தெழுந்து கிருபாசொரூபியாகிய சற்குருவே! ஓ சுவாமி! ஓ பகவானே! நானார்? இந்த நாநாவாகிய உலகம் யாது. இது யாரையுடையது? எனக்குச் சனனமரண சம்சாரம் வந்தவாறேது? இது

ரஹ்மதேவசொரூபமாகவும், சாந்தமாக இருக்கும்போது சீதளமாகிய கங்காதேவி சொரூபமாகவும், உபதேசவசனங்களாகிற கிரணங்களாற் சந்தேக விபரீதங்கட்கு மூலமாகிய அஞ்ஞானாந்தகாரத்தை நிவர்த்திக்கும்போது சர்வத்தையும் விளக்கிவைப்பதாகிய சூரியசொரூபமாகவும், கருதி அற்பமேனுந் தோடதிருட்டியின்றிப் பாவிப்பதாகிய ஈசுவரபாவனை மாறாதிருக்கும்படி செய்குவதென அறிக.

வினா:—குருபரிவாதம் நிந்தையெவையெனின். (58)

விடை:—குருவின்பாலுள்ள துர்க்குணத்தை எடுத்துரைப்பது பரிவாதமாம். இல்லாத துர்க்குணங்களை யாரோபித்துக்கூறுவது நிந்தையாம். எவ்விடத்திலிவைகளிருக்கிறதோ அவ்விடத்திலிராமல் தன் இருகாதுகளையும் மூடிக்கொண்டு வேறிடத்துக்குச் சென்றுவிடவேண்டுமென அறிக.

வினா:—குருபரிவாதம் நிந்தைசெய்தவரடையும் பலம் யாதெனின். (59)

விடை;—பரிவாதஞ் செய்தவனுக்குக் கழுதைச் சென்மமும் நிந்தைசெய்தவனுக்கு நாய்ச்சென்மமும் பலமென அறிக.

(வயி. வருண ௫௫ பக்கம்)



விடை:—சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அருச்சனம், வந்தனம், தாஸபாவம், தோழமை, ஆத்மநிவேதனம் அதாவது தேகாதிகளெல்லாவற்றையுஞ் சமர்ப்பித்தல் என்னும் ஒன்பதுமென அறிக.

வினா:—குருவுக்குச் செய்யும் பணிவிடைகளில் ஆத்மப் பணிவிடையாதெனின். (61)

விடை:—இருவிழிக்கொரு மணிபோற் சீடனறிவு ஆசாரியர் மனநோக்கப்பிரகாரம் நிற்றலாகிய அநுகூலவிருத்தியென அறிக.

வினா—அங்கப்பணிவிடை யாதெனின். (62)

விடை:—கண்ணைப் பாதுகாக்கும் நிமைபோல் ஆசாரியர் அங்கத்தைப் பாதுகாத்தலும், அவர் சரீரசவுக்கியத்துக்குத் தக்க குற்றேவல் புரிதலுமென அறிக.

வினா:—தானப்பணிவிடை யாதெனின். (63)

விடை:—பிதா தன் பொருளைத் தன்னைப் பாதுகாக்கத்தக்க மகற்குக் கொடுத்தல்போலச் சீடன் தன்னைப் பந்தத்தினின்றும் வெளிப்படுத்தி முத்தியிற்சேர்க்கத்தக்க ஆசாரியருக்குத் தன்னுடல்பொருளாவியைத் தத்தஞ்செய்து அவரிருக்குந் தானமாகிய மனை நில முதலியவற்றைப் பூர்வம் தன் மனை நில முதலியவற்றைப் பாதுகாத்துவந்ததினும் பதின்

வினா:—சத்பாவப்பணிவிடையாதெனின். (64)

விடை:—ஆசிரியனைச் சச்சிதானந்த சிவசொரூபமாக மனதிற் பாவித்தலென அறிக.

ஆத்தமாதிய பணிவிடை நான்கிற்கும் பிரமாணம்
(வேதாந்தசூளாமணி)

ஆத்தமுடனங்கமேதானஞ் சற்பாவமாமவற்றுட் குருபரனுக்கநுகூலவிருத்தி; யாத்தமுயர் குருபரன் குற்றேவலேயங்கமருட்குரவர்க்குரிய மனைநிலமுதலாமவற்றைக்; காத்தலதுதானமாஞ் சற்குருவேமெய்யாக்கண்ட சிவமெனநம்புமதுவேசற்பாவம்.

வினா:—சீடர்களெதுபரியந்தம் ஆசாரியர்க்குப் பணிவிடை செய்துவரவேண்டுமெனின். (65)

விடை:—தங்கள் சரீரமுள்ளபரியந்தம் பணிவிடைகள் செய்துகொண்டு குருவைவிட்டு நீங்காதிருக்கவேண்டுமென அறிக.

பிரமாணம் (கைவல்யநவநீதம்)

நற்கருத் துடையோ னாகி ஞானவா னாகி நின்றான்
மர்க்கட நியாயம் போலே பகாபூத விகாரந் தொட்டு
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன
சற்குரு வினைவி டாமற் சந்தத மநுசரித்தான்.



வினா:—குருவைவிட்டு நீங்காதிருக்கவேண்டுமென்பது எதனாலெனின். (66)

விடை:—பிணியாளர் ஔடதாதிகளைப் புசிக்குங்காலத்துண்டாகும் குணதோஷங்களைத் தெரிவித்து மேற்புசிக்கத் தக்கவைகளையும் அடிக்கடி தெரிந்துகொள்ளும் நிமித்தம் பண்டிதனை நீங்காதிருப்பதுபோல மாணாக்கர்கள் பந்தநிவிருத்திக்கான தியானாதிகளை யநுட்டிக்குங் காலத்துச் சித்தத்திலுண்டாகும் குணதோஷ சந்தேகாதிகளை ஆசிரியர்பால் தெரிவித்து மேலநுட்டிக்கத்தக்கவைகளைத் தெரிந்துகொள்ளும் நிமித்தமென அறிக.

வினா:—தெரிந்துகொள்ளத் தக்கவைகளைத் தெரிந்துகொண்டபின்னரும், மாணாக்கர்கள் குருவைவிட்டு நீங்காதிருந்தும் பணிவிடைகள் செய்துவரவேண்டுமோவெனின். (67)

விடை:— மாணாக்கர்கள் குருவின்பாற் றெரிந்துகொள்ளத்தக்கவைகளைத் தெரிந்துகொண்டபின்னர் குருபணிவிடைகளைச் செய்யாமற் கைவிடுவராயின் செய்ந்நன்றிமறத்தலென்னுந் தோடமுதயமாகி மாணாக்கர்களுடையத்தக்க ஞானத்தைப் பிரதிபந்திக்கும். ஆதலின் சரீரமுள்ளபரியந்தம் செய்துவரவேண்டுமென அறிக.

வினா:—அற்றேல் மாணாக்கர்கள் தியானபலத்தால் நிருவிகற்பசமாதியையடைந்து திரிபுடித் தோற்றமின்றிச் சொரூபாகாரமாக நிலைபெற்றிருக்கும்போது குருபணிவிடைகள் கைவிடப்படும். அது செய்நன்றிமறத்தலென்னுந் தோடத்துக்கிலக்காகாதோவெனின். (68)

விடை:—மாணாக்கர்கள் ஆசிரியனைச் சச்சிதானந்த சிவசொரூபமாக நிச்சயித்துள்ளவர்களானமையின், அவர்கள் நிருவிகற்பசமாதியில் அச்சச்சிதானந்த சிவசொரூபமே தாமாகச் சேடித்து நிற்றலாகிய அந்நிலைமை ஆத்தமாதிய நான்குபணிவிடைகளில் மேலாகிய சத்பாவப்பணிவிடையின் பரிபாக முதிர்ச்சியாயிருத்தலுமன்றி, மாணாக்கனுக்குபதேசிக்கும்போது தான் பெற்ற பேற்றை யுலகமும் பெறவேண்டுமென்னுங்காருண்ணியத்தால் இவன் நிருவிகற்பசமாதியையுற்று முக்தனாகவேண்டுமென்பது ஆசிரியர் கருத்தாதலின் அவர் கருத்தின்வழி நிற்றலாகிய ஆத்தப்பணிவிடையாகவுமிருத்தலால் அது செய்நன்றிமறத்தலென்னுந் தோடத்துக் கிலக்காகாதென அறிக.

வினா:—அதிகாரிகள் பலவிதமாக இருப்பர்களோவெனின். (69)



விடை:—மந்தர், மத்திமர், உத்தமர், உத்தமோத்தமரென நான்குவிதமாயிருப்பார்களென அறிக.

வினா:—மோக்ஷமடையவேண்டுமென்னு மொரே கருத்துடைய அதிகாரிகளை நான்குவிதபேதமாகக் கூறியது எதனாலெனின். (70)

விடை:—ஒருவரைவிட ஒருவர் சீக்கிரத்தில் முத்தியடையக்கூடியவர்களா யிருத்தலினென அறிக.

வினா:—அங்ஙனமிருப்பது எதனாலெனின். (71)

விடை:—வாழைமரம், ஈரவிறகு, சுள்ளிவிறகு, கற்பூரமாகிய இவைகள் முறையே ஒன்றற்கொன்று சீக்கிரத்தில் நெருப்புப்பற்றக்கூடிய ஈரமாதிய தோஷக்குறைவையுடையனவாயிருப்பதுபோல மந்தர் முதலிய நால்வரும் ஒருவரைவிட ஒருவர் சீக்கிரத்தில் முத்தியடையக்கூடிய சித்தமலினக்குறைவையுடையவர்களாயிருத்தலினென அறிக.

வினா:—மந்தர் முதலிய நால்வரையும் எங்ஙனம் பிரித்தறியலாமெனின். (72)

விடை:—சாதனசதுட்டயங்கள் ஏதுபரியந்த முள்ளவர்களை மந்தர் எனவும், சொரூபபரியந்தமுள்ளவர்களை மத்திமரெனவும், காரியபரியந்தமுள்ளவர்களை உத்தமரெனவும், அவதிபரியந்தமுள்ளவர்களை உத்தமோத்தமரென்வும்

தறிபலாம். இவர்களில் மந்தர் மத்திமர்களிருவருக்கும் யோகமும், உத்தமருத்தமோத்தமரெனுமிருவருக்கும் விசாரமும் முக்கியமாகுமென அறிக.

வினா:—மந்தர் மத்திமர்களுக்கு யோகம் முக்கியமென்றது எதனாலெனின். (73)

விடை:—மந்தர் மத்திமர்களாகிய இருவருக்கும் சித்த சஞ்சலாதிகள் மிகுதியாயிருக்கும். அவைகளை யோகம் எளிதாய் நிவர்த்தித்து, அந்நிவிருத்தித்துவாரா நிருவிகற்ப சமாதியையுண்டுபண்ணுவதாயிருத்தலினென அறிக.

வினா:—யோகமாவது யாதெனின் (74)

விடை:—புராணசிரவணத்தால் சிவ விஷ்ணுவாதிய மூர்த்திகளைப் பரோக்ஷமாக அறிந்து தியானிப்பதுபோல மோக்ஷ இச்சையால் குருமுகமாகச் செய்யப்பட்ட சாஸ்திர சிரவணத்தால் பிரஹ்மத்தைப் பரோக்ஷமாக அறிந்து பின்னர் அபரோக்ஷமாதற்கு விசாரஞ்செய்யாமல் சதா தானே பிரஹ்மமெனப் பாவித்து மந்திரயோகம், பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகமென்னும் பஞ்சயோகங்களில் யாதானும் ஒன்றன் அநுசந்தானத்தால் மனதைப் பிரமஹ்மத்தில் லயப்படுத்துவதென அறிக.

வினா:—மந்திரமாதிய பஞ்சயோகங்களெவையெனின், (75)



விடை:—௧. பிரணவமாதிய மந்திரங்களின் அனுசந்தானத்தால் பிரஹ்மத்தில் மனமடங்குதல் மந்திரயோகம். ௨. பிரணவத்தோடு மனமும் பிராணனும் ஒன்றாகி மூலத்திருந்து இடைகலை பிங்கலை மார்க்கங்களினிடை[illegible]துச் சுழுமுனை என்னும் நாடிமார்க்கமாக ஆறாதாரங்களையுங் கிரமமாகக் கடந்துசென்று பிரஹ்மரந்திரத்துட்புகுந்து சிரோமத்தியதேசத்திற் பூரணமாகி நிறைந்துள்ள ஆன்மப்பிரகாசத்திலடங்குதல் பரிசயோகம். ௩. சுவர்க்கம் சிரமாகவும் திசைகள்செவிகளாகவும், சந்திரசூரியர்கள் விழிகளாகவும், அக்கினிமுகமாகவும், ஆகாயம் உந்தியாகவும், பூமி பாதமாகவும் உள்ள ஈசுவரனுடைய அளவுபடாத விராட்புருட வடிவத்தையாயினும், அல்லது அளவுபட்டுள்ள சதுர்ப்புஜங்களும் அவைகளுக்குரிய ஆயுதங்களும் அலங்காரங்களும் பொருந்திய ஈசுவரனுடைய திவ்விய மங்களவடிவத்தையாயினும் நினைந்து அவ்வடிவங்களிலுள்ள அவயவங்களை ஒரோரவயமாக நீக்கிப் பின் நீக்கப்படாமற் சேடித்துநின்ற அவயவியாகிய பிரஹ்மத்தில் மனமடங்குதல்பாவயோகமாம். ௪. கரணங்களுக்கு அகோசரமாயுள்ள அதிதப்பிரஹ்மத்தில் மனமடங்குதல் அபாவயோகமாகும். ௫. சிருட்டி பிரளயங்களிலும் அறிவறியாமைகளினும் ஒருதன்மையாகவேயிராநின்ற பிரஹ்மத்தில் மனமடங்குதல் மகாயோகமாகுமென அறிக.

வினா:—உத்தம உத்தமோத்தமர்களிருவருக்கும் விசாரம் முக்கியமென்றது எதனாலெனின்.

விடை:—இருவருக்குஞ் சித்தசஞ்சலாதிகளுக்கேதுவாயுள்ள மலவிக்ஷேபதோடங்களின்றி ஆவரணதோடமாத்திரமிருத்தலின் அதனை விசாரஞானம் எளிதாய் நிவர்த்தித்துப் பிரஹ்மசாக்ஷாத்கார நிருவிகற்பசமாதியை யுண்டுபண்ணுவதாகலின் என அறிக.

வினா:—விசாரமாவது யாதெனின். (77)

விடை:—குருமுகமாகச் செய்யப்பட்ட சிரவணத்தால் சர்வாதாரமாகச் சச்சிதானந்தபரிபூரண பரமாத்மாவுளதெனப் பரோக்ஷமாக அறிந்து, பின்னர் அபரோக்ஷமாக அறியும் நிமித்தம் சிற்சொரூபமாகிய பரமாத்மாவையும் சடசொரூபமாகிய அநாத்மவஸ்துக்களையும் சுருதி யுக்தி யநுபவங்களுக்கேற்க வேறுபிரித்துப் பார்த்தலென அறிக.

வினா:—ஆசிரியர்கள் மாணாக்கர்களுக்குச் சாத்திரபாடங்கள் போதிக்குங் கிரமம் யாதெனின். (78)

விடை:—மாணாக்கர்களின் வருணங்களுக்குத் தக்கதாக 12, 9, 6, 3 வருடபரியந்தம் சோதிக்குதல், அல்லது அதிதீவிரனாக இருக்கின் காலநியமமின்றிப் போதிக்குதல் முதலிய கிரமமாக நித்திரை சோம்பல்



றிச் சிறந்த இடமும் பார்த்துச் செங்கழுநீர்மாலைதரித்த மார்பினராயும், சாத்திரமேந்திய கையினராயும், தென்முகமாகச் சீடாதியர்களாலிடப்பட்ட ஆசனத்திருந்து கடவுளை வாழ்த்திப் போதிக்கப்படுவதாகிய சாத்திரார்த்தங்களை யுள்ளத்தின்கண்ணமைத்துக்கொண்டு விரைதலும் வெகுளலுமின்றி விருப்போடு முகமலர்ச்சியுடையராய்க் கேட்பவர்கள் புத்தியளவையறிந்து அதற்குத்தக்கதாக ஐயவிபரீதங்களின்றித் தெளிவுபொருந்த நாநாவித யுத்திபூர்வகமாகப் போதிக்குதலென அறிக.

வினா:—ஈசுவரனே ஆசிரியமூர்த்தமாக எழுந்தருளியிருப்பவரெனக் கூறுகின்ற சுருதிகட்கு ஆசிரியர் கடவுளை வாழ்த்திப் பாடங்கூறுபவரென்பது விரோதமாமெனின். (79)

விடை:—சீவன்முத்தர்கள் பாரகாரிய மானாலும் பலர்க்குபகாரமாக நேரதாய்ச் செய்வரெனக் கைவல்லிய நவநீதமென்னுஞ் சாத்திரங் கூறுகின்றமையால், ஆசிரியர் கடவுளை வாழ்த்துவது தன்பொருட்டன்றாம். சீடாதிய சீவர்கள் பிரஹ்மஞான முதயமாகும் பரியந்தம் ஈசுவரவாழ்த்தாதிகளைச் செய்யாமல் கைவிடுவார்களாயின் அவர்கட்குச் சித்தத்திலுள்ள மலினங்கள் நிவிருத்தியாகாமல் விருத்தியாகும். அதனால், சாதனங்கள் நிலைபெற்றுப் பூர்த்தியடையாமற் கு

நாமே கடவுள்வாழ்த்தாதிகள் செய்துகாட்டுவே மாகில் நாம் செய்வதைப் பார்த்துச் சீடராதியர்களுஞ் செய்து மலினம் நீங்கி ஏகாக்கிரமாகிய சுத்தசித்தர்களாகிச் சிரவணாதிகளின் பலத்தால் ஞானமும், அதனால் முத்தியும் பெறுவரெனப் பரோபகார நிமித்தமாகக் கருதிக் கருணையினாற்செய்துகாட்டுபவராகும். ஆதலால் விரோதமின்றென அறிக.

வினா:—போதனை யெத்தனை விதமாமெனின். (80)

விடை:—உத்தேசம், இலக்கணம், பரீக்ஷையென மூவிதமாகுமென அறிக,

வினா:—உத்தேசபோதனையாவது யாதெனின். (81)

விடை:—அறிவிக்கப்பட்ட தத்துவத்தைப் பெயர்மாத்திரமாகக்கூறுதலென அறிக.

வினா:—இலக்கணபோதனையாவது யாதெனின். (82)

விடை:—அறிவிக்கப்படுமிலக்கியத்துக்கு அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவ தோடங்களின்றிய அசாதாரண தருமங்களாகிய சிறப்புத்தன்மையைக் கூறுதலென அறிக

வினா:—அதிவியாப்தி தோடமாவது யாதெனின். (83)

விடை:—அறிவிக்கப்படும் இலக்கியத்துக்குக் கூறிய இலக்கணம் மற்றோரிலக்கியத்தினு மிருத்தலாம். அது, கோடுள்ளது பசுவெனல்போலுமென அறிக.

வினா:—அவ்வியாப்தி தோடம் யாதெனின். (84)



விடை:—அறிவிக்கப்படும் இலக்கியத்துக்குக் கூறிய இலக்கணம் அவ்விலக்கியத்தின் ஏகதேசத்தில்லா திருத்தலாம். அது பசு கபிலநிறமுள்ளதெனல் போலுமென அறிக.

வினா:—அசம்பவதோடமாவது யாதெனின். (85)

விடை:--அறிவிக்கப்படு மிலக்கியத்துக்குக் கூறிய இலக்கணம் அவ்விலக்கிய முழுவதினு மில்லாதிருத்தலாம். அது பசு ஒற்றைக் குளம்புடைய தெனல்போலுமென அறிக.

வினா:—முத்தோடங்களுமின்றிச் சிறந்த விலக்கணம் யாதெனின். (86)

விடை:—பலவற்றிற்கும் பொதுவாகவின்றி ஒன்றற்கேயுள்ளதும் குறைவும் அபாவமுமின்றியதுமாகிய இலக்கணமாம். அது கழுத்துத்தாடை முதுகுக் கொண்டையை யெப்போதுமுடையது பசுவெனல் போலுமென அறிக.

வினா:—இவ்விலக்கணம் முத்தோடங்களு மின்றியதெனல் எதனாலெனின் (87)

விடை:—கழுத்துத்தாடை முதுகுக் கொண்டையாகிய இலக்கணம் பசுவினங்கட்கன்றி மற்றைய மிருகங்கட் கில்லாமையால் அதிவியாப்தி தோடமும் பசுவினங்களனை

மெப்போது மிருத்தலால், அவ்வியாப்தி அசம்பவ தோடங்களுமின்றிய தென அறிக.

வினா:—பசுவுக்கிராநின்ற கழுத்துத்தாடை ஒணானுக்கு மிருப்பதால் அதிவியாப்தியாகுமெனின். (88)

விடை:—ஒணானுக்குக் கழுத்துத் தாடை எப்போது மிராமல் ஓரோர்காலத்திருக்கிறது. அதனால் அதிவியாப்தி யில்லையென்பது தோன்றக் கழுத்துத்தாடையை யெப்போது முடைய தென்றதோடு முதுகுக்கொண்டையையு முடைய தென்றமையால் பசுவிற்குக் கூறிய இலக்கணம் அதிவியாப்திதோட முடையதாகாதென அறிக.

வினா:—பிரஹ்மத்துக்குச் சிறந்த இலக்கணம் யாதெனின்; (89)

விடை:—சச்சிதாநந்த இலக்கணமென அறிக.

வினா:—பிரஹ்மத்துக்குக் கூறிய சச்சிதாநந்த இலக்கணம், அதிவியாப்தியாதிய முத்தோடங்களு மின்றியதாகுமோவெனின், (90)

விடை:—குறிப்பிடப்பட்ட இலக்கியமாகிய பிரஹ்மத்துக்குக் கூறியசச்சிதாநந்த இலக்கணம் குறிப்பிடப்படாதமற்[illegible]க்கியங்களாகிய பிரகிருதி முதலிய தத்துவங்களில் ஒன்[illegible]மையால் அதிவியாப்திதோடமும் பிரஹ்மவி



யாபகத்தி லேகதேசமாயினுங் குறைவுபடாமல் எப்போதும் பூரணமாக இருத்தலால் அவ்வியாப்தி அசம்பவ தோடங்களு மின்றியதே யாகுமென அறிக.

வினா:—பரீக்ஷாபோதனையாவது யாதெனின். (91)

விடை:—தன்னால் விவகரிக்கப்படும் பொருளுக்குக் கூறப்படுமிலக்கண முண்டோ இல்லையோ வெனச் சீடன் ஆராய்ந்தறிந்து தெளியும்படியாக வினாவிப் பரீக்ஷிக்குதலென அறிக.

வேதாந்தசூளாமணி.

(உபதேசமுறை மூவகையெனற்குப் பிரமாணம்.)

இனையவுபதேச முறையுத்தேசத்துடனே யிலக்கணஞ் சோதனையென மூன்றினையுமுடைத்தாமால். அறிய வுணர்த்துறுபொருளை நாமமாத்திரத்திலறைந்திடுதலுத்தேசமாங் களகம்பளமாம் குறியுடையதானெனல் போலப்பொருளிற் சிறந்த. குறியுரைத்தலிலக்கண மவ்விலக்கியமாம் பொருளிற் செறிவுறுமவ்விலக்கண முண்டோ விலையோ வென்னத்தெரிந்திடுதல் பரீட்சை.

வினா:—மாணாக்கர்கள் ஆசிரியர்பால் சாத்திர பாடங் கேட்டுக்கொள்ளுங் கிரமம் யாதெனின். (92)

விடை:—ஆசிரியர்பால் காலமறிந்துசென்று [illegible] பஞ்சாங்கமாக நமஸ்கரித்தெழுந்து அவ[illegible]

ர்ந்து இருக்கச்சொன்னபின் ஞானசாத்திரத்தை யவிழ்த்தோ ராதனத்தில் வைத்து, அஞ்சலியஸ்தராய்ச் சித்திரப்பாவை போலசைவற இருந்து படிக்க வுத்தரவளித்தபின்னர்க் கடவுளைத் தோத்தரித்துச் சாத்திரத்தைக் கையிலெடுத்துப் படித்து, பசி மிகுந்தவனுக்கு உணவினிடத்துள்ள இச்சைபோலப் பாடங்கேட்டலிலிச்சையுடையராய் மனஞ்சலியாமல் ஏகாக்கிரத்தோடு கேட்கப்பட்ட பொருள்களில் மீட்டுங் கேட்கத்தக்கவைகளைக்கேட்டுமறந்துவிடாமலுள்ளத்திலமைத்துக்கொண்டு நிறுத்தும்படி யுத்தரவளித்தபோது. படித்தலாதிகளை நிறுத்திச் சாத்திரத்தைக் கட்டிக் குருவைத் தோத்தரித்துச் செல்லும்படி யுத்தரவளித்த பின்னர் முன்போலவே நமஸ்கரித்தெழுந்து சிரமேற்குவித்த அஞ்சலியஸ்தராய் ஆசிரியர் பார்வையுள்ள பரியந்தம் புறங்காட்டாமல் பின்னிட்ட நடையராய்ச் செல்வதென அறிக.

வினா:—முமுட்சுக்கள் குருமுகமாகச் சிரவணஞ் செய்யத்தக்கவைகளெவை யெனின். (93)

விடை:-ஜீவப்பிரஹ்ம ஐக்கியபோதக வேத முடிவாகிய உபநிஷத்துக்களும் இவைகளை முதனூலாகக்கொண்டு விளங்காநின்ற வழிநூல்களும் சார்புநூல்களுமாமென அறிக.

சாதனசதுட்டயநிருபகம் முற்றிற்று,

சிதம்பரதேசிகன் திருவடி வாழ்க.

---

உ

ஓம் பரப்பிரஹ்மணே நம:

சிதம்பரதேசிகன்றிருவடிவாழ்க.

## க. பிரஹ்மவிலக்கணநிருபகம்.

### அவதாரிகை.

வடநூற்கடலையுந் தென்னூற்கடலையும் ஒருங்கே நிலைகண்டுணர்ந்தருளிய சேஷாத்திரிசிவமென்னு முனிவரர் தாமடைந்த பிரஹ்மாத்மவைக்கிய ஞானனுபூதியை உலகமடைந்துய்ய வேண்டுமென்னும் பெருங்கருணையால் வேதங்களின் முடிவாயுள்ள தைத்திரீயசாந்தோக்கியாதி யுபநிடதங்களிற் பிரதிபாதிக்கப்பட்ட அத்தியாரோப அபவாதக்கிரமவாயிலாக ஜகஜீவபரங்களாகிய (௩௫) தத்துவங்களையும் மித்தையென்றும் உற்பவநாசமுடையனவென்றும் தனக்கன்னியமென்றும், பரதத்துவமான சுத்தப்பிரஹ்மமே சத்தியமென்றும் உற்பவநாசரகிதமென்றும் அதுவே தற்சொரூபமென்றும் அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்காரமாக அறிந்து கவலை கெட்டிக்கிருக்கின்றவனே ஜீவன்முத்தனெனவும், திடப்பிரஞ்ஞனெனவும் பகவற்பக்தனெனவும் குணாதீதனெனவும், பிராஹ்மணனெனவும், அதிவருணாச்சிரமி யென

(நூல் க.)

சுத்தப் பிரஹ்மமாயிருக்கின்ற சருவ சாக்ஷிபினிடத்திலே அக்கினியிற் சூடுபோல அபின்னமாக ஒரு சத்தியுண்டு அந்தச் சத்தி அவ்வதீதப் பிரஹ்மத்திலடங்கியிருக்கும்போது அதற்குச் சுத்தப்பிரஹ்மமென்று பெயர்.

(பதவுரை)

சுத்தப்பிரஹ்மமா யிருக்கின்ற-அசுத்தமின்றிய பரிசுத்தப் பிரஹ்மமாயுள்ள.

(பதசாரம்)

ஜகஜீவபரமாகிய (௩௫) தத்துவங்களுக்குள்ள அசுத்த இலக்கணங்களின்றி நித்தியபுத்த முக்தசத்திய பரமானந்த அத்துவிதமாதிய சுத்தவிலக்கணங்களைப் பொருந்திப் பெரிதாகிய அனைத்திற்கும்பெரிதாகவுள்ளதென்பது தோன்றச் சுத்தப்பிரஹ்ம மென்றார்.

வினு:—குணரகிதப் பிரஹ்மத்தைச் சுத்தப்பிரஹ்மமெனக் குணசகிதப்பிரஹ்மமாகக் கூறிய தென்னையெனின் (1)

விடை:—பிரஹ்மம் குணரகிதமா யிருக்கினும் அசுத்த இலக்கணங்களையுடைய ஜகஜீவ பரங்கட்கு வேறிலக்கணமுடையதென அதிகாரிகட்கு அறிவிக்குநிமித்தம் பிரஹ்மத்துக்குக் குணங்கற்பிதமாக உண்டெனல் கூடுமாதலி



வினு: பிரஹ்மத்துக்குக் குணங்கற்பிதமாக வுண்டெனயாரேனுஞ் சொல்லியிருக்கின்றார்களோ வெனின். (2)

விடை:—வித்தியாரணிய சுவாமிகள் பஞ்சதசி திருப்திதீபிகையில் நிரம்ச வஸ்துவில் அம்சகற்பனை யெப்படி வந்ததென்னுங் கடாவிற்குத் தன்னைக் குறித்தில்லாவிடினும் தள்ளப்பட்ட வுபாதியைக்குறித் துண்டென்று சொல்லியிருக்கிறாரென அறிக.

வினு:—அற்றேல் குணியை ஆசிரயித்திருப்பதாகிய குணத்தைப் பின்னர் வைத்துக் கூறாமல் சுத்தப் பிரஹ்மமென்று முன்னர் வைத்துக் கூறிய தென்னையெனின். (3)

விடை:—நீலோற்பலத்தை யறியுங்கால் நீல நிறமாகிய குணத்தையறிதற்குமுன் அக்குணஸகிதமாகிய உற்பலத்தை யறிதற்குக் கூடாததுபோல, சுத்தமாதியகுணவிலக்கணங்களை யறிதற்குமுன் அவைகளைச் சொரூபமாகவுடைய பிரஹ்மத்தை யறிதற்குக் கூடாதாதலினென அறிக.

வினு:—ஜகஜீவ பரமாகிய (௩௫) தத்துவங்களெவையெனின். (4)

விடை:—தூலசரீரதத்துவம் ௬, சூக்ஷ்ம சரீரதத்துவம் ௨௰, பூதம் ௫, ஜீவன் அவித்தை ௨, ஈசுவரன், மாயை ௨ என்னும் இவைகளென அறிக.

வினு:—அசுத்த இலக்கணங்களெவை

விடை:—விவேகிகளால் அருவருக்கத்தக்க அசத்து
ச்டம் துக்கம் அநித்தம் கண்டம் ஜனித்தல் பருத்தல் இளைத்
தல் சலித்தல் மரித்தல் திரை நரை வியாதி துர்க்கந்த முத
லியவைகளென அறிக.

வினா:— தூலசரீர தத்துவம் ஆறும் அசுத்தமுடைய (6)
தென்றது எதனாலெனின்.

விடை:—யாவரும் அருவருக்கத்தக்க சுக்கில சுரோணிதங்
களே காரணமாகவும் மலங்களாற் செய்யப்பட்டும் மலங்களே
பூரிக்கப்பட்டு மிராநின்ற மலபாண்டம்போல சுக்கிலாதிமலச்
சேறுகளால் நிருமிதமாகிக் கிருமிமலமூத்திர பாத்திரமாயுள்
ளதோலிரத்த மாமிசாதிகளே சொரூபமாகவும் தான் துர்க
ந்தமாக இருத்தலுமன்றித் தன்னுள்ளிற் சார்ந்த கிருதகுள
பாயாசாதிகளையும் வெளியிற்சார்ந்த புட்ப சந்தன புனுகாதிய
வாசனாத் திரவியங்களையும் துர்க்கந்தமுள்ளன வாக்குதலும்
நவத்துவாரங்களினானும் மலமூத்திர கோழை பீளையாதிகளை
யொழுக்குதலும் பருத்த லிளைத்தலாதிய விகாரங்களைப்
பொருந்துதலுமே காரியமாகவும் இராஜசிநேகமுள்ளவ
ரையில் யாவரும் சிநேகித்தற்குரியவனாயிருந்த துஷ்டசேவ
கன், ராஜசிநேகம் நீங்கியபின்னர் ஒருவராயினுஞ் சிநேகித்த



தாயிருந்து ஜீவன் நீங்கியபின்னர் ஒருவராயினுஞ் சிநேகித்
தற் குரியதாகாமல் பரிசித்தவரைப் பரிசித்தவர்க்கும் ஆசூச
மாகிய அசுத்தம்பற்றச் செய்வதாய், வீங்கிவெடித்து அழுகிக்
கரைந்து நாறும் பிரேதமிதுவென யாவரும் வெறுப்புற்றுத்
தாங்களிருக்கும் ஊரினுமிருத்தற்கிடங்கொடாமல் வெளியிற்
கொடுப்பாய் மயானத்திற்றழல்மூட்டிக் கொளுத்தப்பட்டுக்
கெடுதலே அவதியாகவும் வாதபித்த சிலேட்டும காரியமாகிய
வியாதியாதிகளே பலமாகவுமுடையதாயிருத்தலினென அறிக.

வினா:—இருபது தத்துவமாகிய சூக்ஷ்மசரீரம் அசுத்த (7)
முடையதென்றது எதனாலெனின்.

விடை:—பூதங்களே காரணமாகவும், இராகத்துவேஷ
சங்கற்ப நிச்சய பலம்பலமின்மையாதியவைகளே சொரூ
பமாகவும், சாக்கடை மலக்குழியாதிய தேசங்களில் வசிக்கு
ங் கிருமிகள்போல மல மூத்திரபூரித பாத்திரமாகிய தூல
சரீரத்தில் வசித்தலும் விருப்பு வெறுப்பு தாங்கல் சலித்தல்
காண்டல் கேட்டல் வசனித்தலாதியவைகளைப் புரிதலுமே
காரியமாகவும், விதேகமுத்தியில் நாசமாகுதலே அவதியாக
வும், தாபத்திரய துக்கங்களே பலமாகவு முடையதாயிருத்த
லினென அறிக.

வினா:— காரணசரீரமாகிய அஞ்ஞானம் அசுத்தமுடை (8)

டலாதிகள் மறைத்தல்போலச் சிதாபாசன் அளவில்காலம் சம்சாரத்தில் அமிழ்ந்தித்தன் சுபாவ சொரூபத்தை விசாரியாமல் உபேக்ஷித்திருத்தற்கும் தேகாதிகளை யானெனதென்றபிமானித்தற்கும் ஏதுவாக ஆத்மாவை மறைத்தலே காரியமாகவும், பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தாற் கெடுதலே அவதியாகவும், நிட்பிரயோசனமே பலமாகவு முடையதாயிருத்தலினென அறிக.

வினா:—ஜீவன் அசுத்தமுடையனென்பது எதனாலெனின். (9)

விடை:—தான் தோன்றற்கு அஞ்ஞானமே காரணமாகவும் அதிட்டான ஆசிரய ஆபாச சங்காத கர்த்திருத்துவ போக்திருத்துவ ஞாதிருத்துவங்களே சொரூபமாகவும், தேகதருமமான * ஜாதி வருணாச்சிரம வசத்தனாய் விதிநிடேதகன்மங்களிற் பிரவிருத்திப்பதே காரியமாகவும், பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தால் அவித்தையினோடு கெடுதலே அவதியாகவும், ஜனன மரண தாபத்திரயங்களிற் சுழல்வதே பலமாகவுமுடையனாயிருத்தலினென அறிக,

வினா:—ஆகாய பூதத்துக் கசுத்தம் யாதெனின் (10)



விடை:—விக்ஷேபசத்தியிற்றோன்றிக் கெடுதலும் சத்தகுணத்தோடு இடி காற்று வெயில் மேகபடலாதிகளை யுற்றிருத்தலுமென அறிக.

வினா:—வாயு பூதத்துக் கசுத்தம் யாதெனின். (11)

விடை:—ஆகாயத்திற்றோன்றிக் கெடுதலும் பரிசகுணத்தோடு சலித்தலும் துர்க்கந்தமாதிகளை யிழுத்தலுமென அறிக.

வினா:—அக்கினி பூதத்துக் கசுத்தம் யாதெனின் (12)

விடை:—வாயுவிற்றோன்றிக் கெடுதலும் ரூபகுணத்தோடு புகைபொறி வெப்பமாதிகளை யுற்றிருத்தலுமென அறிக,

வினா:—அப்பு பூதத்துக் கசுத்தம் யாதெனின். (13)

விடை:—அக்கினியிற்றோன்றிக் கெடுதலும் ரசகுணத்தோடு அலை திவலை நுரைகலங்கல் சேறுபாசியாதிகளை யுற்றிருத்தலுமென அறிக.

வினா:—பிருதிவி பூதத்துக் கசுத்தம் யாதெனின் (14)

விடை:—அப்புவிற்றோன்றிக் கெடுதலும் கந்தகுணத்

விடை:--காரணமின்றியதாகவும் அநிர்வாச்சியத்துவமே சொரூபமாகவும், கூடாததைக் கூட்டுவித்தலும் நாமரூபப்பிரபஞ்சமாகப் பரிணமித்தலுமே காரியமாகவும், பிரஹ்மாத்மவைக்கிய ஞானத்தாற் கெடுதலே அவதியாகவும், நிஷ்பிரயோசனமே பலமாகவு முளதாயிருத்தலென அறிக.

வினா:—ஈசுவரனுக் கசுத்தம் யாதெனின். (16)

விடை:—தான் தோன்றற்கு மாயையே காரணமாகவும், அதிட்டான ஆசிரய ஆபாச சங்காதமே சொரூபமாகவும், சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களே காரியமாகவும், பிரஹ்மாத்மவைக்கியஞானத்தால் மாயை கெடும்போது பிரஹ்மத்தில் லயமாதலே அவதியாகவும், பிரஹ்மவிஷ்ணுருத்திராதி மூர்த்தமாக ஆவிர்ப்பவித்தலே பலமாகவு மிருத்தலென அறிக.

வினா:—அசுத்தமாகிய ஜகஜீவ பரங்களனைத்தும் பிரஹ்மத்திற்றோன்றினவெனவும் அவைகளனைத்தினும் பிரஹ்மம் வியாபித்திருக்கிறதெனவும் சுருதிகள் கூறுகின்றமையால் அவைகளின் அசுத்தங்கள் பற்றாமல் பிரமஞ்சுத்தமாயுள்ளதென்பது பொருந்தாதெனின். (17)

விடை:—பிரஹ்மத்திற்றோன்றிய ஜகஜீவ பரங்கள் சுத்தியிற்றோன்றிய ரஜதம்போல மித்தையானமையினாலும், ஜகஜீவ பரங்களைப்போல உற்பாத்தியம் ஆரம்பியம் சமுற்கா[illegible] விகாரியமாகிய அசுத்தங்களுடையது பிரஹ்மமென [illegible]ண்வில்ல



ஓர் சுருதியேனுங் கூறாமையினாலும் சகல சுருதிகளும் அசங்கமும் நிருவிகாரமும் சுயம்பிரகாசமும் சுத்தமுமாயுள்ளது பிரஹ்மமெனக் கூறுகின்றமையினாலும் வாயுவாதிய பூதங்கள் ஆகாயத்திற்றோன்றினும் ஆகாயம்அப்பூதங்களில் வியாபித்திருக்கினும் அவைகளின் சலன உஷ்ண சீத கடின தருமங்கள் ஆகாயத்தைப் பற்றாததுபோல ஜகஜீவ பரங்கள் பிரஹ்மத்திற்றோன்றினும் அவைகளிற் பிரஹ்மம் வியாபித்திருக்கினும் அவைகளின் அசுத்தங்கள் பிரஹ்மத்தைப்பற்றாவென்பது பொருந்துமென அறிக.

வினா:—பிரஹ்மத்துக்கு உற்பாத்தியம் ஆரம்பியம் சமுற்கா[illegible]ம் விகாரியமாகிய நான்கசுத்தங்களு மில்லையென்றது எதனாலெனின். (18)

விடை:--சகலசுருதிகளும் பிரஹ்மத்தை அநாதியெனக் கூறுகின்றமையால் ஒன்றினாலுண்டாக்கப்படுவதாகிய உற்பாத்தியமும், அத்வைதம் சர்வாத்மக மெனக்கூறுகின்றமையால் ஒன்றினாலடையப்படுவதாகிய ஆரம்பியமும், நின்மலம் சுயம்பிரகாசமெனக் கூறுகின்றமையால் ஒன்றினால் விளக்கப்படுவதாகிய சமுற்காரியமும், நிஷ்கிரியம் நிருவிகாரமெனக் கூறுகின்றமையால் விகாரப்படுவதாகிய விகாரியமும் பிரஹ்மத்துக்கில்லையென்றதாம். இஃதன்றி மூர்த்தமாயுங்கன்மகாரியமாயுமுள்ள பொருளானால் அதற்கு மயானமாதிய தேசபேதத்தாலும் ஆசூசமாதிய காலபேதத்தாலும் சண்டாளராதியாராலும் உச்சிட்டமாதிகளாலும் அசுத்த சம்பந்தமுளதா

பிரஹ்மம் அமூர்த்தமாயும் கன்மகாரிய மல்லாததாயும் அசங்கமாயும் அத்துவிதமாயும் விளங்கும் பொருளானதுபற்றி அசுத்த சம்பந்தமின்றிய தென்றதென அறிக.

### பிரஹ்மம்சுத்தமென்றதற்குப் பிரமாணம்.

(சுக்கில எசுர்வேதம் நிராலம்போபநிடதம்)

சுத்தம் சிவம் சாந்தம் நிர்க்குணம் யிந்தச் சத்தங்களால் சொல்லத்தக்கதாயும் வாக்குக்கெட்டாத தாயுமிருக்கின்ற சைதன்னியமே பிரஹ்மம்.

வினா:-சுத்தப்பிரஹ்மத்துக்குப் பதசாரத்தில் விரித்துக் கூறிய (க) நித்திய (உ) புத்த (ங) முத்த (ச) சத்திய (ரு) பரமானந்த (சு) அத்துவிதமாகிய ஆறிலக்கணங்களில் முற்கூறிய நித்திய இலக்கணமியாதெனின். (19)

விடை:—ஓரபாவமுமின்றிச் சதோதயமாயிருத்தலென அறிக.

வினா:—அபாவமாவது யாதெனின். (20)

விடை:—இல்லையென்னும் ஞானத்திற்கு விஷயமாயிருப்பது அல்லது சம்பந்த சாதிருசியங்களுக்கு வேறாய்ப் பிரதியோகியின் அபேக்ஷாசகித ஞானத்திற்கு விஷயமாயிருப்பதென அறிக.

வினா:—அபாவத்துக் கதிகரணம் யாதெனின். (21)

விடை:—[illegible] யோகியென அறிக.



வினா:—அநுயோகி யாது பிரதியோகி யாதெனின் (22)

விடை:—எதனிடம் அபாவந்தோற்றுகிறதோ அது அபாவத்தின் அநுயோகியாகும். எதன் அபாவந்தோற்றுகிறதோ அது பிரதியோகியாகுமென அறிக.

வினா:—அபாவங்கள் எத்தனைவகை யெனின். (23)

விடை:—சம்சர்க்காபாவம் அந்நியோந்நியாபாவமென இருவகைப்படும். இவ்விருவகைகளில் அந்நியோந்நியாபாவம் ஒரேவிதமாம். சம்சர்க்காபாவம் பிராகபாவம் அதாவது முன்னபாவம் பிரத்துவம்ஸாபாவம் (அதாவது) அழிவுபாட்டபாவம் சாமயிகாபாவம் அதாவது ஓர் சமயத்திலபாவம் அத்தியந்தாபாவம் அதாவது முழுதுமபாவம் என்னும்பேதத்தால் நான்குவகைப்படும். இந்நான்கு அபாவமும் அந்நியோந்நியாபாவமும் சேர்ந்து ஐந்துவகையாமென அறிக.

வினா:—பிராகபாவம் யாதெனின். (24)

விடை:—காரியத்தோற்றத்திற்கு முன்னுள்ள அபாவம். அது தோற்றமின்றி நாசமுடையதும் தன் பிரதியோகியின் சமவாயகாரணத்தின் கண்ணிருந்து எதிர்மறைப் பொருளைத் தோற்றுவிப்பதாய்த் தோன்றுமென்னும் விவகாரத்துக்கேதுவாயதுமென அறிக. உதாரணம்:—கபாலத்திற் கடமில்லை லது தந்துக்களிற் படமில்லை என்பதாம்.

வினா:—பிரத்துவம்சாபாவம் யாதெனின். (25)

விடை:—தோன்றிய அழிவுபாடாகிய காரியத்தில் காரணமில்லாமையாம். அது உற்பத்தியுடையதும் நாசமின்றியதும் காரியத்தோற்றத்திற்குப் பின்னுள்ளதும் தன்பிரதியோகியாற் றோன்றிப் பிரதியோகியின் சமவாயிகாரணத்தின் கண்ணிருப்பதாய் அழிந்ததென்னும் விவகாரத்துக் கேதுவாயதும்என அறிக. உதாரணம்:- கடமழிந்தவழிக் கபாலத்திற்கடமில்லை என்பதாம்.

வினா:—சாமயிகாபாவம் யாதெனின் (26)

விடை:—ஓர் சமயத்திலுள்ள அபாவம்: அது உற்பத்திநாசமுடையதென அறிக. உதாரணம்:—பூதலத்திற் கடமில்லை என்பதாம்.

வினா:—சாமயிகாபாவம் உற்பத்திநாசமுடைய தென்றது எதனாலெனின். (27)

விடை:—பூதலத்திலுள்ள கடத்தை ஓர் காலத்திலன்னியதேசத்திற்குக் கொண்டுபோய் விட்டபோது அக்கடத்தின் அபாவம் கடசூனியகால சம்பந்தியாகிய பூதலத்திலுண்டாகி, அப்பூதலத்தில் கடத்தைக் கொண்டுவந்து வைத்தபோது கடத்தின் அபாவம் நட்டமாகின்றமையினென அறிக.

வினா:—அத்தியந்தாபாவம் யாதெனின். (28)



விடை:-முக்காலத்தினு முள்ளதாய்ச் சமுசர்க்கத்தால் வரைந்துகொள்ளப்படும் எதிர்மறைத் தன்மையையுடையதாம். அது அந்யோந்யாபாவத்துக்கு வேறாயும் உற்பத்தி நாசசூனியமாயுமுள்ள அபாவமென அறிக.

வினா—அத்தியந்தாபாவம் எங்கே காணப்படுமெனின் (29)

விடை:—யாதொருபதார்த்தம் எந்தக்காலத்தும் எதனிடத்துண்டாகிறதில்லையோ அதனிடத்து அந்தப்பதார்த்தத்தின் அத்தியந்தாபாவம் காணப்படுமென அறிக. உதாரணம்:-வாயுவின்கண் ரூபமில்லை அல்லது கந்தமில்லை என்பதாம்.

வினா:—அந்யோந்யபாவம் யாதெனின். (30)

விடை:—ஒன்றன் வேறாகிய வத்துக்களிலுள்ள ஒன்றன் பேதம் அல்லது அபேதத்தை நிஷேதிப்பதாகிய அபாவம்; அல்லது தாதான்மியத்தால் வரைந்தபொருளைப் பிரதியோகியாகவுடைய இன்மையாம். அது அத்தியந்தாபாவத்துக்கு வேறாகவும் உற்பத்திநாசசூனியமாகவுமுள்ள அபாவமாமென அறிக. உதாரணம்:—கடம் படமன்று, படம் கடமன்று என்பதாம்.

வினா:—பிரஹ்மம் ஓரபாவமு மின்றியதாயின் இவ்வைந்தபாவங்களையும் உடையது யாதெனின் (31)

விடை:—சேதனாசேதன நாமரூபப் பிரபஞ்சமென அறிக.

விஞ:-அபாவங்களில் பிராகபாவத்துக்கு அதிவியாப்தி தோடமில்லையோ வெனின். (32)

விடை:—இல்லை; இதனை அஞதியெனலால். அத்தியந் தாபாவமும் இத்தன்மைத் தாமேயெனின், அது நாசமுடை யதல்ல; நாசமுடையதெனலால். சாமயிகாபாவமும் இத் தன்மைத் தாமேயெனின், அது அநாதியல்ல; அஞதியும் அந் தமுமுடைய தெனலால். வேதாந்த சித்தாந்தத்தில் மாயை யும் இத்தன்மைத்தாமேயெனின், அது அபாவரூபமல்ல, பாவரூபமாம். அற்றன்று; மாயையென்னும் வார்த்தைக்கு பண்டிதர்கள் யாதொன்று இல்லையோ அதுவெனப்பொருள் கூறுகின்றமையிஞனும், எவள் வாஸ்தவத்தி லில்லையோ அவள்தான் மாயையென எசுர்வேதத்திலுள்ள சர்வசாரோப நிடதங் கூறுகின்றமையிஞனும் மாயை அபாவரூபமேயெனி ன், அபாவம் ஒன்றற்கேனும் உபாதான காரணமாகவிராது. மாயையோ பஞ்சபூத பௌதிகங்கட்கு உபாதான காரண மாக விருத்தலிஞனும், உபநிடதம் மாயையை வாஸ்தவத்தி லில்லாததென்ருல் கற்பிதமாக வுள்ளதெனக் கொள்ளற்பால தாயிருத்தலிஞனும், அவ்வுபநிடதமே ஓரிடத்தில் மாயை பிரமாணுப்பிரமாணங்கட்குப் பொதுவானவள், இருக்கிறவ ளுமல்ல, இல்லாதவளுமல்ல, இரண்டுங்கலந்தவளுமல்ல வாக் குக்கெட்டாதவளெனக் கூறுகின்றமையிஞனும் அபாவரூப சதசத்விலக்ஷணபாவரூபமாமென அறிக.



விஞ:-பிரபஞ்சம் பிராகபாவ இலக்கணமுடைய தென் றது எதஞலெனின். (33)

விடை:—காரியமாகிய கடந்தோன்றற்குப் பூர்வம் கார ணமாகிய கபாலத்திலில்லாததுபோலக் காரியமாகிய பிரபஞ் சஞ் சிருட்டிக்குப் பூர்வம் காரணமாகிய பிரஹ்மத்திலில்லா மையினென அறிக.

விஞ:—பிரத்துவம்ஸாபாவத்துக் கதிவியாப்தி தோட மில்லையோ வெனின். (34)

விடை:—இல்லை; இதனை நாசமின்றிய தெனலால். அத் தியந்தாபாவமும் இத்தன்மைத்தாமேயெனின், அது உற் பத்தியுடையதல்ல; உற்பத்தியுடைய தெனலால். சாமயிகா பாவமும் இத்தன்மைத்தாமேயெனின் அது நாசமின்றியத ல்ல; உற்பத்தியுள்ளதும் நாசமில்லதுமெனலால். மோக்ஷமும் ஞானத்தாலுதயமாகின்றமையால் உற்பத்தியுள்ளதும் முத் தர்கட்குப் பின்னர்ச் சம்சாரமுண்டாகாமையால் நாசமில் லதுமாமே யெனின் அது அபாவரூபமல்ல, பாவரூபமாகும். அற்றன்று; சுருதிகள் அஞ்ஞான தற்காரியங்களின் நிவர்த் தியே மோக்ஷமெனக் கூறுகின்றன. நிவிருத்தியென்பது துவம்ஸமானமையால் மோக்ஷமும் துவம்ஸமாகிய அபாவ ரூபமாமெனின் சர்ப்பநிவிருத்தி யிரச்சுவாவதுபோலக் கற் பிதங்களின் நிவிருத்தி அதிட்டானரூபமேயாமென அச் சுருதிகளே கூறுகின்றமையால் கற்பிதமாகிய அஞ்ஞா

தற்காரியங்களி னிவிருத்தி அதிட்டானப் பிரஹ்மரூபமாம். ஆதலின் மோக்ஷம் அபாவரூபமன்று; பாவரூபமாமென அறிக.

வினு:—பிரபஞ்சம் பிரத்துவம்சாபாவ இலக்கணமுடையதென்றது எதனுலெனின். (35)

விடை:—உடைதலாகிய காரியத் தோற்றத்திற்குப்பின் காரணமாகிய கடமில்லாததுபோலப் பிரளயத்தில் நாசமடைதலாகிய காரியத்தோற்றத்திற்குப்பின் காரணமாகிய பிரபஞ்சமில்லாமையினென அறிக.

வினு:—சாமயிகாபாவத்துக் கதிவியாப்தி தோடமில்லையோவெனின்.

விடை:—இல்லை; இதனை உற்பத்தியுடைய தெனலால். (36) பிரத்துவம்சாபாவமும் இத்தன்மைத்தாமேயெனின் அது நாசமுடையதல்ல; நாசமுடையதெனலால். பிராகபாவமும் இத்தன்மைத்தாமே யெனின் அது உற்பத்தியுடையதல்ல; உற்பத்திநாசமுடையதெனலால். பூத பௌதிகங்களாகிய பதார்த்தங்களனைத்தும் இத்தன்மையனவாமே யெனின் அவை அபாவரூபங்களல்ல, இருக்கிறதென்னும் ஞானத்துக்கு விஷயமாயிருத்தலால் பாவரூபங்களாமென அறிக.

வினு:—பிரபஞ்சம் சாமயிகாபாவ விலக்கணமுடையதென்றது எதனுலெனின். (37)



விடை:—சிருட்டியாகிய ஓர் காலத்திலுண்டாகிறதாயும் பிரளயமாகிய ஓர் காலத்தில் நட்டமாகிறதாயு மிருத்தலினென அறிக.

வினு:—அத்தியந்தாபாவத்துக் கதிவியாப்தி தோடமில்லையோ வெனின். (38)

விடை:—இல்லை; இதனை உற்பத்திசூனிய மெனலால். பிராகபாவமும் இத்தன்மைத்தாமேயெனின் அது நாசசூனியமல்ல; நாசசூனியமெனலால். பிரத்துவம்சாபாவமும் இத்தன்மைத்தாமேயெனின் அது உற்பத்திசூனியமல்ல. உற்பத்திநாசசூனியமெனலால். பிரஹ்மமும் இத்தன்மைத்தாமேயெனின் அது அபாவரூபமல்ல, பாவரூபமாம்; உற்பத்திநாசசூனிய அபாவரூபமெனலால். அந்நியோந்நியாபாவமும் இத்தன்மைத்தாமேயெனின் அது அந்நியோந்நியாபாவத்துக்கு வேருமென அறிக.

வினு:—பிரபஞ்சம் அத்தியந்தாபாவ இலக்கணமுடையதென்றது எதனுலெனின். (39)

விடை:—வாயுவின்கண் உருவமில்லாதது போலப் பிரஹ்மத்தின்கண் பிரபஞ்சம் முக்காலத்தினுமில்லாமை யினென அறிக.

வினு:—நாமரூபாத்மகமாகவும் சுகதுக்கானுபவங்கட்கேதுவாகவும் பிரத்தியக்ஷமாகவும் நீண்டகாலமுள்ளதா

வும் இராநின்ற பிரபஞ்சம் அத்தியந்தாபாவமுடைய தெனல் மயக்கமாமெனின். (40)

விடை:—இல்லது உள்ளதாகாதென்னும் நியாயப்படி யாதொன்று முன்னும் பின்னும் அபாவப்பொருளோ அது மத்தியினும் அபாவப் பொருளேயாம். யாங்ஙனமெனின் கயிற்றரவு சொப்பனப்பிரபஞ்சம் சந்நிபாதரோயினுற்றோன் றும் சோர கஜ வியாக்கிரமுதலியவைகள் காமரூபாத்மக மாகவும் சுகதுக்கானுபவங்கட்கேதுவாகவும் பிரத்தியக்ஷமா கவும் நீண்டகாலமுள்ளனபோலவுந் தோற்றினும் அவைகள் வாஸ்தவத்தில் முக்காலத்தினு மில்லாத அபாவப்பொருட்க ளேயாவனபோலப் பிரபஞ்சம் சிருட்டிக்கு முன்னும் பிரளய த்துக்குப் பின்னும் அபாவப்பொருளாயிருப்பதுமன்றி மத்தியி னும் மருள்விழிக்குப் பாவப் பொருள்போற்றோன்றினும் உண் மை ஞானமாகிய தெருள்விழிக்கு அபாவப் பொருளேயாம். ஆதலின் பிரபஞ்சம் அத்தியந்தாபாவமுடையதெனல் மயக்க மன்றென அறிக.

பிரபஞ்சம் முக்காலத்தினு மில்லையென்பதற்குப் பிரமாணம்.

[தேஜோபிந்நுபநிடதம் 4-வது அத்தியாயம்]

இந்தப்பிரபஞ்சம் இல்லவே இல்லை. எப்போது மில்லவே இல்லை,



வினு:—அந்நியோந்நியாபாவத்துக் கதிவியாப்தி தோட மில்லையோவெனின் (41)

விடை:—இல்லை; இதனை உற்பத்திசூனியமெனலால்.
பிராகபாவமும் இத்தன்மைத்தாமேயெனின் அது நாசசூனி
யமல்ல; நாசசூனியமெனலால் பிரத்துவம்சாபாவமும் இத்
தன்மைத்தாமேயெனின் அது உற்பத்திசூனிய மல்ல; உற்
பத்திநாசசூனியமெனலால். ஆத்மாவும் இத்தன்மைத்தாமே
யெனின் அது அபாவரூபமல்ல; உற்பத்திநாசசூனிய அபா
வரூபமெனலால். அத்தியந்தாபாவமும் இத்தன்மைத்தாமே
யெனின் அது அந்நியோந்நியாபாவரூபமல்ல; அதற்கு வேறு
குமென அறிக.

வினு:—பிரபஞ்சம் அந்நியோந்நியாபாவ இலக்கணமு டையதென்றது எதனுலெனின். (42)

விடை:—கடம்படமும் படம்கடமும் அல்லாததுபோல
ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி, தூலசரீரம், சூட்
சுமசரீம், காரணசரீரமாகிய அவித்தை, மாயை, ஜீவன், ஈசு
வரன் என்னுந் தத்துவங்களில் ஒன்றுமற்றொன்றல்லாமையி
னென அறிக.

வினு:—இவ்வைந்தபாவங்கட்குங் கூறிய இலக்கணங்கள் முழுவதும் வேதாந்தத்துக் கங்கீகாரமோ வெனின். (43)

விடை:—இங்கே அபாவங்களினிலக்கணங்கள் நியாய
சாஸ்திரக் கிரமமாகக் கூறப்பட்டனவாதலால் இவ்வபாவங்

ளில் சாமயிகாபாவமல்லாதமற்ற நான்கபாவங்களுக்கும் கூறிய இலக்கணங்களிற் சிற்சில இலக்கணங்கள் அங்கீகாரமல்லவென அறிக.

வினா:—பிராகபாவ இலக்கணங்களில் எவ்விலக்கணம் அங்கீகாரமல்லாததெனின். (44)

விடை:—கடத்தின் பிராகபாவம் அநாதியெனல் அங்கீகாரமல்ல. எதனாலெனின் கடப்பிராகபாவத்துக்கு அதிகரணம் கபாலமாம். அக்கபாலம் உற்பத்தியுடையதானமையால் அதனை அதிகரணமாகவுடைய அபாவமும் உற்பத்தியுடையதேயாம். அதனாலென அறிக.

வினா:—கடப்பிராகபாவம் கபாலமுண்டாதற்கு முன் கபாலத்தின் அவயவங்களிலிருக்கும். அதற்குமுன் அவயவத்தின் அவயவங்களிலிருக்கும். இவ்வாற்றால் பரமாணுக்களிலிருக்கும் பரமாணு அநாதியானமையால் அதனை அதிகரணமாகவுடைய கடப்பிராகபாவமும் அநாதியாமெனின் (45)

விடை:—பிராகபாவம் தன் பிரதியோகியின் உபாதானகாரணத்திலன்றி மற்றையவற்றி லிராதென்பதும், கபாலத்தின் அவயவம்கபாலத்தின்உபாதானகாரணமேயன்றிக் கடத்தின் உபாதானகாரணமன்றென்பதும் நையாயிகர் கொள்கையாகும். ஆதலால் பரமாணுக்கள் துவியணுகத்துக்கு [illegible]தான காரணமும் துவியணுகப் பிராகபாவத்துக்கு அதி



கரணமுமாகுமேயன்றிக் கடத்துக்கு உபாதானகாரணமும் கடப்பிராகபாவத்துக்கு அதிகரணமுமாகா. ஆகுமாயின் பரமாணுவில் நின்றும் கடம் உற்பத்தியாதல்வேண்டும். இஃதன்றிப் பிருதிவிப்பரமாணு அப்புவினும், அப்பு அக்கினியினும், அக்கினி வாயுவினும், வாயு ஆகாயத்தினும், ஆகாயம் தமோகுணப் பிரகிருதியாகிய விக்ஷேபசக்தியினும் சிருட்டிகாலத்துண்டாயினவென வேதாந்த சாத்திரங்கள் கூறுகின்றமையால் காரியமாகிய பிருதிவிப்பரமாணுவானது தனக்குக் காரணமாகிய அப்புவாதிய நான்கு பூதங்களுற்பத்தியாகிய சிருட்டிகாலத்துக்கு முன்னமே கடப்பிராகபாவத்துக்கு அதிகரணமாகயிருக்கிறதெனல் புத்திரன் தன்னைப்பெற்ற பிதா பிதாவைப்பெற்ற பிதாமகனாதிய முன்னோர்களுற்பத்தியாகிறதற்கு முன்னமே யிருக்கிறானெனல்போல அறிஞர்கள் நகைப்புக் கிடமாகுமென அறிக.

வினா:—மாயை அநாதியானமையால் மாயையில் சகல காரியங்களின் பிராகபாவங்களும் அநாதியாகவுள்ளனவெனக் கொள்ளில் விரோதமில்லையே யெனின். (46)

விடை:—எங்கே அபாவங்களின் அதிகரணங்களை இந்திரியங்கள்கிரகிக்கவில்லையோ அங்கே அபாவங்கள் பிரத்தியக்ஷமாகாவென்பது துணிபானமைபற்றி இந்திரியங்கட்கு விடயமாகாத மாயையில் காரியங்களின் பிராகபாவங்கள் அநாதியாகவுள்ளனவென ஒப்புதல் அசங்கதமாம். அது சித்த

தத்துக்கு இஷ்டமுமில்லை ஆதலால் பிராகபாவத்துக்குக் கூறிய அநாதியிலக்கணம் அங்கீகாரமல்லவென்று அறிக.

வினா:—பிரத்துவம்ஸாபாவத்துக்குக்கூறிய இலக்கணங்களில் எவ்விலக்கணம் அங்கீகாரமல்லாததெனின். (47)

விடை:—பிரத்துவம்சாபாவம் தன் பிரதியோகியின் சமவாயிகாரணமாகிய கபாலத்திலிருக்கிறது. அது நாசமில்லதென்பது அங்கீகாரமல்ல; எதனாலெனின், நாசமாவதாகிய கபாலத்தை அதிகரணமாகவுடையதாயிருத்தலின். அற்றன்று; கபாலமாகிய வியக்தி நாசமடையினும் கபாலத்துவமாகிய ஜாதிநாசமின்றியதாகும். அதுபற்றி அதனை அதிகரணமாகவுடைய அபாவமும் நாசமில்லதென்றதெனின். அற்றேல் கடமாகிய * வியக்தி நாசமடையினும் கடத்துவமாகிய † ஜாதி நாசமில்லதாகும். அதுபற்றிக் கடம் நாசமில்லதென ஒப்பாமல் அதற்கு நாசமொப்பியது அசங்கதத்தினும் அசங்கதமாம். ஆதலால் பிரத்துவம்சாபாவம் நாசசூனியமெனல் அங்கீகாரமல்லவென அறிக.

வினா:—அத்தியந்தாபாவத்துக்குக் கூறிய இலக்கணங்களில் எவ்விலக்கணம் அங்கீகாரமல்லாததெனின் (48)

---

* வியக்தி ஒருதருமத்தைப்பொருந்திய அனேகதருமிகளாம்.

† ஜாதி அனேகதருமிகளிற் கலந்துள்ள ஒருதருமமாம்.



விடை:—அத்தியந்தாபாவம் உற்பத்திநாசசூனியமெனல் அங்கிகாரமல்ல. எதனாலெனின், ரூபத்தின் அத்தியந்தாபாவம் வாயுவின்கண்ணுளது வாயு உற்பத்தி நாசமுடையதாயிருத்தலின் அதனை அதிகரணமாகவுடைய அத்தியந்தாபாவமும் உற்பத்திநாசமுடையதாகும். அல்லது அநாதியதிகரணம்பற்றி அத்தியந்தாபாவம் அநாதியாமென்பதை யொப்பினும் நாசமுடையதாகும். எதனாலெனின் அத்வைதமதத்தில் ஆத்மாவுக்கு வேறாகிய அநாத்மபதார்த்தங்கள் யாவும் மாயையின் காரியங்களாகும். எங்ஙனம் ஆகாயாதிகளைப்போலக் கடமாதிய பதார்த்தங்கள் மாயையின் காரியங்களாக இருக்கின்றனவோ, அங்ஙனம் அபாவங்களும் மாயையின் காரியங்களாக இருக்கின்றன. காரியவஸ்துக்கள் யாவும் மித்தையானமையினாலும் மித்தையானவஸ்துக்களுக்கு நித்தியத்துவஞ் சம்பவிக்காதென்பது துணிபானமையினாலும் அவைகள் நாசமுடையனவேயாம். ஆதலால் அத்தியந்தாபாவம் உற்பத்திசூனியமெனல் ஏகதேச அங்கீகாரமாயினும் நாசசூனியமெனல் அங்கீகாரமல்லவென அறிக.

வினா:—அந்நியோந்நியாபாவத்துக்குக்கூறிய இலக்கணங்களில் எவ்விலக்கணம் அங்கீகாரமல்லாததெனின். (49)

விடை:—அந்நியோந்நியாபாவம் அநாதிநித்தியமெனல் அங்கீகாரமல்ல. எதனாலெனின், கடத்திற்படத்தின் அந்நியோந்நியாபாவமிருக்கிறது. அதற்கதிகரணம் கடமாம். படத்திற்கடத்தின் அந்நியோந்நியாபாவமிருக்கிறது. அத

அதிகரணம் படமாம். கடமும் படமும் உற்பத்திநாசமுடைய னவாயிருத்தலின் அவற்றை அதிகரணமாகவுடைய அங்கியோங்கியாபாவமும் உற்பத்தி நாசமுடையதாகும். அநாதியதிகரணத்தில் அங்கியோங்கியாபாவமிருக்கில் அநாதியாகுமேயெனின் அங்ஙனமிருக்கினும் அது நாசமுடையதாகும். யாங்ஙனமெனின், பிரஹ்மத்தில் சீவனது பேதமிருக்கிறது. அது சீவனது அங்கியோங்கியாபாவமாகும். அதற்கு அதிகரணம் பிரஹ்மமாகும். பிரஹ்மம் அநாதியாதலால் பிரஹ்மத்திலுள்ளசீவனதுபேதரூப அங்கியோங்கியாபாவமும் அநாதியாகும். பிரஹ்மஞானத்தால் அஞ்ஞான நிவிருத்தித்துவாரா பேதம் நாசமாகும்போது அவ்வபாவமும் நாசமாய்விடும். ஆதலால் அங்கியோங்கியாபாவத்துக்கு அநாதியிலக்கணங்கூறுதல் ஏகதேசத்தில் அங்கீகாரமாயினும் நித்திய இலக்கணம் அங்கீகாரமல்லவென அறிக.

வினா:—பிரஹ்மம் ஐந்தபாவமுமின்றியதென்றது எதனாலெனின். (50)

விடை:—மண் கடகலசாதிகள் தோன்றற்கு முன்னமிருப்பதுபோலப் பிரஹ்மம் நாமரூபப் பிரபஞ்சந்தோன்றுதலாகிய சிருட்டிக்கு முன்னரும் உற்பத்தியின்றிய அநாதியாயிருத்தலால் பிராகபாவமும் கடகலசாதிகளழிந்த பின்னரும் மண்ணிருப்பதுபோலப் பிரபஞ்சமழிவுறுதலாகிய பிரளயத்துக்குப் பின்னரும் நாசமின்றியிருத்தலால் பிரத்துவம்சாபாவமும் மண்கடகலசாதிகள் தோன்றற்குமுன்னரும் அழி



ந்தபின்னரும் மத்தியினும் எப்போதுமிருப்பதுபோலப் பிரபஞ்சந் தோன்றற்குமுன்னரும் அழிந்தபின்னரும் மத்தியினும் எப்போதுஞ்சதோதயமாக இருத்தலால், சாமயிகாபாவமும், அத்தியந்தாபாவமும், மண் கடகலசாதிகளெல்லாவற்றினுமிருப்பதுபோலச் சகலபிரபஞ்சங்களினும் வியாபித்துச் சர்வாத்மகமாகயிருத்தலால் அங்கியோங்கியாபாவமும் இன்றியதென்றதென அறிக.

பிரஹ்மம் நித்தியமென்பதற்குப் பிரமாணம்

(வேதாந்தசூடாமணி)

உரியனமுன்னிமையொடுபின்னின்மையின்றியொன்றி
னிலொன்றின்மை யென்றுமின்மையென நான்காய்த்திரியும
பாவங்களிவை நித்தியத்துட் புகாததிறத்தனவாம்.

கூர்மபுராணம்சாங்கிய யோகமுரைத்த அத்தியாயம்.

ஆதலால் பிரஹ்மமொன்றே நித்தியம்.

வினா:—பிரஹ்மம் புத்தவிலக்கண முடையதென்றது எதனாலெனின். (51)

விடை:—இயற்கையறிவும் செயற்கையறிவுமின்றிய கடகலசாதிகட்கும், இயற்கையறிவின்றிச் செயற்கையறிவுபோற் றோன்றுகின்ற சரீரத்ரய சிதாபாச மாயைகட்கும் அங்கியமா யிவைகளனைத்தையும் பிரகாசிப்பித்துக்கொண்

தானென்றினும் பிரகாசிக்கப்படாமல் சுவயம்பிரகாசத் தன்மையால் நித்தியாபரோக்ஷமா யிருத்தலின் அறியப்பட்ட தென்னும் புத்தமாமென, அறிக.

பிரமாணம் (இலக்கணவிருத்தி)

அறைதலுறு தானுயும்கூடி நின்று மறிவற்ற கடமாதி பூதாதிக்கு; முறைதனக் கோரறிவிலதா யொன்றினேடே யுறுதலினலறிவெனவே தோன்றுகின்ற; குறைவுறு மூன்று டல் சீவன் மாயைகட்குங்கூறலுறும்வேறுகியவை களும்மைக் கறையின்றிப் பிரகாசஞ்செய் தெப்போதுங் கனபோத வடி வாம்நாம் புத்தமாமே.

வினு:—பிரஹ்மம் முக்தவிலக்கண முடையதென்றது எதனுலெனின். (52)

விடை:—எந்தக்காலத்தும் சூரியன் அந்தகாரப்பற்றின் றியும் ஆகாயம் வாயுவாதியநான்கு பூதப்பற்றின்றியு மிருப்பது போலப் பிரஹ்மம் அஞ்ஞானதற்காரியங்களாகிய தேகாதிப் பிரபஞ்சப்பற்றின்றி யிருத்தலினென அறிக.

வினு:—பிரஹ்மம் சத்திய இலக்கணமுடைய தென் றது எதனுலெனின். (53)

விடை:—தினமாதவருட காலகற்பங்கடோறும் ஆரோ [illegible]மாகத் தோன்றுகின்ற அவத்தாத்திரயப் பிரபஞ்சங்கட்கு



விலக்ஷணமாய் அவைகளுண்டாதற்கு முன்னும் உண்டாகி அழிந்தபின்னும் மத்தியினும் தோன்றல் திரிதல் கெடுதலா கிய விகாரங்களை யுருமல் ஒரே பிரகாரமாக விளங்கிக்கொ ண்டிருத்தலினென அறிக.

பிரமாணம்

சுக்கிலயசுர்வேதம் நிராலம்போபநிஷத் சர்வசாரோபநிஷத்

பிரஹமம் சத்தியம் சகத்துப்பொய்.

முக்காலத்தினுந் தொடர்புற்றிருப்பது சத்தியம்

வினு:—பிரஹ்மம் பரமானந்த இலக்கணமுடையதெ ன்றது எதனுலெனின். (54)

விடை:—காலகன்மபேதத்தால் கிரகம், தனம், மகன், மனைவி, சரீரம் முதலியன வெறுப்புக்கு இடமாய்க் கைவிடப் படினும் ஆத்மசொரூபமாகிய பிரஹ்மம் எந்தக்காலத்திலுங் கைவிடப்படாமல் பரமப்பிரீதிக்கு விடயமாயிருத்தலினு னும், ஐம்பதுகோடி பூமண்டலங்களையும் அளவற்றசேனு சமுகங்களோடு அழகு இளமை அரோக திடகாத்திர வித் தை வீரிய விவேக ஐசுவரியங்களையுடைய ஏகச்சக்கிராதிபதி யாயிருந்து பாலனஞ்செய்துவரும் சார்வபௌமனுக்குள்ள மநுடானந்தமுதல் இக்கற்பத்தில் மனுடனயிருந்து புண்ணிய விசேடத்தால் கந்தருவபதத்தையடைந்த மனுடகந்தருவனு

நந்தம், பூர்வகற்பத்திற்செய்த புண்ணிய விசேடத்தாலிக் கற்பத்திற்றானே கந்தருவனாகிய தேவகந்தருவனானந்தம், அக்கினிசுவாத்தாதிய பிதிர்தேவதைகளானந்தம், கற்பாதியிற்றானே தேவத்துவத்தையடைந்த ஆஜானதேவரானந்தம் வர்த்தமானகற்பத்தில் அசுவமேதாதிய கருமங்களைச்செய்து மகத்பதத்தையடைந்தவராயும் ஆஜானதேவரால் சேவிக்கப்பட்டவராயும் உள்ளகருமதேவரானந்தம், அட்டவசு துவாதசாதித்தியர் ஏகாதசவுருத்திரர் என்னும் ௩௩ முக்கிய தேவரானந்தம், நூறுயாகங்கள்செய்து தேவலோகாதிபதியான இந்திரனானந்தம், தேவகுருவாகிய பிரகஸ்பதியானந்தம், பிரஜைகளென்னும் ஜீவகோடிகளுக்கதிபதியாகிய பிரஜாபதியானந்தம் இரணியகருப்பனானந்தம்வரை ஒன்றற்கொன்று உத்தரோத்தரம் நூறுநூறுமடங்கதிகமாயுள்ள பதினொருவகை யானந்தங்களையும் பேன தரங்கபுற்புத திவலைகள்போலற்பமெனும்படி வியாபகமாயுள்ள பிரளயகாலமகோததிபோன்ற பேரானந்த சொரூபமாயிருத்தலினாலுமென அறிக.

கைவல்யநவநீதம்.

(௰க) வகைஆனந்தங்களுக்குப் பிரமாணம்.

மனுடன் மனுடகந்தருவன்றேவ நன்மாகந்தருவனெண்
பிதிரோடே; பனுமாஜானர்கள் கருமத்தேவர்கள் பகர்முக்கிய
[illegible]; கனமார்பிரஜாபதியென்விராட்டு பொன்கர்



ப்பப்பிரமனென்றின்னோர்கள்; பினவானந்தங்கணுரையாம்
பிரளயவெள்ளக்கடல் பிரமாநந்தம்.

(55) வினா:—இவ்வானந்தங்கட்கு வேறாகிய ஆனந்தங்களுமுளவோவெனின்.

விடை:—மனுடானந்தமுதலிய (௰க) வகை ஆனந்தங்களும் எட்டுவித ஆனந்தங்களில் ஓர்வித ஆனந்தமானமையின் இவைகளையல்லாமல் வேறானந்தங்களுமுளவாமென அறிக.

(56) வினா:—எட்டுவிதஆனந்தங்களேவை யெனின்.

விடை:—விடயாநந்தம் பிரஹ்மானந்தம் வாசனாநந்தம் முக்கியாநந்தம் நிஜாநந்தம் ஆத்மாநந்தம் அத்வைதாநந்தம் வித்யாநந்தமென்பவைகளாம் (இவைகளில் வனிதையராதிய விடயலாபத்திற்றோன்றுவது விடயானந்தம் நித்திரையிற்றோன்றுவது பிரஹ்மானந்தம் நித்திரை தெளிந்துந்தெளியாவிடத்திற்றோன்றுவது வாசனாநந்தம் விருப்பு வெறுப்பின்றிய உபேக்ஷாபுத்தியிற் றோன்றுவது முக்கியாநந்தம் யோகவலியால் மனோலயமானவிடத்திற் றோன்றுவது நிசாநந்தம் பிரியவஸ்துக்களில் யானே பிரியவஸ்துவென அறிந்தவிடத்திற்றோன்றுவது ஆத்மானந்தம்நாமரூபப் பிரபஞ்சமனைத்து மித்தையாமே சத்தியமென்னும் விவேகத்திற் றோன்றுவது அத்வைதாநந்தம் தத்துவமசியாதி மகாவாக்கியஜந்ய அபரோக்ஷ ஞானத்திற்றோன்றுவது வித்தியாநந்[illegible]

(பிரமாணம்) வேதாந்த சூடாமணி.

மாது முதல்விடய வூதியங்கடமிற்ருேன்றி வரல் விட யாநந்தங் கண்படையிற்ருேன்றல். ஓதுபிரமானந்தந் துயி லொழிவிற் ருேற்றமுடையததான் வாசனுநந்தங் கேடுளவா மாதலுமில்நொதுமல் மதிதோன்றுதல் முக்கியமாமாநந்தம். மனேலய யோகத்தினில் வந்துதித்தவேதமறும் நிஜாநந்தம் பிரியவிடயத்துள் யான் பிரியனெனத் தோன்றுத லான்மா னந்தம்.

விரியு முலகனைத்தும்பொய் மெய்மை தாமென்னும் விவேகத்திற்ருேன்றுவதே யத்துவிதானந்தம். அரியமறை முடிவாகும் வாக்கியஞானத்தாலாதலது வித்தியானந்தமென வறிக

வினு:—பிரஹ்மம் அத்துவித இலக்கணமுடையதென் றதுஎதனுலெனின். (57)

விடை:—சஜாதீப விஜாதீய சுவகதபேதரகிதமாயிருத் தலினென அறிக.

வினு:—சஜாதிய பேதமாவது யாதெனின். (58)

விடை:—மரத்துக்குமற்ருேர் மரத்தினேடும் பிராமண னுக்கு மற்ருேர் பிராமணனேடும் உள்ள சமான சாதித்துவ [illegible]



வினு:—பிரஹ்மத்துக்குச்சஜாதியபேத மின்றென்பது எதனுலெனின். (59)

விடை:—சர்வாத்மக பரிபூரண சத்தாகிய பிரஹ்மம் ஒன்றேயாகும். அதற்கு சஜாதீயமாக வேறு பிரஹ்மமில் லாமையினென அறிக.

வினு:—இருக்கிறதென விவகரிக்கப்படுகிற தெதுவோ அது சத்தெனச் சாத்திரங்கள் கூறுகின்றமையால் ஜீவசேத னமிருக்கிறது. ஈசுவர சேதனமிருக்கிறது. வானிருக்கிறது. காற்றிருக்கிறது. கனலிருக்கிறது. சலமிருக்கிறது. மண் ணிருக்கிறதென விவகரிக்கப்படுகிற ஜசஜீவபரங்கள் யாவும் சத்துக்களேயாகும் ஆகலின் இவை பிரஹ்மத்துக்குச் சஜா தீய பேதங்களாமே யெனின். (60)

விடை:—கடாகாயம். மடாகாயம். சலாகாயம். மேகா காயம். குதிராகாயமென உபாதி திருஷ்டியால் பலவாகாய மாக விவகரிக்கப்படினும் உண்மையில் ஒரு ஆகாயமாயிருத் தல்போல சொரூபதிருஷ்டியா லாராயுமிடத்துப் பலவாகவி ன்றி யாவும் ஓர்சத்தாகவே யிருத்தலின் பிரஹ்மத்துக்கு சஜாதிப பேதங்களின்றென அறிக.

வினு:—கடம். கடம். கடமென ஒரு பெயராற் கூறப் படினும் கடங்கள் சிறியது, பெரியது, வலியது என ஒன்றற் கொன்று வேறுபட்டுந் தாரதம்மியங்களாயுள்ள, பல கடங்க ளாக விவகரிக்கப் படுவனபோல இருக்கிறதிருக்கி[illegible]தென

சத்துக்கள் ஒரு பெயராற் கூறப்படினும், "கர்த்திருத்துவாதியபேதரூப ஜீவசத்துசர்வஞ்ஞத்துவாதிபேதரூப ஈசுவரசத்து சப்தமாதிய பேதரூப பூதசத்தென ஒன்றற்கொன்று தாரதம்மியங்களாயுள்ள பல சத்துக்களாகச் சாத்திரங்களில் விவகரிக்கப் படுகின்றமையால் சத்துக்கள் பலவேயாமெனின்.

(61)

விடை:—கடம். கடம். கடமென ஒரு பெயராற் கூறப்படினும் அவைகள் வாய், கழுத்து, பண்டி, அடியென்னும் அவயவ பேதங்களையுடைய சிறிது, பெரிது கனம் கனமின்மையவாதிய வெவ்வேறுதன்மையனவாயிருத்தலினுனும் ஓர்கடத்துக்கும் மற்றோர் கடத்துக்கும் மத்தியில் கடாபாவப் பிரதீதி காணப்படுகின்றமையினுனும் கடங்கள்பலவாம் ஆதலின் கடத்துக்குச் சஜாதிய பேதங்களுள்ளனவாகும் இருக்கிறதிருக்கிறதென ஒரு பெயராற் கூறப்படுவதுமன்றி அவயவரகிதமா யிருத்தலினுனும் இருக்கிற திருக்கிறதென்னுஞ் சத்தம்ஸத்துக்கிடையில் சத்தின் அபாவப்பிரதீதியின்றியிருக்கிறதெனச் சத்தேபிரதீதியாகின்றமையினுனும் சாத்திரங்களில் உபாதிபேதம் பற்றி பலசத்தாக விவகரிக்கப்பட்டதேயன்றி சொரூபம் பற்றியன்ரும், ஆதலின் சத்தொன்றேயாகுமென அறிக.

வினு:—பாரமார்த்திகசத்து, வியாவகாரிகசத்து, பிராதிபாசிகசத்து என மூவிதசத்துககளுளவெனச் சாத்திரங்



கள் கூறுகின்றலமையால் சத்துக்கள் பலவேயாகும். ஆதலின் பாரமார்த்திக சத்தாகிய பிரஹ்மத்துக்குமற்றச் சத்துக்கள் ஜஜாதிய பேதங்களாகலாமெனின்.

(62)

விடை:—ஞானத்தாற் பாதமாவது வியவகாரிகசத்து. ஞானமின்றிப் பாதமாவது பிராதிபாசிகசத்து ஆகிய இரண்டு சத்துக்களும், ஒன்றினுலும் பாதமாகாததாயுள்ள பாரமார்த்திகசத்தாகிய பிரஹ்மத்துக்குச் சஜாதிய பேதங்களாகாதென அறிக.

வினு:—சொற்பகாலத்தில் நியமமின்றி யிறந்துபோகின்ற பிராஹ்மணனும் நீண்டகாலமாகிய நூறுவயதுபரியந்தமிருந்து கால நியமப்படியிறந்துபோகின்ற பிராஹ்மணனும் காயசித்தியாதிகளாலெந்தக்காலத்தினும் இறந்துபோகாமல் ஜீவித்திருக்கின்ற பிராஹ்மணனும் ஜீவித்திருப்பதில் காலவித்தியாசங்களையுடையவர்களாக இருக்கினும் பிராமணசாதித்துவத்தில் வித்தியாசமின்றிச் சமமாகவுள்ளவர்களாவதுபோலப் பாரமார்த்திகசத்தும், வியாவகாரிகசத்தும், பிராதிபாசிகசத்தும் ஒன்றற்கொன்று ஜீவித்திருப்பதில் காலவித்தியாசங்களையுடையனவாக இருக்கினும் சத்துச்சாதித்துவத்தில் சமமாகவேயிருக்கின்றமையால் பாரமார்த்திகசத்துக்கு மற்றச்சத்துக்கள் ஸஜாதியங்களல்லவென்றது பொருந்தாதெனின்

விடை:—பிராதிபாசிகசத்தும் வியாவகாரிகசத்தும் கற்பிதமானமையின் பொருந்துமென அறிக.

வினா:—அசேதனங்களான அவித்தையாதிய பஞ்சபூதபௌதிகங்கள் கற்பிதங்களாயினும் பிராதிபாசிகதைசதனும் வியாவகாரிகவிசுவனும் பிரஹ்மத்தைப்போற் சேதனங்களாகக்காணப்படுகின்றமையால் கற்பிதங்களன்று. வாஸ்தவமாகிய சத்துக்களேயாகுமெனின்.

விடை:—காரியமாகிய பிரதிபிம்பசூரியன் அவிசாரத்தால் காரணமாகிய பிம்பசூரியன்போலவும் அன்னியம்போலவுந்தோற்றினும் பிம்பசூரியனுக்கு அன்னியமாகாததுபோலக் காரியமாகிய விசுவனுந்தைசதனும் காரணமாகிய பிரஹ்மசேதனம்போலவும் அன்னியம்போலவுந் தோற்றினும் அன்னியமாகாரென அறிக.

வினா:—அற்றேல்தைசதனையும் விசுவனையும் பிரஹ்மமெனச்சுருதிகள் ஒரேபெயரால் வியவகரிக்கவேண்டும். அங்ஙனமின்றிப் பிரஹ்மம் விசுவன் தைசதனெனப்பேதமாகிய மூன்றுபெயரால் விவகரிக்கின்றனவேயெனின். (65)

விடை:—சலம், அலை, நுரை யெனப்பேதமாகிய மூன்றுபெயரால் சலம் விவகரிக்கப்படினும் சலத்தில் அலையும், அலையில்நுரையும் கற்பிதமானமையால் நுரை அலைக்கும், அலைசலத்துக்கும் வேறாகாமல் வாஸ்தவத்தில் சலமாத்திர[illegible]பெறுவதுபோலப் பிரஹ்மம், விசுவன் தைச



தனெனப்பேதமாகிய மூன்றுபெயரால் பிரஹ்மம் விவகரிக்கப்படினும் பிரஹ்மத்தின்பால் விசுவனும், விசுவன்பால் தைசதனுங்கற்பிதமானமையால் தைசதன் விசுவனுக்கும், விசுவன் பிரஹ்மத்துக்கும் அன்னியமாகாமல் பிரஹ்மமாத்திரமாகவே நிலைபெறும் ஆகலின் அன்னியமல்லவென அறிக.

வினா:—பிராதிபாசிகதைசதன் வியவகாரிக விசுவனிடத்தும் அவ்விசுவன் பாரமார்த்திகப் பிரஹ்மத்தினிடத்துங் கற்பிதமென்றது எதனாலெனின். (66)

விடை:—பிராதிபாசிக சர்ப்பப்பிரதீதி வியாவகாரிக இரச்சுஞானத்தினாலும் வியவகாரிக இரச்சுப்பிரதீதி இரச்சுவுபகிதசேதன ஞானத்தினாலும் பாதமாவதுபோலப் பிராதிபாசிகதைசதப்பிரதீதி வியவகாரிக விசுவஞானத்தினாலும் வியவகாரிக விசுவப்பிரதீதி பாரமார்த்திகப் பிரஹ்மஞானத்தினாலும் பாதமாகின்றமையினென அறிக.

வினா:—பிராதிபாசிகதைசதன் வியவகாரிக விசுவனிடத்தும் வியவகாரிகவிசுவன் பாரமார்த்திகப் பிரஹ்மத்தினிடத்தும் கற்பிதமானால் இவைகள் முறையே ஒன்றற்கொன்று காரணமாகும். அற்றேல் காரணத்தின்றன்மை காரியத்தினிடத்தும் விளங்கவேண்டும். அங்ஙனம் எவைகள் விளங்குகின்றனவெனின்,

விடை:—சலத்தின்றன்மையாகிய, சுவை, நெகிழ்ச்சி குளிர்ச்சி அலையினிடத்தும், அதன்மூலமாய் நுரையினிடத்தும் விளங்குவனபோலப் பாரமார்த்திகப் பிரஹ்மத்தின் இருப்புவிளக்கம் பிரியத்தன்மை என்பன வியவகாரிகவிசுவனிடத்தும் அப்படியே பிராதிபாசிகதைசதனிடத்தும் விளங்குகின்றனவென அறிக. (வாசு-௩-வரு)

வினு:—எது எதனிடத்திற் கற்பிதமோ அதற்கு அது அதிட்டானமாகும். ஆதலால் பிராதிபாசிகதைசதன் விசுவனிடத்தும் அவ்விசுவன் பாரமார்த்திகப் பிரஹ்மத்தினிடத்துங் கற்பிதமானுல் முறையே தைசதனுக்கு விசுவனும் விசுவனுக்குப் பிரஹ்மமும் அதிட்டானமென்றுசொல்லவேண்டும். அங்ஙனஞ்சொல்லில் கற்பிதமாகிய தைசதனுக்கு வாஸ்தவமாகிய பிரஹ்மம் அதிட்டானமாகுமேயன்றி மற்ருேர்கற்பிதமாகியவிசுவன் அதிட்டானமாகாது ஆகுமெனல் விரோதமாமெனின். (68)

விடை:—பிராதிபாசிக சர்ப்பத்துக்கு வியாவகாரிக இரச்சுவுபகிதசேதனமே அதிட்டானமாக இருக்கினும் இரச்சு அச்சேதனவியாபகத்தைப் பெற்றிருத்தலால் மித்தையாகிய இரச்சுவையும் மித்தையாகிய சர்ப்பத்துக்கு அதிட்டானமெனத் தூலதிருஷ்டிகளைநோக்கி ஒரேவிடத்திற்கூறுவதுபோலப் பிராதிபாசிகதைசதனுக்கு வியாவகாரிகவிசுவனில் வியாபித்துள்ள பாரமார்த்திகப்பிரஹ்மமே அதிட்டா[illegible]க்கினும் வியவகாரிகவிசுவன் அச்சேதன வியா



பகத்தைப்பெற்றிருத்தலால் மித்தையாகிய விசுவனையும் மித்தையாகிய தைசதனுக்கு அதிட்டானமெனத் தூலதிருஷ்டிகளைநோக்கிச் சாத்திரங்கள் ஒரோவிடத்திற்கூறுகின்றன ஆதலின் விரோதமின்றென அறிக.

வினு:—விஜாதியபேதமாவது யாதெனின். (69)

விடை:—மரத்துக்கும், கல்லுக்கும், பிராஹ்மணனுக்கும், சூத்திரனுக்கும், மனிதனுக்கும், மிருகங்களுக்கும் உள்ள அந்நியசாதித்துவபேதமென அறிக.

வினு:— பிரஹ்மத்துக்கு விஜாதீயபேதமின்றென்பது எதனுலெனின். (70)

விடை:—பிரஹ்மவிலக்கணத்துக்கு வேறிலக்கணமுடைய பொருளில்லாமையினென அறிக.

வினு:—மாயைபிரஹ்மவிலக்கணங்கட்கு வேருகிய அநிருதசடதுக்கவிலக்கணங்களையுடையதாதலின் அது பிரஹ்மத்துக்கு விஜாதீயமாகலாமேயெனின். (71)

விடை:—மாயை சத்தியவஸ்துவாயின் அது பிரஹ்மத்துக்கு விஜாதீயமாகும் அங்ஙனமின்றி மித்தியாவஸ்துவாதலின் விஜாதீயமாகாதென அறிக,

வினு:—சத்தியவஸ்துவுக்கு மித்யாவஸ்து வேறிலக்கணமுடையதென்பது பிரசித்தமாயிருக்க ஒன்றற்கொன்று விஜாதீய மாகாதென்றது எதனுலெனின். (7[illegible]

விடை:—எது மித்தியாவஸ்துவோ அது வாஸ்தவ அதிட்டானத்துக்குப் பின்னமாகா தென்னுஞ் சுருதியும் மண்ணிற் கற்பிதமாகத் தோற்றுங் கடசத்தி மண்ணினுக்கும் அன்னியமாக நிலைபெறாததுபோலப் பிரஹ்மத்திற் கற்பிதமாகத் தோற்றாநின்ற மாயாசத்தி பிரஹ்மத்துக்கு அன்னியமாக நிலைபெறாதென்னும் யுக்தியும் ஓர் சங்கற்பத்தின் அந்தத்துக்கும் அடுத்த மற்றோர் சங்கற்பத்தின் ஆதிக்கும் மத்தியிலுள்ள நிர்ச்சங்கற்ப காலத்திற் பிரகாசிக்கின்ற தனது சுபாவ நிலையில் மாயாப்பிரதீதியின்றி அறிவுமாத்திரமாகவே யிராநின்ற அநுபவமு மிருத்தலினென அறிக.

(பிரமாணம்)

சூதசம்மிதை விசேடசிருஷ்டி பிரமகீதை கேனோபநிடதம்.

நிருமல சிவன்றன்மாயையாற் கனுப்போனிருமிக்கப்பட்டன வெல்லாம், மருவுகாரியங் காரணத்திற்கு வேறாகாமையின் மாயைரூபந்தான். பெருகுமாயையுமற்ற திட்டானமாகும் பிரஹ்மத்தின் வேறானதன்று. குருபரனருள் கைக்கொண்டு முக்குறும்புங் கொன்றுயர்ந்தோங்கிய முனிவீர்.

எப்பொருளு மாயையினாலெனச் சிலவரியம் புவர்கள் மெய்ப்பரமன் றனையொழிய வேறொரு மாயையுமில்லை ஒப்பரியபரனொழிய வொருமாயை யுண்டாகி லப்பரமன்றன் பெருமைக்கது நேரேயழிவன்றோ.

[illegible]சுவகத பேதமாவது யாதெனின். (73)



விடை:—தனக்கும் தன்னிடத்திற் றோன்றித்தன்னை விட்டகலா திருப்பதற்குமுள்ள பேதமென அறிக.

வினா:—அஃதெது போலுமெனின். (74)

விடை:—மரத்துக்கு மரத்தைவிட்டகலா திருக்கும் பத்திரபுட்ப பலாதிகளுக்கும் அவயவிக்கும் அவயவியிற்றோன்றி அவயவியை விட்டகலா திருக்கும் அவயவமாகிய ஹஸ்த, பாத, மஸ்தகங்களுக்குமுள்ள பேதம் போலுமென அறிக.

வினா:—பிரஹ்மத்துக்குச் சுவகதபேத மின்றென்பது எதனாலெனின். (75)

விடை:- பிரஹ்மம் ஓரவயவமுமின்றி நிரவயவப்பொருளா யிருத்தலினென அறிக.

வினா:—அகம் சத்தத்துக்குப்பொருள் பிரஹ்மமெனச் சுருதிகள் கூறுகின்றமையால் அகம்ராகி அகந்துவெஷி அகங்காமி அகங்குரோதி எனத்தோன்றாநின்ற இராகாதி தருமங்களனைத்தும் பிரஹ்மத்தினிடமாகவே தோன்றியுள்ளவைகளாகும் ஆதலால் அத்தருமங்கள் பிரஹ்மத்துக்கு அவயவங்களாகிய சுவகதங்களாகுமே யெனின். (76)

விடை:—இராகாதிகளனைத்துஞ் சாக்கிர சொப்பனங்களில் அந்தக்கரணந்தோன்றியபோது தோன்றிச் சுழுத்தியாதிகளில் அடங்கியபோது அடங்கிவிடுகின்றமையால் அச[illegible]துச்சடதுக்கமயமாகிய அந்தக்கரண தரும[illegible]

சிதாநந்தமயமாகிய பிரஹ்மத்தின் தருமமன்றும், ஆதலின்
பிரஹ்மத்துக்குச் சுவகதங்களாகாவென அறிக.

வினு:—அற்றேல் சச்சிதாநந்தவிலக்கணங்கள் ஆத்மா
வாகிய பிரஹ்மத்தில் அகம் சச்சிதானந்தமெனத் தோன்று
கின்றமையால் அவ்விலக்கணங்களேனும் பிரஹ்மத்துக்கு
சுவகதங்களாகாவோ வெனின்- (77)

விடை:—சச்சிதானந்த இலக்கணங்கள் பிரஹ்மத்தின்
சுபாவமாய் எப்போதுமுள்ள அசாதாரண தருமங்களாகவும்
அபேதமாகவும் ஏகமாகவும் விளங்காநின்ற சொரூபலக்ஷ
ணங்களாகும், ஆதலின் அவ்விலக்கணங்கள் பேதமாகிய
சுவகதங்களாகாவென அறிக.

வினு:—கையானது அத்தம் கரம்பாணியெனப்பலவாக
வியவகரிக்கப்படினும் பரியாய சப்தபேதமேயன்றி அருத்த
பேதமில்லாமல் கையொன்றுகவேயிருக்கிறது. அங்ஙன
மிராமல் சத்து சித்து ஆனந்தமெனச் சத்தத்தினுனும் இரு
ப்பு விளக்கம் சுகமென அருத்ததினுனும் ஒன்றற்கொன்று
பேதமாகக் காணப்படுகின்றமையால் சச்சிதானந்தம் ஏக
மெனல் பொருந்தாதெனின். )78)

விடை:—அக்கினியானது உலோகிதம், உஷ்ணம், பிர
காசமெனச் சத்தத்தினுனும் சிவப்பு வெம்மை ஒளியென
[illegible] பேதமாக விவகரிக்கப்படினும், அக்கினி



யொன்றுகவேயிருத்தல்போலும் சலமானது சைத்தியதிரவ
சுக்கிலமெனச் சத்தத்தினுலும் குளிர்ச்சி இளகல் வெண்மை
யென அருத்தத்தினுலும் பேதமாக வியவகரிக்கப்படினும்
சலம் ஒன்றுகவேயிருத்தல்போலும். சச்சிதானந்த இலக்
கணம் சத்தத்தினுலும் அருத்தத்தினுனும் பேதமாகவிவகரி
க்கப்படினும், சத்தின் தேஜசேசித்தும் சித்தினிருப்பேசத்
தும் இவ்விரண்டின் ஒருமையே ஆனந்தமுமாய் அபேதமாக
இருத்தலால் ஏகமெனல்பொருந்துமென அறிக.

வினு:—மரத்துக்கு அந்நியப்படாமல் மரத்திலிரா
நின்ற பத்திரபுட்பபலாதிகளை மரத்துக்குச் சுவகதங்களாக
ஒப்பியதுபோலப் பிரஹ்மத்துக்கு அந்நியப்படாமல் பிரஹ
மத்திலிராநின்ற சச்சிதானந்த இலக்கணங்களைப் பிரஹ்மத்
துக்குச் சுவகதங்களாக ஏன் ஒப்பவில்லை யெனின். (79)

விடை:—மரமுழுதும் பத்திரபுட்பபலமாக இராமல்
ஒரோரிடத்திற் பத்திரமும் ஒரோரிடத்திற் புட்பமும் ஒரோ
ரிடத்திற் பலமும் ஒரோரிடத்திற் பத்திரபுட்பபலங்களின்
னபாவமுமாக இருத்தலால் மரத்துக்குப் பத்திரபுட்பபலாதி
கள் பேதமாகிய சுவகதங்களாக ஒப்பப்பட்டன. அங்ஙனம்
பிரஹ்மத்தில் ஒரோரிடத்திற் சத்தும் ஒரோரிடத்திற்சித்
தும் ஒரோரிடத்திலானந்தமும் ஒரோரிடத்திற் சச்சிதானந்
தங்களினபாவமுமாக இராமல் பிரஹ்மமுழுவதுஞ் சச்சி
தானந்தசொரூபமாகவே யிருத்தலால் சச்சி

கணங்களைப் பிரஹமத்துக்குச் சுவகதங்களாக ஒப்பவில்லை யென அறிக.

வினு:—எந்தமதஸ்தரும் பிரம்ஹமத்துக்கு சுவகதாதிய மூன்று பேதங்களில் ஓர்பேதமாயினும் ஒப்பவில்லையோ வெனின். (80)

விடை:—பரவியாபகத்திற் சீவர்கள் பரத்தின் தருமமாய்ப்பின்னுபின்னமாக இருக்கிறார்களென்னும் விசிஷ்டாத்துவிதிகள் சுவகதமும், சொற்பவிசிஷ்டாத்துவித அங்கீகாரிகளாய்ப் பரசிவசமானம் ஆன்மாவென்னும், சிவசமவாதிகள் சஜாதியமும், பரம்வேறு சீவர்கள்வேறு பரத்தினருளால் சீவர்கள் முத்தியில் தத்தம் குணங்களோடு இன்பமனுபவிக்கின்றனவென்னும், துவிதவாதிகள் விஜாதியமும் சுருதியாதிகட்கு விரோதமாக ஒப்பியிருக்கின்றனவென அறிக.

வினு:—இங்ஙனமொப்பியது சுருதியாதிகட்கு விரோதமென்றது எதனுலெனின். (81)

விடை:—ஏகமேவாத்துவிதமென்னும் தைத்திரீய சுருதி ஏகமென்னும் பதத்தால், சுவகதமும் ஏவவென்னும் பதத்தால் சஜாதீயமும் அத்துவிதமென்னும் பதத்தால் விஜாதீயமும் பிரஹ்மத்துக்கின்றென்கின்றமையால் சுருதிக்கும் உலகங்களனைத்திலுக்கும் ஏகச்சக்கராதிபதியாகிய சார்வபௌம க[illegible]ம்போது மற்றொருவனுக்கு சொற்ப சக்கிராதி



பதித்துவமேனுஞ் சித்தியாததுபோலப் பிரஹ்மம் பூரணசத்தாக இருக்கும்போது ஜீவாதிகட்கு அற்பசத்தித்துவமேனுஞ் சித்தியாதென்னும் யுக்திக்கும் கவி "மேனியிற் புறத்தினுள்ளின் மேலொடு கீழ்திற்றிக்கில்; வானில் வையகத்திலெங்கும் நானன்றி மற்றொன்றில்லை; யானிலாவிடமுமில்லை யெனஇடத்தியாதுமில்லை; தானிசம்பொருள் வேறில்லை சச்சிதாநந்த" மென்ற கசமுனிவராதிய மகரிஷிகள் சுவாநுபவத்துக்கும் பொருந்தாமையினென அறிக.

பிரமாணம் யசுர்வேதத்தில் சர்வசாரோபநிஷத்து.

சஜாதிய, விஜாதிய, பேதமற்றது பிரஹ்மம்.

மாண்டூக்கிய வுபநிஷத்து எ-வது வாக்கியம்.

சாக்கிர முதலிய அவஸ்தையற்றது, விகாரமற்றது, மங்களகரமானது, மூன்றுவித சஜாதீய விஜாதிய சுவகத பேதமற்றது பிரஹ்மம்.

ரிபுகீதை க-வது அத்தியாயம்:

அத்துவித அறிவுருவே பிரஹ்மமாகும்.

வினு:—பிரஹ்மம் பெரியதாயுள்ள அனைத்துக்கும் பெரிதென்றது எதனுலெனின். (82)

விடை:—சிறிதாயுள்ள அனைத்துக்குஞ் சிறிதாயுள்ள ஜீவன்முதல் அவித்தையென்னும் ஆனந்தமய கோசம், விஞ்ஞானமயகோசம், மனோமயகோசம், பிராணமயகோசம், அன்னமயகோசம்; கிரகம், நகரம், தேசம், பிருதிவி, அப்பு, அக்கினி, வாயுவு, ஆகாயம்,விராட்டு, இரணியகருப்பம், அவ்வியாகிருதம், பிரகிருதிபரியந்தம் முறையே ஒன்றற்கொன்று பெரிதாகும். பெரிதாகிய இவைகளனைத்தும் ஆகாயத்தில் மேகபடலங்கள் ஏகதேசமாகத் தோன்றுதல்போலப் பிரஹ்மத்திலேகதேச கற்பிதமாகத் தோன்றுதலினானும் பிரஹ்மத்துக்குச் சமானாதிகமான பொருளில்லாமையினானுமென அறிக.

வினா:—ஜீவனினும் ஆனந்தமயகோசம் பெரிதென்றது எதனாலெனின். (83)

விடை:—பிரதிபிம்பங்கட்கு ஆசிரயமாகிய சலதருப்பணாதிகள் வியாபகமாயிருத்தல்போலப் பிரஹ்மப் பிரதிபிம்பனாகிய ஜீவனினும் ஜீவாசிரயமாகிய ஆனந்தமயகோசம் வியாபகமா யிருத்தலினென அறிக.

வினா:—ஆனந்தமயகோசத்தினும் விஞ்ஞானமயகோசம் பெரிதென்பது எதனாலெனின். (84)

விடை:—கடாதிகளை விளக்குவதாயும் அந்தக்கரணத்தைநிவர்த்திப்பதாயுமுள்ள சூரியகிரணம் அவைகளினும் வி



யாபகமாயிருப்பதுபோல ஆனந்தமயகோசதருமமாகிய பிரியமாதிகளை விளக்குவதாயும், அஞ்ஞானத்தை நிவர்த்திப்பதாயுமுள்ள ஞானாகாரமான புத்திவிருத்தி, அவைகளினும் வியாபகமாயிருத்தலினென அறிக.

வினா:—விஞ்ஞானமயகோசத்தினும் மனோமயகோசம் பெரிதென்பது எதனாலெனின். (85)

விடை:—விஞ்ஞானமயபுத்தியின் காரணமாகிய அக்கினிக்கு மனதின் காரணமாகிய வாயு வியாபகமும் காரணமுமானமையினானும் புத்திமனோசங்கற்ப வஸ்துக்களுக்குள் ஏகதேசத்திலொன்றை நிச்சயித்தறிவதேயன்றி அதிக்கிரமித்து வேறொன்றையும் நிச்சயித்தறிவதல்லாமையினானுமென அறிக.

வினா:—மனோமய கோசத்தினும் பிராணமயகோசம் பெரிதென்பது எதனாலெனின். (86)

விடை:—மனது சாக்கிரசொப்பனங்களிலிருந்து சுழுத்தியிற் கெட்டுப்போதல்போற் கெடாமல் பிராணன் மூன்றவத்தைகளினுஞ் சலித்துக்கொண்டிருப்பதாயும் மனாதி தத்துவங்களைச் சலிக்கச்செய்வதாயும் மூர்ச்சையோகசமாதிகளில் பிராணனடங்கி யிருக்கும்போது மனதும் யாதொரு செயலுமின்றியடங்கிவிடுகின்றமையினானுமென அறிக.

வினா :—பிராணமயகோசத்தினும் அன்னமயகோசம் பெரிதென்றது எதனாலெனின். (87)

விடை:—இலாயத்திருந்து வெளிவந்துபின்புள்ளேசென்று நிற்கின்ற குதிரைக்கு இலாயம் வியாபகமாயிருப்பதுபோலத் தூலசரீரத்திருந்து வெளிவந்து பின்புள்ளே சென்று நிற்கின்ற பிராணனுக்குத் தூல சரீரம் வியாபகமாயிருத்தலினென் அறிக.

வினா :—அன்னமயமாகிய தூலசரீரத்தினும் கிரகம் பெரிதென்றது எதனாலெனின். (88)

விடை :—கூடு பல குருவிகள் வசித்தற்கு இடமாயிருத்தல் போலக் கிரகம் பல தூலசரீரங்கள் வசித்தற்கிடமாயிருத்தலினென அறிக.

வினா :—கிரகத்தினும் நகரம் பெரிதென்றது எதனாலெனின். (89)

விடை :—பலகிரகங்கள் பல ஆவணங்கள் பல ஆலயங்



வினா :—நகரத்தினுந் தேசம் பெரிதென்றது எதனாலெனின். (90)

விடை :—பலநகரங்களோடு பல நதி, வனம், பருவதாதிகளும் பலகிராமங்களும் சேர்ந்துள்ளது தேசமானமையினென அறிக.

வினா :—தேசத்தினும் பிருதிவிபூதம் பெரிதென்றது எதனாலெனின். (91)

விடை :—கடத்துக்கு மண் ஆதாரமாயிருத்தல்போலச் சகலதேசங்கட்கும் பிருதிவிபூதம் ஆதாரமாயிருத்தலினென அறிக.

வினா :—பிருதிவியினின்றும் அப்பு, அக்கினி, வாயுவு, ஆகாயங்கள் ஒன்றற்கொன்று பெரிதென்றது எதனாலெனின். (92)

விடை :—பிள்ளைச்சரீரத்தினும் தாய்ச்சரீரம் பெரிதாகவும் காரணமாகவுமிருப்பதுபோலப் பிருதிவியாதி ஐந்து பூதங்களும் முறையே ஒன்றற்கொன்று பதின்மடங்கதிகமாகவும் காரணமாகவுமிருத்தலினென அறிக.

ஆகாயத்தினும் விராட்டு சரீரம் பெரிதென்றது

விடை :—ஆகாயத்தினோடு மற்ற நான்கு பூதங்களும் சமட்டித்தூலசரீரங்களும் சேர்ந்துள்ளது விராட்டு சரீரமானமையினென அறிக.

வினா :—விராட்டு சரீரத்தினும் இரணியகருப்ப சரீரம் பெரிதென்றது எதனாலெனின். (94)

விடை :—விராட்டு சரீரமுதித்தொடுங்கற்குக் காரணமும், சூக்கும பூதங்களும் சமட்டி சூக்குமசரீரங்களுஞ் சேர்ந்துள்ளதும் இரணியகருப்ப சரீரமானமையினென அறிக.

வினா :—இரணிய கருப்ப சரீரத்தினும் அவ்வியாகிருதம் பெரிதென்றது எதனாலெனின். (95)

விடை :—இரணியகருப்ப சரீரம் தோன்றியொடுங்கற்குக் காரணமாயிருத்தலினென அறிக.

வினா :—அவ்வியாகிருதத்தினும் பிரகிருதி பெரிதென்றது எதனாலெனின். (96

விடை :—அவ்வியாகிருதம் பிரகிருதியின் முக்குணங்களில் ஓர்குணமாத்திரமாக இருத்தலினென அறிக.

வினா :—பிரகிருதியினும் பிரஹ்மம் பெரிதென்றது எதனாலெனின். (97)



விடை :—இப்பியில் வெள்ளி ஆரோபிதமாகத் தோன்றுதல்போலப் பிரஹ்மவியாபகத்திற் பிரகிருதி ஆரோபிதமாகவும் ஏகதேசமாகவுந்தோன்றுதலினென அறிக.

(பிரமாணம்)—மாண்டூக்கிய உபநிஷத் ஸ்வரூபாநந்த உபநிடதம்.

சூக்குமத்துக்குஞ் சூக்குமமாயும் பெரிதுக்கெல்லாம் பெரிதாயுமிருக்கிறது பிரஹ்மம்.

அரிதான ஜீவனுக்குப் பஞ்சகோசமைங்குகையாமதின்
குகைபாமைப்பூதந்தா; மிரியாதவிராட்டிது மற்றிதற்குமேலா
மிரணியகர்ப்பமதாமிதற்கு மேலாம், பெரிதாமவ்வியாகிருத
மிதற்குமேலாம்; பேசருமவ்வியத்த மிதிற்பெரி தாஞ்சுத்தம்
உரியார்களிதனை மகத்தென்பர் மேலாமொளியை மகத்தின்
மகத்தென்பர் மேலோர்.

(பதம்) சர்வசாக்ஷியினிடத்திலே

(பொருள்) சகலத்தையும் விளக்கிவைத்துக்கொண்டிரா நின்ற சாக்ஷியினிடமாக.

பதசாரம்

தத் துவம் அசியென்னும் பதத்திரயவாச்சியார்த்தசு... ...ன் ...மூகங்களெல்லாவற்றின் ஞேற்றவொடுக்கங்களாகிய

வயவெதிரேகங்களை விளக்கிவைத்துக்கொண்டு தானொருவிகாரமுமுறுமலிருத்தலின் பிரஹ்மத்தைச் சருவசாக்ஷி யென்றார்.

வினா:—தத் துவம் அசியென்னும் முப்பதங்களும் எந்த வாக்கியத்தின் பதங்களெனின். (98)

விடை:—சாமவேத மகாவாக்கியத்தின் பதங்களென அறிக.

வினா:—சருவ சாக்ஷியால் விளக்கி வைக்கப்படும் பதத்திரயவாச்சியார்த்த சமூகங்களெவையெனில். (99)

விடை:—தத் என்னும் பதத்திற்கு விராட்டு இரணிய கருப்பம் அவ்வியாகிருதமென்னும் சரீரத்திரயம் (சிருட்டி திதி சம்மாரமென்னும் அவத்தாத்திரயம்) வைசுவானரன் சூத்திராத்மா அந்தரியாமி யென்னும் அபிமானித்திரயம் ஆகிய (௯) ம், துவமென்னும் பதத்திற்கு தூலம் சூக்ஷ்மம் காரணமென்னும் சரீரத்திரயம், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யென்னும் அவத்தாத்திரயம், விசுவன் தைசதன் பிராஞ்ஞனென்னும் அபிமானித்திரயம் ஆகிய (௯) ம், அசியென்னும் பதத்திற்குச்சத்ருூபசத்தி சித்ருூபசத்தி ஆனந்தரூபசத்தி யென்னும் சரீரத்திரயம், சருவவியாபகம் சருவப்பிரகாசம் சருவானந்தமென்னும் அவத்தாத்திரயம், பரி



பூரணன் தேஜோமயன் பரமானந்தனென்னும் அபிமானித்திரயம் ஆகிய (௯)மாகக் கூடியவைகளென அறிக.

வினா:—பிரஹ்மம் சருவசாக்ஷியானால் வாச்சியார்த்தங்களையறிவதுபோல லக்ஷியார்த்தங்களையும் அறிய வேண்டுமன்றோ வெனின். (100)

விடை:—லக்ஷியார்த்தங்கள் பிரஹ்மத்தின் சொரூபமானமையால் பிரஹ்மம் அறியப்படுபொருளுமாகாது தன்னையெதிரிட்டுமறியாது அறியுமெனின் பிரஹ்மத்துக்கு ஆத்மாசிரயதோஷம் வருமென அறிக.

வினா:—ஆத்மாசிரய தோஷமாவது யாது? பிரஹ்மம் தனக்குத்தான் அறியப்படு பொருளாகாதென்றது எதனாலெனில். (101)

விடை:—தானே அறிதலாகிய கிரியைக்குக் கர்த்தாவாகவும் தானே கிரியாப்பிரயோசனத்தை யேற்குங் கருமமென்னுஞ் செயப்படு பொருளாகவுமிருப்பது தன்னைப்பற்றுதலென்னும் ஆத்மாசிரயதோஷமாம். குலாலனும் குடமும் பரிச்சின்னமானமையால் குலாலன் கிரியைக்குக் கருத்தாவும் குடம் கிரியாப் பிரயோசனத்தை யேற்குஞ்செயப்படு பொருளுமாகும். அதுபோல பிரஹ்மம் தனக்குத்தான் பின்னமாக இராமல் அத்துவிதமாயும் பூரணமாயுமி[illegible]

தன்னையறிதற்குத் தானே கருத்தாவும் தனக்குத் தானே செயப்படு பொருளுமாக இராது. ஆகலின் அறிபடு பொருளாகா தென்றதென அறிக.

விஞ:—சர்வசாக்ஷியிலவைகளை யெங்ஙனம் விளக்கிவைத்துக்கொண்டிருக்கிறதெனின். (102)

விடை:—நாடகசாலைத் தீபமானது நிர்த்தனவாத்திய இராக கீர்த்தன வேடிக்கை நிமித்தம் நாடகசாலையிற் கூடியுள்ள அரசர், மந்திரி, சேவகர், பரிசாரகர், நிர்த்தன கணிகையர், தாளமத்தளர்களாதியரின் தோற்றமாகிய பாவங்களையும் நாடகசாலையைவிட்டு அரசராதியர் நீங்கியபின்னர் அவர்களின் அபாவங்களையும் தாரதம்மியமற விளக்கிவைத்துக்கொண்டு ஒருதன்மையாக இருப்பதுபோலச் சருவசாக்ஷியாகிய பிரஹ்மம் தன்னிற் கற்பிதமாகிய பின்னுசத்தி அபின்னுசத்திகளின் விகாரத்தாற்றோன்றிய பதத்திரயவாச்சியார்த்தசமூகங்களின் பாவங்களையும் அச்சத்திகளின் சங்கோசத்தால் வாச்சியார்த்தங்களொடுங்கிய பின்னர் அவைகளின் அபாவங்களையும் விளக்கிவைத்துக்கொண்டு தானொரு விகாரத்தினையுமுறுமல் சாக்ஷிமாத்திரமாக இருக்கிறதென அறிக.

விஞ:—சருவ சாக்ஷியாகிய அதீதப் பிரஹ்மமானது [illegible]பூர்த்தமாகிய வைசுவானர சூத்திராத்மா அந்



தரியாமிநாமரூவர்ரும் துவம்பத வாச்சியார்த்தமாகிய விசுவதைசதபிராஞ்ஞநாமசிவரும் கற்பிதர்களானமையால் ஓர் காலத்தில் நாசமடைவார்கள். அப்போதவர்களின் அபாவங்களை விளக்கிவைத்துக் கொண்டிருக்குமென்பது பொருந்தும். அசிபத வாச்யார்த்தமாகிய பரிபூரண தேஜோமய பரமானந்த நாமமைசதன்னியங்கள் சத்தியப் பொருட்களானமையால் ஓரபாவங்களுமின்றியநித்தியமாகும். ஆதலின் அவைகளின் அபாவங்களையும் விளக்கிவைத்துக் கொண்டிருக்குமென்பது பொருந்தாதெனின். (103)

விடை:—அதிதப் பிரஹ்மத்திலடங்கியிருந்து வெளிப்பட்ட பராசத்தியின் முக்குண விகாசத்தால் அவ்வதிதப்பிரஹ்மத்துக்குத் தோன்றிய பரிபூரண தேஜோமய பரமாநந்த காமுங்கள் பொருளெப்படியோ அப்படியே விளங்கிக்கொண்டிராநின்ற அத்வைத அவஸ்தாஉரூப நிருவிகற்ப துரியாவத்தையுங்கடந்த அதிதநிலையில் பராசத்தி யொடுங்கியபோது ஒடுங்கி நான் பரிபூரணம் தேஜோமயம் பரமானந்தம என்னும் பிரஞ்ஞாரூப அகண்டாகார விருத்தியும் நழுவிப்போகின்றதையே இங்கே பரிபூரண தேஜோமய பரமானந்தர்களின் அபாவமென்றதாம். ஆதலின் அங்ஙனம் கூறியது பொருந்துமென அறிக.

(பிரமாணம்)—லக்ஷணவிருத்தி

அகிலசககிரியைக்கு மாதித்திய சனிதானமானதே மூலமாக வமர்தல்போற் சர்வவிந்திய சகத்தொழில்களும் அசைவில் சைதன்னியத்தின்; விகலமில்லாததோர் சன்னிதானங்கொண்டு விதவிதமதாக மிகவும் விரிவாய் நடக்கினு மிலகுகரியாகவே மேவும் ஷாமகாமாகவுங்; திகழுபிரவிர்த்தியும் கிவிர்த்தியுஞ்செய்யாது சேர்கின்ற ஒன்றினாலுஞ் செய்வித்தலில்லாது மத்யஸ்தனாகவே தினமிவையை நாடிநின்று; துகளிலாக்கனலிபோற் சகலவித் தொழிலையும் தோற்றிவிக்கின்றவதுவே சொரூபமாநாம் சர்வசாக்ஷியென்றனுதினமும்தாய் மனதிலெண்ணுவாயே

(பதம்) அக்கினியிற் சூடுபோல அபின்னமாக ஒருசத்தியுண்டு

(பொருள்) அக்கினியிடத் திராநின்ற உஷ்ணசத்தியைப்போல்அபேதமாக ஓர் சத்தியுளது.

பதசாரம்.

உஷ்ணசத்தி அக்கினியும் அக்கினிக்கன்னியமுமல்லாததாயிருப்பதுபோலப் பிரமத்தினிடமாக இராநின்ற சத்தியானது பிரமமும் பிரமத்துக்கு அன்னியமும் மல்லாததாயிருப்பதென்பது தோன்ற அக்கினியிற் சூடுபோலென்றார்.



வினா:—உஷ்ணசத்தி அக்கினியும் அக்கினிக்கு அன்னியமுமல்லதென்றது எதனாலெனின். (104)

விடை:—உஷ்ணசத்தியை அக்கினியெனின் மணிமந்திரங்களால் உஷ்ணசத்திக்கு நாசம் வந்தபோது அக்கினிக்கு நாசம் வரல்வேண்டும். அங்ஙன மின்மையால் உஷ்ணசத்தி அக்கினியுமல்ல; அக்கினிக்கன்னியமெனின் அது அக்கினியைவிட்டுத் தனியேகாணப்படாமையால் அக்கினிக்கன்னியமுமல்லவென்றதென அறிக.

வினா:—இதுபோலப் பராசத்தி பிரஹ்மமுமல்ல பிரஹ்மத்துக் கன்னியமுமல்லவென்றது எதனாலெனின். (105)

விடை:—சத்தி பிரஹ்மமெனின் அச்சத்திக்குப் பிரஹ்மமெனவே சுருதிகள் பெயர் கூறவேண்டும். அங்ஙனமின்றிச் சத்தியெனவே பெயர் கூறுகின்றமையால் சத்தி பிரஹ்மமுமல்ல அல்லது பின்னமாக இருக்கிறதெனின் பிரஹ்மத்தைவிட்டுப்பிரிந்து தனியேயிருக்கவேண்டும். அங்ஙனம் சத்தனாகியபிரஹ்மத்தைப்பிரிந்து தனியேயிராமையால் சத்தி பிரஹ்மத்துக்கன்னியமுமல்ல வென்றதென அறிக.

(பதம்) அந்தச்சத்தி அவ்வதீதப்பிரஹ்மத்தில்.

(பொருள்) அபேதமாக இராநின்ற அச்சத்தியானது அகோசரமாகிய அப்பிரஹ்மத்தினிடமாக

வினா:—பிரமஹ்மம் அகோசரமென்றது எதனாலெனின் (106)

விடை:—பிரமாணங்களாலறியத்தக்க உருவம் அருவம் உருவாருவ முதலிய அறியப்படுபொருளாகாது அதீதப்பொருளானமையினென அறிக.

வினா:—பிரமாணமாவது யாதெனின் (107)

விடை:—பிரமாஞானத்துக்கு எதுகரணமோ அது பிரமாணமென அறிக.

வினா:—பிரமாஞானம் யாதுகரணம் யாதெனின் (108)

விடை:—பதார்த்தானுபவம் பிரமாஞானமாகும் அதாவது நிருவிகற்பவுணர்வை முன்னாகக்கொண்டு ஐயவுணர்வும் திரிபுணர்வுமின்றிவிடயங்களைச் சவிகற்பமாய் நேரேயறிவதாகிய ஞானம். அது பாதிக்கப்படாத பொருளை விஷயமாகவுடையதாயும் ஸ்மிருதியல்லாததாயுமுள்ளதாம்.

கரணமென்பது அசாதாரணகாரணமெனப்படும். அது சர்வகாரியங்கட்கும் காரணமாயுள்ள தன்மாதன்ம முதலியவைகள்போலச் சாதாரணகாரணங்களாக இராமல் கடமுதலிய காரியவிசேஷங்கட்குத் தண்டம்போல யாதானுமோர் [illegible]த்துக்கு மாத்திரம் காரணமாயுள்ளதென அறிக.



வினா:—பிரமாணங்களெத்தனை யெனின் (109)

விடை:—பிரத்தியக்ஷப்பிரமாணம் அனுமிதிப்பிரமாணம் உபமிதிப்பிரமாணம் சப்தப்பிரமாணம் அருத்தாபத்திப்பிரமாணம் அனுபலபத்திப்பிரமாணம் என ஆறுபிரமாணங்களாம். இவ்வாறும் வேதாந்தத்துக்கு அங்கீகாரமாகும். இவற்றோடு சம்பவம் ஐதிகமென்னும் இரண்டனையுஞ் சேர்த்து இப்பிரமாணங்களெட்டென்பாருமுளரென அறிக.

வினா:—பிரத்தியக்ஷப்பிரமாணம் யாதெனின். (110)

விடை:—நேத்திரமுதலிய இந்திரியங்கள் தத்தம் விஷயங்களோடு சம்பந்தித்தபோது பிரத்தியக்ஷப் பிரமாவுண்டாகிறது மற்றக்காலத்துண்டாகிறதில்லை. ஆதலால் பிரத்தியக்ஷப்பிரமாவுக்குக் கரணங்களாகிய நேத்திரமுதலிய இந்திரியங்கள் பிரத்தியக்ஷப்பிரமாணமாம். அதாவது கடபடாதிவிடய தரிசனமாகிய காட்சியுணர்வின் கரணமென அறிக.

வினா:—அனுமானப்பிரமாணம் யாதெனின். (111)

விடை:—அனுமிதிப்பிரமையின் கரணமெதுவோ அதுவென அறிக.

வினா:—அனுமிதிப்பிரமையாவது யாதெனின். (112)

விடை:—இலிங்க ஞானத்தாற்றோன்றும் ஞானமாம். அது பருப்பதத்திற் றோன்றுந் தூமப்பிரத்தியக்ஷ லிங்கஞானத்தாலுண்டாகும் வன்னி ஞானம். வன்னி சாத்தியம்; தூமம் இலிங்கமாம். இவ்வனுமானம் சுவார்த்தம் பரார்த்தமென இரண்டாம். தனக்குத்தானே தூமஞானத்தால் வன்னிஞானமுண்டாவது சுவார்த்தானுமானம். தானறிந்தபடி வன்னியை அன்னியனுக்குத் தெரிவித்தல் பரார்த்தானுமானம். இதனைத் தெரிவிக்கும் வாக்கியம் பிரதிஞ்ஞை ஏது திட்டாந்தமெனும் மூன்றவயவங்களுடைத்து; பருப்பதம் வன்னியுடைத்தெனல் பிரதிஞ்ஞை; புகையுண்மையினாலெனல் ஏது; அடுக்களை போலெனல் திருட்டாந்தம். இவைகளால் நிச்சயிக்கத்தக்க அநுமானம் அந்நுவயம் வெதிரேகமென இரண்டாம். யாங்குப் புகையுண்டோ ஆங்கு வன்னி யுண்டெனல் அந்நுவயம். யாங்குவன்னியில்லையோ ஆங்குப்புகையிலை யெனல் வெதிரேகம். இவையன்றிப் பூர்வக்காட்சியனுமானமெனவும் கருதலநுமானமெனவும் ஆகமாநுமானமெனவும் மூன்றுள. பரிமளம் வந்தபோது இங்குப் பரிமளிப்பது இன்னமலரெனப் பூர்வானுபவ வாசனா சம்ஸ்காரத்தாலறிவது பூர்வக்காக்ஷியனுமானம். ஒருவன் வசனிக்கும் வசனத்தால் அவனறிவையளவிடுகிறது கருதலனுமானம். ஒருவனுடைய ஐசுவரியத்தை அல்லது தாரித்திரியத்தைப் பார்த்துப் பூர்வம் இவன் இன்ன புண்ணியம் அல்லது இன்னபாவம் செய்தவனென அறி[illegible]கமாநுமானமென அறிக.



வினா:—உவமானப்பிரமாணம் யாதெனின். (113)

விடை:—உவமிதிப் பிரமையின் காரணமெதுவோ அதுவென அறிக.

வினா:—உவமிதிப்பிரமை யாதெனின். (114)

விடை:—இன்னது இன்னது போலிருக்கு மென்னுங் கேள்வியால் அதனை மற்றோரிடத்திற் காணும் ஒப்புமையுணர்வாற் றோன்றும் ஞானம். அதாவது ஆவினை நிகர்த்தது மரையென்ற வனசரன்வாக்கியங் கேட்ட மரையுநவறியான் வனத்திற்சென்று மரையைக்கண்டபோது வனசரன் வாக்கியார்த்தஸ்~~மரணஞ்செய்து ஆவொப்புமையுடையபிண்டத்தைப்பார்த்தபின் இது~~) மரையென அறிதலென அறிக.

வினா:—சப்தப்பிரமாணம் யாதெனின். (115)

விடை:—சாப்திப்பிரமையின் காரணமெதுவோ அதுவென அறிக.

வினா:—சாப்திப்பிரமை யாதெனின் (116)

விடை:—வாக்கியஜந்யஞானம் சாப்திப்பிரமையாம். அதாவது திருஷ்டவாதியாகிய ஆப்தன்வசனத்தால் நதிக்கரையாதிகளில் கனிவர்க்கங்களுள்ளனவென அறிதலாம். இப்பிரமாணமும் தந்திரகலை (கருமகாண்டம்) மந்திரகலை [illegible]

காண்டம்)உபதேசகலை (ஞானகாண்டம்)எனமூவகைப்படும். இவைகளில் கருமகாண்டம்பற்றி முன்னொடு பின் விரோத மின்றி யனுட்டித்தலையுணர்வது தந்திர உரையளவையாகும். உபாசனுகாண்டம் பற்றி மனுதிகளையடக்கித் தெய்வவழிபா டாகிய வாய்மையையுணர்வது மந்திராவுரையளவையாகும். ஞானகாண்டம்பற்றி அநாதிநித்தியமாகிய பிரஹ்மம் தன் னின் வேறில்லாத சச்சிதானந்த சொரூபமாயிருத்தல் முத லிய இயல்பைத் தானுணரும் வழியையும் பிறருக்குணர்த்தும் வழியையுமுணர்வதுஉபதேசவுரையளவையாகுமென அறிக.

வினு:—*அருத் †தாபத்திப் பிரமாணமாவது யா தெனின் (117)

விடை:—உபபாதக (‡ சம்பாதக) கற்பனைக்கு ஏதுவா கிய உபபாத்திய ($ சம்பாத்திய) ஞானமாம். அது காட்சிய ருத்தாபத்தி கேள்வியருத்தாபத்தி யென இரண்டாம். அவ்வி ரண்டில் பகலில் போஜனத்தியாகியின் தேகம் பூரித்திருத் தலைக் கண்டு போஜனமின்றித் தேகம் பூரித்திருத்தல் கூடாதா தலின் இரவிற்கரவாய்ப்போஜனஞ் செய்வனென்றுய்த்துணர்

---

*அருத்தம் சம்பாதகவஸ்து. †ஆபத்தி கற்பனை. ‡ சம்பாதக வஸ்து இராப்போஜனம். $சம்பாத்தியம் தூலத்தன்மை.



வதற்கேதுவாகிய தேகபீனத்துவ ஞானம் காட்சியருத்தாபத் தியாகும். தேவதத்தன் வீட்டிலில்லையென்னும் வசனத்தால் வேறிடத்திற்சென்றிருப்பனென்றுய்த்துணர்வது கேள்வியரு த்தாபத்தியாகுமென அறிக.

வினு:—அநுபலப்திப் பிரமாணம் யாதெனின் (118)

விடை:—இல்லையென்னும் ஞானத்திற்கு விஷயமாவது அல்லது பிரதியோகியின் அபேக்ஷையோடுகூடிய ஞானத் திற்கு விஷயமாவது அபாவமெனப்படும். அவ்வபாவப்பிரமை யின் அசாதாரணகாரணம் அநுபலப்திப்பிரமாணமாகும். அது பதார்த்த அபாவ நிச்சயத்துக்கு ஏதுவாகிய அப்பதார் த்தத்தின் அப்பிரதீதியாமென அறிக.

வினு:—சம்பவப்பிரமாணமாவது யாதெனின் (119)

விடை:—ஆயிரமாகிய எண்ணில் நூறெனும் எண்ணு ண்டெனுமுணர்வென அறிக.

வினு:—ஐதீகப்பிரமாணமாவது யாதெனின் (120)

விடை:—இம்மரத்தில் யக்ஷனுள னென்னும் வசனத் தால் அம்மரத்தில் உண்டாகும் யக்ஷனுணர்வென அறிக.

வினு:—பிரஹ்மம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் விடயீகரிக்கக் கூடாததென்றது எதனுலெனின். (121)

விடை:-பிரஹ்மம் உருவமாகவாவது அல்லது நீல முத [illegible] ... இருக்கு [illegible]

ரேந்திரியஜன்னியஞானத்துக்கு விஷயமாம். பரிசமாக வேனும் அல்லது பரிசாசிரயமாகவேனும் இருக்குமாயின் துவக்கிந்திரியஜன்னியஞானத்துக்கு விஷயமாம். சப்தரச கந்த குணங்களுளவாயின் சுரோத்திர சிங்நுவை ஆக்கிராணேந்திரியஜன்னியஞானங்கட்குவிஷயமாம். அங்ஙனமின்றிஇவைகட்கு விலக்ஷணசொரூபமாக இருத்தலால் பிரத்தியக்ஷப் பிரமாணத்துக்கும் வன்னிதூமங்கள் போல எதார்த்தத்தில் காரணகாரிய பாவமுறாக இல்லாமையால் அனுமானப்பிரமாணத்துக்கும் மரைக்குச் சாதிருசியமாகப் பசுவிருப்பதுபோலப் பிரஹ்மத்துக்குச் சாதிருசியமாக வேறு பொருள் ஔபாதிகமாக விருத்தலன்றி நிருபாதிகமாக இல்லாமையால் உவமானப் பிரமாணத்துக்கும் பதத்தின் அர்த்தபோத ஏதுவான சாமர்த்தியம் சக்தியெனப்படும். சக்திவிருத்தியாலுணரப்படும் அர்த்தம் சக்கியமாம். சக்கியசம்பந்தம் இலக்கணையாம். இங்ஙனம் பரம்பராசம்பந்தமான இலக்கணாவிருத்திக்கு விஷயமேயன்றிச் சக்திவிருத்திக்கு விஷயமல்லாமையால் சப்தப்பிரமாணத்துக்கும் பருத்தலிளைத்தலாதி விகாரங்களைப் பொருந்துதலும் ஓரிடத்தின்றி மற்றோரிடத்திருப்பதுமாக இராமல் நிருவிகாரமாகவும் பூரணமாகவும் இருத்தலால் அருத்தாபத்திப் பிரமாணத்துக்கும் அசத்தாக இராமல் நித்தியசத்தாக விளங்கிக்கொண்டிரு



பத்திப் பிரமாணத்தினும் ஐதிகப்பிரமாணம் சப்தப்பிரமாணத்திலும் அடங்கியுள்ளனவானமையால் அவ்விரண்டற்கும் பிரஹ்மம் விஷயமன்றென்பதற்குக் காரணம் இங்கே யெழுதப்படவில்லை. இதனால் சகலப்பிரமாணங்களினும் விடயீகரிக்கக்கூடாததென்றதென அறிக.

### பிரஹ்மம் அகோசரமென்பதற்குப் பிரமாணம்.

(பிரஹ்மகீதை கேனோபநிடத முறைத்த அத்தியாயம்.)

வாக்கும் மனமுங் கண்ணும் மற்றுள விந்தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா.

| (பதம) | (பொருள்) |
|---|---|
| அடங்கியிருக்கும் போது அதற்குச் சுத்தப்பிரஹ்மமென்றுபெயர். | ஒடுங்கியிருக்கும்போது அவ் வதீதப்பிரஹ்மத்துக்குப் பரிசுத்தமாகிய பிரஹ்மமென்று நாமமாம். |

வினா:—பிரஹ்மத்தில் சத்தியென்றொன்று அடங்கியிருக்குமாயின் வஸ்து இரண்டாம். அற்றேல் அத்துவிதம் எங்
ஙனஞ் சித்திக்குமெனின். (122)

விடை:—மண்ணிலடங்கியிராநின்ற கடசத்தி மண்ணிற் கன்னிபவஸ்துவாகாமல் மண்மாத்திரமாகவே யிருத்தல்போலப் ... பராசத்தியும் ...ரஹ்மத்து

ரேந்திரியஜன்னியஞானத்துக்கு விஷயமாம். பரிசமாக வேனும் அல்லது பரிசாசிரயமாகவேனும் இருக்குமாயின் துவக்கிந்திரியஜன்னியஞானத்துக்கு விஷயமாம். சப்தரச கந்த குணங்களுளவாயின் சுரோத்திர சிங்நுவை ஆக்கிராணேந்திரியஜன்னியஞானங்கட்குவிஷயமாம். அங்ஙனமின்றிஇவைகட்கு விலக்ஷணசொரூபமாக இருத்தலால் பிரத்தியக்ஷப் பிரமாணத்துக்கும் வன்னிதூமங்கள் போல எதார்த்தத்தில் காரணகாரிய பாவமாக இல்லாமையால் அனுமானப்பிரமாணத்துக்கும் மரைக்குச் சாதிருசியமாகப் பசுவிருப்பதுபோலப் பிரஹ்மத்துக்குச் சாதிருசியமாக வேறு பொருள் ஒளபாதிகமாக விருத்தலன்றி நிருபாதிகமாக இல்லாமையால் உவமானப் பிரமாணத்துக்கும் பதத்தின் அர்த்தபோத ஏதுவான சாமர்த்தியம் சக்தியெனப்படும். சக்திவிருத்தியாலுணரப்படும் அர்த்தம் சக்கியமாம். சக்கியசம்பந்தம் இலக்கணையாம். இங்ஙனம் பரம்பராசம்பந்தமான இலக்கணாவிருத்திக்கு விஷயமேயன்றிச் சக்திவிருத்திக்கு விஷயமல்லாமையால் சப்தப்பிரமாணத்துக்கும் பருத்தலிளைத்தலாதி விகாரங்களைப் பொருந்துதலும் ஓரிடத்தின்றி மற்றோரிடத்திருப்பதுமாக இராமல் நிருவிகாரமாகவும் பூரணமாகவும் இருத்தலால் அருத்தாபத்திப் பிரமாணத்துக்கும் அசத்தாக இராமல் நித்தியசத்தாக விளங்கிக்கொண்டி



பத்திப் பிரமாணத்தினும் ஐதிகப்பிரமாணம் சப்தப்பிரமாணத்திலும் அடங்கியுள்ளனவானமையால் அவ்விரண்டற்கும் பிரஹ்மம் விஷயமன்றென்பதற்குக் காரணம் இங்கே யெழுதப்படவில்லை. இதனால் சகலப்பிரமாணங்களினாலும் விடயீகரிக்கக்கூடாததென்றதென அறிக.

பிரஹ்மம் அகோசரமென்பதற்குப் பிரமாணம்.

(பிரஹ்மகீதை கேனோபநிடத முரைத்த அத்தியாயம்.)

வாக்கும் மனமுங் கண்ணும் மற்றுள் விந்தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா.

| (பதம) | (பொருள்) |
| --- | --- |
| அடங்கியிருக்கும் போது அதற்குச் சுத்தப்பிரஹ்மமென்றுபெயர். | ஒடுங்கியிருக்கும்போது அவ்வதீதப்பிரஹ்மத்துக்குப் பரிசுத்தமாகிய பிரஹ்மமென்று நாமமாம். |

வினா:—பிரஹ்மத்தில் சத்தியென்றொன்று அடங்கியிருக்குமாயின் வஸ்து இரண்டாம். அற்றேல் அத்துவிதம் எங்ஙனஞ் சித்திக்குமெனின். (122)

விடை:—மண்ணிலடங்கியிராநின்ற கடசத்தி மண்ணிற் சுன்னியவஸ்துவாகாமல் மண்மாத்திரமாகவே யிருத்தல்போலப்

தலால் வஸ்து இரண்டின்றும். ஆதலால் அத்துவிதஞ் சித்திக்குமென்றறிக.

(நூல்-2)

அந்தச்சத்தி விசிரிம்பித்துச் சுத்தப்பிரஹ்மத்தை வியாபிக்கும்போது அப்பிரஹ்மம் பராவியாபகத்திற் குள்ளிருந்தபடியால் அதற்குப் பரப்பிரஹ்மமென்று பெயராம்.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| அந்தச்சத்தி விசிரிம்பித்து சுத்தப்பிரஹ்மத்தை வியாபிக்கும்போது | அதீதப்பிரஹ்மத்தி லடங்கியிருந்த அச்சத்தியானது விரிந்து பரிசுத்தமாகிய பிரஹ்மத்தைச் சூழ்ந்துகொள்ளும்போது |

வினா:—பிரஹ்மத்திலுள்ள சத்தி பிரஹ்மத்தைத்தானே வியாபிப்பது எங்ஙனமெனின். (123)

விடை:—அக்கினியிலுள்ள புகை அக்கினியையும் ஆகாயத்திலுள்ள மேகம் ஆகாயத்தையும் வியாபித்ததுபோலுமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| அப்பிரஹ்மம் பராவியாபகத்துக் குள்ளிருந்தபடியால் அதற்கு பரப்பிரஹ்மமென்று பெயராம் | முற்சொல்லப்பட்ட சுத்தப்பிரஹ்மமானது பராசத்தியினது வியாபகத்துக்குள்ளாயிருந்தமையால் அந்தச்சுத்தப்பிரஹ்மத்துக்கு மேல... |



வினா:-பராவியாபகத்துள் பிரஹ்மமிருக்குமாயின் அது வியாப்பியப் பொருளாகுமேயெனின். (124)

விடை:—திக்கெங்கினும் நிறைந்து வியாபகமாக இராநின்ற ஆகாயம் தன்னுளேகதேசமாக ஓரிடத்திற்றோன்றிய மேக வியாபகத்திருக்கினும் அதனால் அது வியாப்பியப் பொருளாகாததுபோல, சகலதத்துவங்களினும்நிறைந்து அப்பாலும் அளவிடற்கரிய வியாபகசொரூபமாக யிராநின்ற பரப்பிரஹ்மம் தன்னுளேகதேசமாகத் தோன்றிய பராசத்தியின் வியாபகத்திருக்கினும் வியாப்பியப் பொருளாகாதென அறிக.

வினா:—சுத்தப்பிரஹ்மம் பரப்பிரஹ்மமெனப் பெயர் பெற்றதெதுபோலுமெனின். (125)

விடை:—மண்ணி லடங்கியிருந்த கடசத்தி கடாகாரமாக விரிந்து ஆகாயத்தை வியாபித்தபோது அக்கடவியாபகத்தளவாயிராநின்ற ஆகாயம் கடாகாயமெனப் பெயர் பெற்றது போலுமென அறிக.

வினா:—மண்ணிலடங்கியிருந்த கடசத்தியைக் காரியப்படுத்தற்கு மண்ணிற்கும் சத்திக்கும் அன்னியமாக நிமித்தகாரணனான குலாலன் வேண்டியதுபோலப் பிரஹ்மத்திலடங்கியிருந்த பராசத்தியை விகாசப்படுத்தற்குப் பிரஹ்மத்துக்கும் சத்திக்கும் அன்னியமாக நிமித்தகாரணன் வேண்டுமே

விடை:—கடசத்திக் காதாரமாகிய மண் சடமானமை யால் கடசத்தியை விகாசப்படுத்தற்கு வேறு சேதனனை குலாலன் வேண்டிற்று. சத்திக்காதாரமாகிய பிரஹ்மம் சேதனமானமையால் சத்தியை விகாசப்படுத்தற்குப் பிரஹ்மமே நிமித்தகாரணமுமாகும். ஆதலால் வேறே நிமித்தகாரணன் வேண்டுவதின்றென அறிக.

வினா:—பிரஹ்மஞ் சேதனமாக இருக்கினும் நிஷ்கிரிய சொரூபமெனச் சுருதிகள் கூறுகின்றமையால் சத்தியை விகாசப்படுத்தற்கு எங்ஙனம் காரணமாகுமெனின் (127)

விடை:—ஊசியைச் சேட்டிப்பித்தற்கு நிஷ்கிரியமாகிய காந்தக்கல் காரணமாதல்போலச் சத்தியை விகாசப்படுத்தற்குப் பிரஹ்மம் நிஷ்கிரியவஸ்துவாக இருக்கினும் காரணமாகுமென அறிக.

விடை:—இச்சத்திக்குப் பரையெனப் பெயர் வந்தது எதனாலெனின். (128

விடை:—சப்தப்பிரஹ்மங்களுந் தோன்றுவதற்குக் காரணமாயுள்ள பிரகிருதிக்குமேலாகிய பரப்பிரஹ்மத்தை வியாபித்து அபேதமாயிருத்தலினென அறிக.



விடை:—பிரமன், விட்டுணு, உருத்திரன், பிரணவம், வேதம், பிராஹ்மணன், பசு என்னுமிவ்வேழுமாம். இவை முறையே சிருட்டிக்கும் திதிக்கும் சங்காரத்துக்கும் மந்திரங்கட்கும் சாத்திரங்கட்கும் வருணங்கட்கும் மிருகங்கட்கும் தலைமைபூண்டிருத்தல்பற்றியென அறிக.

(நூல்·௩.)

இலக்ஷணசூனியமாயிருக்கின்ற இச்சத்திக்குப் பிரஹ்ம சன்னிதானத்திற் புருடசமுகத்தில் ஸ்திரீக்கு இன்பஞ் சனித்தாற் போல அவிகிருத சத்துவரஜஸ்தமோகுணங்களுண்டாயின. இவற்றுள் சுத்த சத்துவத்துக்கு ஆனந்தரூப சத்தியென்றும் சுத்தரஜஸிற்குச் சித்ரூப சத்தியென்றும் சுத்ததமஸிற்குச் சத்ரூப சத்தியென்றும் பெயர்.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| இலக்ஷண சூனியமாயிருக்கின்ற இச்சத்திக்கு | பிரஹ்மத்துக்கு விலக்ஷண வடிவமின்றியதாயுள்ள இந்தச் சத்திக்கு. |

வினா:—பரையென்னுஞ் சத்தியை லக்ஷண சூனியமென்றது எதனாலெனின். (130)

வமாகிய பிரஹ்மத்தில் பேதமின்றி நிரவயவமாகவே யிருத்தலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பிரஹ்மசந்நிதானத்தில் புருடசமூகத்தில் | நிருவிகாரமாயுள்ள பிரஹ்ம சமூகத்தில் நீண்டகாலம் பிரிவுற்றிருந்த சகலஐசுவரியங்களையுமுடைய பிரியநாயகன் சேர்க்கையில். |

வினு:-ஐசுவரியங்களென்பவை யெவையெனின். (131)

விடை:—இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி நெல், வாகனம, அடிமைகளும், அழகு, இளமை, அரோகம் திடகாத்திரம், வித்தை, வீரியம், விவேகம் என்பனவுமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| ஸ்திரீக்கு இன்பஞ்சனித்தாற்போல | கற்பிற்சிறந்த மனையாளுக்கு கச்சு, ரவிக்கை, வளையல தெறிக்கச்சரீரபுளகிதம் மயிர்க்கூச்சுமுகமலர்ச்சியோடு சுகஞ்சனித்தாற்போல. |

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சத்துவ ரஜஸ் தமோ குணங்கள் ... ... | சாத்விக இராஜத ... |



வினு:—பிரஹ்மசன்னிதானத்தில் பராசத்திக்கு முக்குணமுண்டாகியதெனின், பிரஹ்மத்துக்குமுன்பாக வேறிடத்திற் சத்தியிருக்கிறதென்றாகிறது. அற்றேல் பிரஹ்மமுள்ள விடத்திற் சத்தியும் சத்தியுள்ளவிடத்திற் பிரஹ்மமுமில்லாததாகிப் பிரஹ்மம் கண்டப்பொருளாகுமே யெனின். (132)

விடை:—இங்கே சன்னிதானமென்பதற்கு முன்பு எனப்பொருள்கொள்வது ஆராய்வுக்குறைவேயன்றி வேறன்று. மற்றென்னெனின் சன்னிதானமென்பது சமுகம் அதாவது கூடிநிற்றலாகிய கூட்டமாம். அக்கினியை உஷ்ணசத்திகூடி நிற்றலால் அக்கினியும் ஆகாயத்தை மேகங்கூடி நிற்றலால் ஆகாயமும் கண்டப்பொருளாகாததுபோலப் பிரஹ்மத்தைப் பராசத்திகூடி நிற்றலால் பிரஹ்மம் கண்டப்பொருளாகாதென அறிக.

(வினு:—அற்றேல் பிரஹ்மத்தைப்போல சத்தியும் அநாதியானமையால் அநாதியே பிரஹ்மத்திற் சத்தி பிரிவின்றியபேதமாயிருக்கிறதாகும். ஆதலால் சத்திக்கு முக்குணங்களும் அநாதியாகவே யுள்ளனவாகுமன்றி யிடையிலோர் காலத்தில் பிரஹ்மசன்னிதான விசேடத்தால் முக்குணங்களுண்டாயின வெனல் அசம்பாவித யெனின். (133)

... தாரு

விடை:—வியாதியாதிகளாற் சரீரமெலிந் ...

த்திருக்கிற ஸ்திரீக்கும் புருடனைத்தான் சார்ந்திருந்தும் காமாதி விகாரங்களுதயமாகாமல் சரீரமெலிவு நீங்கிச்செய லுண்டாகி யெழுந்தபின்னர்ப் புருடதரிசன விசேடத்தாற் காமாதி விகாரங்களுண்டாதல்போலப் பராசத்தி பிரஹ்ம வியாபகத்தில் செயலற்று ஒடுங்கி அதிசூக்ஷமமாயிருக்கும் போது அதற்குக் குணங்களுதயமாகாமல் காலபரிபாகத்தாற் செயல்பெற்றுத் தடித்து விகாசமாகிய பின்னர்ப் பிரஹ்மத் தின் சேர்க்கைவிசேடத்தால் முக்குணங்களுமுதயமாயின் ஒன்றேயாகும். ஆதால் அசம்பாவிதமன்றெனவறிக.

வினு:—பரையிற்றோன்றிய முக்குணங்களும் வேறுபடுந் தன்மையில்லனவாயின் ஒன்றேயாகும். ஆதலால் அவைகட் கு வெவ்வேறு பெயர்கள் கூறப்படாதெனின். (134)

விடை:—சலத்துக்குள்ள சத்திகள் வேறுபடுந்தன்மை யில்லனவாயினும் அவைகட்குக் குளிர் இளகல் வெண்மை யெனவெவ்வேறு பெயர் கூறுவதுபோலப் பரையிற்றோன்றிய முக்குணங்களும் வேறுபடுந்தன்மையில்லனவாயினும் அவை கட்கு வெவ்வேறு பெயர் கூறலாமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இவற்றில் சுத்தசத்துவத்தி [illegible] | இம்முக்குணங்களில் பரிசுத் [illegible] |



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சுத்தரஜஸிற்கு சித்துரூப சத்தியென்றும், சுத்ததமஸிற் குச்சத்துரூபசத்தி யென்றும் பெயர். | பரிசுத்தமாகிய இராசதகு ணத்திற்கு அறிவுசொரூபசத் தியெனவும், பரிசுத்தமாகியதா மதகுணத்திற்கு உண்மைரூப சத்தியெனவும் காமமாம். |

வினு:—இப்பராசத்தியின் குணங்களைச் சுத்தகுணங்க ளொன்றது எதனுலெனின். (135)

விடை:—சுத்தமாகிய பிரஹ்மத்தை அசுத்தமாகிய ஜக ஜீவபரங்களாகத் தோன்றச்செய்யும் பிரகிருதியின் அசுத்த குணக் கலப்பில்லனவாயும் பிரஹ்மத்தின் சுத்தமாகிய சச்சி தானந்த இலக்கணங்களை யுள்ளபடி விளங்கச் செய்வதாயு மிருத்தலினென அறிக.

வினு:—பரையின் முக்குணங்கட்கும் முறையே ஆன ந்தரூபசத்தி சித்துரூபசத்தி சத்துரூபசத்தியெனப் பெயர் வந் தது எதனுலெனின். (136)

விடை:—சத்துவகுணம் பிரஹ்மத்தின் [illegible]

தன்மையதாதலால் அதற்கு ஆனந்தரூப சத்தியெனவும், இராஜதகுணம், சுயம்பிரகாசமாகிய சித்திலக்கணத்தைத் ததாகாரமாயிருந்து விளங்கச்செய்யுந் தன்மையதாதலால் சித்துரூப சத்தியென்வும், தாமதகுணம் முக்காலத்திநு முள்ள வியாபகமாகிய சத்திலக்கணத்தைத் ததாகாரமாயிரு ந்து விளங்கச்செய்யுந் தன்மையதாதலால் சத்துரூப சத்தி யெனவும் பெயர் வந்ததென அறிக.

(நூல்·சு.)

இவற்றில்காரணமான ஆனந்தரூபசத்தியோடு பரப்பிரஹ் மங்கூடி சர்வானந்தமென்னுஞ் சுழூத்தியவத்தையையடை யும்போது பரப்பிரஹ்மமென்னும் பெயர்போய்ப் பரமானந்த ரென்னும் பெயர்வந்தது. இந்தப்பரமானந்தர் சர்வப்பிரகாச மென்னும் சொப்பனவத்தையை யடையும்போது பரமானந் தரென்னும் பெயர்போய்த் தேஜோமய ரென்னும் பெயர் வந் தது. இத்தேஜோமயர் சத்துரூப சத்தியோடு கூடிச் சர்வ வியாபகமென்னும் சாக்கிராவஸ்தையை யடையும்போது தேஜோரூபரென்னும் பெயர் போய்ப் பரிபூரணரென்னும்



(பதம்)

இவற்றில் காரணமான ஆன ந்தரூபசத்தியுடனே பரப்பிர ஹ்மங்கூடி சர்வானந்தமென் னுஞ் சுழூத்தியவத்தையை ய டையும்போது பரப்பிரஹ்ம மென்னும் பெயர்போய், பர மானந்தரென்னும் பெயர் வந் தது.

(பொருள்)

இம்மூன்று சத்திகளிற்பிர தானமான சுகரூபசத்தியோ டு மேலாகிய பிரஹ்மஞ்சேர்ந் து பூரணானந்தமயமென்று சொல்லப்படுவதாகிய சுழூத்தி யவத்தையைப் பொருந்துகின் றபோது மேலாகிய பிரஹ்ம மென்கிற நாமமானது நீங்கி மேலாகிய சுகசொரூபமென்கி ன்ற நாமமுண்டாயிற்று.

வினா:—ஆனந்தரூப சத்தியைச் சத்துரூப சத்திக்கும் சித்துரூபசத்திக்குங் காரணமென்றது எதனாலெனின்.(137)

விடை:—சாக்கிர சொப்பனங்கட்குச் சுழூத்திகாரண மானமையால் சுழூத்தியவத்தாரூபமாகிய ஆனந்தரூபசத்தி யைச் சத்துரூபசத்திசித்துரூபசத்திக்குக் காரணமென்றதெ ன அறிக.

வினா:—சுழூத்தியவத்தையை யடைந்த பரப்பிரஹ்மத் துக்குப் பரமானந்தரெனப் பெயர்வந்தது எதனாலெனின் 138

விடை:—சிவதுரியமாகிய பரைவியாபகத்தில் சுபாவ சொரூபமாக இருந்தவண்ணமேயிருந்த பரப்பிரஹ்மம், பரை சத்துவகுணமாகிய ஆனந்தரூபசத்தி

தமாகிய சுழுத்தியவத்தையைப் பொருந்திச் சர்வப்பிரகாச சர்வவியாபகமாக விளங்குகின்றேமென்னும் சொப்பன சாக்கிரப் பிரஞ்ஞைகளின்றி மேலாகிய ஆனந்தமயமாக நிற்றலினெனை அறிக. (அசிபதார்த்தமானசிவசுழுத்தி)

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இப்பரமானந்தர் சித்துரூபசத்தியுடனேகூடிச்சர்வப்பிரகாசமென்னுஞ் சொப்பனவத்தையை யடையும்போது பரமானந்தமென்னும் பெயர்போய்த் தேஜோமயரென்னும் பெயர்வந்தது. | இந்தப் பரசுகசொரூபர் அறிவுசொரூபசத்தியோடுசேர்ந்து பூரணப்பிரகாசமென்னும் கனவவத்தையைப பொருந்துகின்றபோது பரசுகசொரூபரென்னும் நாமம்நீங்கிப் பிரகாசசொரூபரென்னும் நாமமுண்டாயிற்று. |

வினா:—சொப்பனவத்தையில் பரமானந்தருக்குத் தேஜோமயரெனப் பெயர்வந்தது எதனாலெனின். (139)

விடை:—சிவசுழுத்தியாகிய ஆனந்தரூப சத்திவியாபகத்திருந்த பரமானந்தர் பரையின் ரஜோகுணமாகிய சித்துரூப சத்தி சம்பந்தத்தால் உபசாந்தமாகிய சுழுத்தியவத்தையினின்றும் நழுவி சர்வப்பிரகாசமாகிய சொப்பனவத்தையைப் பொருந்திச் சர்வவியாபகமாக விளங்குகின்றேமென்னும் பிரஞ் அந்நிலைமீப் பூரணப்பிரகாசமயமாய் நிற்றலினென அறிக



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இத்தேஜோமயர் சத்துரூப சத்தியுடனேகூடி சர்வவியாபகமென்னும் சாக்கிராவத்தையை அடையும்போது தேஜோமயரென்னும் பெயர்போய் பரிபூரணரென்னும் பெயர்வந்தது. | இந்தப்பிரகாச சொரூபர் இருப்புரூபசத்தியோடுசேர்ந்து பூரணவியாபகமென்னும் நனவவஸ்தையைப்பொருந்துங்காலத்தில் பிரகாசசொரூபரென்கின்ற நாமமானது நீங்கி வியாபகசொரூபரென்கின்ற நாமமுண்டாயிற்று. |

வினா:—சாக்கிராவத்தையில் தேஜோமயர்க்குப் பரிபூரணரெனப் பெயர்வந்தது எதனாலெனின். (140)

விடை:—சிவசொப்பனமாகிய சித்துரூபசத்திவியாபகத்திருந்த தேஜோமயர் பரையின் தமோகுணமாகிய சத்துரூபசத்தி சம்பந்தத்தால் சர்வப்பிரகாசமென்னுஞ் சொப்பனவத்தையினின்றும் நழுவிச் சம்பூரணஸ்தானமாகிய சாக்கிராவத்தையைப் பொருந்திச் சராசரப் பிரபஞ்சங்களனைத்துந் தன்மயமாகித் தானே பூரணமயமாகி நிற்றலினென அறிக. (அசிபதார்த்தமான சிவசாக்கிரம்)

பிரஹ்மவிலக்கணநிரூபகம்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

ஓம் பரப்பிரஹ்மணேநம:

ஸ்ரீகுரவேநம:

# நானாசீவவாதக்கட்டளை வியாக்கியானம்

## ௨. அத்தியாரோப நிரூபகம்.

### அவதாரிகை.

பூர்வநிரூபகத்தில் விளக்கிய நித்தமாகிய சுத்தவிலக்கணங்களையுடைய பரப்பிரஹ்மத்தில் பிரகிருதிமுதற்றூலசரீரமீறாகிய தத்துவங்களின் றோற்றமாகிய அத்தியாரோபக்கிரமத்தை நிரூபிக்கின்றார்:—

(நூல்-௫)

இந்த அகண்டபரிபூரண சச்சிதானந்த பிரஹ்மத்திற் சுத்தியில் ரஜதம்போல மூலப்பிரகிருதியென்னும் ஒரு சத்தியுண்டு. அந்தச் சத்தி விகிருத சத்துவ இராஜத தாமதமாகிய முக்குணசொரூபமாக விரிந்து தோன்றும்.

| (பதம்) | (பொருள்.) |
|---|---|
| இந்த அகண்ட | இப்போது பிரஹ்மவிலக்கண நிரூபகத்திற்கூறிய ஒன்றினாலுங் கண்டிக்கப்படாத. |
| [illegible] | |



வினா:—பிரஹ்மம் கண்டிக்கப்படாததென்றது எதனாலெனின். (1)

விடை:—உலோகாயிதமுதலிய புறச்சமயங்கள் வேதானுசாரமான கன்மகாண்டங்களினாலும், அக்கன்மகாண்டங்களும் உபாசனாகாண்டங்களினாலும், அவ்வுபாசனாகாண்டங்களும் ஞானகாண்டமாகிய உபநிடதங்களினாலும் கண்டிக்கப்படும். அவ்வுபநிடதங்களைக் கண்டித்தற்கு அவற்றினும் பிரபலப்பிரமாணங்களில்லாமையால் அவையே சகல பிரமாணங்கட்கு மேலாகிய வேதமுடிவாக விளங்குகின்றன. அங்ஙனம் விளங்காநின்ற உபநிடதங்களும் பிரஹ்மத்தை அகண்டம் பூரணம் சச்சிதானந்தமெனக் கீர்த்திக்கின்றமையினென அறிக,

| (பதம்) | (பொருள்.) |
|---|---|
| பரிபூரண | வியாபகமாக முற்றிலும் நிறைந்துள்ள. |

வினா:—பிரஹ்மத்தைப் பரிபூரணமென்றது எதனாலெனின். (2)

விடை:—தேசம், காலம், வஸ்துவாகிய [illegible] பரிச்சேதமுறாமல் வியாபகமாக நிறை[illegible] னென அறிக.

வினா:-பிரஹ்மம் தேசத்தாற் பரிச்சேதமுறாதென்றது எதனாலெனின். (3)

விடை:—ஒவ்வொரு பொருள்களும் ஒருதேசத்துள்ளனவாயும் ஒருதேசத்தில்லனவாயுமிருத்தலின் அவை தேசத்தாற்பரிச்சேத முள்ளனவாகும். அங்ஙனமின்றிப் பிரஹ்மம் சகல தேசங்களினும் இருக்கிறதிருக்கிறதென வியாபகசத்தாய் விளங்கிக்கொண்டிருத்தலின் பரிச்சேதமின்றிப் பரிபூரணமாம்.

வினா:—அற்றேல் பிரஹ்மம் தேசத்தால் மாத்திரம் பரிச்சேதரகிதமெனல் போதுமானதாயிருக்க அதனோடு காலத்தினாலும் பரிச்சேதரகிதமெனக் கூறியது எதனாலெனின். (4)

விடை:-தேசத்தால்மாத்திரம் பரிச்சேதரகிதமெனின் சகல தேசங்களினும் நிறைந்து வியாபகமாயிராநின்ற ஆகாயத்துக்கும்பூரணத்துவஞ் சித்திக்கும். அதனால் பிரஹ்மத்துக்கு அதிவியாப்திதோடம் வரும். அங்ஙனம் வராமல் அதனை நிராகரிக்கும் நிமித்தம் காலத்தினாலும் பரிச்சேதமி[illegible]றியதென அறிக.



வினா:—இங்ஙனங்கூறுவதால் பிரஹ்மத்துக்கு ஆகாயத்தால் அதிவியாப்திதோடமில்லை யென்பது எதனாலெனின் (5)

விடை:—ஆகாயம் சிருட்டிகாலத்திற்றோன்றிப் பிரளயகாலத்தில் நாசமுறுதலால் தேசத்தால் மாத்திரம் பரிச்சேதரகிதமாயுள்ளதேயன்றிக் காலத்தினாலும் பரிச்சேதமின்றியதன்றென அறிக.

வினா:—பிரஹ்மம் காலத்தினாலும் பரிச்சேதரகிதமென்பது எதனாலெனின் (6)

விடை:—ஒருகாலத்துள்ளனவும் மற்றொருகாலத்தில்லனவுமாகிய பொருள்கள் காலபரிச்சேதமுள்ளனவாகும். பிரஹ்மம் அங்ஙனமின்றி அநாதியாதலின் பூதகாலத்தினும் பௌஷியத்காலத்தினும் சத்துருபமாதநித்தியமாதலின் வர்த்தமானகாலத்தினும் விளங்கிக்கொண்டிருத்தலினென அறிக.

வினா:— அற்றேல் பிரஹ்மம் தேசகாலங்களால்மாத்திரம் பரிச்சேதரகிதமெனல் போதுமானதாயிருக்க, அவைகளோடு வஸ்துவினாலும் பரிச்சேதரகித[illegible]

விடை :—பிரஹ்மம் தேசகாலங்களால் மாத்திரம் பரிச்சேதரகிதமெனின் சாங்கிய மதஸ்தர்கள் ஜீவனை வியாபகமென ஒப்பித்தேசத்தினானும், அநாதி நித்தியமென ஒப்பிக் காலத்தினானும் பரிச்சேதரகிதமெனக் கூறுகின்றமையால் ஜீவனுக்குப் பரிபூரணத்துவமும் அதனால் பிரஹ்மத்துக்கு அதிவியாப்திதோடமும் வரும். இஃதன்றிக்காலம், தேசத்தினானும் தன்னானும் பரிச்சேதமற்றதானமையால் காலத்துக்குப் பூரணத்துவமும் அதனால் பிரஹ்மத்துக்கு அதிவியாப்திதோடமும் வரும். ஆதலால் சாங்கியமதானுசாரமாகச் சீவனுக்கும் காலத்திற்கும் வரும் பூரணத்துவத்தை நிராகரிக்குநிமித்தம் வஸ்துவினா[illegible] பரிச்சேதமின்மை கூறியது என அறிக.

வினா :—தேசகாலங்களோடு வஸ்துவினானும் பரிச்சேதரகிதமென்பதால் ஜீவனைப்பற்றியும் காலத்தைப்பற்றியும் பிரஹ்மத்துக் கதிவியாப்திதோடமில்லையென்பது எதனாலெனின். (8)

விடை :—சாங்கியர்கள் ஜீவர்களைத் தேசத்தினானும் காலத்தினானும் பரிச்சேதரகிதர்களெனக் கூறினும், ஜீவர் க[illegible]ளென ஒப்பியிருத்தலால் வஸ்துவினானும் [illegible]சேதமுள்ளார்களென்றே கூறுகின



றனர். இஃதன்றிக்காலம் ஓர்வஸ்துவாக இருப்பதுபோல ஆகாய முதலிய பலவஸ்துக்கள் காலத்துக்கு அந்நியமாக இருத்தலால் காலம் ஆகாயமுதலிய வஸ்துக்களால் பரிச்சேதமுள்ளதேயாகின்றது. ஆதலினென அறிக.

வினா :—பிரஹ்மம் வஸ்துவினானும் பரிச்சேதமுறாதென்றது எதனாலெனின். (9)

விடை :—மண்கடகலசாதிகளினும் பொன் கடகமகுடாதிகளினும் வியாபித்து அவ்வவ்வாகாரமாயிருப்பதுபோல, பிரஹ்மம் தன்னிற் கற்பிதமாகிய சேதனாசேதன வஸ்துக்களனைத்தினும் வியாபித்துச் சர்வாத்மகமாயிருத்தலினென அறிக.

வினா :—வஸ்துக்கள் ஒன்றற்கொன்று பேததருமங்களையுடையனவாதலின் பிரஹ்மமும் பேததருமங்களையுடைத் தன்றோ சர்வாத்மகமாயிருக்கவேண்டும். அற்றேல் பிரஹ்மம் விகாரப்பொருளாகுமே யெனின். (10)

விடை :—மண்ணும் பொன்னும் முறையே பேததருமங்களையுடைய கடகலசாதிகளினும் கடகமகுடாதிகளினும் வியாபித்து அவ்வவ்வாகாரமாயிருக்கினும் தத்தந்த[illegible]ருமங்கள் வேறுபட்டு விகாரப்பொருள்ச[illegible]ல பிரஹ்மம் பேததருமங்களையுடை[illegible]

களில் வியாபித்துச் சர்வாத்மகமாயிருக்கினும் அஸ்திபா
திப்பிரிய லக்ஷணங்கள் வேறுபட்டு விகாரப்பொருள்களா
காதென அறிக.

வினா:—மண்ணும் பொன்னும் முறையே கடகலசாதி
களினும் கடகமகுடாதிகளினும் வியாபித்து விகாரப்பொ
ருள்களாகாதனவாயிருக்கினும் அவைகளில் ஒன்றற்கும்
மற்றொன்றற்குமிடையில் இல்லாமல் கண்டப்பொருள்களா
வதுபோலப் பிரஹ்மமும் பேததருமங்களையுடைய சேதன
சேதன வஸ்துக்களில் வியாபித்து விகாரப்பொருளாகாதி
ருக்கினும் அவ்வஸ்துக்களில் ஒன்றற்கும் மற்றொன்றற்குமி
டையில் இல்லாமல் கண்டப்பொருளேயாம். ஆதலின் பிரஹ்
மம் பூரணமென்பது எங்ஙனம் பொருந்துமெனின். (11)

விடை:—மண்பொன்னுபமானம் பிரஹ்மம் விகாரப்
பொருளல்லவென்பதற்கு மாத்திரங்கூறியதேயன்றி பூரண
மென்பதற்குக் கூறியதன்று. அற்றன்று; உவமேய இலக்க
ணமுற்றிலும் பொருந்தியது உவமானமாகுமெனின், உவமா
யமென்னும் பேதமும் அதுபற்றிய விவகாரமு மிருக்கமாட்
டாது. அங்ஙனமின்றி அநேகமாகச் சாத்திரங்களில் இருக்
கின் [illegible] வமேயத்துக்கு எவ்வுவமானமும் [illegible]
[illegible]



எங்ஙமெனின் ஆவரம்பூப்போற் பொன்னிருக்கு மென்றால்
ஆவரம்பூ பொன்னின் நிறத்துக்குமாத்திரம் உவமானமா
கிறதே யன்றி. உருகல் நீளல் இருகல் ஒளிர்தல்களுக்கு
உவமானமாகிறதில்லை. ஆதலால் சடமாகிற ஆவரம்பூ
வுவமானம் சமசத்தாய்ச் சடமாயுள்ள பொன்னிற்கே முற்றி
லும் பொருந்தாதபோது சடமாயுள்ள மண் பொன்னுவமா
னம் விஷமசத்தாய்ச் சித்தாயுள்ளபிரஹ்மத்துக்கு எங்ஙனம்
முற்றிலும் பொருந்தும்? பொருந்தாது. இஃதன்றி மண்
ணும் பொன்னும் கண்டப்பொருள்களானமையால் தத்தம்
காரியங்களில் ஒன்றற்கும் மற்றொன்றற்குமிடையில் இல்
லாதனவாய்க் கண்டப்பொருள்களேயாம். பிரஹ்மம் அகண்
டப்பொருளானமையால் ஆகாயம் நான்கு பூதங்களிலும்
வியாபித்திருப்பதுமன்றி அவைகளினிடையினுமிருப்பது
போலச் சேதனசேதன வஸ்துக்களினும் அவைகளுக்கி
டையிலுள்ள சூனியங்களினும் இருக்கிறதிருக்கிறதென வி
ளங்குதலின் பூரணமேயாகும். அல்லது ஜீவர்களும் ஈசுவ
ரனும் பஞ்சபூதபௌதிகங்களும் பிரஹ்மத்திற்பேதமின்றி
அபேதமாயிருத்தலிற் பூரணமெனினும் அல்லது சருவத்தி
லும் பூரித்திருத்தலால் பூரணமெனினும் அமையுமென
அறிக.

வினா:—பிரஹ்மம் சருவத்திலும் [illegible]

விடை:—கடம் சலத்தினுற் பூரிக்கப்படுவதுபோல அன்னமயகோசம் பிராணமயகோசத்தினுலும் அது மனோமயகோசத்தினுனும் அது விஞ்ஞானமயகோசத்தினுனும் அது ஆனந்தமயகோசத்தினுனும் அது சீவாத்மாவினுனும் பூரிக்கப்படும். இங்ஙனம் பூரிக்கப்படுவதாகிய பஞ்சகோசங்களால் பஞ்சபூதங்களும் இவைகளால் பூரிக்கப்பட்டுள்ள அண்டபஹிரண்டங்களெல்லாவற்றினும் பூரித்திருப்பதாகிய மாயாவிசிட்டரினும் பிரஹ்மம் பூரித்திருப்பதுமன்றித் தான் ஒன்றினுலும் பூரிக்கப்படாத வியாபகமாயிருக்கிறதென அறிக.

பிரஹ்மம் பூரணமென்பதற்குப் பிரமாணம்.

(ரிபுகீதை ௰எ-வது அத்தியாயம்)

கேவலமாம் பரப்பிரம மானதானே கெம்பீர பூர
ணமா யுள்ளதாமே

திரிவித பரிச்சேதமற்றது பூரணமென்பதற்குப் பிரமாணம்.

(வேதாந்தசூடாமணி)

பூரணத்து முருதனமூன்றுரும்.

உரைத்தவை தாம் யாவையெனின் ஒரு காலத்துண்டின் [illegible] னுங்காலபரிச்சேதமுடனே, தெரிக்கவொரு [illegible] த்திலையென் றேயபரிச்சேதமுமொ [illegible]



ன்று மாகாதென்னும், கருத்தில்வரு வஸ்துபரிச்சேதமுமா மெனவேகருதிடுக.

பூரித்திருப்பது பூரணமென்றதற்குப் பிரமாணம்

இலக்கணவிருத்தியிற் காண்க.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சச்சிதானந்தப் பிரஹ்மத்தினிடத்தில். | அஸ்திபாதிப்பிரிய இலக்கணங்களையுடைய பிரஹ்மத்திடமாக. |

வினு:—சத்திலக்கணம் யாதெனின். (13)

விடை:—பூத பௌஷியத் வர்த்தமானமென்னும் முக்காலத்தினு மிருப்பதென அறிக.

வினு:—சத்திலக்கணமுள்ளது பிரஹ்மமென்றது எதனுலெனின். (14)

விடை:—மந்தாந்தகார தோடத்தால் கயிற்றின்பால் சர்ப்பதண்டமாலையாதிகள் தோற்றற்குமுன், தோற்றுநின்ற காலமான மத்தி, தோற்றியழிவுற்றபின் என்னும் முக்காலத்தினும் கயிறு கெடாமல் அவைகட்கா [illegible] இருப்பதுபோல அவித்தியாமல தோடத்தா [illegible] சேதனுசேதனப் பிரபஞ்சமாகிய [illegible]

தோற்றத்குமுன், தோற்றுகின்ற காலமான மத்தி, தோற்றி யழிவுற்றபின் என்னும் முக்காலத்திலும் பிரஹ்மங்கெடாமல் அவைகட்காதாரமா யிருத்தலினென அறிக.

பிரமாணம்.

(எசுர்வேத வராகோபநிஷத்து உ-வது அத்தியாயம்)

இருக்கிறதென்பது சத்துருபமான பிரஹ்மமே.

வினு:—சித்திலக்கணமாவது யாதெனின். (15)

விடை:—சகலப் பிரபஞ்சங்களையும் விளக்கிவைப்பதென அறிக.

வினு:—பிரஹ்மம் சித்திலக்கண முடையதென்றது எதனுலெனின். (16)

விடை:—சூரியன் தீபாதி சாதனுந்தரங்களை யபேக்ஷியாமல் தானும் பிரகாசமாயிருந்துகொண்டு தன்னையடுத்த கடபடாதி வஸ்துக்களையும் விளங்கச்செய்வதுபோலப் பிரஹ்மஞ்சூரியாதியட்டப்பிரகாசங்களையும் அபேக்ஷியாமல் தான் சுயம்பிரகாசமாயிருந்துகொண்டு தன்னையடுத்திராநின்ற [illegible]ப்பிரபஞ்சங்களனைத்தையும் விளங்கச் செ[illegible] [illegible]சிவாய் விளங்குதலினென அறிக.



அறிவாயிருப்பது பிரஹ்மமென்பதற்குப் பிரமாணம்.

(இருக்குவேதம்)

பிரஞ்ஞானம் பிரஹ்மம்.

வினு:—சூரியாதியட்டப்பிரகாசங்களெவை யெனின்.

விடை:—சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், அக்கினி மின்னல், சீவன், புத்தி, இந்திரியங்களென அறிக.

வினு:—இவைகளில் பாஹியப்பிரகாசங்களெவை ஆந்தரப்பிரகாசங்களெவை யெனின். (18)

விடை:—முறையே முன்னர்க் கூறிய ஐந்தும் பாஹியப் பிரகாசங்கள் பின்னர்க்கூறிய மூன்றும் ஆந்தரப்பிரகாசங்களென அறிக.

வினு:—ஆநந்த இலக்கணம் யாதெனின். (19)

விடை:—சுகமாயிருந்துகொண்டு தன்னைச் சார்ந்தவைகட்குஞ் சுகஞ்செய்குவதென அறிக.

வினு:—பிரஹ்மம் ஆனந்த இலக்கணமுடையதென்றது எதனுலெனின் (20)

விடை:—அமிர்தமானது தான் மிர்தமின்[illegible]யிருந்துகொண்டு தன்னையடைந்தவர்களையும் மி[illegible]ச் செய்வதுபோலும் வெல்லம் மது[illegible]

ளையடைந்த, மா முதலிய பதார்த்தங்கட்கும் மதுரந்தருவதுபோலும் பிரஹ்மஞ் சுகசொரூபமாயிருந்துகொண்டு தன்னையடுத்த விருத்தியாதிகட்குஞ் சுகத்தைத் தருகின்றமையினென அறிக.

வினு :—வெல்லம், மா முதலியவைகட்கு மதுரந்தரும்போது வெல்லத்துக்குள்ள மதுரங் குறைவுபடுகிறது. அதுபோலப் பிரஹ்மம் விருத்தியாதிகட்குச் சுகந்தரும்போது பிரஹ்மத்துக்குள்ள சுகவிலக்கணங் குறைவுபடுமே யெனின். (21)

விடை :—வெல்லம் கண்டப்பொருளாதலானும், மா முதலியவைவெல்லத்தின் வியாபகத்துளிராமல் வேறுயிருப்பவையாதலானும், அவைகட்கு மதுரந்தருவதால் வெல்லத்துக்கு மதுரத்தன்மை குறைவுபடும். சூரியப்பிரகாச வியாபகத்துளிராநின்ற தருப்பணம் பிரகாசிக்கிறது. அதற்குப் பிரகாசத்தைக் கொடுத்தது சூரியனேயன்றி வேறன்று. தருப்பணத்துக்குப் பிரகாசங்கொடுத்தலால் சூரியப்பிரகாசங் குறைவுபடுகிறதில்லை. அதுபோல அகண்டமாயெங்கும் நிறைந்திராநின்ற பிரஹ்மவியாபகத்துள் கண்டமாகவும் அ[illegible]கவுமிராநின்ற விருத்தியாதிகட்குப் பிரஹ்மஞ் சுக[illegible]ல் பிரஹ்மத்துக்குள்ள சுகவில[illegible]



வினு :—சமுத்திர வியாபகத்துளிராநின்ற சகலசீவராசிகளும் சீதளத்தைப் பெற்று அநுபவிப்பதுபோல, ஆநந்த சொரூபமாகிய பிரஹ்மவியாபகத்துளிராநின்ற சகல விருத்திகளும் ஆநந்தத்தைப் பெற்றநுபவியாமல் சிற்சில விருத்திகள் மாத்திரம் அநுபவிப்பது எதனுலெனின். (22)

விடை :—சூரியப்பிரகாச வியாபகத்துளிராநின்ற தருப்பணங்களில் மலினமாயுள்ளவைகள் சூரியன்பிரதிபிம்பிக்க யோக்கியதையில்லாதனவாயும் மலினமின்றிச் சுத்தமாயுள்ளவைகள் பிரதிபிம்பித்தற்கு யோக்கியதையுள்ளனவாயுமிருப்பதுபோல, ஆநந்த சொரூபமாகிய பிரஹ்மவியாபகத்துளிராநின்ற விருத்திகளில் மலமாதியதோடங்களையுடையவைகள் ஆநந்தம் பிரதிவிம்பித்தற்கு யோக்கியதையில்லாதனவாயும், மலமாதியதோடங்களின்றிச் சுத்தசத்துவப் பிரதானமாயுள்ளவைகள் ஆநந்தம் பிரதிபிம்பிக்கயோக்கியதையுள்ளனவாயுமிருத்தலினென அறிக.

| (பதம்.) | (பொருள்,) |
| --- | --- |
| சுத்தியில் ரசிதம்போல் மூலப்பிரகிருதியென்னும் ஒரு சத்தியுண்டு. | இப்பியில் வெள்ளிபோலக்காரணப்பிரகிருதியென்று சொல்லப்பட்ட ஓர்[illegible] |

[illegible]

விடை:—அநாதிகற்பித அநிர்வாச்சிய திரிகுண சாமியாவஸ்தாரூபமாயுள்ளதென அறிக.

வினு:—பிரகிருதியை அநாதியென்றது எதனுலெனின். (24)

விடை:—ஓர்காலத்தில்லாதிருந்து மற்றோர்காலத்துண்டாகிய தல்லாமையினென அறிக.

வினு:—பிரகிருதியைக் கற்பிதமென்றது எதனுலெனின். (25)

விடை:—சுத்திரசதம்போலப் பொருளள்ளாததாயிருந்து பொருள்போற் பொய்யாகத் தோற்றுகின்றமையினென அறிக.

வினு:—பிரகிருதியை அநிர்வாச்சியமென்றது எதனுலெனின். (26)

விடை:—சத்து அசத்து முதலிய இலக்கணங்களில் இன்ன இலக்கணமுடையதென வசனித்தற்குக் கூடாமையினென அறிக.



விடை:—வெண்மை, சிவப்பு, கறுப்பாகிய மூன்று நூல்களையுஞ் சேர்த்துத் திரிக்கப்பட்ட கயிறுபோல் சத்துவ இராசத தாமதமென்னும் முக்குணங்களுஞ் சேர்ந்து சமமாக வுள்ளதானமையினென அறிக.

(பிரஹ்மத்தில் பிரகிருதியுண்டென்பதற்குப் பிரமாணம்.)
சுக்கிலயசுர்வேதம் பைங்களோபநிஷத் க-வது அத்தியாயம்.

அதனிடத்தில் (பிரஹ்மத்தினிடத்தில்) மருபூமியிற் சலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையிற் புருடன், ஸ்படிகத்தில் வருணமுதலியவைபோல வெளுப்பு, சிவப்பு, கருப்பு என்னும் குணமயமானதும், வாக்குக்கெட்டாததுமாகிய (மித்தையாகிய) மூலப்பிரகிருதி யிருந்தது.

வினு:—பிரஹ்மத்திலுள்ளதாக முற்கூறிய பரையென்னும் சத்தியும் பிற்சொல்லிய பிரகிருதியென்னும் சத்தியும் ஒருதன்மையனவா அல்லது வெவ்வேறு தன்மையனவா வெனின். (28)

விடை:—பிரஹ்மத்துக்குப் பரைவேறின்றிய அபின்னுசத்தியாகவும் பிரகிருதி வேறாகிய பின்னுசத்தியாகவுமிருத்தலின் ஒருதன்மையன அல்லவென அறிக.

வினு:—பிரஹ்மவியாபகத்துளிராநின்ற [illegible] சத்திகளில் பரையை அபின்னுசத்தி [illegible]

விடை:—பரை பிரஹ்மத்தைப் பின்னபின்னமாகத் தோற்றுவிக்காமல் ஏகமாகவே யுள்ளபடி தோற்றுவிப்பதாகவும் பிரஹ்மத்தின் அபேதப்பிரகாசமாகிய சிற்சத்தியாகவும் இருப்பதுமன்றி ஒன்றற்கொன்று பின்னப்படாத அபின்னமாகிய முக்குண சொரூபமாகவு மிருத்தலின் அதனை அபின்னசத்தியென்றும் பிரகிருதிபிரஹ்மத்தைப் பின்னபின்னமாகிய ஜகஜீவபரமாகத் தோற்றுவிப்பதாகவும் பிரஹ்மப்பிரகாசத்துக்குப் பேதமாயுள்ள அப்பிரகாசமாகிய சடசத்தியாகவுமிருப்பதுமன்றி ஒன்றற்கொன்று பின்னபின்னமாகவுள்ள முக்குண சொரூபமாகவுமிருத்தலின் அதனைப் பின்னசத்தியெனவுங் கூறியதென அறிக.

(பின்னசத்தியபின்னசத்தியெனுமிரண்டுமுண்டென்பதற்குப் பிரமாணம்.)

வைராக்கிய தீபம்.

பின்னைய பினையாம் திரைகள் வீசிடுமோர் பிரமவேலை பிலினிப்படிவாம்.

மெய்ம்மொழி.



வினா :—இப்பின்னசத்தியை மூலப்பிரகிருதியென்றதென்னையெனின் (30)

விடை :-மூலமென்பது காரணம். (பிரகிருதியென்பது ஆதாரம் அல்லது இயல்பு) இவைகளில் விருக்ஷத்தோன்றற்கு வித்துப்போல ஜகஜீவபரங்கள் தோன்றற்குக் காரணமாயிருத்தல்பற்றி மூலநாமமும், சுவர்ணரேணுக்களடங்கியிருத்தற்கு மெழுகுண்டைபோல மகாப்பிரளயத்தில் ஜகஜீவபரங்களடங்கியிருத்தற்கு ஆதாரமாயிருப்பதுபற்றி அல்லது நாமரூபப்பிரஞ்சமாகப் பரிணமித்தலை யியல்பாகவே யுடையதாயிருத்தல்பற்றிப் பிரகிருதிநாமமும் சேர்ந்தமையால் மூலப்பிரகிருதியென்றதாம். இதுநிற்க. ப்ர என்பது சத்துவம்; க்ரு என்பது இராசதம்; தி யென்பது தாமதம்; சத்துவ இராஜத குணசகிததாமதகுணப்பிரதான சொரூபமானமையால் பிரகிருதியென்னும் நாமம் வந்ததெனினும் அமையுமென அறிக.

வினா :—பிரஹ்மசத்திகள் அனந்தமெனச் சாத்திரங்கள் கூறுநிற்க இச்சாத்திரம் பிரஹ்மத்திலொரு சத்தியுண்டென அளவுபடுத்திக் கூறியதென்னையெனின். (31)

விடை :—தளிர், இலை, மலர், காய், கனி, கிளை, மாமா

திய நால்வித நாமரூபபேத விசித்திரசத்திகளை

சத்திகளையும் பிரகிருதியிலடக்கி யொருசத்தியாகக் கூறிற்றென அறிக.

வினா :—மூலப்பிரகிருதியில் சகல சத்திகளும் அடக்கமென்றால் முற்சொல்லிய பரையென்னும் சத்தியும் அடங்கியதாமோவெனின். (32)

விடை :—பரையென்னும் சத்தி பிரஹ்மத்தின் சச்சிதானந்த இலக்கணங்களை விளங்கச்செய்து பேதமின்றித்தாகாரமாகப் பிரகாசிக்குஞ் சிற்சத்தியாதலால் சச்சிதானந்தப் பிரஹ்மம் எவ்வளவு வியாபகமோ அவ்வளவு வியாபகமுள்ளதாகும். ஆதலால் அது அப்பிரகாச பரிச்சின்னசடசத்தியாகிய மூலப்பிரகிருதியி லடங்காது. அற்றன்று; அடங்குமெனின், பிரஹ்மமுமடங்கிப் பரிச்சின்னப்பொருளாயிருக்கிறதெனல்வேண்டும். அற்றேல் பிரஹ்மத்தை சச்சிதானந்த பரிபூரணமெனக் கீர்த்திக்கும் சுருதியாதிகட்கு விரோதமாமென அறிக.

வினா :—பிரஹ்மத்தில் பரையாகிய அபின்னசத்தி பிரகிருதியாகிய பின்னசத்தியென்னுமிரண்டு சத்திகளுமிருத்தற்கு அக்கினியிற் சூடு அல்லது சுத்திரசிதம் என ஒருபமானமாத்திரங் கூறாமல் அபின்னசத்தியிருத்தற்கு அக்கினியிற் [illegible]லென்றும் பின்னசத்தியிருத்தற்குச் சுத்தியில் ரசிதம் [illegible]வெவ்வேறுபமானங் கூறியது எதனாலெ[illegible]ன்று பிற[illegible] (33)



விடை :—அக்கினியிலுள்ள உஷ்ணசத்தி அக்கினியை மறைவுசெய்யாமலும் அக்கினிக்குப் பின்னமாகத் தோற்றாமலும் அபின்னமாகவேயிருப்பதுபோலப்பிரஹ்மத்திலுள்ள பரையென்னுஞ்சத்தி பிரஹ்மத்தை மறைக்காமலும் பிரஹ்மத்துக்கு வேறாகத்தோன்றாமலும் எப்போதும் அபேதமாகவே யிருத்தலால் அதற்கு அக்கினியிற் சூடுவமானமும் சுத்தியிலுள்ள ரசிதம் சுத்தியை மறைவுசெய்வதாயும் சுத்திக்குப் பேதமாகத் தோற்றுவதாயும் இருத்தல்போலப் பிரஹ்மத்திலுள்ள பிரகிருதி பிரஹ்மத்தை மறைவுபடுத்தி ஜகஜீவபரபேதமாகத் தோற்றுவிப்பதாயும் பிரஹ்மத்துக்கு வேறாகிய சடசத்தியாயு மிருப்பதுமன்றிப் பிரஹ்மத்தில் ஆரம்பபரிணாம, விருத்திபக்ஷமாகத் தோற்றாமல் விவர்த்தபக்ஷமாகவே தோற்றியதானமையினானும் பிரகிருதிக்குச் சுத்திரசிதஉவமானமும் கூறியதென அறிக.

வினா :—காரணத்தில் காரியத்தோற்றக்கிரமங்களாகிய ஆரம்பமாதி நான்கிற்குமுள்ள இலக்கணங்களும் உபமானங்களுமெவையெனின். (34)

விடை :—ஆரம்பத்துக்கு அவயவத்தோடு ச[illegible] பல காரணங்களால் அவயவசகிதமாகிய ஒரு [illegible] இலக்கணம்; பலதந்துக்களால் ஒரு [illegible]னம்; அல்லது காரணத்தினின்றுங்[illegible]

திற்குப்பின்ன~~[illegible]~~ மாயா திருத்தலும் காரணநட்டத்தாற் காரியமும் காரியநட்டத்தாற் காரணமும் நட்டமாகா திருத்தலும் இலக்கணம்; தாயினிடத்துப் பிள்ளையுண்டாதல் உபமானம் பரிணாமத்துக்கு உபாதான காரணத்துக்குச் சமான சுபாவமுடையதாயும் அன்னியதா சொரூபமாயுமிருத்தல், அல்லது காரணங்கெட்டுக் காரியமாதல், அதாவது பூர்வரூபத்தை விட்டு வேறுரூபத்தையடைதல் இலக்கணம். பால்தயிராதல் உபமானம். விருத்திக்கு அவயவசகிதமாகிய ஓர்காரணத்தால் அவயவசகிதமாகிய ஓர் காரியந்தோற்றலும், காரியநட்டமாகும்போது காரணமும் நட்டமாதலும் இலக்கணம்; வஸ்திரங் கூடாரமாதல் உபமானம். விவர்த்தத்துக்குக் காரணம் விகாரப்படாமல் காரியந்தோற்றலும், காரியநட்டத்தால் காரணம் நட்டமாகாதிருத்தலும் இலக்கணம்; சுத்திரசிதம் உபமானம் என அறிக.

வினா:—பிரஹ்மத்தில் பிரகிருதியாதி ஜகத்துத் தோன்றுதலை ஆரம்பபக்கமாகக்கூறில் விரோதமென்னை எனின் (35)

விடை:—நூல் வஸ்திரமாதல்போலப் பிரஹ்மம் பிரகிருதியாதி ஜகத்தாயிற்றெனின், பலநூல்கள் சேர்ந்து வஸ்திரமா[illegible] [illegible]வித்து பலபிரஹ்மங்கள் சேர்ந்து பிரகிருதியாதி



கள் வஸ்திரமாயினும் வஸ்திரம் நூல்களின் சொரூபமாகவே யிருப்பதுபோலப் பிரஹ்மம் பிரகிருதியாதி ஜகத்தாயினும் ஜகத்துப் பிரஹ்மசொரூபமாகவே யிருக்கவேண்டும். அங்ஙனமின்றென்பது பிரத்தியக்ஷம். அல்லது நூல்கள் தொழிலைப் பெற்று வஸ்திரமாவதுபோலப் பிரஹ்மமும் தொழிலைப் பெற்றுப் பிரகிருதியாதி ஜகத்தாயிற்றெனின், பிரஹ்மம் நிஷ்கிரியமென்னுஞ் சுருதிக்கு விரோதமாம். அல்லது தாயினிடத்துப் பிள்ளையுண்டாதல்போலப் பிரஹ்மத்தினிடத்தில் பிரகிருதியாதி ஜகத்துண்டாயிற்றெனின், தாய் பிள்ளையிருக்குமிடத்தி லில்லாததுபோலப் பிரஹ்மம் பிரகிருதியாதி ஜகத்திருக்குமிடத்திலில்லாமல் கண்டப்பொருளாகும். அங்ஙனமாயின் பிரஹ்மத்தை அகண்டம் பூரணமெனக் கீர்த்திக்குஞ் சுருதியாதிகளுக்கு விரோதமாமென அறிக.

வினா:—அல்லது பரிணாம பக்கமாகக் கூறில் விரோதமென்னையெனின். (36)

விடை:—பால் தயிராதல்போலப் பிரஹ்மமும் பிரகிருதியாதி ஜகத்தாகுமானால் பால் விகாரப்பட்டுத் தயிராதல்போலப் பிரஹ்மமும் விகாரப்பட்டுப் பிரகிருதி[illegible] [illegible] அங்ஙனமாயின் பிரஹ்[illegible]

வினு :—அல்லது விருத்திபக்கமாகக் கூறில் விரோத மென்னையெனின். (37)

விடை :—வஸ்திரங் கூடாரமாதல்போலப் பிரஹ்மமே பிரகிருதியாதி ஜகத்தாயிற்றெனின், கூடாரம் அக்கினியாதிக ளால் நஷ்டமாகும்போது வஸ்திரமும் நஷ்டமாவதுபோலப் பிரகிருதியாதி ஜகத்து பிரஹ்மாத்மஐக்கியஞானத்தால் நட்டமாகும்போது பிரஹ்மமும் நட்டமாகவேண்டும். அங் ஙனமாயின் பிரஹமம் நித்தியமெனக் கூறுஞ் சுருதியாதிகளு க்கு விரோதமாமென அறிக.

வினு :—விவர்த்தபக்கமே அவிரோதமென்றது எதனு லெனின். (38)

விடை :—சுருதியுத்தி அனுபவங்கட்கு விரோதமின்றி யிருத்தலினென அறிக.

வினு :-விவர்த்தபக்கம் சுருதியாதிகளுக்கு விரோதமின் றியதென்றது எதனுலெனின். (39)

விடை :—பிரஹ்மம் நித்தியம், பூரணம், நிருவிகார மெனச் சுருதியாதிகள் கூறுகின்றன. அவைகளுக்கொத்த படி, [illegible]கியிற்ருேற்ருநின்ற ரசதம் தோன்றல், திரிதல் [illegible]விகாரங்களை யுறும்போது சுத்தியும் அவ்வி[illegible]



திய விகாரங்களையுறும்போது பிரஹ்மமும் அவ்விகாரங்களை யுருமல் நிருவிகாரமா யிருக்கிறதென்னும் சுருதிக்கும் யுத்திக்கு மொத்தபடி ஆத்மசொரூபமாகிய நாமே நித்திய பூரண நிருவிகாரசொரூபமா யிருக்கிருேமென்னும் பிரஹ்ம வித்துக்களனுபவமும் ஒத்திருக்கின்றமையினென அறிக.

வினு :—விவர்த்தபக்கமே சித்தாந்தமாயின், ஆரம்ப பரிணும விருத்திபக்கங்களைச் சாத்திரங்கள் கூறியது மிகை யன்ருேவெனின். (40)

விடை:—புத்திதோஷத்தால் மயங்கியுள்ள சிற்சிலர்களை நோக்கிக் கூறியிருத்தலால் மிகையன்றென அறிக.

வினு :—ஆரம்பபக்கம் கூறியது எவர்களை நோக்கி யெனின். (41)

விடை :—உலகஞ் சத்துப்பொருள் உலகத்துக்குக் கார ணமாக வேறு பொருளின்றென்பார்களை நோக்கிப் பிள்ளைக் குத் தாயிருப்பதுபோல உலகத்துக்குக் காரணமாகப் பிரஹ் மமிருக்கிறதெனத் தெரிவித்தற்குத் தாய்பிள்ளையுவமானமா கிய ஆரம்பபக்கம் கூறிற்று ; கூறினுஞ் சித்தாந்தமன்றென அறிக.

விடை:—பிள்ளைக்குத் தாய் வேறுபட்டிருப்பதுபோல உலகத்துக்குப் பிரஹ்மம் வேறுபட்டு அபரிபூரணதோஷத்தையடையுமேயென ஆசங்கிப்பாரை நோக்கித் தாய்க்குப் பிள்ளை வேறுப்பட்டிருப்பதுபோல வேறுபட்டிராமல் பாலே தயிராயிருப்பதுபோலப் பிரஹ்மமேயுலகமாயிருக்கிறதெனத் தெரிவித்தற்குப் பால்தயிருவமானமாகிய பரிணாமபக்கங்கூறிற்று. கூறினும் அதுவும் சித்தாந்தமன்றென அறிக.

வினா:—அற்றேல் விருத்தி பக்கங் கூறியது எவர்களை நோக்கியெனின். (43)

விடை:—பால் தன் சுபாவக்கேடாகிய விகாரத்தையடைந்து தயிராயிருப்பதுபோலப் பிரஹ்மமும் தன் சுபாவக்கேடாகிய விகாரத்தையடைந்து உலகமாயிருக்கவேண்டும். அங்ஙனமாயின், பிரஹ்மம் விகாரப்பொருளாமேயென ஆசங்கிப்பாரை நோக்கி வஸ்திரம் தன் சுபாவக்கேடாகிய விகாரத்தையடையாமல் கூடாரமாயிருப்பதுபோலப் பிரஹ்மமும் தன் சுபாவக்கேடாகிய விகாரத்தையுறாமல் உலகமாயிருக்கிறதெனத் தெரிவித்தற்கு வஸ்திரகூடாரவுவமானமாகிய விருத்தி பக்கங் கூறிற்று. அதுவுஞ் சித்தாந்த மன்றென அறிக.

வினா:—அற்றேல் விவர்த்தபக்கங் கூறியது எவர்களை நோ[illegible]னின். (44)

[illegible] விகாரப்படாமல் [illegible]



மும் நாசமடைவதுபோல, உலகமும் பிரயளத்தில் நாசமடையும்போது பிரஹ்மமும் நாசமுற் றநித்தியப்பொருளாமேயென ஆசங்கிப்பாரை நோக்கி, காரியமாகிய சர்ப்பம் அல்லது இரசிதம் நாசமடையினும் காரணமாகிய கயிறு அல்லது சுத்தி நாசமடையாததுபோல காரியமாகிய உலகம் நாசமடையினும் காரணமாகிய பிரஹ்மம் நாசமடையாதெனத் தெரிவித்தற்குக் கயிற்றரவு சுத்திரசிதவுவமானமாகிய விவர்த்தபக்கங் கூறிற்று. இதுவே நிர்த்தோஷமாகிய சித்தாந்தமென அறிக.

வினா:—பிரகிருதிக்குப் பிரஹ்மத்தோடுள்ள சம்பந்தம் யாதெனின். (45)

விடை:—கற்பிதபேத வாஸ்தவஅபேதமாயுள்ள அநாதி * தாதான்மியசம்பந்தமென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| அந்தச்சத்தி | பிரஹ்மத்தில் அநாதிகற்பிதமாயுள்ளபிரகிருதியென்னும் அச்சத்தியானது |
| விகிர்தமாகிய | வெவ்வேறு தன்மையனவாகிய |
| சத்துவராஜஸ்தாமதமென்னும் | சாத்வீக, இராஜத, தாமதமென்னுபெயர்களையுடைய |
| முக்குணசொரூபமாக | திரிகுணவடிவமாக [illegible] |

வினா :—இம்முக்குணங்களும் வெவ்வேறு தன்மையன வென்றது எதனாலெனின். (46)

விடை :—சத்துவகுணம் ஈசுவராசிரயமாயும் ஈசுவரன் சருவஞ்ஞத்துவாதி குணசகிதசாயிருத்தற்குக் காரணமாகவும் இராஜதகுணம் ஜீவாசிரயமாயும் ஜீவர்கள் கிஞ்சிஞ்ஞத்துவாதி ஈனகுண அஞ்ஞராயிருத்தற்குக் காரணமாகவும் தாமதகுணம் மறைப்புக்கும் தநுகரணபுவனபோக வடிவங்கட்குங் காரணமாகவும் வேறுபட்டிருத்தலினாலென அறிக.

(நூல் ௬.)

அம்முக்குணங்களில் சத்துவகுணம் மாயை யென்றும் சருவஞ்ஞவுபாதி யென்றும், ஈசுரகாரணசரீரமென்றும் சொல்லப்படும். அம்மாயையில் நின்மலசலப்பிரதிபிம்பம்போலப் பிரஹ்மப்பிரதிபிம்பம் சுலக்ஷணமாகவுளது. அந்தப் பிரதிபிம்பசைதன்னியம் சருவஞ்ஞனாகிய ஈசுவரனென்று சொல்லப்படும்.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| அம்முக்குணங்களில் | முற்சொல்லப்பட்ட திரிகுணங்களில் |
| சத்துவகுணம் | நின்மலமாகிய சாத்வீககுணமானது |
| மாயையென்... | சொரூபமில்லதெனவும் |

... விகாரச் சொரூபமில்லதென்...



வினா :—மாயையென்னுஞ் சொல்லின் பொருளைவிசாரித்துப் பார்க்குமிடத்து. யா—யாதொன்றானது; மா—இல்லையோ, ஸா—அது மாயையெனப் பொருள்படுகின்றமையினானும் ஓர் பொருளாக நிலைபெறாமல் அநிர்வாச்சியமாயிருத்தலினானுமென அறிக.

(மாயை சொரூபமில்லதென்றதற்குப் பிரமாணம்)

(எசுர்வேதத்திற் சர்வசாரோபநிஷத்.)

எவள் வாஸ்தவத்திலில்லையோ அவள்தான் மாயை.

(பிரஹ்மகீதை சருவசாஸ்திரார்த்தமுரைத்த அத்தியாயம்)

இடையிலோர் மாயையுண்டென்றெண்ணுமேல் கடைய தேயாமவன் கற்றகல்வியே.

(பிரஹ்மகீதை ௯ அத்தியாயம்)

மாயையென்றொன்றுண்டாகமதிப்பது மனனமல்ல.

வினா :—மாயையை அநிர்வாச்சியமென்றது எதனாலெனின் (48)

விடை :—சத்து அசத்து, சதசத்து, சாவயவம், நிரவயவம், சாவயவநிரவயவம், பின்னம், அபின்னம், பி[illegible]பின்னமாகிய நவவிலக்கணங்களில் யாதேனு[illegible]

வினா:—மாயையை நவவிலக்கணங்களில் ஓரிலக்கணமு
டையதாகவேனும் வசனித்தற்குக் கூடாதென்றது ஏதனா
லெனின். (41)

விடை:—சத்தெனின் முக்காலத்தினுமுள்ளதாயிருத்
தல்வேண்டும். அங்ஙனமின்றிப் பிரஹ்மஞானத்தால் நாசமா
கின்றமையால் சத்துமல்ல. அசத்தெனின் வந்தியாசுதன்போ
ற்றோற்றமின்றி யிருக்கவேண்டும். அங்ஙனமின்றி நாமரூபப்
பிரபஞ்சமாகத்தோன்றுகின்றமையால் அசத்துமல்ல. சதசத்
தெனின், சத்து உள்ளது; அசத்து இல்லது; எதிர்மறையிலக்
கணமுடைய இவ்விரண்டும் ஒன்றாயிருக்குமெனல் பகலுமிர
வுமொன்றாயிருக்குமெனல்போல் விரோதமானமையின் சத
சத்துமல்ல. சாவயவமெனின் அவயவசகிதமாயிருக்கவேண்
டும். கந்தருவசைனியங்களைத் தோற்றுவிக்கும் இந்திரசாலிகன்
சத்திக்கும் தீபத்திற்பொறியை யுதிப்பிக்கும் தீபசத்திக்கும்
வடிவமில்லாமைபோலப் பிரஹ்மத்தினின்றும் பிரபஞ்சத்
தோன்றச் செய்யும் மாயாசத்திக்கு வடிவமின்மையால்
சாவயவமுமல்ல. நிரவயவமெனின் அவயவசகிதமாகத்தோற்
றாதிருக்கவேண்டும். அங்ஙனமின்றி அவயவசகிதப் பிரபஞ்ச
மாகத்தோற்றுகின்றமையால் நிரவயவமுமல்ல. சாவயவநிரவய
வ[illegible]னின். [illegible]றையிலக்கணமுடைய இரண்[illegible]



ரோதமானமையின் சாவயவநிரவயவமுமல்ல. பின்னமெனின்,
பிரஹ்மத்துக்கந்நியமாக இருக்கவேண்டும். அற்றேல் அத்துவி
தத்துக்கானிவரும். வரிலென்னையெனின், பிரஹ்மத்தை அத்
துவிதம் ஏகமெனக் கீர்த்திக்கும் சுருதியாதிகளுக்கு அப்பிர
மாணத்துவமும் அவைகளை வெளியிட்டருளிய ஈசுவரனுக்கு
அசத்தியவாதித்துவமும் வரும். இஃதன்றி அக்கினிக்கும் சித்
திரிகனுக்கும் அந்நியமாகப் பொறியையுதிப்பிக்கும் சத்திக்
கும் சித்திரிகசத்திக்கும் இருப்பில்லாததுபோலப் பிரஹ்மத்
துக் கன்னியமாக மாயாசத்திக் கிருப்பில்லாமையால் பின்
னமுமல்ல. அபின்னமெனின், வேப்பிலையுங் கசப்பும்போலப்
பிரஹ்மமும் மாயையும் ஒன்றாயிருக்கவேண்டும். அற்றேல்
உப்பினைச் சார்ந்த மாங்கனிக்குத் தன்றன்மைகெட்டு உப்
பின்றன்மை வாய்ந்ததுபோலப் பிரஹ்மத்துக்குச் சச்சிதா
னந்த இலக்கணங்கள் கெட்டு அசத்து சட துக்க இலக்கணங்க
ளும் மாயைக்கு அசத்துசடதுக்க இலக்கணங்கள் கெட்டுச்
சச்சிதானந்த இலக்கணங்களும் வரும். வரினென்னை
யெனின் பிரஹ்மத்தை மாயையெனவும் மாயையைப் பிரஹ்
மமெனவும் கூறவேண்டும். கூறினென்னையெனின் சச்சிதா
னந்த சொரூபமாயுள்ளது பிரஹ்மமெனவும் அசத்து சடதுக்
கமாயுள்ளது மாயையெனவுங் கூறுகின்ற சுருதி[illegible]கட்கு

அநேகநாமங்கள் கூறப்படுகின்றமையால் அபின்னமுமல்ல. பின்னுபின்னமெனின், எதிர்மறையிலக்கணமாகிய பேதமும் அபேதமும் ஒன்றாயிருக்கிறதெனல் தூரமும் சமீபமும் ஒன்றாயிருக்கிறதெனல்போல விரோதமின்மையின் பின்னுபின்னமுமல்ல. ஆதலினென அறிக.

(இதற்குப் பிரமாணம்.)

(எசுர்வேதத்திற் சர்வசாரோபநிஷத்து)

அந்த மாயையிருக்கிறவளுமல்ல; இல்லாதவளுமல்ல; அவ்விரண்டுங்கலந்தவளுமல்ல. வாக்குக்கெட்டாதவள்.

(மாபாரதம் உத்தரகீதை க. அத்தியாயம்)

இந்தக் காரண சரீரமென்கிற அவ்வியாகிருதம் சத்துமல்ல; அசத்துமல்ல; சதசத்துமல்ல; பின்னமுமல்ல; அபின்னமுமல்ல; பின்னுபின்னமுமல்ல; சாவயவமுமல்ல; நிரவயவமுமல்ல; சாவயவநிரவயவமுமல்ல.

(வேதாந்தசூடாமணி)

பின்னமோடசத்துச் சாவயமும் எதிர்மறையு மவை
பிரிந்து தம்மின் மன்னிபவுமொழிந்தநிர்வாச்சியமாகு நவவி
தமம் மாயையெய்தும்.

(கைவல்லிய நவநீதம்)

[illegible]னின். [illegible]ன்னதென் றுரைத்திடப் படாமையால் அவா
[illegible]ம் விக[illegible]
[illegible]ால் ந[illegible]



வினா:-சுருதியாதிகள் மாயையைச் சத்தாகவாயினும் அசத்தாகவாயினும் ஒப்பாவிடின் மற்றியாதாக ஒப்பிவிவகரிக்கின்றனவென்னின். (50)

விடை:—சதசத்விலக்ஷணபாவபதார்த்தமாக ஒப்பி விவகரிக்கின்றனவென அறிக.

வினா:—சகலபதார்த்தங்களும் இருக்கிறதென்னும் ஞானத்துக்கு விஷயமாயுள்ள சத்தும், இல்லையென்னும் ஞானத்திற்கு விஷயமாயுள்ள அசத்துமாய் இருவகைப்பதார்த்தங்களுளடங்கியவைகளாக இருக்கின்றனவேயன்றி யிவைகளுக்கன்னியமாய் மூன்றாவது பதார்த்தமாக ஒன்றேனுங் காணப்படாமையால் மாயையைச் சத்துக்கும் அசத்துக்கும் வேறாயுள்ள பதார்த்தமெனல் மயக்கமாமெனின் (51)

விடை:—பிரகிருதிமுதல் பூதபௌதிகங்களாகிய சகல பதார்த்தங்களும் விஷயமாகத் தோற்றுந்தன்மையனவும் அழியுந்தன்மையனவுமாக இருத்தலின், அவைகள் முக்காலத்தினுமுளதாகிய சத்துக்கும் முக்காலத்தினுமிலதாகிய அசத்துக்கும் வேறுபட்டு மூன்றாவது பதார்த்தங்களாகவே இருக்க மூன்றாவது பதார்த்தமொன்றேனுங் காணப்ப[illegible]வில்லையென்பதே சமுத்திரமத்தியில் வீழ்ந்துள்ள[illegible] திவலையேனு மில்லையென்பதுபோல [illegible]

வினா:—சத்துக்கு விலக்ஷணமாயுள்ளது அசத்தாகும்;
அதனை அசத்துக்கு விலக்ஷணமென்பதும், அசத்துக்கு வில
க்ஷணமாயுள்ளது சத்தாகும்; அதனைச் சத்துக்கு விலக்ஷண
மென்பதும் விரோதமன்றோ வெனின். (52)

விடை:—முக்காலத்தினும் பாதமாகாதிருப்பது சத்
தெனப்படும்; சத்துக்கு விலக்ஷணமென்றமையால் இரச்சு
சர்ப்பம்போலப் பாதமாகத்தக்கதெனவும், வந்திசுதன்போல
மூக்காலத்தினும் சொரூபமில்லது அசத்தெனப்படும்; அசத்
துக்கு விலக்ஷணமென்றமையால் இரச்சுசர்ப்பம்போல் சொ
ரூபமுள்ளதெனவும் பொருள்படுகின்றமையால் பிரஹ்மஞா
னத்தால் பாதமாகத்தக்கதாயும், சொரூபமுள்ளதாயு மிரா
நின்ற மாயையைச் சத்துக்கும் அசத்துக்கும் விலக்ஷணமெ
ன்பது விரோதமல்லவென அறிக.

| (பதம்.) | பொருள்.) |
|---|---|
| சருவஞ்ஞுவுபாதியெனவும் | எல்லாமறிதலாதிய சட்குணங்கள் தோன்றுதற்கேதுவாயுதெனவும். |

வினா:—சட்குணங்களெவை யெனின். (53)

விடை:—சருவஞ்ஞத்துவம், சருவேசுரத்துவம், சரு
...வம், சருவகாரணத்துவம், சருவநியந்திருத்



வினா:—சருவஞ்ஞத்துவம் யாதெனின். (54)

விடை:—ஜீவர்கள் மன மொழி மெய்களாற்செய்யப்
படும் நல்வினை தீவினையாதிகளனைத்தையும் ஏககாலத்திலறி
யுந்தன்மையென அறிக.

வினா:—சருவேசுரத்துவம் யாதெனின். (55)

விடை:—இயற்கைஞானம், பேரருள், முடிவிலாற்றல்,
வரம்பிலின்பம், வரம்பில் காட்சி, முதலின்மை, அணிமா,
மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம்,
வசித்துவங்களோடு தூயவுடம்பு, மக்கள், பொன், மணி,
அடிமை, வாகனங்களாதிய சகல ஐசுவரியங்களு முளவாந்
தன்மையென அறிக.

வினா:—சருவாந்தரியாமித்துவம் யாதெனின். (56)

விடை:—ஜீவர்களுடைய அந்தக்கரணங்களினுள்ளி
ருந்து அவரவர்கள் கன்மதாரதம்மியத்துக்குத் தக்கதாகச்
சுகதுக்காதி போகங்களையனுபவிக்கும்படி சூத்திரதாரி
பாவையை யசைப்பதுபோல அசைப்பிக்கும்பிரேரகத்துவ
மென அறிக.

வினா:—சருவகாரணத்துவம் யாதெனின். (57)

விடை:—சிருட்டி திதி சங்காரம்...

உபாதானம் நிமித்தமென்னும் இரண்டிற்குங் காரணத்தன்மையென அறிக.

வினா:—உபாதானகாரணம் யாதெனின். (58)

விடை:—எது காரியசொரூபத்திற் பிரவேசித்து அதனோடொற்றுமையுடையதாக இருக்கிறதோ, எதையின்றிக் காரியந் திதிபெறாதோ, எது காரியத்தின் உற்பத்தி திதி லயமாகிய மூன்றற்குங் காரணமோ அதுவென அறிக.

வினா:—இஃதெதுபோலுமெனின். (59)

விடை:—மண் காரியமாகிய கடத்திற் பிரவேசித்து அதனோடொற்றுமை யுடையதாயிருத்தலும், மண்ணையின்றிக் காரியமான கடந் திதிபெறாதிருத்தலும் மண்ணே கடத்தின் உற்பத்தி திதி லயமாகிய மூன்றிற்குங் காரணமாயிருத்தலும் போலுமென அறிக.

வினா:—நிமித்தகாரணம் யாதெனின். (60)

விடை:-எது காரியசொரூபத்திற் பிரவேசியாமல் வேறாயிருந்து காரியங்களை யுற்பத்திசெய்கிறதோ, எதன் நாசத்தா[illegible]ரியங் கெடுதியடைகிறதில்லையோ, எது காரிய உற்பத்[illegible]ரணமோ அதுவென அறிக.

[illegible]

[illegible]ல் [illegible] போலுமெனின், (61)



விடை:—குலாலன் கடசொரூபத்திற் பிரவேசியாமல் வேறாயிருந்து கடத்தை யுற்பத்திசெய்தலும், குலாலநாசத்தால் காரியகடங் கெடாதிருத்தலும், குலாலன் கடத்தின் உற்பத்திக்குமாத்திரங் காரணமாயிருத்தலும் போலுமென அறிக.

வினா:—சருவநியந்திருத்துவம் யாதெனின். (62)

விடை:—சமுத்திரம் அணைகடவாதிருக்கவும், சோமன் சூரியன் கிரகம் நக்ஷத்திரம் வாடை தென்றல்முதலியன கிரமந் தவராது செல்லவும் நியமிக்குந்தன்மையென அறிக.

வினா:—சருவசத்தித்துவம் யாதெனின், (63)

விடை:—இச்சா ஞானக் கிரியைகள்முதலிய சருவசத்திகளையுடைய தன்மைகளென அறிக.

| (பதம்) | (பொருள்.) |
| --- | --- |
| ஈசுவர காரணசரீரமென்றுஞ் சொல்லப்படும். | ஈசுவரனுடைய மூலசரீரமென்றுங் கூறப்படும். |

வினா:—மாயையை ஈசுவரகாரணசரீரமென்றது எதனாலெனின். (64)

விடை:—ஈசுவரன் பிரதிபிம்பரூபமா[illegible]கும் ஈசுவரன் தூலசூட்சுமமாகிய வி[illegible]

சரீரங்கள் தோன்றியொடுங்கற்கும் காரணமாயிருத்தலினென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| அம்மாயையில், நின்மலசலப்பிரதிவிம்பம்போலப் பிரஹ்மப்பிரதிவிம்பம் சுலக்ஷணமாகவுளது. | அத்தன்மையாகிய மாயையினிடத்து, தெளிந்த சலத்திலுள்ள சூரியாதிப் பிரதிவிம்பம்போல, பிரஹ்மத்தின் பிரதிவிம்பமானது சுயலக்ஷணமாகவிளங்குவதாயிருக்கிறது. |

வினா :—ரூபசகிதமாகிய சூரியப்பிரதிவிம்பம் சலத்திற்றோன்றுநிற்குமென்பது பொருந்தும். பிரஹ்மம் ரூபரகிதமானமையால் அதன் பிரதிவிம்பம் மாயையிற்றோன்றுநிற்குமென்பது பொருந்தாதெனின். (65)

விடை :—ரூபரகிதமாகிய ஆகாயப்பிரதிவிம்பம் சலத்திற்றோன்றுநிற்பதுபோல ரூபரகிதமாகிய பிரஹ்மப்பிரதிவிம்பமும் மாயையிற்றோன்றுநிற்குமென்பது பொருந்துமென அறிக.

வினா :—சலத்தில் மேகநக்ஷத்திராதிகளின் பிரதிவிம்பங்கள் தோன்றுகின்றனவேயன்றி ஆகாயப்பிரதிவிம்பந் தோன்றவில்[illegible]யெனின். (66)



றுகின்றமையால் அதற்கு அவகாசங்கொடுத்தது பிரதிவிம்ப ஆகாயமேயன்றி கடமும் சலமுமன்றாம். அற்றன்று; கடமும் சலமுமே யிடங்கொடுத்ததெனின், பிரதிவிம்பத்தைப் போல விம்பமாகிய மனுடனுள்ளேயிருத்தற்குக் கடமாயினும் அல்லது கடத்தின்அளவாகிய சலமாயினும் இடந்தரல்வேண்டும்; தரமாட்டாவென்பது யாவர்க்குந் தெரிந்ததேயாம். இஃதன்றி ரூபரகிதமானவை பிரதிவிம்பிக்கிறதில்லை என்னும் நியமமுமில்லை, எதனாலெனின் சத்தம் ரூபரகிதமாயுள்ளது. அதன் பிரதித்தொனியானது சத்தத்தின் பிரதிவிம்பமேயாகும். ஆதலின் மாயையிற் பிரஹ்மப்பிரதிவிம்பந் தோன்றுநிற்குமென்பதற் கையமின்றென அறிக.

வினா:—அங்ஙனமாயினும், பிரஹ்மம் கண்டப்பொருளானால் அதற்கு வேறாக மாயையும் அதிற் பிரஹ்மப்பிரதிவிம்பமும் உளதென்பது பொருந்தும். அங்ஙனமின்றிப் பிரஹ்மம் அகண்டமெனச் சுருதிகள் கூறுகின்றமையால் அதற்கு வேறாக மாயையும் அதிற் பிரஹ்மப்பிரதிவிம்பமும் உளதென்பது பொருந்தாதெனின். (67)

விடை:—ஆகாயத்தில் அதன் காரியமாகிய வாயுவாதிய பூதங்களிருப்பினும் ஆகாயங் கண்டப்படாமலும் வாயுவாதிய பூதங்களிலொன்றாகிய அப்புபூதத்தில் [illegible]

கிய மாயையிருப்பதால் பிரஷ்மங் கண்டப்படாமலும் மாயையிற் பிரதிபிம்பிக்கப்பட்டுமிருக்கிற தென்பது பொருள் ளுமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அந்தப் பிரதிவிம்ப | பிரதிபிம்ப ரூபமாக விளாங்க கின்ற |
| சைதன்னியம் | அச்சைதன்னியமானது |
| சருவஞ்ஞனாகிய | எல்லாமறிந்தவனாகிய |
| ஈசுவரனென்று | ஈசுவரனென்னும் |
| சொல்லப்படும் | பெயரால் கூறப்படும். |

வினா :—ஈசுவரனுக்குச் சொரூபம் யாதெனின். (68)

விடை :—ஆசிரயமாயுள்ள மாயை அதிற் சிற்பிரதிபிம்பமாயுள்ள ஆபாசம் அவற்றிற் கதிட்டானமாயுள்ள பிரஷ்மும் ஆகிய மூன்றுமென அறிக.

வினா :—ஈசுவரனது தர்மங்களெவை யெனின். (69)

விடை :—சருவசத்தித்துவம், சருவஞ்ஞத்துவம், வியாபகத்துவம், ஏகத்துவம், சுதந்திரத்துவம், சாமர்த்தியத்துவம், பரோக்ஷத்துவம், மாயாவுபாதியுடைமையாகிய எட்டுமென [illegible]

[illegible] விட்கூக்குத் தேசம் யா[illegible]



விடை :—அவ்வியாகிருதமாகியமாயையென அறிக.

வினா :—ஈசுவரனுக்குக் காலங்களெவை யெனின். (71)

விடை :—சிருஷ்டிகாலம், திதிகாலம், பிரளயகாலமாகிய மூன்றுமென அறிக.

வினா :—ஈசுரகாரியங்களெவை யெனின். (72

விடை :—சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகமாகிய ஐந்துமென அறிக.

வினா :—ஈசுவரசிருட்டியாதிய காரியங்கட்குச் சாமக்கிரிகளெவை யெனின். (73)

விடை :—சத்துவ இராசத தாமதங்களென்னும் முக்குணங்களென அறிக.

மாயையிலுள்ள பிரதிவிம்பம் ஈசுவரனென்பதற்குப் பிரமாணம்.

(சுக்கில யசுர்வேத பைங்களோபநிஷத்)

அதில் (மூலப்பிரகிருதியில்) பிரதிபலித்த தெதுவோ அது ஈசுரசைதன்னியமாயிருக்கிறது. அவன் (அவ்வீசுவரன்) மாயையைச் சுவாதீனமாகவுடையவனும் சருவஞ்ஞனும் சிருட்டி திதி லயங்கட்கு ஆதிகர்த்தா[illegible]

(கைவல்யநவநீதம்.)

இக்குணங்களிலே விண்போன்றிருக்குஞ் சிற்சாயைதோன்றும், முக்குணங்களினுக்தாய்தா முதற்குண மாயையாகும், அக்குணப் பிரஹ்மச்சாயை அந்திரியாமி மாயை, எக்குணங்களும் பற்றுதோனிமித்தகாரணனுமீசன்.

(நூல் எ.)

அச்சாத்திகுணமாயை சாத்திகத்தில் சாத்திகம், சாத்திகத்திலிராசதம், சாத்திகத்திற்றாமதமென்னும் முக்குணசொரூபமாயிருக்கும். அவற்றுள், சாத்திகத்திற் சாத்திகம் பிரதானமாகும்போது அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன் ஜகத்தைபிரட்சிக்கின்றமையால் விஷ்ணுவென்றும், சாத்திகத்திலிராசதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன் ஜகத்தைச் சிருஷ்டிக்கின்றமையால் பிரஹ்மனென்றும், சாத்திகத்திற்றாமதம் பிரதானமாகும்போது அதிற்பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன் ஜகத்தை யுபசம்மாரஞ்செய்கின்றமையால் உருத்திரனென்றுஞ் சொல்லப்படுவென். இங்ஙனம் சத்துவகுண கற்பனை கூறப்பட்டது.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| அச்சாத்திகுணமாயை சாத்திகத்திற் சாத்திகம், சா[illegible]திலிராசதம், சாத்திகத்திற்றாம[illegible] வி[illegible]சொரூபமாயிருக்கும் | வெளி |



| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| அவற்றுள் சாத்திகத்திற்சாத்திகம் பிரதானமாகும்போது. | அம்முக்குணங்களினுள் தெளிந்த சலத்தில் தெளிந்த சலமேலிடுவதுபோலச் சாத்திககுணத்திலிராசதமுந் தாமதமும் அடங்கிச் சாத்திககுணமதிகரிக்கும்போது. |
| அதிற்பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன். | அச்சாத்திககுணத்திற் பிரதிபலனரூபமாக விளங்காநின்ற ஈசுவரன். |
| ஜகத்தை யிரட்சிக்கையால் | சராசரப் பிரபஞ்சங்களனைத்தையும் நிலைபெறும்படி யிரக்ஷிக்கின்றமையால். |
| விஷ்ணுவென்றும். | வியாபக சொரூபனாகியவிஷ்ணுவெனவும். |

வினா:—ஈசுவரன் எதன் நிமித்தம் எங்ஙனமிரக்ஷிக்கின்றானெனின். (74)

விடை:—சிறைச்சாலையில் கட்டுண்ட திருடன் சிறைச்சாலையைவிட்டு வெளிப்படுங்காலபரியந்தம் இட்டவேலைகளைச் செய்துகொண்டு சரீரத்தோடு ஜீ[illegible]

போலப் பந்தநிலையிலிராநின்ற சீவர்கள் பந்தகாரணமாகிய காமியகன்மங்களை விடுத்து நிட்காமியகன்மங்களைத் தொடுத்துச் சற்குருவையடுத்துப் பிரஹ்மஞானம்பெற்று விதேகமுத்தியை யடையும்பரியந்தம் சரீரங்களோடு ஜீவித்திருக்குநிமித்தம் அவரவர்கள் கன்மப்படி இதம், அஹிதம், இதாஹிதமாகப் போகங்களை யூட்டுவித்து இரக்ஷிக்கின்றனனென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சாத்திகத்திலிராசதம் பிரதானமாகும்போது | தெளிந்த சலத்தில் கலங்கற்சலமேலிடுவதுபோலச் சத்துவகுணத்தில் சத்துவகுணமும் தாமதகுணமுமடங்கி இராசதகுண மதிகரிக்குங்காலத்தில் |
| அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன் | அவ்விராசதகுணத்திற் பிரதிபலனரூபமாக இராநின்ற ஈசுவரன் |
| ஜகத்தைச் சிருஷ்டிக்கையால் | பிரபஞ்சத்தை யுற்பத்திசெய்கின்றமையால் |
| பிரஹ்மனென்றும் | மகத்தாகிய பிரஹ்மனெனவும் |

[illegible] வினா[illegible]ன் எதன்நிமித்தம் எங்ஙனம் ஜகசிரு[illegible]
[illegible] விக்கின்,



விடை :—சிறைச்சாலையிற் கட்டுண்ட திருடர்கள் கடினவேலையாதிகளைச் செய்து குற்றங்களின்று விடுபட்டு வெளிப்படுநிமித்தம் அவர்கள் வேலைசெய்தற்குத்தக்க கருவிகளான அரிவாள் மண்வெட்டி கூந்தாலி கட்டப்பாரையாதிகளை யிரும்பாதியில்நின்று உண்டுபண்ணுவதுபோல அஞ்ஞானத்திலமிழ்ந்திப் பந்தப்பட்டிராநின்ற ஜீவர்கள் சரீராதிப்பிராப்தியால் சற்கருமஞ்செய்தல் முதலியவைகளால் பந்தநிவிருத்தியாகி முத்தியடையுநிமித்தம் அவர்கள் சற்கன்மங்கள் செய்தற்குச் சாதனங்களான தனுகரணபுவனபோகங்களை மாயையினின்றும் சிருஷ்டிக்கின்றனனென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சாத்துவிகத்திற்றாமதம் பிரதானமாகும்போது | தெளிந்தசலத்தில் வண்டல்சலமேலிடுவதுபோலச் சத்துவத்திற்சத்துவமும் இராசதமுமடங்கித் தாமதகுணமதிகரிக்கும்போது |
| அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன் | அத்தாமத குணத்திற் பிரதிவிம்பரூபமாக இராநின்ற ஈசுவரன் |
| ஜகத்தை யுபசங்காரம்பண்ணுகலால் | சகல[illegible]ங்சங்களையும் முற்றி[illegible] |

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| * உருத்திரனென்றுஞ்சொல்லப்படுவன் | சங்கார கர்த்தாவாகிய உருத்திரனென்றும் சொல்லப்படுவன் |

வினு :—ஈசுவரனுக்கு உருத்திரநாமம் வந்தது சங்கார
கிருத்தியத்தாலெனல் போதுமான ஏதுவாயிருக்க, உபசங்
காரத்தாலென மிகையாக விசேஷித்துக் கூறியது எதனாலெ
னின். (76)

விடை :—உப வென்பது இரண்டாவது. இரண்டாவது
தோற்றமின்றிச் சங்கரிப்பவர் உருத்திரரொருவரே யென்ப
தும், எமன் சங்காரகிருத்தியமுள்ளவனாயினும், அவினால்
உருத்திரர்க்கு அதிவியாத்தித்தோடமில்லை யென்பதுந்தோன்
றுநிமித்தமென அறிக.

வினு :—சங்காரகர்த்தாவாகிய ஈசுவரனை யுபசம்மார
கர்த்தாவென்றமையால் அவர்க்கு எமனால் அதிவியாத்தித்
தோடமில்லை யென்பது எதனாலெனின். (77)

விடை :—எமன் இரண்டாவதாயுள்ள காரியப்பிரபஞ்
சங்களில் பஞ்சபூதங்களையும் சூட்சுமசரீரங்களையும் விடுத்

* रुतं द्रावयति [illegible] ॥ அதாவது (ருதம்) அஞ்ஞானத்தை(த்ராவயதி)
[illegible] ருத்திரன்.



துத் தூலசரீரங்களைமாத்திரம் சங்கரிக்கும் ஆற்றலுளனே
யன்றிக் காரியப்பிரபஞ்சங்களனைத்தும் ஏககாலத்தில் கார
ணத்திலடங்கும்படி உபசம்மாரஞ்செய்யும் ஆற்றலிலனாகவி
னென அறிக.

வினு :— அற்றேல் காரியப்பிரபஞ்சங்க ளொடுங்கற்கு
ஆதாரமான காரணமும் காரணத்தில் காரியப்பிரபஞ்சங்களை
யொடுங்கும்படி சங்கரித்த ஈசுவரனுமாகிய தோற்றங்கள் நாச
மின்றிச் சேடித்து நிற்றலால் ஈசுவரனை யிரண்டாவது தோற்ற
மறச் செய்யும் உபசங்காரகர்த்தாவெனல் பொருந்ாதெ
னின். (78)

விடை :—சிரவண மனனாதிகளால் சித்தபரிபாகமாகிய
ஜீவர்கட்கு ஞானானுக்கிரகத்தால் காரணத்தோடு காரியத்
தோற்றங்களையுஞ் சங்கரித்து, அச்சீவர்களும் ஈசுவரனாகிய
தானும் சலசந்திரன் சலமாகிய உபாதி நீங்கியபோது விம்ப
சந்திரனேயாவதுபோலப் பிரஹ்மசொரூபத்திற் கலந்து இர
ண்டாவது தோற்றமின்றி அத்துவித சொரூபமாகவே நிற்ற
லால் ஈசுவரனை உபசங்காரகர்த்தாவெனல் பொருந்து
மென அறிக.

வினு :—எமன் உபசங்காரஞ்செய்யும் ஆற்றலிலனாதல்
எதனாலெனின். (79)

விடை :—சிருட்டிகாலத்திற் றோன்றிப் பிரளயகாலத்தில் நாசமாவதாகிய காரியப்பிரபஞ்சங்களி னுட்பட்டவனாமையினென அறிக.

வினா :—உருத்திரர் எதன் நிமித்தம் எங்ஙனம் சங்கரிக்கின்றனரெனின். (80)

விடை:-வெளியிலோடி விளையாடிச் சிரமமடையாநின்ற சிறுவர்களை மாதா பிடித்து நித்திரை பண்ணும்படி மஞ்சத்திருத்தி அவர்கள் விளையாடுதற் கேதுவாக வைத்திருந்த பந்து முதலியவைகளைப் பிடுங்கி மறைத்துவிடுவதுபோலக் கன்மபலத்தால் போகங்களிற் சுழன்றுவருந்தாநின்ற சீவர்கள் வருந்தாமல் அஞ்ஞானத்திற் கன்ம வாசனைகளோடு பிரஞ்ஞையின்றி யடங்கியிருக்கும்நிமித்தம் தனு கரண புவன போக வடிவமாகிய பிரபஞ்சங்களைச் சங்கரிக்கின்றனர். அவ்வஞ்ஞானத்தையும் பக்குவர்களுக்கு ஞானாநுக்கிரகமூலமாய்ச் சங்கரிக்கின்றனரென அறிக.

வினா :—ஜீவர்கள் உயர்வுதாழ்வான சரீரங்களை யடைந்து உயர்வுதாழ்வான போகங்களைத் தாரதம்மியமாக அனுபவிக்கும்படி ஈசுவரன் சிருட்டியாதிய கிருத்தியங்கள் செய்கின்றமையால் விஷமகாரித்துவ நிர்த்தயாளத்துவமாதிய [illegible]யுனின். (81)

[illegible]



விடை :-கற்பகவிருக்ஷம் தன்னையடைந்தவர்களது விருப்பத்தின் தாரதம்மியப்படி அவர்களுக்குப் பலனைத் தருவதுபோல ஈசுவரனும் ஜீவர்களது கன்மத்தின் தாரதம்மியப்படி சுகதுக்கங்களை யனுபவிப்பதற்கேதுவாகச் சிருட்டியாதிகளைச் செய்கின்றமையால் விஷமகாரித்துவாதி தோஷசகிதராகாரென அறிக.

வினா :—ஜீவர்கள் ஓர்தொழிலைத் தன்பயன் பிறர்பயன் அவப்பயனென்னு மூன்றனுள் ஓர் பயனைக் கருதிச் செய்வதுபோல, ஈசுவரன் முப்பயனு ளெப்பயனைக் கருதிச் சிருட்டியாதிகள் செய்கின்றவனெனின். (82)

விடை :—ஈசுவரன் சிருட்டியாதிகளைத் தன்பயனையும் அவப்பயனையுங் கருதாது பிறர்பயனைமாத்திரங் கருதிச் செய்கின்றவனென அறிக.

வினா :—சிருட்டியாதிகளை ஈசுவரன் பிறர்பயனையன்றித் தன்பயனையும் அவப்பயனையுங் கருதிச் செய்கிறவ னன்றென்பது எதனாலெனின். (83)

விடை :—துக்கம் நீங்குதல் சுகம்பெறுதல் புகழ்பொருந்துதல் ஆகிய மூன்றும் தன்பயனும். ஈசுவரன் அநாதிமலமுத்தனானமையால் துக்கம் நீங்குதலும், நித்தி[illegible]னந்தமயனானமையால் சுகம்பெறுதலும், ஒப்பாரும் [illegible]

னுண்மையால் புகழ்பொருந்துதலுமாகிய மூன்றனையும் விரும்பாதவனாகும். ஆதலின் தன்பயனையும் அறிவின்றிய சிறுவர்கள் விளையாட்டினாற் செய்யும்தொழில் அவப்பயனுக்கேதுவாகும். ஈசுவரன் பேரறிவையும் ஜீவர்களிடத்திற் பேரருளையுமுடைய முதியோனாதலின் விளையாட்டினையும் விரும்பாதவனாகும். ஆதலின் அவப்பயனையுஞ் சருதிச் செய்கின்றவனன்றென அறிக.

வினா :—விஷ்ணு, பிரமன், உருத்திரனென்னும் நாமங்களைக் கரசரணாதி அவயவாகார காரியவிசிஷ்ட சேதனபோதகங்களாகப் புராணாதிகள் கூறுநிற்க; இந்நூல் கரசரணாதி அவயவரகித மாயாவிசிஷ்ட சேதனபோதகங்களாகக் கூறியது எதனாலெனின். (84)

விடை :—விஷ்ணு, பிரமன், உருத்திரன், சத்தி, கணேசன், சூரியன் முதலியோர்கள் மாயையால் பண்ணப்பட்ட சரீரவிசிஷ்ட சேதனங்களாகிய காரியப் பிரஹ்மங்களெனவும், அவர்களில் ஒவ்வொருவருக்கும் வேறுவேறுயுள்ள நாமங்களனைத்தும் காரணப்பிரஹ்மத்தினாமங்களெனவும் சகல மதஸ்தருமறியும் நிமித்தமென அறிக.

வினா :—அங்ஙனம் அவர்கள் அறிதற்காகக் கூறியது எதனாலெனின். (85)

விடை :—[illegible]ஷ்ணு பிரமன் உருத்திரனாதியர்களின் [illegible]வதுக் கேற்க வடிவ



யும் உணர்த்தும் சைந்தவபதம்போல ஒவ்வோரிடத்திற் காரணப் பிரஹ்மத்தையும் ஒவ்வோரிடத்திற் காரியப்பிரஹ்மங்களையும் உணர்த்துகின்றனவாதலின் வைணவமாதிய ஒவ்வொரு புராணங்களினும் பரம்பொருளாகக்கூறப்படும் நாமங்கள் காரணப் பிரஹ்மத்தையும், பரம்பொருளல்லனவாகக் கூறப்படும் நாமங்கள் காரியப்பிரஹ்மங்களையும் உணர்த்துகின்றனவாயும் சகல புராணங்களினுமுள்ள அன்னிய தெய்வத்தினிந்தை ஒன்றன் துதியின்பொருட்டேயன்றித் தியாகத்தின் பொருட்டன்றென்பதாயும் காரணப்பிரஹ்மமே யுபாசிக்கத்தக்கதென்பதாயும் உள்ள அபிப்பிராயங்களை யந்தப் பிரஞ்ஞையாலறியாமல் சியாலசாரமேய நியாயம்போலக் கிலேசிக்கின்ற சமயிகள் கலகம் நீங்கிச் சாந்தமடையு நிமித்தமென அறிக.

வினா :—சியாலசாரமேய நியாயமாவது யாதெனின் (86)

விடை :-சியாலன் என்பது சம்ஸ்கிருதபாஷையில் மனைவியின் சகோதரனுக்குள்ள முறைப்பெயர் (அதாவது திராவிட பாஷையில் மைத்துனன்) ; சாரமேயனென்பது நாய். நியாயமென்பது திருட்டாந்தம். மனைவியின் தமையனாகிய மைத்துனனுக்கும் அவள் கணவன்வீட்டுக் கடுத்தவீட்டு நாய்க்கும் இடுகுறிப்பெயர் உத்பாலகனும். மைத்துனனாகிய உத்பாலகன் சத்துருவுக்கும் கணவன்வீட்டு நாய்க்கும் இடுகுறிப்பெயர் தாவகனும். உத்பாலகன் ஸகோதரி பிரத

களும் சண்டைசெய்துகொள்ளப் பார்த்த தன் கணவன் அடுத்தவீட்டு நாயை உத்பாலகன் பன்றி கழுதைகள்போற் செட்டவனெனவும், தன் வீட்டு நாயைத் தாவகன் மிகவும் நல்லவனெனவும் வசனிப்பதை வீட்டினுள்ளிருந்த மனைவி கேட்டு நமதுகணவர் நம்தமையனுகிய உத்பாலகனை நிந்தித்துத் தமையன் சத்துருவாகிய தாவகனைச் சிறப்பிக்கின்றனரெனக் கணவன் அபிப்பிராய மறியாமற் சமான நாமத்தாற் பிராந்தியுற்றுக் கிலேசித்தா ளென்பது மைத்துனன் நாய் திருட்டாந்தமாகிய சியாலசாரமேய நியாயமென அறிக. இதனைச் செவ்வையாகஅறிய விரும்பில் விசாரசாகரமேழாவதுதரங்கத்திற் காண்க.

வினு :—ஈசுவரனைச் சுருதிகள் ஒரோரிடத்தில் மாயாசகிதரெனவும், ஒரோரிடத்தில் மாயாரகிதரெனவுங் கூறியதென்னையெனின். (87)

விடை :—ஈசுவரன் மாயையை ஆசிரயமாகவுடையவரானமையால் மாயாசகிதரெனவும், மாயாசகிதராக இருக்கினும் மாயையின் வசமாகாமல் அநாதிமலமுக்த சருவஞ்ஞராகவே விளங்குகின்றமையின் மாயாரகிதரெனவும் கூறினவென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| இங்ஙனம் | இத்தப்பிரகாரம் |
| சத்துவகுணகற்பனை | சத்துவகுண மாயையாற்கற்பிக்கப்பட்ட விஷ்ணுவாதிய நாமங்களும் அவர்களின் செயல்களும் கூறப்பட்டன. |



(நூல் அ)

இராசதகுணம் அனேகரூபமாய்ப் பிரிந்து அவித்தைகளென்றும் சீவகாரண சரீரங்களென்றும் சொல்லப்படுவனவாய் ஒன்றற்கொன்று தாரதம்மியமுள்ளவைகளாயிருக்கும் இவ்வவித்தைகளிடத்திலும் மலினசலப் பிரதிவிம்பம்போலப் பிரஹ்மப்பிரதிவிம்பமுளவாம். இப்பிரதிவிம்பசைதன்னியங்கள் கிஞ்சிஞ்ஞரென்றும் சிதாபாசசீவரென்றும் பிராஞ்ஞரென்றுஞ் சொல்லப்படும்.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| இராசதகுணப்பிரகிருதி | இரசோகுணப் பிரகிருதியானது |
| அனேகரூபமாய்ப்பிரிந்து | அனேக அம்ஸங்களாகப் பிரிவுற்று |
| அவித்தைகளெனவும் | அஞ்ஞானங்களெனவும் |
| சீவகாரணசரீரங்களெனவும் | சீவர்கட்கு மூலசரீரங்களெனவும் |
| சொல்லப்படுவனவாய் | நாமங்கள் கூறப்படுவனவாய் |
| ஒன்றற்கொன்று | ஓரம்ஸத்துக்கு மற்றோரம்ஸம் |
| தாரதன்மிய முள்ளவைகளாக இருக்கும். | வித்தியாசமுள்ளவைகளாக இருக்கும் |

வினு :—இராஜதகுணத்திற்கு அவித்தையெனப் பெயர் வந்தது எதனுலெனின். (88)

விடை :—யா ந வித்யதெ (எது இல்லாதிருக்கிறதோ) ஸா அவித்யா (அது அவித்தை) யெ[illegible]

யப்படி விசாரித்துப் பார்க்குமிடத்துச் சொரூபமின்றியதா யிருத்தலுமன்றி வித்தையாகிய ஞானத்தை விரோதியாக வுடையதாயும் மலினவுபாதியாயுமிருத்தலினென அறிக.

வினா :—அவித்தை யெத்தனைவிதமெனின் (89)

விடை :—மூலாவித்தை தூலாவித்தையென இரண்டுவிதமாம். இவ்விரண்டில் சுத்தசேதனத்தை மறைப்பது மூலாவித்தை. விஷய உபகிதசேதனத்தை மறைப்பது தூலாவித்தை சுத்தசேதனத்தை மறைப்பதாகிய மூலாவித்தை காரணகாரிய பேதத்தால் இரண்டுவகையாம். இவ்விரண்டில் ஆவரண விக்ஷேபசத்திகள்சகிதமா யனுதியாகவேயுள்ளது காரணரூபமாம். ஒன்றினிடத்து மற்றொன்றின் (பிரதீதி) ரூபமாயுள்ளது அதாவது பிராந்திஞானமும் அதன் விஷயமும் காரியரூபமாம். காரியரூபாவித்தையும் அநாத்மபதார்த்தங்களாகிய தேகாதிகளில் ஆத்மபுத்தி, அநித்தியமாகிய ஆகாயாதிகளில் நித்தியபுத்தி, துக்கரூபமாகிய தனுதிகளில் சுகரூபபுத்தி, அசுத்தமாகிய ஸ்திரீ புத்திராதிகளில் முத்தமிடுதலாதிகள் செய்தற்கானசுத்தபுத்தியென நான்கு விதமாயிருக்குமென அறிக.

வினா :—அவித்தைகட்குச் சீவகாரண சரீரங்களெனப் பெயர்வந்தது எதனுலெனின். (90)

விடை :—சீவர்களின் தூலசூக்குமமாகிய இரண்டு சரீ[illegible] [illegible]விரிதற்கும் சீவர்கள் தோன்றற்கும் கார

[illegible]






தலினென அறிக.

[illegible] யை அநாதியென்றது எதனுலெ[illegible] (91)

[illegible] பத்தியின்றியவைகளி லொன்ருக இருத்தலினென அறி[illegible]

வினா :—உற்பத்தியின்றியவைக ளெவையெனின். (92)

விடை:—பிரஹ்மம், ஈசுவரன், சீவன், அவித்தை, அவித்தைக்கும் சைதன்னியத்துக்குமுள்ள சம்பந்தம், அனுதிவஸ்துக்களின் பேதம் ஆகிய ஆறுமென அறிக.

வினா :—எதனுல் இவ்வாறும் அநாதிகளென ஒப்பப்பட்டன வெனின். (93)

விடை :—(க) அவித்தைக்குப் பிரஹ்மம் அதிட்டானமாயிருப்பதால் அவித்தையினின்றும் பிரஹ்மம் உற்பத்தியானதல்ல. ஈசுவராதிகள் பிரஹ்மமன்றிச் சித்திக்காமையால் ஈசுவராதிகளினின்றும் பிரஹ்மம் உற்பத்தியானதல்ல. ஆதலின் பிரஹ்மம் அநாதியாம், (2) பிரஹ்மம் நிருவிகாரமாயிருத்தலால் பிரஹ்மத்தினின்றும் அவித்தையுற்பத்தியானதல்ல. ஈசுவராதிகளின் சித்தி அவித்தியாசித்தியின் ஆதீனமாகவிருத்தலின் ஈசுவராதிகளினின்றும் அவித்தையினுற்பத்தி

யப்படி விசாரித்துப் பார்க்குமிடத்துச் சொரூபமின்றியதாயிருத்தலுமன்றி வித்தையாகிய ஞானத்தை விரோதியாகவுடையதாயும் மலினவுபாதியாயுமிருத்தலினென அறிக.

வினா :—அவித்தை யெத்தனைவிதமெனின். (89)

விடை :—மூலாவித்தை தூலாவித்தையென இரண்டுவிதமாம். இவ்விரண்டில் சுத்தசேதனத்தை மறைப்பது மூலாவித்தை. விஷய உபகிதசேதனத்தை மறைப்பது தூலாவித்தை. சுத்தசேதனத்தை மறைப்பதாகிய மூலாவித்தை காரணகாரிய பேதத்தால் இரண்டுவகையாம். இவ்விரண்டில் ஆவரண விக்ஷேபசத்திகள்சகிதமா யனாதியாகவே யுள்ளது காரணரூபமாம். ஒன்றினிடத்து மற்றொன்றின் (பிரதிதி) ரூபமாயுள்ளது அதாவது பிராந்திஞானமும் அதன் விஷயமும் காரியரூபமாம். காரியரூபாவித்தையும் அனாத்மபதார்த்தங்களாகிய தேகாதிகளில் ஆத்மபுத்தி, அநித்தியமாகிய ஆகாயாதிகளில் நித்தியபுத்தி, துக்கரூபமாகிய தனாதிகளில் சுகரூபபுத்தி, அசுத்தமாகிய ஸ்திரீ புத்திராதிகளில் முத்தமிடுதலாதிகள் செய்தற்கானசுத்தபுத்தியென நான்கு விதமாயிருக்குமென அறிக.

வினா :—அவித்தைகட்குச் சீவகாரண சரீரங்களெனப் பெயர்வந்தது எதனாலெனின். (90)

விடை :—சீவர்களின் தூலசூக்குமமாகிய இரண்டு சரீ[illegible] விரிதற்கும் சீவர்கள் தோன்றற்கும் [illegible]

[illegible] வ் [illegible]

[illegible] ல் [illegible]



ணமா யனாதியாக விருத்தலினென அறிக.

வினா :—அவித்தையை அனாதியென்றது எதனாலெனின். (91)

விடை :—உற்பத்தியின்றியவைகளி லொன்றாக இருத்தலினென அறிக.

வினா :—உற்பத்தியின்றியவைக ளெவையெனின். (92)

விடை :—பிரஹ்மம், ஈசுவரன், சீவன், அவித்தை, அவித்தைக்கும் சைதன்னியத்துக்குமுள்ள சம்பந்தம், அனாதிவஸ்துக்களின் பேதம் ஆகிய ஆறுமென அறிக.

வினா :—எதனால் இவ்வாறும் அனாதிகளென ஒப்பப்பட்டன வெனின். (93)

விடை :—(க) அவித்தைக்குப் பிரஹ்மம் அதிட்டானமாயிருப்பதால் அவித்தையினின்றும் பிரஹ்மம் உற்பத்தியானதல்ல. ஈசுவராதிகள் பிரஹ்மமன்றிச் சித்திக்காமையால் ஈசுவராதிகளினின்றும் பிரஹ்மம் உற்பத்தியானதல்ல. ஆதலின் பிரஹ்மம் அனாதியாம். (2) பிரஹ்மம் நிருவிகாரமாயிருத்தலால் பிரஹ்மத்தினின்றும் அவித்தையுற்பத்தியானதல்ல. ஈசுவராதிகளின் சித்தி அவித்தியாசித்தியின் ஆதீனமா

சுரர்கள் கேவலம் பிரஹ்மத்திலாவது கேவலம் மாயையிலாவது உற்பத்தியாகிறதில்லை. ஈசுரனிடத்திற் சீவனுவது ஜீவனிடத்திலீசுரனுவது உற்பத்தியாகிறதில்லை. அவித்தைக்கும் சேதனத்துக்குமுள்ள சம்பந்தத்தால் சீவேசுவரபாவங்கள் சித்திக்கின்றன. பிரஹ்மமும் அவித்தையும் அநாதியானமையால் பிரஹ்மத்துக்கும் அவித்தைக்குமுள்ள சம்பந்தமும் அநாதியாம். ஆதலின் இச்சம்பந்தத்தா லுளதாகிய சீவேசுவரர்களும் அநாதியாம். (5) பிரஹ்மமும் அவித்தையும் அநாதியானமையால் அவைகளின் தாதான்மிய சம்பந்தமும் அநாதியாம். ஆதலின் பிரஹ்மம் அவித்தையென்னுமிரண்டினுலும் சம்பந்தத்துக் குற்பத்தியில்லை. ஈசுவராதிகளின் சித்தி சம்பந்தசித்தியின் அதீனமாக இருத்தலின் ஈசுவராதிகளாலும் சம்பந்தத்துக் குற்பத்தியில்லை. ஆகலால் அவித்தியாசேதன சம்பந்தமும் அநாதியாம். இந்த ஐந்தும் தானே தன் தன்னிடத்தி லுற்பத்தியாகியதென ஒப்பில் ஆத்மாசிரயதோஷம் வரும். ஆதலின் தத்தமக்குத் தத்தமிடத்திலும் உற்பத்தியில்லாமையாலும் அநாதியாம். (6) பிரஹ்மமாதிய ஐந்திற்கும் பேதங்களுண்டு. எதனுல் பிரஹ்மமாதிய ஐந்திற்கு முற்பத்தியில்லையோ, அதனுல் அவைகளின் பேதங்களுக்கு முற்பத்தியில்லை. ஆதலின் ஐந்தின் பேதமு மநாதியாம். இந்த நியாயத்தால் ஆறு மநாதியென ஒப்பப்பட்டனவென அறிக.

வினு :—[illegible]த்தைகளைச் சரீரங்களென்ற



விடை :—சீரணிப்பனவாதலினென அறிக.

வினு :—அவித்தைகளனுதியானமையால் சீரணிப்பனவல்லவே யெனின் (95)

விடை :—பிராகபாவம் அநாதியாயினும் நாசமுறுவதுபோல அவித்தைகள் அநாதியாயினும் சீரணிப்பனவாகுமென அறிக.

வினு :—அவித்தைகள் எதனுல் சீரணிக்கின்றனவெனின் (96)

விடை:—இரச்சுஞானத்தால் சர்ப்பஞ் சீரணிப்பதுபோல ஆத்மஞானத்தால் சீரணிக்கின்றனவென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இவ்வவித்தைகளிடத்தினும் | இந்த இராசதகுணமாகிய அவித்தைகளிடத்தினும் |
| மலினசலப்பிரதிவிம்பம்போலப்பிரஹ்மப்பிரதிவிம்பங்களுளவாம். | கலங்கற்சலத்திலுள்ள சூரியப்பிரதிவிம்பம்போலப் பிரஹ்மத்தின் பிரதிவிம்பங்களுள்ளன. |
| இப்பிரதிவிம்பசைதன்னியங்களுக்கு | இந்தப் பிரதிபலனங்களாகிய சேதனங்களுக்கு |

விடை :—முன்பின் ஒன்றையும் ஆலோசியாமற் றேகாதிகளை யானெனதென்னும் துரபிமானிகளாயும் ஓர் விஷயத்தையறியும்போது மற்றோர் விஷயத்தையறியும் போதறிவில்லாதவர்களாயும் அறிந்த விஷயத்தை யடிக்கடி மறப்பவர்களாயும் துக்கசீவனர்களாயு மிருத்தலினென அறிக.

வினா :—இவர்களைத் துக்கசீவனர்க ளென்றது எதனாலெனின் (98)

விடை —: தேகாபிமானிகளாய் விதிநிஷேத கன்மங்களை மேலுமேலும் செய்து அதனால் அளவின்றிய சனனமரணாதி துக்கங்களை மேலுமேலும் அநுபவித்துக்கொண்டு உயிர்வாழ்பவர்களானமையினென அறிக.

வினா :—இவர்கள் துக்ககாரணமான கன்மங்களை விட்டுவிடாமல் மேலுமேலும் செய்வது எதனாலெனின் (99)

விடை :—அகஞ்சத்தார்த்தமாயுள்ள பிரத்தியகாத்ம சொரூபமே தான் தேகாதிப்பிரபஞ்சம் மித்தையென அறியாமல் தேகமேதான், பிரபஞ்சம் சத்தியமெனவும் அசுத்தபோகங்களைச் சுத்தபோகங்களெனவும் அறிந்துள்ள மயக்கத்தாலென அறிக.

வினா :-அகம்சத்தார்த்தமாகிய ஆத்மாவினிடத்து நான் துக்கியெனத் துக்காநுபவங் காணப்படுகின்றமை...



விடை :—ஆத்மாவினிடத்துத் துக்கம் அத்தியாசத்தாற் றோற்றுகின்ற ஆகந்துகமேயன்றிச் சுபாவீகமல்லாமையால் துக்கசீவியாகாதென அறிக.

வினா :—ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீகமன்றென்பது எதனாலெனின். (101)

விடை :—வேப்பிலைக்குச் சுபாவீகமாயுள்ள கசப்பை நிவிருத்திக்க ஒருவரு முயலாததுபோல ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீகமாயின் அதனை நிவிர்த்தித்தற்கு ஒருவரு முயலாதிருக்கவேண்டும். அங்ஙனமின்றிச் சகலரும் துக்கநிவிருத்தி நிமித்தமே முயலுகின்றமையினானும், இஃதன்றி நெகிழ்ச்சிக்கு நாசம்வரும்போது நெகிழ்ச்சியைச் சுபாவீகமாகவுடைய சலத்துக்கும் நாசம்வருவதுபோலத் துக்கத்துக்கு நாசம் வரும்போது துக்கத்தைச் சுபாவீகமாகவுடைய ஆத்மாவுக்கும் நாசம் வரல்வேண்டும். அங்ஙனம் வருமாயின் ஆத்மா நித்தியம் நிருவிகாரமென்னுஞ் சுருதியாதிகள் அப்பிரமாணமாம். இஃதுமன்றித் துக்கநிவிருத்தியானவர்கள் ஒருவரேனு மிருக்கலாகாது. அங்ஙனமின்றித் துக்கம் நிவிருத்தியாகிச் சுகாகாரமாய்ச்சுகராதிய அனேக சீவன்முத்தர்களிருக்கின்றமையினானுமென அறிக.

சலத்துக்குச் சைத்தியஞ் சுபாவீகமாயினும் அக்கினி சம்பந்தத்தால் சைத்தியநிவிருத்தியும் உஷ்ணாபிவிருத்தியும் வருவதுபோல ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீகமாயினும் உத்கிருஷ்ட கருமோபாசனாதிகளால் துக்கநிவிருத்தியும் சுகாபிவிருத்தியும் வரலாம். இங்ஙனம் வராநின்ற துக்கநிவிருத்தி சுகாபிவிருத்தி ஆகந்துகமும் துக்கம் சுபாவீகமுமாகும். ஆதலால் ஆத்மா முக்தசீவனாகுமெனின். (102)

விடை :- அற்றேல் அக்கினிக்கு உஷ்ணம் மணிமந்திரங்களாலும், சலத்துக்குச் சைத்தியம் அக்கினிசம்பந்தத்தாலும் தற்காலம் அடங்கியிருக்கினும் காலாந்தரத்திலெங்ஙனம் அபிவிருத்தியாகிறதோ, அங்ஙனம் ஆத்மாவுக்கு உத்கிருஷ்ட கருமோபாசனாதிகளாற் றுக்கம் அடங்கியிருக்கினும் காலாந்தரத்தில் அபிவிருத்தியாக வேண்டுமேயன்றி அத்தியந்தநிவிருத்தியாகப்படாது. அங்ஙனமின்றி அத்தியந்தநிவிருத்தியாகி நித்தியானந்தமயமாகவுள்ள சுகராதிய அனந்தசீவன்முத்தர்களிருக்கின்றமையினாலும், ஆத்மா ஆனந்தமயரென அனந்த சுருதிகள் கூறுகின்றமையினாலும், சுழுத்தி சமாதிகளில் ஆத்மா ஆனந்தமயமாகவே யிருப்பது அனுபவமானமையினாலும், சாக்கிர சொப்பனங்களில் காணப்படும் துக்கானுபவங்கள் செம்பரத்தம்புட்பசம்பந்தத்தால் படிகத்திற் செந்நிறங்காணப்படுவதுபோல ஆத்மாவினிடத்திற் கரண



வத்திலில்லாமையினாலும் ஆத்மாவைச் சுகசீவனரென்னாமல் துக்கசீவனரென்பது பிராந்தியேயென அறிக,

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சிதாபாச சீவரென்றும் | சித்தின்போலிகளாகிய சீவர்களெனவும் |

வினா :—சீவர்கட்குச் சொரூபம் யாதெனின். (103)

விடை :—ஆசிரயமாகிய அவித்தை அதிலுள்ள சிற்பிரதிவிம்பம் இவற்றிற் கதிட்டானமாகிய கூடத்தர் இம்மூன்றுஞ் சேர்ந்துள்ளதென அறிக.

வினா :—சீவர்களின் தருமங்களெவையெனின். (104)

விடை :—அற்பசத்தித்துவம், அற்பஞ்ஞத்துவம், பரிச்சின்னத்துவம், நானாத்துவம், பரதந்திரத்துவம், சாமர்த்தியமின்மை, அபரோக்ஷத்துவம், அவித்தியாவுபாதியுடைமை, ஆகிய எட்டுமென அறிக.

வினா :—சீவர்கட்குத் தேசங்களெவையெனின். (105)

விடை :—இருதயம், கண்டம், நேத்திரமாகிய மூன்றுமென அறிக.

வினா :—சீவர்களுக்குக் காலங்களெவையெனின். (106)

வினா:—சீவர்களுக்குக் காரியங்களெவையெனின்.(107)

விடை:—சாக்கிரமுதல் மோக்ஷபரியந்தமுள்ள போகமாகிய சம்சாரங்களும், அகந்தை அபிமானம் ஆசை கோபமாதிகளுமென அறிக.

வினா:—சீவர்களுக்குப் போக சாமக்கிரிகளெவையெனின். (108)

விடை:—தூலஞ் சூக்ஷமம் காரணமாகிய மூன்று சரீரங்களுமென அறிக.

வினா:—சீவர்களைச் சிதாபாசர்களென்றது எதனாலெனின். (109)

விடை:—சலப்பிரதிவிம்ப சூரியனையாராயுமிடத்து அது விம்பசூரியனையும் சலத்தையும்விட்டுச் சொரூபமில்லாமையாற் றோற்றமாத்திரமாகத் தோற்றுவதாயும் அங்ஙனந் தோற்றினும் சூரியனுக்குரிய உஷ்ணத்துவாதி யிலக்கணங்களில்லாத போலியுருவமாயு மிருப்பதுபோலச் சீவர்களை ஆராயுமிடத்து அதிட்டானசித்தாகிய கூடத்தரையும் ஆசிரயங்களாகிய அவித்தை யந்தக்கரணங்களையும் விடில் வேறு சொரூபமில்லாமற் றோற்றமாத்திரமாகத் தோற்றுபவர்களாயும் அங்ஙனஞ் சித்தைப்போற் றோற்றினும் சித்துக்குரிய நித்தியத்துவ நிருவி[illegible]ரத்துவாதி யிலக்கணங்களில்லாத போ[illegible] மிருத்தலினென அறிக.



வினா:-இவர்களைச் சீவர்களென்றது எதனாலெனின் 110

விடை:-அதிட்டான ஆசிரயங்களின் பலத்தால் மோக்ஷபரியந்தம் கர்த்திருத்துவாதி யாகாரமாகச் சீவிப்பவர்களானமையினென அறிக.

வினா:—அதிட்டான ஆசிரயங்களின் பலத்தால் சீவர்களெங்ஙனஞ் சீவிக்கின்றனரெனின். (111)

விடை:—தருப்பணப் பிரதிவிம்ப சூரியன் ஒரு சுவரை விளக்கிவைத்துக்கொண்டு அதிட்டானமாகிய விம்பசூரியன் ஆசிரயமாகிய தருப்பணமென்னு மிரண்டின் பலத்தாற் சீவிப்பதுபோல அவித்தையாப் பிரதிவிம்பர்களாகிய சீவர்கள் விஷயங்களைச் சுட்டியறிந்துகொண்டு அதிட்டானமாகிய கூடத்தர் ஆசிரயமாகிய அவித்தையென்னுமிரண்டின் பலத்தாற் சீவிக்கின்றனரென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| * பிராஞ்ஞரென்றும் சொல்லப்படும் | பிரஞ்ஞாரூபர்களெனவும் நாமங்கள் கூறப்படும் |

(இதற்குப்பிரமாணம்) கைவல்லியநவநீதம்.

தேசறு மவித்தை தோறும் சிற்சாயை சீவ கோடி; நாசமாமுயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞனாமே.

(நூல் கூ.)

இவ்வவித்தைகளும் இராசதத்திற் சாத்துவீகம் இராசதத்திலிராசதம் இராசதத்திற்றாமதம் என்னு முக்குண சொரூபங்களாகவுள்ளன. இவற்றுள் இராசதத்திற் சாத்துவீகம் பிரதானமாகும்போது அதிற் பிரதிவிம்பமாயுள்ள சிதாபாசன் தத்துவஞானநிஷ்டனுவன். இராசதத்திலிராசதம் பிரதானமாகும்போது, அதிற் பிரதிவிப்பமாயுள்ள சிதாபாசன் காமக்குரோதபரனுய்க் கன்மநிஷ்டனுவன் இராசதத்திற்றாமதம் பிரதானமாகுப்போது அதிற் பிரதிவிப்பமாயுள்ள சிதாபாசன் சோம்பல் நித்திரைமயக்கங்களுடையவனுவன். இங்ஙனம் இராசதகுணபற்பனை சொல்லப்பட்டது,

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| இவ்வவித்தைகளும் இராசதத்திற்சாத்துவீகம் இராசதத்திலி இராசதம் இராசதத்திற்றாமதமின்னு முக்குணரூபங்களாகவும் உள்ளன. | வெளி |

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| இவற்றுள், | இம்முக்குணங்களுள், |
| இராசதத்திற் சாத்வீகம் பிரதானமாகும்போது | கலங்கற்சலத்தில் தெளிந்த சலம் மேலிடுவதுபோல இராசகுணத்தில் இராசதகுணமும் தாமதகுணமுமடங்கிச் சாத்விககுணமதிகரிக்குங்காலத்தில் |



| | |
| --- | --- |
| அதிற் பிரதிவிம்பமாக | அச்சாத்துவிககுணத்திற் போலியுருவமாக |
| உள்ள சிதாபாசன் | இராநின்ற சீவனுனவன் |
| தத்துவஞான நிஷ்டனுவன் | எதார்த்தசொரூபத்தையறியுஞ்ஞானசாதகனுவன் |

வினு:-தத்துவஞான நிட்டையாவது யாதெனின். (112)

விடை:—எதார்த்தஞானத்தை யடைதற்குரிய சாதகமென அறிக.

வினு:—தத்துவஞான நிட்டையென்பதற்குப் பொருள் தத்துவஞான சமாதியனுபவமெனக் கூறுமல் தத்துவஞான சாதகமெனக் கூறியதென்னையெனின். (113)

விடை:—இந்நூல் அவித்தையினிராசதகுணத்திற் சாத்துவீகம் பிரதானமாகும்போது சிதாபாசன் தத்துவஞான நிஷ்டனுவனெனக் கூறியிருத்தலினென அறிக.

வினு:-இந்நூலிங்ஙனங் கூறியிருத்தலால் நிட்டை யென்பதற்குச்சமாதியெனப் பொருள்கொள்ளில் விரோதமென்னையெனின் (114)

விடை:—முக்குணங்களில் இரண்டு குணங்கள் சங்கோசமாய், ஓர்குணம் புருடமுயற்சியின்றி வாசனுவசத்தாய்த்

கவே விகாசப்படாநின்ற சத்துவகுணப் பிரதிவிம்பனாகிய சீவனுக்கு ஞானசமாதி யியல்பாகவே சித்திக்கவேண்டும். அற்றேல் நிஷ்காம கன்மம் விவேகாதிசதுட்டயம் சிரவணாதிகள் மகாவாக்கியவிசாரம் என்னும் சாதனங்களும், சாதனபோதகமாகிய சுருதிவாக்கியங்களும், ஈசுவரசொரூபமாகிய சற்குருவும் வியர்த்தமாவதோடு சற்குருகடாக்ஷத்தால் ஆவரணநீங்குமென்ற இந்நூலும் வியர்த்தமாம். ஆதலின் நிட்டையென்பதற்குச் சாதகமெனப் பொருள்கோடலே யமைவுடைத்தென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| இராசதத்திலிராசதம் பிரதானமாகும்போது | கலங்கற்சலத்திற் கலங்கற்சலமேலிடுவதுபோல இராசதகுணத்திற் சத்துவகுணமும் தாமதகுணமுமடங்கி இராசதகுணமதிகரிக்குங் காலத்தில் |
| அதிற் பிரதிவிம்பமாக வுள்ள சிதாபாசன் | அவ்விராசதகுணத்திற் போலியுருவமாக இராநின்ற சீவனானவன் |
| காமக்குரோதபரனாகிய கன்மநிஷ்டனானவன் | காமக்குரோதாதிகுண சிரேஷ்டனாகிய கருமசாதகனானவன் |



விடை :—விதிபூர்வகமாகக் கன்மங்களை யனுட்டிப்பவனென அறிக.

வினா :—கன்மசாதகத்தின் பலம் யாதெனின். (116)

விடை :—துக்ககாரணமான சனனாதிகளென அறிக.

வினா :—சனனமாதிகளை நிவர்த்தித்தற்குங் கன்மம் ஏதுவாகுமேயெனின். (117)

விடை :—குணங்கள் உத்தமம் மத்திமம் அதமமென மூவகைப்படும்.

இவைகளில் சன்மநிவிருத்திக்கு உத்தமகுணசகிதமாகச் செய்யுங்கன்மங்கள் ஏதுவாகும், மத்திம அதமகுணசகிதமாகச்செய்யுங் கன்மங்களேதுவாகாவென அறிக.

வினா :—உத்தமகுணங்களெவை, மத்திமகுணங்களெவையெனின். (118)

விடை :—பத்திசிரத்தை யென்னுமிரண்டும் உத்தமகுணங்களாம். இச்சை மத்திமகுணமாமென அறிக.

வினா :—பத்தியென்பது யாது? சிரத்தையென்பது யாது? இவ்விரண்டினாலுண்டாகும் பலம் யாதெனின். (119)

விருத்தி பக்தியாம். வேதவாக்கியம் குருவாக்கியங்களில் விசுவாசரூபமாக எழாநின்ற சித்தவிருத்தி சிரத்தையாம். இவ்விரண்டில்பத்திக்குச் சற்கருமப்பிரவிருத்தி வழித்தாய்ச் சித்தசுத்தியும் சிரத்தைக்குச் சிரவணாதிகளின் வழித்தாய் ஞானமும் பலமாமென அறிக,

வினா :—இச்சையென்பது யாது? இதனாலுண்டாகும் பலம் யாதெனின். (120)

விடை :—மலசல விசர்ச்சனங்களும் சௌசஸ்நானங்களும் அன்னபானாதிக்கிராகியங்களுஞ் செய்யவேண்டுமென்றெழாநின்ற சித்தவிருத்தி இச்சையாம். இவ்விச்சையை நிவிர்த்திப்பது சாத்தியமல்ல. இதற்குப்பந்தம் மோக்ஷம் நரகம் சுவர்க்கங்கள் பலமாகச்சித்தியாவாம். இவைகள் சித்தியாவிடினும் தேகமலினங்களினாலும், மலசலப் பிரவிருத்தியை அடக்கலினாலும் பசிதாகங்களினாலும் உண்டாகின்ற துக்கங்களினிவிருத்திமாத்திரம் தற்காலபலமாகச் சித்திக்குமென அறிக.

வினா :—இவ்விச்சையை நிவிருத்திப்பது சாத்தியமல்லவென்றது எதனாலெனின்.

விடை :—சௌசஸ்நானங்கள் செய்யாவிடின் தேகத்திலுள்ள வேர்வை யழுக்கு மலமாதியமலினங்களின் துக்கங் (121)



தங்களாலுண்டாகும் துக்கங்களும் மலசலப் பிரவிருத்தியை யடக்கில் அபானவாயுவின் பலத்தால் தடைமீறி மலசலங்கள் வெளிப்பட்டுவிடும். இஃதன்றி உஷ்ணாதியயாதானுமோர் காரணத்தால் மலசலப்பிரவிருத்தி தடைப்படில் வயிறுப்பிசம், ஊர்த்துவ சுவாசம், திகாதிகளேற்படுகின்றமையினாலுண்டாகின்ற துக்கங்களும், அன்னபானாதிக்கிராகியஞ் செய்யாவிடின் சரீரஞ்செயலற்று மரணாவத்தையை யடைதலினாலுண்டாகின்ற துக்கங்களுஞ் சகிக்கமுடியாதவைகளானமையினென அறிக.

வினா :—அதமகுணங்களெவை யவைகட்குப் பலங்களெவையெனின். (122)

விடை :—இராகம், துவேஷம், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மச்சரம், ஈரிஷை, அசூயை, இடம்பம், தருப்பம், அகங்காரமென்னும் (௰௩) மாம். இவைகளுக்குத் துக்கமேபலமாமென அறிக.

வினா :—இராகாதிய ௰௩ மெவை? இவைகளுக்குத் துக்கமே பலமென்பதற்குப் பிரமாணங்களெவையெனின். (123)

விடை :—பரஸ்திரீகமனம் பண்ணவேண்டுமென்றெழாநின்ற சித்தவிருத்தி இராகமாம். இதனால் பூர்வம் இராவணன் சுந்தோப சுந்தர்களாகிய பலிஷ்டர்களுந் துக்கானுபவித்

தனர். தனக்கு அபகாரம்பண்ணினவனுக்குப் பதிலபகாரம்
பண்ணவேண்டுமென்றெழாநின்ற சித்தவிருத்தி துவேஷமாம்.
இதனால் பூர்வம் இரணியகசிபனுந் துக்கமனுபவித்தான். புத்
திர மித்திர களத்திர கிரகக் கிராம க்ஷேத்திர தன தானியாதி
கள்மேலுமேலுஞ்சம்பாதிக்கவேண்டுமென் றெழாநின்ற சித்த
விருத்தி காமமாம். இதனால் பூர்வம் நரகாசுரனுந் துக்க
மனுபவித்தான். தனக்குவேண்டிய காரியங்களில் விரோ
தஞ்செய்பவனிடத்தி லாக்கிரகமாக எழாநின்ற சித்தவிருத்தி
குரோதமாம். இதனால் பூர்வம் பகாசுரனுந் துக்கமனுபவித்
தான். தான் சம்பாதித்த பொருளில் ஒருவர்க்கேனும் ஒன்றா
யினுங் கொடுக்கக்கூடாதென்றெழாநின்ற சித்தவிருத்தி
உலோபமாம். இதனால் பூர்வம் துரியோதனனும் துக்கமனு
பவித்தான். தான் சம்பாதித்த பொருளில் பிரியமோதப்பிர
மோதமாக எழாநின்ற சித்தவிருத்தி மோகமாம். இதனால்
பூர்வம் தசரதனும் துக்கமனுபவித்தான். ஐசுவரிய கோலா
கலத்தினால் கெருவித்து கிருத்தியாகிருத்தியங்கள் தெரியா
மல் எழாநின்ற சித்தவிருத்தி மதமாம். இதனால் பூர்வம்
கார்த்தவீரியார்ச்சுனனுந் துக்கமனுபவித்தான். தனக்குச்
சமம் அல்லது அதிகமான சம்பத்துள்ளாரைக் கண்டு சகிக்
காமலெழாநின்ற சித்தவிருத்தி மற்சரமாம். இதனால் பூர்வம்
சிசுபாலனும் துக்கமனுபவித்தான். தனக்கு வந்த துக்கம்
பிறர்க்கும் வரலாகாதாவென் றெழாநின்ற சித்தவிருத்தி



வித்தான். தனக்குவந்த சுகம் பிறர்க்கும் வரலாமாவென்
றெழாநின்ற சித்தவிருத்தி அசூயையாம். இதனால் பூர்வம்
பௌண்டரீக வாசுதேவனும் துக்கமனுபவித்தான். தான்
செய்ததருமத்தைச் சகலரும் பார்த்து மிகவுநன்றாயிருக்கிற
தெனத் தன்னைப் புகழவேண்டுமென்றெழாநின்ற சித்தவிரு
த்தி இடம்பமாம். இதனால் பூர்வம் நபூருவமகாராசனும் துக்
கமனுபவித்தான். தனக்குச் சமமாக ஒருவருமில்லை யென்
றெழாநின்ற சித்தவிருத்தி தர்ப்பமாம். இதனால் பூர்வம் சத
கந்தரனுந் துக்கமனுபவித்தான். அடா! என்னை யறியாயா!
நான்பிடித்தகாரியத்தை விடுவேனா! நீயா! எனக்குப் புத்தி
சொல்லுகிறவனென் றெழாநின்ற சித்தவிருத்தி அகங்கார
மாம். இதனால் பூர்வம் மதுகைடவருந் துக்கமனுபவித்த
னர் எனக்கூறாநின்ற பாகவதமாதிய புராணங்களும் பார
தம் இராமாயண முதலியஇதிகாசங்களும் பிரமாணங்களென
அறிக.

வினா:—இவ்வதம குணங்கள் தோன்றற்குக் காரணம்
(125)
யாதெனின்.

விடை:—பூர்வஞ்செய்துள்ள நிடேத கன்ம பலமாகச்
சித்தத்திற் பொருந்தியுள்ள மலினவாசனைகளென அறிக.

விடை :—தேகவாசனை லோகவாசனை சாஸ்திரவாசனைகளென மூவகைப்படுமென அறிக,

வினா :—தேகவாசனையாவது யாதெனின். (127)

விடை :—அமங்கல அனாத்மாவாகிய தேகத்தைத் திவ்வியமங்கல சொரூபமாகிய ஆத்மாவாக எண்ணி அது நாசமின்றி யழகிளமைஅரோகதிடகாத்திரமாக இருத்தற்குப் பூபதியாதி ஔடதங்கள் புசிக்கவேண்டுமெனவும், தைலஸ்நானம் க்ஷீரபானம் கிருதகுளவிசேஷபோசனங்கள் குறைவின்றியும் காலநியமந் தவறுமலுஞ் செய்துவரவேண்டுமெனவும் சித்தத்திற்றிடமாகப் பொருந்தியுள்ள சம்ஸ்காரமென அறிக.

வினா :—லோகவாசனையாவது யாதெனின்.

விடை :—நாமெவ்வாறிருக்கில் உலகத்திலுள்ள யாவரும் நம்மைப் பெரியவனெனமதித்துப் பூசனையாதிகள் செய்வார்களோ அவ்வாறிருக்க வேண்டுமெனச் சித்தத்திற்றிடமாகப் பொருந்தியுள்ள சம்ஸ்காரமென அறிக. (128)

வினா:—சாஸ்திரவாசனையாவது யாதெனின்.

விடை:—சுருதி ஸ்மிருதியாதிகளனைத்தையும் பாடஞ்செய்யவேண்டுமெனவும் திரவிய தேசகால மந்திரசுத்தி வகமாய் வருணாச்சிரமங்கட்குத் தக்கதாகச் (129)



கூறிய யாகாதி கருமங்களைத் திரவிய மந்திர கிரியாலோபங்களின்றிச் செய்து வரவேண்டுமெனவும் தரும, நியாய, சாங்கிய, பாதஞ்சல, மீமாம்ஸ, தருக்க, வியாகரண, காவிய, புராணாதி சாஸ்திரார்த்தங்கள் முழுவதையும் சித்தத்தில் தரிக்கச் செய்யவேண்டுமெனவும் திடமாகச் சித்தத்திற் பொருந்திய சமஸ்காரமென அறிக.

வினா:—தேகவாசனை லோகவாசனைகளைப்போல சாஸ்திரவாசனைகளையும் மலினவாசனைகளென்றது எதனாலெனின். (130)

விடை:—சாஸ்திரவாசனைகளும் ஞானத்துக்குப் பிரதிபந்தமாக இருத்தலினென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| இராசத்திற் றாமதம் பிரதானமாகும்போது | கலங்கற் சலத்தில் வண்டற்சலமேலிடுவது போலத் தீவிரத்திற்சத்துவகுணமும் ராசதகுணமு மடங்கித் தாமதகுணமதிகரிக்குங்காலத்தில் |
| அதிற் பிரதிவிம்பமாயுள்ள சிதாபாசன் | அதிகரித்த தாமத குணத்திற் பிரதிபலினமாக விளங்காநின்ற சீவனானவன் |

வினா:—சோம்பலாவது யாதெனின். (131)

விடை:—சிரவணாதிகள் செய்யும்போது சற்றுப்போது சென்று செய்வோமென அவைகளைக் கைவிடுதலும் நன்னெறிக்கண் முயலும் வலியின்மையுமாகிய சோர்வென அறிக.

வினா:—நித்திரையாவது யாதெனின். (132)

விடை:—நியமகாலமின்றிச்சிரவணாதிகள் செய்யுங்காலங்களினும் அந்தக்கரணவிருத்தி அவித்தையில் இலயமாவதென அறிக.

வினா:—மயக்கமாவது யாதெனின் (133)

விடை:—குருமுகமாகவேனும் தானாகவேனுஞ் சிரவணஞ்செய்யுங் காலத்துண்டாகியபொருணிலை தோன்றாத தெளிவின்மை யென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| இங்ஙன மிராசதகுண கற்பனை சொல்லப்பட்டன | இந்தப் பிரகார மிராசதகுணமாகிய அவித்தையால் கற்பிக்கப்பட்ட பொய்மைகள் கூறப்பட்டன. |



விடை:—மாயையும் அவித்தையும் மித்தை யெனவும், இவைகள் மித்தையானமையால் இவைகளை ஆசிரயித்திருக்கும் ஈசுவரனும் சீவனும் மித்தையெனவும், இவைசட் கதிட்டானமான பிரஹ்மம் ஒன்றே சத்திய மெனவும் அறிவதாகிய ஞானமென அறிக.

வினா:—கயிற்றரவுமித்தையானமையால் அதன் பாற்றோன்றிய நடன சலனாதிக்கிரியைகளு மித்தையாவது போல ஈசுவரனும் சீவனும் மித்தையானால் ஈசுவரானுக்கிரகமும் சீவன்பாற்றோன்றிய விசாரஞானமும் மித்தையேயாம். ஆதலால் அவைகள் சம்சாரதுக்கத்தை நிவிருத்தித்தற்கு ஏதுவாகாவெனின். (135)

விடை:—சமசத்தை யுடையவைகளே ஒன்றற்கொன்று சாதக பாதகங்களுக் கேதுவாகின்றமையால் மித்தையாகிய சம்சாரதுக்கத்தை நிவர்த்தித்தற்கு ஏதுவாகுமென அறிக.

வினா:—சமசத்தையுடைய வஸ்துக்களொன்றற்கொன்று சாதக பாதகங்களுக் கேதுவாகுமென்றது யாங்ஙன மெனின். (136)

விடை:—வியாவகாரிக பசிதாகாதிகள்வியாவகாரிக அன்

த்தினாலும், நிவர்த்தியாவதுபோலச், சிருஷ்டிதிருஷ்டிவாதக் கிரமத்தால் வியாவகாரிகரூபமாகவும், திருஷ்டிசிருஷ்டி வாதக்கிரமத்தால் பிராதிபாஸிக ரூபகமாகவுமுள்ள மித்தையாகிய சம்சாரம் மித்தையாகிய ஞானத்தால் நிவர்த்தியாகுமென அறிக.

வினா:—மாயையும் அவித்தையும் சடவத்துக்களானமையால் அவைகளை மித்தையெனல் பொருந்தும். பிரஹ்மத்தைப்போற் சித்தாகவுள்ள ஈசுவரனையும் சீவனையும் மித்தையெனல் பொருந்தாதெனின்.

(137)

விடை:—சலத்திற்றோன்றும் பிரதிவிம்பசூரியன் விம்பசூரியன்போற் றோன்றினும் கற்பிதமேயாவதுபோல மாயை அவித்தையிற் றோன்றிய ஈசுவரனும் சீவனும் சித்தைப்போற்றோன்றினும் கற்பிதர்களே யாவர்களென அறிக.

சீவேசுவரர்கள் கற்பிதர்களென்பதற்குப் பிரமாணம்.

(உருத்திர இருதயோபநிஷத்து)

ஆகாயத்திலே கடாகாய மடாகாயமென எப்படிக் கற்பிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே பரப்பிரஹ்மத்தினிடம் சீவேசுவரர்கள் [illegible]



நூல் க௦.

தாமதகுணமானது ஆவரணம் விக்ஷேபமென இரண்டு சத்திகளாகத் தோன்றும். இவ்விரண்டில் ஆவரணசத்தியானது தத்துவஞானியும் ஈசுவரனுந்தவிர மற்றைச்சீவர்கட்கெல்லாம் சரீரத்திரயம் சிதாபாசன் சாக்ஷிசைதன்னியங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரியவொட்டாமல்மறைக்கும். இதனால் மறைப்பையுடைய சீவர்கள் (29) தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென்றபிமானிப்பர். இந்த அபிமானமே அகங்காரக்கிரந்தி யென்றும் சம்சாரபந்த மென்றுஞ் சொல்லப்படும். சற்குரு கடாக்ஷத்தா லிவ்வாவரணம் நீங்கி (29) தத்துவங்களில் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரிகிறதே முத்தி. இப்படி ஆவரணசத்தியின் காரியஞ்சொல்லப்பட்டது.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| தாமதகுணமானது | தமோகுணப் பிரகிருதியானது |
| ஆவரணவிக்ஷேபமென்னும் | மறைப்பு ரூபசத்தி தோற்றரூப சத்தியென்னும் |
| இரண்டுசத்திகளாகத் தோன் | உபயசத்திகளாகத் தோன்று |

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| இவ்விரண்டில் | இவ்வுபயசத்திகளில் |
| ஆவரணசத்தியானது | அசத்தாவரணம் அபானுவரணமென்னும் மறைப்புச்சத்தியானது |

வினு:—அசத்தாவரணமாவது யாது அபானுவரணமாவது யாதெனின். (138)

விடை:—ஆத்மா இல்லையெனும்படி ஆத்மாவின் சத்பாவத்தை மறைத்து அதற்கு அசத்பாவத்தைச்சம்பாதிப்பது அசத்தாவரணம், ஆத்மா விளங்கவில்லை யெனும்படி ஆத்மாவின் பானபாவத்தை மறைத்து அதற்கு அபானபாவத்தைச் சம்பாதிப்பது அபானுவரணமென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| தத்துவஞானியும் | உண்மைஞானமுடையார்களும் |

வினு:—தத்துவ ஞானமென்பது யாது அஃதெத்தனை விதமாமெனின். (139)

விடை:—சத்தியமான பிரஹ்மத்தையறிவது தத்துவ ஞானமாகும். அது பரோக்ஷஞானம் அபரோக்ஷஞானமென



வினு:—பரோக்ஷஞான மென்பது யாதெனின். (140)

விடை:—புராணசிரவணத்தால் சுவர்க்காதிகளுண்டென்றறிதல் போல, வேதாந்தசாஸ்திரசிரவணத்தால் சச்சிதானந்த பூரணப்பிரஹ்ம மிருக்கிறதென் றறிதலென அறிக.

வினு:—பரோக்ஷஞானத்துக்கு முக்கியசாதனம் யாதெனின். (141)

விடை:—சுரோத்திரசம்பந்தியான அவாந்தரவாக்கியமென அறிக.

வினு:—அவாந்தரவாக்கியம் யாதெனின். (142)

விடை:—பரமாத்மாவின் சொரூபம் சீவனது சொரூபங்களைப் போதிக்கும் வாக்கிய மென அறிக.

வினு:—அவாந்தரவாக்கியம் சுவர்க்கம் அல்லது இந்திராதிப தேவர்கள் போலக் காலதேசங்களால் மறைபட்டு அன்னியமாயுள்ள †வியவகித வஸ்துக்களைப் போதிக்கும் போது பரோக்ஷஞானத்துக்குச் சாதனமாகும். அங்ஙனமின்றிப்பரமாத்மாவைப் போதிக்கும்போது பரமாத்மா காலதேசங்களால் மறைபடாத அவ்வியவகிதமாகவும் தானாகவுமுள்ள பொருளானமையால் அபரோக்ஷ ஞானத்துக்கும் சாதனமாகுமே யெனின். (143)

விடை:—தசமனிருக்கிறனென்ற ஆப்தன் வாக்கியத்தால் தசமன் காலதேசங்களால் மறைபடாத அவ்வியவகிதனாகவும் தானாகவு மிருக்கினும் தசமனிருக்கிற னென்னும் பரோக்ஷஞான முண்டாகிறதேயன்றி நான் தசமனென்னும் அபரோக்ஷஞான முண்டாகிறதில்லை. அதுபோல் பரமாத்மா காலதேசங்களால் மறைபடாத அவ்வியவகிதமாகவும் தானாகவும் இருக்கினும் பரமாத்மா இருக்கிறதென்னும் அவாந்தரவாக்கியத்தால் பரமாத்மா இருக்கிறதெனப் பரோக்ஷஞான முண்டாகுமேயன்றி அபரோக்ஷஞான முண்டாகாது. ஆதலின் அவாந்தரவாக்கியம் அபரோக்ஷஞானத்துக்குச் சாதனமாகாதென அறிக.

வினா:—பரோக்ஷஞானம் எப்போது பூர்த்தியாகுமெனின். (144)

விடை:—சற்குரு சற்சாஸ்திரானுசாரமாகப் பிரஹ்ம முண்டென்னும் நிச்சயம் நழுவுதலின்றித் திடப்பட்டபோதென அறிக. (அவதி)

வினா:—பரோக்ஷஞானபலம் யாதெனின். (145)

விடை:—அசத்வாபாதக ஆவரணநிவிருத்தி யென அறிக. (பலம்)

வினா:—அபரோக்ஷஞானமென்பது யா…



விடை:—சச்சிதானந்தமாகிய பிரஹ்மம் நானென்றறிதலென அறிக.

வினா:—அபரோக்ஷப் பிரஹ்மஞானம் எத்தனைவகையெனின். (147)

விடை:—அதிட்டம் திடமென்னும் பேதத்தால் இரண்டுவகையென அறிக.

வினா:—அதிட அபரோக்ஷஞானமென்பது யாது அதனாலுண்டாகும் பலம் யாதெனின். (148)

விடை:—அசம்பாவனை விபரீதபாவனைகளோடு தயமாகின்ற ஜீவப்பிரஹ்ம ஐக்கியநிச்சயம் அதிட அபரோக்ஷஞானமாகும். உத்தமலோகப் பிராப்தியும் ஞானிகட்கேனும் அல்லது அரசர்கட்கேனும் செல்வர்கட்கேனும் பிள்ளையாகச் சனிக்குதல் அதன் பலமாகுமென அறிக.

வினா:—திடாபரோக்ஷ ஞானமென்பது யாதெனின். 149

விடை:—அசம்பாவனை விபரீதபாவனைகளின்றி யுதயமாகின்ற பிரஹ்மான்ம ஐக்கியநிச்சயமென அறிக.

விடை:—சுரோத்திரசம்பந்தியான மகாவாக்கியமென அறிக.

வினா:—மகாவாக்கியமென்பது யாதெனின். (151)

விடை:—சாமவேதத்தின் முடிவாயுள்ள அதுவே நீ நீயே அது வென்னும் உபதேசவாக்கியமென அறிக.

வினா:—திடாபரோக்ஷ ஞானத்துக்கு மகாவாக்கியமே முக்கியசாதனமானால் சிரவணாதிகள் முக்கியசாதனங்களல்லவோவெனின். (152)

விடை:—அஞ்சனாதிகள் நேத்திரரோகங்களை நிவர்த்திக்கிற வழியாகச் சூரியதரிசனத்துக்குச் சாதனங்களாகுமேயன்றி நேத்திரம்போல முக்கிய சாதனங்களாகா. அதுபோல சிரவணாதிகளும் ஞானமடைதற்கு விக்கினமாயுள்ள சம்சயாதிகளை நிவர்த்திக்கிறவழியாக ஞானத்துக்குச் சாதனங்களாகுமேயன்றி மகாவாக்கியம்போல முக்கிய சாதனங்களாகாவென அறிக.

வினா:—திடாபரோக்ஷஞானம் எப்போது பூர்த்தியாகுமெனின் (153)

விடை:— தேகம் நானென்னும் புத்தி பாதிக்கப்பட்டு



னென்னும் புத்தியும் மாறாதிருப்பதுபோலப் பிரஹ்மமே நானென்னும் நிச்சயம்மாறாமல் நிலைபெற்றபோதெனஅறிக.

வினா:—திடாபரோக்ஷஞானபலம் யாதெனின் (154)

விடை:—அபாநுபாதக ஆவரணமும் † விக்ஷேபமுமாகிய காரியசகித அஞ்ஞானத்தின் நிவிருத்தியும் பிரஹ்மப்பிராப்தியுமாகிய மோக்ஷமென அறிக.

வினா:—இத்திடாபரோக்ஷஞானமாகிய தத்துவஞானமுள்ளார் யாவரெனின் (155)

விடை:—பொன்னிற் பூடணம்போற் றன்னிற்றோற்றுகின்ற தேகாதிப்பிரபஞ்சங்களனைத்தும் மித்தையெனவும் சத்தியமாகிய பிரஹ்மமே தானெனவும் யாதொரு பிரதிபந்தங்களுமின்றித் திடமாக அறிந்து சாந்தமுற்றிருப்பவரென அறிக.

வினா:—பிரதிபந்தங்களெவை அவைகளெத்தனை விதமாமெனின் (156)

விடை:—ஞானமடைதற்கு விக்கினமாக இருப்பவைகள் பிரதிபந்தங்களாம். அவைகள் பூதம் வர்த்தமானம் பௌஷியமென மூவிதமாக இருக்குமென அறிக.

---

† தூலசூட்சும சரீரங்களோடு சேர்ந்துள்ள சிதாபாசனும் அவன்கருமமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவ ஜனனமரணாதி

வினு :—பூதப்பிரதிபந்தமாவது யாதெனின் (157)

விடை :—கைவிட்டிறந்த எருமையைப் பற்றுஞ் சந்நியாசியாரிடத்திற் கண்டதுபோலப பூருவமநுபவிக்கப்பட்டுநீங்கிய விடயங்களைப்பற்றியுள்ள வாசனையென அறிக.

வினு :—சந்நியாசியாரிடத்திற்கண்டது யாது? அதுபோன்ற பூதப்பிரதிபந்தம் ஞானமடைதற்குத் தடையாகவுள்ளதென்றது எதனுலெனின் (158)

விடை :— ஓர் சந்நியாசியார் பூர்வாச்சிரமத்திருக்கும்போது கிரகசம்ரக்ஷணைக்குத் தக்க பால்கொடுத்துவந்த எருமை மரணமடைந்தவுடனே யினிக்கிரகசம்ரக்ஷணைசெய்ய நம்மால் முடியாதெனத் துறந்து சந்நியாசம்பெற்றுக் குருவையடைந்து ஞானவிருப்பத்தாற் சிரவணபூர்வகமாகத் தியானஞ் செய்துவருங்காலையில் தியானந் திடப்படுதற்குத் தடையாக அவர் சித்தத்தில் எருமையைப்பற்றிப் பூர்வம் அடைந்துள்ள வாசனையானது அடிக்கடி நம்கிரகத்திலிருந்த எருமை நாலுகால் வெண்மையோடு வெடிவால் நெற்றிச்சுட்டி விரிந்த கொம்பு முதலியவற்றையுடையதாய் யானைபோலுயர்ந்து பருத்து நீண்ட தேகமுடையது, பதக்குப்பால் கறக்கும், அப்படிப்பட்ட எருமையும் இனியுற்பவிக்குமா ...



உதித்துக்கொண்டிருந்த தென்பது சந்நியாசியாரிடத்திற் கண்டகதையாம். இங்ஙனம் கைவிட்டுத் தவறிய இட்டவிஷயங்களைப்பற்றிப் பலபல சங்கற்பங்களாகவுதித்துச் சித்தத்தை யேகாக்கிரமாய் நிலைபெறவொட்டாமல் சலிக்கச்செய்கின்றமையினென அறிக.

வினு :—ஆசாரியர் பூதப்பிரதிபந்தத்தை நிவர்த்திக்கும் உபாயம் யாதெனின் (159)

விடை :—அவனவன் புத்தியை யனுசரித்துப் போதிப்பதென அறிக.

வினு :—எருமைவாசனையாகிய பூதப்பிரதிபந்தத்தை நிவர்த்திக்கும் உபாயம் யாதெனின் (160)

விடை :—எருமையென்பதிலுள்ள நாமம், உருவம். இருப்பு, விளக்கம், இன்பம் என்னும் ஐந்தம்சங்களில் எருமையென்னும் நாமம் தலை கால் வாலுடலாதியஉருவம் ஆகிய இரண்டம்சங்களும் உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னுமில்லாததுமன்றி மத்தியிலும் விசாரிக்கில் பொருளாக இன்றித் தோற்றமாத்திரமாகவுள்ள மித்தையெனவும், இருப்பு விளக்கம் இன்பமென்னும் சத்து சித்து ஆனந்தமாகிய மூன்றம்சங்களும் நாமரூபத்தோற்றங்களுக்கு முன்பின் மத்தியாகிய மூன்று காலத்தினுமுள்ளனவானமையால் மெய் ...

வினா:—வர்த்தமானப் பிரதிபந்தம் யாதெனின் (161)

விடை:—விஷபாசக்தி, பிரஞ்ஞாமந்தம், குதர்க்கம், விபரியயதுராக்கிரகம் என்னும் நான்குமாம். இவைகளிலொன்றிருக்கினும் ஞானம் உதியாதென அறிக.

வினா:—இவைகளில் விஷயாசக்தி யாதெனின் (162)

விடை:-மனைவி புத்திர தனாதிவிடயங்களில் என் மனைவி என் புத்திரன் என் தனமென்னும் அபிமான பூர்வகமாய்த் திடமாக வைத்துள்ள பிரியமென அறிக.

வினா:—இஃதிருக்கில் ஞானமுதயமாகாதென்றது எதனாலெனின் (163)

விடை:—ஆத்ம விசாரகாலத்தினும் ஏகாக்கிரத்தைப் பொருந்தவொட்டாமல் இட்டமான விஷயங்களைப்பற்றி யிவை நல்லவை இவைகளுக்கு நாசம் வாலாகாதென்பதாதிய பலபல சங்கற்பரூபமா யடிக்கடி சித்தத்தைச் சலிக்கச்செய்கின்றதானமையினென அறிக.

வினா:—விஷயாசக்தி யெதனால் நிவர்த்தியாகுமெனின் (164)

விடை:—சமமுதலிய சாதனங்களை யுள்ளபடி யநுட்டி...



† அர்ச்சனங்களில் எந்தெந்தத் தோடங்களுள்ளனவாகச் சொல்லப்படுகின்றனவோ சொப்பனபதார்த்தம்போல் அவைகள் மித்தையென்பதற்கு எந்தெந்த யுத்திகள் சொல்லப்படுகின்றனவோ அவைகளுக்குச் சாஸ்திரானுசாரமாக மேலுமேலும் சிந்திப்பதாகிய மனனத்தினாலுமென அறிக.

வினா:—பிரஞ்ஞாமந்தம் யாதெனின் (165)

விடை:—ஆசாரியர் சுருதிப் பிரமாண திருட்டாந்தங்களால் போதிப்பதாகிய மகாவாக்கியார்த்தக் கிரகணசாமர்த்தியக் குறைவென அறிக.

வினா:—இஃதிருக்கில் ஞானமுதயமாகாதென்றது எதனாலெனின். (166)

விடை:—புத்திவிருத்தி விடயவாசனையால் தூலீகரித்துத் தெளிவின்றி யிருத்தலினென அறிக.

வினா:—பிரஞ்ஞாமந்த மெதனால் நிவிருத்தியாகுமெனின். (167)

விடை:—நிரந்தரம் சிரேயத்தோடு செய்வதாகிய சிரவணத்தாலென அறிக.

வினா:—சிரவணமாவது யாது, அஃதெத்தனை விதமாமெனின் (168

விடை:—குரு முன்னிலையிற் சடுவிதலிங்கதாற்பரியமாகச் செய்யாநின்ற வேதாந்தசாஸ்திரார்த்தக் கிரகணரூபசித்தவியாபாரம் சிரவணமாம். அது வேதாந்தவாக்கியத்துக்குஞ் சுரோத்திரத்துக்குமுள்ள சம்யோகரூப சிரவணமெனவும், வேதாந்தவாக்கிய விசாரரூபசிரவணமெனவும் இரண்டு விதமென அறிக.

வினா:—சடுவிதலிங்கங்களெவை யெனின். (169)

விடை:—உபக்கிரமம், உபசங்காரம் (1) அப்பியாசம் (2) அபூர்வதை (3) பலம் (4) அருத்தவாதம் (5) உபபத்தி (6) ஆகிய இவைகளாம். இவைகளில் உபக்கிரமம் உபசங்காரமென்னு மிரண்டுமொரு லிங்கமென அறிக.

வினா:—இவைகளில் உபக்கிரம உபசங்கார லிங்கம் யாதெனின். (170)

விடை:—சிருட்டிக்குப் பூர்வம் நாமரூபரகிதமாகிய சத்துமாத்திரமாகவே யிருந்ததென விளக்கிப் பிரஹ்மத்துக்குச் சுவகதாதிபேதங்களில்லையென நிராகரித்து அத்துவிதத்தைப் பிரதிபாதிப்பது உபக்கிரம லிங்கமாம். பிரபஞ்சத்தைப் பிரஹ்மத்தி லபவாதித்துப் பிரத்தியகாத்மாவிற்குப் பிரஹ்மத்தோடைக்கியங் கூறி யத்துவிதத்தைப் பிரதிபாதிப்



வினா:—இவ்விரண்டு லிங்கங்களையும் ஒரு லிங்கமென்றது எதனாலெனின். (171)

விடை:—பிரகரணத்தினாரம்பம் உபக்கிரமம்; பிரகரணத்தின் முடிவு உபசங்காரமாம். ஆரம்பத்திற் சொல்லிய அருத்தத்தையே முடிவிலுஞ் சொல்லுகின்றமையினென அறிக.

வினா:-அற்றேலிரண்டற்கும் ஒரேபெயர் கூறாமல் உபக்கிரமம் உபசங்காரமென வெவ்வேறு பெயர் கூறுவானேனெனின். (172)

விடை:—ஒன்று அத்தியாரோபத்துக்கு முன்னும் மற்றொன்று அபவாதமாகிய ஈற்றினும் பிரஹ்மம் அத்துவிதமாயுள்ளதெனத் தெரிவிக்கின்றமையினென அறிக.

வினா:—அப்பியாசலிங்கமாவது யாதெனின். (173)

விடை:—ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள் போலும் யாசிப்பவன் தனக்குப் பிரயோசனமாயுள்ள ஓரபிப்பிராயத்தை வெவ்வேறு வசனங்களால் விளங்கக் கூறுவது போலும் பிரஹ்மம் அத்துவிதமாயுள்ளதென வெவ்வேறு யுத்திகளால் அடிக்கடி பிரதிபாதிப்பதென அறிக.

(174)

விடை :--பிரஹ்மம் சுயம்பிரகாசமா யிருத்தலால் உபநிஷத்துக்களாலன்றிப் பிரத்தியக்ஷ முதலிய இதரப்பிரமாணங்களாலறியப்படாதெனப் பிரதிபாதிப்பதென அறிக.

வினா :—பலலிங்கம் யாதெனின். (175)

விடை :—கூடத்தனை யறிந்தால் சகலத்தையு மறிந்ததாகுமெனவும், அந்தஞானத்துக்குச் சன்மாதி அனர்த்த நிவிருத்தியும் பிரஹ்மப்பிராப்தியுமாகிய மோக்ஷமும் பலமெனவும் பிரதிபாதிப்பதென அறிக.

வினா :—அருத்தவாதலிங்கம் யாதெனின். (176)

விடை :—பிரத்தியகாத்மசொரூபமாகிய பிரஹ்மத்துக்குப் பஞ்சகிருத்திய கருத்திருத்துவம் பிரதிபாதிப்பதும் பேதஞானத்தின் நிந்தையினையும் அபேத ஞானத்தின் துதியையும் பிரதிபாதிப்பதுமென அறிக.

வினா :—உபபத்திலிங்கம் யாதெனின். (177)

விடை :—சாத்திரங்களிற் பிரதிபாதிக்கப்படும் அத்வைதார்த்தத்துக்கு அநுகூலமான திருட்டாந்தங்களை உபபத்தியென்பர் அதாவது காரணமாகிய மண்ணிற்கும் அதிற்றோன்றிய காரியமாகிய கடாதிகளுக்கும் காரணமாகிய தங்கத்திற்கும் அதிற்றோன்றிய காரியமாகிய



றோன்றிய காரியமாகிய ஜகத்திற்கும் வித்தியாசமில்லையெனப் பிரதிபாதிப்பதென அறிக.

வினா :—இவ்வறுவித லிங்கதாற்பரியங்களையன்றி வேறு தாற்பரியமாகச் சிரவணஞ்செய்யலாகாதோ வெனின். (178)

விடை :--ஜிஞ்ஞாசுக்களால் செய்யப்பட்ட சிரவணமானது இந்த ஷட்வித லிங்கங்களில் ஒரு விதங்கதாற்பரியமாகவேனுமிருக்கவேண்டும். அங்ஙனமிராததாயின் பயனற்றதாகுமென அறிக.

வினா :—குதர்க்கமாவது யாதெனின். (179)

விடை :—வேதாந்த சாஸ்திரங்களிலுள்ள அத்வைதார்த்தங்களைப் பிரதிபாதிப்பனவாகிய வாக்கியங்கட்கு விபரீதமாக அர்த்தக்கிரகணஞ்செய்துகொண்டு நிர்மூலமாயுள்ள விரோத தர்க்கயுக்திகளாற் றருக்கித்தலென அறிக.

வினா :-இஃதிருந்தால் ஞானமடையக் கூடாதென்றது எதனாலெனின். (180)

விடை :—சாத்திரங்களிலுள்ள பிரஹ்மாத்மைக்கியாநுசார எதார்த்த அருத்தங்களை அகமுக ஏகாக்கிரமாக இருந்து சிரவணம்பண்ணவொட்டாமல் அநுபவவிரோத சாஸ்தி

ஸைசந்த யுக்திகள் தேடித்தருக்கித்தலிற்குனே புத்தியை நாடோறுஞ் செலுத்திச் சலிக்கச்செய்கின்றமையினென அறிக.

வினு:-இக்குதர்க்கம் எதனுல் நிவர்த்தியாகுமெனின் 181

விடை :—குரு சாஸ்திரானுசாரமான மனனத்தாலென அறிக.

வினு :—குரு சாஸ்திரானுசாரமாயுள்ள மனனமாவது யாதெனின். (182)

விடை :—குருமுன்னிலையில் கேட்டுள்ள சாஸ்திரார்த்தங்களைத் தானுகவாவது தனக்கொத்த சாதுக்களோடாகவாவது ஏகாந்தத்தேகாக்கிரமாயிருந்து சுருதிகட்கு அவிரோதமாக ஜீவப்பிரஹ்ம அபேதசாதக பேதபாதகதருக்கங்கள் அனுமான முதலிய யுத்திகளாகிய இவைகளோடு சிந்தித்தலென அறிக.

பிரமாணம்.

(வேதாந்த சூளாமணி)

கேட்ட பொருளுத்தியிற் சிந்தித்தல் தீதில் மாமனனம்.

வினு :—தருக்கமாவது யாதெனின். (183)

விடை :—ஆத்மாநாத்ம விசாரவினுவிடை ரூபமாகிய அபேதசாதக பேதபாதக ...



வினு :-இத்தருக்கங்களில் அபேதசாதக தருக்கம் யாதெனின். (184)

விடை :--ஜடசேதனமாகிய ஜகத்து யாதாகுமென ஆசங்கை நிகழ்ந்தபோது அறிவாகிய பிரஹ்மசொரூபமேயாகும்; அறிவையன்றி ஜகத்துக் காணப்படாமையின். அங்ஙனங் காணப்படாவிடினும் அறிவோடு சேர்ந்து காணப்படுகிறதேயெனின் அதுவும் இருக்கிறது விளங்குகிறது நன்றுயிருக்கிறதெனப் பிரஹ்மத்தின் சச்சிதாநந்த சொரூபமாகவே காணப்படுகிறது. சச்சிதாநந்தத்தோடு நாமமும் ரூபமுங் காணப்படுகிறதேயெனின், தங்கத்திற் கடகமென்னும்நாமமும் வளையமாயுள்ள ரூபமுந்தோன்றினும் அவை தங்கத்துச்கு அந்நியப்பொருளாகாமல் எப்படித் தங்கமேயாகுமோ மண்ணிற் கடமென்னும் நாமமும் வட்டவடிவாகிய ரூபமுந் தோற்றினும் அவை மண்ணிற் கன்னியப்பொருளாகாமல் எப்படி மண்ணேயாகுமோ அப்படி நாமரூபங்கள் தோற்றினும் அவை சச்சிதாநந்த சொரூபமாகிய பிரஹ்மத்துக்கன்னியப் பொருளாகாமல் பிரஹ்மசொரூபமேயாகு மென்பதாதிய சல்லாபங்களென அறிக.

வினு :—பேதபாதக தருக்கம் யாதெனின். (185)

விடை :—சடசேதனமாகிய ஜகத்திருக்குங்கால் பிரஹ்மம் எங்ஙனம் அத்துவிதமாமென ஆசங்கைவர ஜகத்தென்பது ...

பொருளல்லாமையின், ஜகத்துப்பொருளல்லவென்பது எதனா
லெனின், அது இன்மையே வடிவமாக இருத்தலின். எங்ஙன
மெனின் எது முன்னும் பின்னுமில்லாததோ அது மத்தியினு
மில்லாததே யாகுமென்னும் நியாயவாயிலாக ஆராயுமிடத்
தில் ஜகத்துச் சிருட்டிக்குமுன்னும் பிரளயத்திற்குப் பின்னு
மில்லாததேயாகும்; ஆனால் மத்தியிற்றோன்றுகிறது. இல்
லாதது தோற்றுமாவெனின், ஜனிப்புக்கு முன்னும் பின்னும்
தோற்றவில்லை; மத்தியில்மாத்திரந் தோற்றுகிறது. அங்ஙனந்
தோற்றுகிறதும் இல்பொருளாகிய கயிற்றரவு சொப்பனபதார்
த்தம்போல மித்தையாகத் தோற்றுகின்றமையால் ஜகத்து
இல்பொருளேயாகும். ஆகலால் பிரஹ்மம் அத்துவிதமே
யாகுமென்பதாதிய சல்லாபங்களென அறிக.

வினா:—அபேதசாதக அநுமானாதிய யுத்திகளெவை
யெனின்
(186)

விடை:—எது சச்சிதானந்த சொரூபமோ அது பிர
ஹ்மத்துக் கன்னியமன்று. எது சச்சிதானந்த சொரூபமல்
லவோ அது பிரஹ்மத்துக்கு வேறாகும். ஆதலின் ஈசுவரன்
சச்சிதானந்த சொரூபமாயிருப்பதால் பிரஹ்மத்துக் கன்னி
யமன்று. கடம் வியவகாரத்தில் சச்சிதானந்த சொரூபமல்
லாமையால் பிரஹ்மத்துக் கன்னியமாகும். ஜீவன் சச்சிதா
னந்த சொரூபமாயிருப்பதால்



வென்னும் அநுமானப் பிரமாணயுத்தியும் கடாகாசத்துக்
கும் மடாகாசத்துக்கும் கடமடவுபாதிகளை நீக்கிப் பார்க்கில்
பேதமில்லாததுபோலப் புத்திமாயையாகிய உபாதிகளை நீக்
கிப் பார்க்கில் ஜீவப்பிரஹ்மங்களுக்குப் பேதந்தோன்றுகிற
தில்லை யென்னும் உவமானப்பிரமாணயுத்தியும் இங்கு நானா
வென்பது சிறிதுமில்லையென்னும் சுருதியில் பேதம் நிஷே
திக்கப்பட்டிருக்கிறது. உண்மையில் அபேதமில்லாத பக்ஷ
த்தில் இச்சுருதி வாக்கியம் ஏற்பட்டிருக்கமாட்டாது. ஒரு
வனை உபவாசியென்பது அவனுடைய தூலபீனத்துவத்தால்
நீங்கப்படுவதுபோலப் பேதமானது இச்சுருதியினால் நீங்கப்
படுகிறதென்னும் அருத்தாபத்திப்பிரமாண யுத்தியுமாகிய
மூன்றுமென அறிக.

வினா:—பேதபாதக அநுமானாதிய யுத்திகளெவையெ
னின்
(187)

விடை:—ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் உபாதி சம்பந்
தமாயிருத்தலால் மித்தையாம். எது மித்தையன்றோ அது
ஔபாதிகமுமன்று. வியவகாரத்தில் கடபடங்களின் பேதம்
ஔபாதிகமாக இல்லாமையால் சத்தியமாயிருக்கிறது. ஆ
கையால் எவ்விடத்திலுபாதி சம்பந்தமிருக்கிறதோ அவ்விடத்
தில் பேதமும் மித்தையாக இருக்கிறதென்னும் அநுமானப்
பிரமாணயுத்தியும் பிம்பப்பிரதிபிம்பங்களின் பேதம் மித்

தையாயிருப்பதுபோல ஜீவப்பிரஹ்மங்களின் பேதமும் மித்தையென்னும் உவமானப் பிரமாணயுக்தியும் மஹாவாக்கியங்களில் ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் சொல்லப்படுகிறது. உண்மையில் பேதம் மித்தையாக இல்லாத பக்ஷத்தில் மஹாவாக்கியங்களில் அபேதம் பிரதிபாதிக்கப்பட்டிராது. பிரதிபாதிக்கப்பட்டிருத்தலால் அபேதம்சித்திக்கிறதென்னும் அருத்தாபத்திப்பிரமாணயுக்தியும் சாக்கிர சொப்பனங்களில் உபாதியால் ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் தோன்றுகிறது. சுழுத்தியில உபாதியில்லாததினால் பேதந்தோன்றுகிறதில்லை. ஆகையால் ஜீவப்பிரஹ்மங்களுக்குப் பாரமார்த்திகத்தில் பேதமில்லையென நிச்சயிக்கப்படுகிறதென்னும் அநுபலப்திப் பிரமாணயுக்தியும் ஆகிய நான்குமென அறிக.

வினா:—விபரியயதுராக்கிரகமாவது யாதெனின் (188)

விடை:—நான் கர்மநிட்டன், பிராஹ்மணன், நான் கிரகஸ்தன், பலவான், பண்டிதன், கர்த்தா, போக்தாவென்று அநாத்மாவாகிய தேகாதிகளில் விபரீதமாக வைத்துள்ள ஆத்மபுத்தியைவிடாத யுக்திரகிதமாகிய அடமென அறிக.

வினா:—இஃதிருந்தால் ஞானமுதயமாகாதெ



விடை:—தேகாதிகட்கு விலக்ஷணமாயும் அதிசூட்சுமமாயுமுள்ள ஆத்துமாவில் அகம்புத்தி உதயமாதற்கு விரோதமாகத் தேகாதி அநாத்மவஸ்துக்களில் யானெனதென்னும் விபரீதபுத்தி நீங்காமல் திடமாயிருத்தலினென அறிக.

வினா:—விபரியயதுராக்கிரகம் எதனால் நிவர்த்தியாகுமெனின் (190)

விடை:—நிதித்தியாசனத்தால் நிவர்த்தியாகும். இதனை விபரீதபாவனையென்றும் துராக்கிரகந்தையென்றும் இரண்டாகப் பிரித்து முறையே நிதித்தியாசனத்தினும் சமாதியினும் நிவர்த்தியாகுமென்பாருமுளரென அறிக.

வினா:—நிதித்தியாசனமாவது யாதெனின் (191)

விடை:—மனனத்தால் நிச்சயித்தவண்ணம் கூடஸ்தராகிய நாமே பிரஹ்மம் பிரஹ்மமே கூடஸ்தராகிய நாமென நிரந்தரம் நேயத்தோடு தயிலதாரைபோலிடைவிடாமற் றியானிக்கின்ற பிரஹ்மாத்மைக்கியத்துவவடிவ சித்தவிருத்திப் பிரவாகமென அறிக.

(பிரமாணம்.)

(வேதாந்த சூளாமணி)

வினு :-பௌஷியத் பிரதிபந்தமாவது யாதெனின் (192)

விடை :—ஜன்மாந்தர ஏதுவான பிராரப்தசேடமும் பிரஹ்மலோகாதி யிச்சையுமென அறிக.

வினு :—இவையிருக்கில் ஞானமடைதற்குக் கூடாதென்றது எதனுலெனின் (193)

விடை :—சருவசங்கப்பரித்தியாகத்தால் ஞானம் சித்திக்கத்தக்கதாகும். அதற்கு விரோதமாகப் பிராரத்தசேடம் ஞானுநுட்டான காலத்தினும் யாதேனுமோரவஸ்துவில் தயை விசுவாசங்களை யுதிப்பிக்கின்றமையினுனும் பிரஹ்மலோக இச்சை அவ்வுலகங்களையடைதற்குரிய சாதனுநுட்டான சங்கற்பங்களை யுதிப்பிக்கின்றமையினுனுமென அறிக.

வினு :—பௌஷியத் பிரதிபந்த மெப்போது நிவர்த்தியாகுமெனின் (194)

விடை :—ஜனனமெடுத்துப் பிராரப்தபோகங்களை யநுபவித்தாலன்றி நிவர்த்தியாகாது. இதனிவிருத்திக்குக் காலநியமமில்லையென அறிக.

வினு :—ஒரு பிராரப்தகன்ம...



விடை:-பிரஹ்மஹத்தியாகிய ஒரு பாவகன்மமானது நரகதுக்கங்களை யநுபவிக்கச்செய்து பின்னர் பாம்பு, புலி, சுவானம், புழு முதலிய பத்து ஜன்மங்களுக் கேதுவாயிருங்கிறதென்றும் கார்த்திகை பௌரணமிதினத்தில் சுவாமி தரிசனமாகிய ஒரு புண்ணிய கன்மமானது சகுதி ஐசுவரியங்களையுடைய ஏழு பிராமண ஜன்மங்களுக் கேதுவாயிருக்கிறதென்றும் புராணுதிகள் கூறுகின்றமையால் விரோதமல்லவென அறிக.

வினு :—விசாரஞானமுடையவர்களுக்குப் பலஜன்மம் வந்ததென் றெங்கே சொல்லப்பட்டிருக்கிறதெனின் (196)

விடை :— சங்கற்பசகிதராயிருந்து விசாரம்பண்ணின வாமதேவருக் கொரு ஜன்மம் வந்ததென ஆத்மபுராணத்திலும் சடபரதருக்கு மூன்று ஜன்மம் வந்ததெனப் பாகவதத்திலும் யோகப்பிரஷ்டனு மிரண்டொரு ஜன்மத்திலே கிருதார்த்தனுவானெனப் பகவற்கீதையிலுஞ் சொல்லப்பட்டிருக்கிறதென அறிக.

வினு :—சாஸ்திரவிசாரம் பண்ணியும் ஜன்மம் வருமெனின் விசாரஞானமும் வியர்த்தமாமோ வெனின். (197)

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| ஈசுவரனுந் தவிர | மாயாப்பிரதிவிம்பராகிய ஈசுவரனும் நீங்கலாக |
| மற்றைச்சீவர்கட்கெல்லாம் | ஏனைய சீவர்களனைவருக்கும் |
| சரீரத்திரயம் | தூல சூக்குமகாரணமாகிய மூன்று சரீரம் |
| சிதாபாசன் | சித்பிரதிவிம்பனாகிய சீவன் |
| சாக்ஷிசைதன்னியம் | சாக்ஷிமாத்திரமாயுள்ள கூடஸ்தசேதனம் |
| என்னுமிவைகளுள் | என்று சொல்லப்பட்ட இத்தத்துவங்களுள் |
| ஒன்றற்கொன்றுள்ள | ஓர் தத்துவத்திற்கும் மற்றோர் தத்துவத்திற்குமிராநின்ற |
| பேதம் | சடாபாசசித்திலக்கணமாகிய வித்தியாசங்களை |
| தெரியவொட்டாமல் | வேறுபிரித்தறிதற்குக்கூடாதவண்ணம் |
| மறைக்கும் | தோன்றாதிருக்கச்செய்யும் |

வினா :—தத்துவஞானிக்கும் ஈசுவரனுக்கும் ஆவரணசத்தி மறைவுசெய்யாதென்றது எதனாலெனின். (198)

விடை :—ஆவரணசத்தியில் பேதந்தெரிய வொட்டாமல் மறைக்கப்பட்டிருந்த (உக) தத்துவங்களில் சாக்ஷிசை



ஞானத்தாலறிந்து, ஆவரணசத்தியை அத்தியந்த நாசஞ்
செய்துவிட்டவன் ஞானியானமையினாலும், பிரஹ்மமேதா
னெனவும் மற்றைத்தத்துவங்களனைத்தும் மித்தையென்னும்
இயற்கைஞானத்தோடு அநாதியே அந்தகாரசூனியமாயிருக்
கும் சூரியன்போல ஆவரணசூனியமாயிருப்பவன் ஈசுவரனு
னமையினனுமென அறிக. தெங்ஙனமெனின் 199

வினா :—ஆவரணசத்தி மறைப்ப
சக்ஷுரிந்திரியத்துக்கு
விடை :—அந்தகாரமானது
ரூபவிஷயங்களின் கருப்புச் சிவப்பு வெண்மையாதிய உருவ
வித்தியாசங்களை யறியவொட்டாமல் மறைப்பதுபோலச் சரீர
சிவ சைதன்னியங்களின் சட, ஆபாச, சித்திலக்கணங்களா
கிய வித்தியாசங்களை அறியவொட்டாமல் மறைக்கிறதென
அறிக.

(பிரமாணம்.)

(கைவல்லிய நவநீதம்.)

தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட,
ஞானிக டமையு மன்றி நாஸ்திக பாதி யென்னும், ஊனிடை
யுயிர்க ளுள்ளத் துணர்விழி குருடாம் வண்ணம், வானிலம்
திசைகள் மூடும் மழைநிசி இருள்போல் மூடும்.

வினா :-ஆவரணசத்தியால் மறைக்கப்பட்டிருக்கும் அனு
(200)

விடை:—தூலசரீரத்தின் பருத்தலிளைத்தலாதிகளை நான் பருத்தேனிளைத்தேனெனவும்; சூக்ஷ்மசரீரத்தின் சங்கற்பம், நிச்சயம், பலம், பலமின்மை, காண்டல், கேட்டல், வசனம், தானமுதலியவைகளை நான் சங்கற்பித்தேன், நிச்சயித்தேன், நான்பலவான், பலவீனன், நான்கண்டேன், கேட்டேன், நான்வசனித்தேன், கொடுத்தேன் எனவும். காரணசரீரத்தி னறியாமையை நானறியேனெனவும், சிதாபாசன் சுட்டறிவை நான் சுட்டியறிந்தேனெனவும் அகஞ்சத்தார்த்தமாகிய ஆத்மாவிலேற்றி விவகரிக்கும்போது ஆத்ம விலக்கணங்களும், ஆத்மாவின் சச்சிதாநந்த விலக்சணங்களைச் சரீரத்திரயம் சிதாபாசன்மேலேற்றி, என்சரீராதிகள் நன்றாய் விளங்குகிறதென விவகரிக்கும்போது சரீரத்திரய சிதாபாச இலக்கணங்களும் ஆவரணசத்தியால் மறைக்கப்பட்டிருக்கிற அநுபவம் காணப்படுகிறதென அறிக.

| (பதம்) | (பொருள்.) |
|---|---|
| இதனுல் மறைக்கப்பட்ட ஜீவர்கள் | இவ்வாவரணசத்தியால் மறைவுசெய்யப்பட்டிராகின்ற ஜீவர்கள் |
| (உக) தத்துவங்களையும் | தூலமுதல் சைதன்னியமீறுகிய (உக) தத்துவங்களையும் |
| | [illegible] |



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இந்த அபிமானமே அகங்காரக்கிரந்தியென்றும் சம்சாரபந்தமென்றும் சொல்லப்படும் | இப்படிப்பட்ட அபிமானமே அகங்காரமுடிச்சென்றும் சம்சாரக்கட்டென்றும் சாத்திரங்களிற் கூறப்படும் |

வினு:—அகங்காரமென்பது யாதெனின். (201)

விடை:—தேகாதிகளில் யானெனதென்னும் அபிமானுகாரமாக எழாநின்ற அந்தக்கரணவிருத்தியென அறிக.

வினு:—இவ்வகங்காரம் எத்தனைவிதமாமெனின். (202)

விடை:—தன்சொருபத்தைப்பற்றியெழாநின்றது சுத்த அகங்காரமெனவும், தேகமுதலிய அநாத்மாக்களைப்பற்றியெழாநின்றது அசுத்த அகங்காரமெனவும், இரண்டுவிதமாம். இஃதன்றிச் சாமானியம், விசேஷம், முக்கியம், அமுக்கியமென அகங்காரத்தை நான்குவிதமாகவும் கூறுவார்களென அறிக.

வினு:—சாமானிய அகங்காரம் யாதெனின். (203)

விடை:—தேகாதிகளினுத்தேசமில்லாமற் றனிமையாக நானென்றெழுதலென அறிக.

(204)

விடை:—தேகாதிகளின் சாதி பெயர் முதலிய தருமங்களின் உத்தேசத்தால் நானென்றெழுதலென அறிக.

வினா:—முக்கிய அகங்காரம் யாதெனின். (205)

விடை:—தேகாதிகளோடு சங்கமாயுள்ள சிதாபாசனையும் அசங்கமாயுள்ள கூடத்தனையும் ஒன்றுபடுத்திக்கொண்டு அஞ்ஞானத்தால் முற்சொல்லிய அனைத்தினும் "நான் போனேன், வந்தேன், கண்டேன், கேட்டேன்" என்னுஞ் சத்தத்தோடு நானென்றெழுதலாம். இது சத்திவிருத்தியா லறியத்தக்க அகஞ்சத்தத்தின் அருத்தத்தை விஷயஞ்செய்யும் அகங்காரமென அறிக.

வினா:—அமுக்கிய அகங்காரம் யாதெனின். (206)

விடை:—ஞானியிடத்து விவகாரதசையில் தேகாதிகளோடு கூடியசிதாபாசன் மாத்திரத்தில் "நான் போனேன் வந்தே" னென்னும் சத்தத்தோடும், பாரமார்த்திகதசையில் கூடத்தன் மாத்திரத்தில் "நான் அசங்கன் சின்மாத்திர" னென்னும் சத்தத்தோடும் நானென்றெழுதலாம். இவ்விரண்டும் இலக்கணவிருத்தியாலறியத்தக்க அகஞ்



வினா:-(௨௯) தத்துவங்களிலும் நானெனநிற்கும் அகங்காரத்தை அகங்காரக் *கிரந்தியென்றது எதனாலெனின் 207

விடை:-மண், பொன், கல், இரத்தினம், ஓடுமுதலிய பலபொருள்களை ஒன்றுபடுத்தி ஒவ்வொன்றற்குமுள்ள பேதங் கடோன்றாமல் முடியப்பட்டிராநின்ற முடிச்சைப்போல ௨௯ தத்துவங்களையும் ஒவ்வொன்றற்குமுள்ள பேதந் தோன்றாத வண்ணம் ஒருதன்மையனவாகச் சேர்த்து நானென நிற்றலினென அறிக.

வினா:—இதனைச் சம்சாரபந்த மென்றது எதனாலெனின் (208)

விடை:—தன் பொருளைவிடுத்து அந்நியர்பொருளைக் களவுசெய்பவன் சிறைச்சாலையிற் கட்டுப்படுதற்கு களவே காரணமாயிருப்பதுபோலத் தன் எதார்த்த சொரூபமாகிய ஆத்மதத்துவத்தைவிடுத்து அந்நியமாகிய அநாத்மதத்துவங்களைத் தானென அபிமானிப்பவன் ஜனனமரணாதிசம்சாரங்களிற் கட்டுப்படுதற்கு அபிமானமே காரணமாயிருத்தலினென்ன அறிக.

(பிரமாணம்.)

(எசுர்வேதத்தில் சர்வசாரோபநிஷத்து)

ஆத்மாவானவன் ஆத்மாவல்லாததேகாதிகளைத் தானென எண்ணிக்கொண்டு அவைகளை ஆத்மாவென்றபிமானிக்கிறதினால் அந்த அபிமானமே ஆத்மாவுக்குப் பந்தமாகிறது.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சற்குருகடாக்ஷத்தால் | உத்தமகுருவின் கிருபாவீக்ஷணியத்தால் |
| இவ்வாவரணம் நீங்கி | இம்மறைப்புச் சத்தி நிவிர்த்தியாகி. |

வினா:—ஆவரணம் நீங்கியது ஈசுவரகடாக்ஷத்தாலென்னாது சற்குருகடாக்ஷத்தாலென்றது எதனாலெனின். (209)

விடை:—குருசாஸ்திரானுசாரசாதனங்களின் சம்பாதனம் தன் அந்தக்கரணகிருபையினாலும் சற்குரு முதலிய ஞானசாமக்கிரியை ஈசுவரகிருபையினாலும் சாஸ்திரார்த்ததாரணசக்தி வேதகிருபையினாலும் சாஸ்திரம் மற்றுந் தனதநுபவசாரமான எதார்த்த ஞானோபதேசம் குருகிருபையினாலும் அடையப்படுமெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றமையா



யால் அதிருஷ்டபலம் திருஷ்டபலமிரண்டும் அடையப்படுதலுமாக இருத்தலினென அறிக.

வினா:—திருஷ்டபலமென்பது யாது அதிருஷ்டபலமென்பது யாதெனின் (210)

விடை:—கருமவழியாற்கிடைக்கின்ற சித்தசுத்தியாதிகள் அதிருஷ்டபலமாம். நேரேகிடைக்கின்ற ஞானோபதேசம் திருஷ்டபலமாமென அறிக.

வினா:—இவ்விரண்டு பலங்கட்கு மேதுக்களெவையெனின் (211)

விடை:—அதிருஷ்டபலத்துக்கு ஈசுவரசேவையும் குருசேவையும் ஏதுக்களாகும். திருஷ்டபலத்துக்குக் குருசேவை மாத்திரம் ஏதுவாகுமென அறிக.

வினா:—ஈசுவரன் சனகாதியருக்கும் மாணிக்கவாசகருக்கும் ஞானோபதேசஞ்செய்ததாகப்புராணாதிகள் கூறுகின்றனவேயெனின் (212)

விடை:—சனகாதியருக்கும் மாணிக்கவாசகருக்கும் ஈசுவரன் கல்லாலடியினும் குருந்தினடியினும் குருமூர்த்த [illegible] ஞானோபதேசஞ்செய்ததாக அப்புராணாதிக

வினா :—குருவைச் சற்குருவென விசேஷித்தது யாது நிமித்தமெனின் (213)

விடை :—பூசனை, பொருள், தருக்கம், கீர்த்தியாதிகணிமித்தம் நூற்பொருள்கூறுபவராதிய மத்திமகுருவும், வசியமாதிகளைக் கூறுபவராதிய அதமகுருவுமிவரல்லரென்பது தோன்றுநிமித்தமென அறிக.

வினா :—இவ்விருவர்களும் சற்குருவாகாரெனின் மற்றி யாவர்கள் சற்குருவெனின் (214)

விடை :—வேதசாஸ்திரார்த்தப்பிரஞ்ஞையும் பிரஹ்மாத்மைக்கிய ஞானநிட்டையும் தானடைந்த பேற்றையுலகமுமடைந்துய்ய வேண்டுமென்னுஞ் சிவகாருண்ணியமுமுள்ளவரென அறிக.

வினா :—சாஸ்திரார்த்தப்பிரஞ்ஞை அல்லது பிரமாத்மைக்கிய ஞானநிஷ்டையுடையவர் குருவெனல்போதுமானதாயிருக்க இரண்டையுமுடையவர் குருவென்றதென்னையெனின் (215)

விடை:—ஞானநிட்டையின்றிச் சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞைமாத்திரமுடையார் தமக்கனுபவமில்லாததைச் சீடர்க்கு



...சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞையுடையார்களும் குருவாகார்கள். சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞையின்றி ஞானநிட்டையுடையார் தாம் ஜீவன்முத்தராக இருக்கினும் தமக்குச் சீடர்கள் புத்தியிலுள்ள பேத சமஸ்காரங்களை நிவர்த்திசெய்யத்தக்க யுத்தியாதிகள் புத்தியிலுதயமாகா. ஆயினும் அவர்கட்குப் புத்தியில் பேதசமஸ்காரமின்றி உத்தமசம்ஸ்காரமுடைய சிஷ்யர்கட்கு மாத்திரம் உபதேசிக்கத்தக்க யோக்கியதையுள்ளதேயன்றிப் பேதசம்ஸ்காரமுடையார்க்கு உபதேசிக்கும் யோக்கியதையாகிய சாமர்த்தியமில்லாமையினானும் குகாரமாகிய அஞ்ஞானத்தை ருகாரமாகிய ஞானத்தால் நிவர்த்திக்குஞ் சாமர்த்தியமுள்ளார்கள் குருவெனச் சுருதிகள் கூறுகின்றமையினானும் ஞானநிட்டைமாத்திரமுடையார்களுங் குருவாகார்கள். ஆதலின்இரண்டையுமுடையார்கள் குருவென்றதென அறிக.

வினா :—சற்குருவால் ஆவரணம் நீங்கிய தெங்ஙனமெனின் (216)

விடை :—சூரிய கிரணத்தால் அந்தகாரம் நீங்கியது ... தேசமாகிய மகாவாக்கிய விசாரஜ்

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| (உக) தத்துவங்களின் | சரீரத்திரய சிதாபாசசைதன்னியங்களாகிய (உக) தத்துவங்களின் |
| ஒன்றற்கொன்றுள்ள | ஓர் தத்துவத்துக்கும் மற்றோர் தத்துவத்துக்குமிராகின்ற |
| பேதந்தெரிகிறதே | வித்தியாசங்களைப் பிரித்து அறிதலே |
| முத்தி | மோக்ஷமாம். |

வினா :—(உக) தத்துவங்கட்குமுள்ள பேதங்களெவை? அவைகளை யெங்ஙனமறிவது முத்தி (217)

விடை :—சரீரத்திரயம், சிதாபாசன், கூடஸ்தராகிய (உக) தத்துவங்கட்கு முறையேயுள்ள சடத்துவம், ஆபாசத்துவம், சித்துத்துவங்களே ஒன்றற்கொன்றுள்ள பேத இலக்கணங்களாகும். இவைகளை யுள்ளபடி யறிவதே முத்தியென அறிக.

வினா :—துக்கநிவிருத்தி பிரஹ்மானந்தப் பிராப்தியே முத்தியெனச் சகல சுருதிகளும் கூறாநிற்க:— இந்நூல் தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரிகிறதே முத்தியென்றதென்னையெனின். (218)

விடை :—விசாரசீலனாகிய அப்பியாசிகளுக்



தானே சத்தியமாகிய பிரஹ்மமெனவும் தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ளபேத இலக்கணங்களைத் திடமாக அறிந்தவிடத்தானே கர்த்தருத்துவ போக்துருத்துவமாதிய ஜீவத்துவங்கள் விடுபட்டுப் பிரஹ்மமாகவே நிலைபெறுவன். அங்ஙனம் நிலைபெறுதலேதுக்கநிவிருத்தி பிரஹ்மானந்தப்பிராப்திமயமாகிய முத்தியாகும். தத்துவங்களின் எதார்த்த இலக்கணங்களை அறிவதாகிய ஞானமும் பிரஹ்மசொரூபமாகச் சேடித்தலாகிய முத்தியும் ஏககாலமானமையால் ஞானத்தையும் அதன் பலமான முத்தியையும் ஒன்றுபடுத்திக்கொண்டு தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரிகிறதே முத்தியென்றதென அறிக.

வினா :—அற்றேல் சுவர்க்கவைகுண்டாதிப் பிராப்தி முத்தியல்லவோ வெனின் (219)

விடை :—துக்கநிவிருத்தி சுகப்பிராப்திமயமாயும் சகல ஜீவர்களது பிரியத்துக்கும் விஷயமாயும் நித்தியமாயுமுள்ளது முத்தியெனச் சகலசுருதிகளுங் கூறுகின்றமையால் அசுராதியர்தன்னினும் அதிகரித்த தவபலிஷ்டர்கள் ஈசுவராதியர்க்கு அஞ்சிநடக்கவேண்டியிருத்தலால் துக்க ஏதுவாயும், கர்மகாண்டிகள் உபாசனகாண்டிகளாகிய சிலர் பிரியத்துக்

ளாகிய சிலர் பிரியத்துக்கும், ஆஸ்திகர்களில் நிரவயவமாகிய பிரஹ்மமன்றி அவயவசகிதமாகிய சுவர்க்கவைகுண்டாதிய நாமரூபத் தோற்றங்களனைத்தும் சொப்பனம்போல அழியத் தக்கதென்னும் ஞானகாண்டிகளாகிய சிலர் பிரியத்துக்கும் விஷயமல்லாததாயும்; ஈசுவரசுழுத்தியாகிய மகாப்பிரளயத்தில் நாசமுறுவதால் அநித்தியமாயும் இராநின்ற சுவர்க்கவைகுண்டாதிகள் பேதத்தோற்றரவையுடைய பதமுத்தியேயன்றி அபேதமாகிய ஐக்கிய முத்தியல்லவென்றறிக.

வினா:—கன்மகாண்டி உபாசனாகாண்டிகள் பிரியத்துக்கும் நாஸ்திகர்கள் பிரியத்துக்கும் விஷயமல்லாத ஐக்கிய முத்தியானது எங்ஙனம் சகல ஜீவர்கள் பிரியத்துக்கும் விஷயமாகுமெனின் (220)

விடை:—கன்மகாண்டி உபாசனாகாண்டிகளிலும் நாஸ்திகர்களிலும் பசுபக்ஷிமிருகமாதியமற்றைச்சீவர்களிலும் துக்கத்தில் வெறுப்பின்றி விருப்பும் சுகத்தில் விருப்பின்றி வெறுப்புமுடையஜீவர்கள் ஒருவராயினுமில்லாமையினாலும், சகல ஜீவர்களும் துக்கநிவர்த்தியிலும் சுகப்பிராப்தியிலும் விருப்பமுடையவர்களாகவேயிருக்கின்றமையினாலும் ஐக்கியமுத்தியே சகல ஜீவர்கள் பிரியத்துக்கும் விஷயமாயுள்ள தென்



வினா:--மாயையினும் அவித்தையினும் பிரஹ்மப் பிரதிவிம்பந் தோன்றியதுபோல ஆவரணசத்தியினும் விக்ஷேபசத்தியினும் தோன்றாதது எதனாலெனின் (221)

விடை:-தெளிந்த சலத்திலுங் கலங்கற்சலத்திலும் தோன்றிய சூரியப்பிரதிபிம்பம் வண்டலாகிய சேற்றிற்றோன்றாததுபோல மாயையும் அவித்தையும் பிரதிபிம்பயோக்கியத் திரவியங்களாகிய சத்துவகுணமும் இராசதகுணமுமானமையால் அவைகளிற் பிரஹ்மப் பிரதிபிம்பந்தோன்றின ஆவரணசத்தியும் விக்ஷேபசத்தியும் பிரதிவிம்பயோக்கியத் திரவியங்களல்லாத தாமதகுணங்களானமையால் அவைகளிற் றோன்றவில்லையென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இப்படி ஆவரணசத்தியின் காரியஞ்சொல்லப்பட்டது | வெளி. |

(நூல் கக)

இனி விக்ஷேபசத்தியினின்றும் சத்ததன்மாத்திரையான ஆகாயந்தோன்றிற்று. அதினின்றும் பரிசதன்மாத்திரையான வாயுவும், அதினின்றும் ரூபதன்மாத்திரையான அக்கினியும், அதினின்றும் ரசதன்மாத்திரையான அப்புவும், அதினின்றும் கந்ததன்மாத்திரையான பிருதிவியுந்தோன்றின. இவ்வைந்

சமவிலிராஜஸம்தமஸிற்றமஸ — என்னுமிவைகள் அற்பங்சருவாக இருந்தமையால் அதன் காரியமாகிய ஐந்து பூதங்களும் முக்குணங்களுடனே தோன்றின. இப்பூதங்கட்குத் தன்மாத்திரைகளென்றும் அபஞ்சீகிருத பூதங்களென்றும் முக்குணபூதங்களென்றும் சூக்ஷ்ம பூதங்களென்றும் பெயர் சொல்லப்படும்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இனி | மேலும் |
| விக்ஷேபசத்தியினின்றும் | தோற்றரூபமாகிய சத்தியிலிருந்தும் |
| சத்ததன்மாத்திரையான | சத்தமே தனக்குச் சுபாவகுணமாயுள்ள |
| ஆகாயந்தோன்றிற்று. | ஆகாய பூதந்தோன்றிற்று. |

வினு :-சடமாகிய விக்ஷேபசத்தியில் ஆகாயந்தோன்றியதெங்ஙனமெனின் (222)

விடை :—குண்டு மருந்திட்டுக் கெட்டிக்கப்பட்டுச் சடமாயுள்ள பீரங்கியில் அக்கினிபட்டமாத்திரத்தில் சத்தமுண்டாவதுபோல, சமட்டி ஜீவர்கள் கன்மத்துக் கேதுவாகப் பிரஹ்மசன்னிதானம் பற்றிப் பரிபக்குவமாயிராநின்ற விக்ஷேப



ஸினைத்தமாத்திரத்தில் அதினின்றும் சத்தகுணமாத்திரமாக ஆகாயந்தோன்றிற்றென அறிக.

வினு :—இப்பிவெள்ளியிற் பூடணமுண்டாகியதெனல்போல் பொய்யாகிய விக்ஷேபசத்தியில் ஆகாயந்தோன்றியதெனல் பொருந்ாதெனின் (223)

விடை :—பொய்யாகிய கானற்சலத்தில் பொய்யாகிய அலைகளும் பொய்யாகிய கயிற்றரவில் பொய்யாகிய நடனசலனக் கிரியைகளுந் தோன்றுவனபோலப் பொய்யாகிய விக்ஷேபசத்தியில் பொய்யாகிய ஆகாயந்தோன்றுதல் கூடும். இஃதன்றி இங்ஙனந்தோன்றியதென்பதற்கு அபிப்பிராயம் விக்ஷேபசத்தியி னுபஹிதசேதனத்தினின்றும் விவர்த்தமாகத் தோன்றியதென்பதாகவும், விக்ஷேபசத்தியே ஆகாயமாகத் தோன்றியதென்பதாகவுங் கொள்ளற்பாலதானமையினும் பொருந்துமென அறிக.

வினு :—விக்ஷேபசத்தியே ஆகாயமாயிற்றென எங்கே சொல்லப்பட்டிருக்கிறதெனின் (224)

விடை :—வாசுதேவமனனம் (க) வது வருணகத்தில்

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| அதினின்றும் | அவ்வாகாயபூதவுபகித சேதனத்தினின்றும் |
| பரிசதன்மாத்திரையான வாயுவும் | பரிசகுணமாத்திரமாயுள்ள வாயு பூதமும் |
| அதினின்றும் | அவ்வாயுவினுபகிதசேதனத்தினின்றும் |
| ரூபதன்மாத்திரையான அக்கினியும் | ரூபகுணமாத்திரமாயுள்ள அக்கினி பூதமும் |
| அதினின்றும் | அவ்வக்கினியினுபகித சேதனத்தினின்றும் |
| ரசதன்மாத்திரையான அப்புவும் | ரசகுணமாத்திரமாயுள்ள அப்பு பூதமும் |
| அதினின்றும் | அவ்வப்புவினுபகித சேதனத்தினின்றும் |
| கந்ததன்மாத்திரையான பிருதிவியும் | கந்தகுணமாத்திரமாயுள்ள பிருதிவி பூதமும் |
| தோன்றிற்று. | விவர்த்தமாகத் தோன்றிற்று. |

(பிரமாணம்)

(கைவல்லிய நவநீதம்)

தோற்றமாஞ் சத்தி தன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணிற், காற்றதாம் காற்றிற் றீயாம் கனலினீர் நீரின் மண்ணும், போற்றுமிவ் வைந்தும் தொய்ய...



| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| இவ்வைந்து பூதங்கட்குங் காரணமான விக்ஷேப சத்தியில் தமசிற் சத்துவம் தமஸில்ரஜஸ் தமஸிற்றமஸ் என்னு மிவைகள் அற்பங்கருவாக இருந்தமையால் அதன் காரியமாகிய ஐந்து பூதங்களும் முக்குணங்களுடனே தோன்றின. | வெளி |

வினா :—முக்குணங்களும் மாயையினும் அவித்தையினுமுள்ளனபோல் விக்ஷேபசத்தியினுமிராமற் குறைவுற்று அற்பமாக இருந்தனவென்பது எதனுலெனின் (225)

விடை :-தமோகுணமாகிய முழு அம்ஸத்தில் ஆவரண அம்ஸங்களாக அனேக அம்ஸங்கள் பிரிவுற்றமைபற்றி யென அறிக.

வினா :—அற்றேலிராசதகுணமாகிய அவித்தையும் அனேக அம்ஸங்களாகப் பிரிந்துள்ளனவாதலின் அவைகளினிடத்தும் முக்குணங்கள் அற்பமாகவுள்ளனவெனக் கூறாமல் விடுத்ததென்னை யெனின் (226)

விடை :—பச்சைத்தருப்பணமும் தாமரையிலையும் சமமாகிய நிறங்களையுடையனவா யிருக்கினும் தருப்பணம் பிரதிவிம்பயோக்கியத் திரவியமாதலின் சூரியப்பிரதி விம்பத்தைப் பெற்றுப் பிரதிவிம்ப யோக்கியத் திரவியமல்லாத தாமரையிலையைப்போலிருந்த வண்ணமிராமல் அதிகரித்துப் பிரகா

போலவே அவித்தைகளினும் அற்பமாக இருக்கினும் அவித்தைகள் பிரதிவிம்ப யோக்கியத் திரவியங்களான இராசதகுணங்களானமையால் சேதனப் பிரதிவிம்பத்தைப்பெற்றுப் பிரதிவிம்பயோக்கியத்திரவியமல்லாத தாமதகுணமாகிய விக்ஷேபசத்தியின் முக்குணங்கள்போ லிருந்தவண்ணமிராமல் அதிகரித்துப் பிரகாசிக்கின்றமையினென அறிக.

| (பதம) | (பொருள்) |
|---|---|
| இப்பஞ்சபூதங்கட்கு | இவ்வாகாயமாதிய (ரு) பூதங்கட்கும் |
| தன்மாத்திரைகளென்றும் | தன்தன் சுபாவமாத்திரமாகவுள்ளவைகளெனவும் |
| அபஞ்சீகிருதபூதங்களென்றும் | கலத்தலின்றிய பூதங்களெனவும் |
| முக்குண பூதங்களென்றும் | திரிகுண பூதங்களெனவும் |
| சூட்சும பூதங்களென்றும் | நுண்ணிய பூதங்களெனவும் |
| பெயர் கூறப்படும் | சாத்திரங்களில் நாமம் வழங்கப்படும் |

(நூல் ௧௨.)

சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்களுந் தூல பூதங்களுந் தோன்றின. எங்ஙனமெனின், ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் சாத்வீகாம்ஸத்திற் பூதத்துக்கொவ்வொரு மாத்திரையெடுத்து ஒன்றாகக்கூட்டி வைக்கப்பட்டது அந்தக்கரணமென்று சொல்லப்படும். இவ்வந்தக்கரணத்தில் ...



யத்தினம்ஸங் கூடியதற்கடையாளம் அந்தக்கரணமும் ஆகாயத்தைப்போல சகலமான கேள்விகட்கு மிடங்கொடுத்துத் தரிக்கின்றது இப்படித்தரிக்கின்ற விருத்திக்கு உள்ளமென்று பெயர். வாயுவினம்ஸங் கூடியதற்கடையாளம் அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மனமென்றுபெயர். அக்கினியினம்ஸங்கூடியதற்கடையாளம் அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதின்னதென்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தியென்று பெயர். அப்புவினம்ஸங்கூடியதற்கடையாளம் அந்தக்கரணமும் அப்புவைப்போல விடயங்களைப்பற்றி யிழுக்கின்றது. இப்படியிழுக்கின்ற விருத்திக்குச் சித்தமென்று பெயர், பிருதிவியினம்ஸங் கூடியதற்கடையாளம் அந்தக்கரணமும் பிருதிவியைப்போல கடினமாக நின்று நானென்றபிமானிக்கின்றது, இப்படி யபிமானிக்கின்ற விருத்திக்கு அகங்காரமென்று பெயர்.

| (பதம்) | (பொருள்.) |
|---|---|
| சூட்சுமபூதங்களினின்றும் சூட்சும சரீரங்களும் தூலபூதங்களுந் தோன்றின. எங்ஙனமெனின், ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் சாத்வீகாம்ஸத்தில்பூதத்துக்கொவ்வொரு மாத்திரையெடுத்து ஒன்றாகக் கூட்டிவைக்கப்பட்டது அந்தக்கரணமென்று சொல்லப்படும். | வெளி. |

வினு :—பூதங்களின் சமட்டி சத்வாம்ஸங்களுக்கு அந்தக்கரணமெனப் பெயர்வந்தது எதனுலெனின். (227)

விடை :—அந்தர்(உள்) கரணம் (கருவி) சுரோத்திராதி இந்திரியங்களைப்போலப் பாஹியத்திலிராமல் இருதயமாகிய உள்ளில் அறி கருவியாக இருத்தலின் இடம்பற்றி வந்ததென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| இந்த அந்தக்கரணத்தில் | இவ்வகக்கரணத்தில் |
| ஆகாயத்தினம்ஸம் | ஆகாயபூதத்தின் சத்துவாம்ஸம் |
| கூடியதற்கடையாளம் | சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது |
| அந்தக்கரணமும் | சத்துவாம்ச சமட்டியாகிய அகக்கரணமும் |
| ஆகாயத்தைப்போல | ஆகாயமற்றைப் பூதங்கட்கிடங்கொடுத்தல்போல |
| சகலமான கேள்விகட்கும் | கேட்கத்தக்க கல்விகளனைத்துந் தங்கிநிற்றற்கு |
| இடங்கொடுத்துத் தரிக்கின்றது | அவகாசங் கொடுத்துக்கொண்டிருக்கின்றது |

(பதசாரம்.)

அறம்பொருளின்பம் வீடென்னு நான்கையும்



பாங்கம், உபவேதம், காவியம், தருக்கம், கீதம், பரதம் முதலிய கற்றுக்கொள்ளத்தக்க கல்விகளனைத்துமென்பதுந் தோன்ற சகலமான கேள்விகளுக்கு மென்முர்.

வினு :—வேதமென்பது யாதெனின். (228)

விடை :-சுயம்புவாயும் ஈசுவரன்வாக்கினின்றும் வெளிப்பட்டதாயும் உள்ள இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என நான்காக இருந்து அறிவைப்பயப்பிப்பதாகிய அனந்த சாகைகளையுடையதென அறிக.

வினு :--வேதாங்கங்களென்பவை யெவையெனின். 229

விடை :--வேதங்கட்குப் பாதம், அஸ்தம், முகம், கிராணம், நேத்திரம், சுரோத்திரம், எனமுறையே, (க) மந்திர சுலோகங்கட்கு அக்ஷரகணிதஞ்செய்யும் சந்தசு. (உ) ஆசுவலாயன போதாயன ஆபஸ்தம்பாதி சூத்திரங்களில் யஞ்ஞப்பிரயோகாதிகளைக் கற்பிக்கும் கற்பம் (ங) வைதிகசாஸ்திரார்த்த சித்தியைச் சமர்ப்பிக்கும் வியாகரணம். (ச) உதாத்த அனுதாத்த ஸ்வரிதப் பிரசயமென்னும் சதுர்விதஸ்வரகரணபூர்வகமான பதபாளிக்கிரம வேதாத்தியயனுதிகளைச் சொல்லும் சிக்ஷை. (ரு) லக்கினந் திதி வாரம் நக்ஷத்திரம் யோக கரணுதிகளால் வைதிக கருமங்களுக்குக் காலந் தெரி

வினா:—வேதோபாங்கங்களெவை யெனின். (230)

விடை:-ஸ்மிருதி, புராணம், நியாயம், மீமாம்சை யென்னும் நான்குமென அறிக.

வினா:—உபவேதங்களெவை யெனின். (231)

விடை:—(க) வியாதிநிதான வியாதிச்சின்னங்களையும் மந்திர ஔடதசிகிச்சை ஆயுள் ஆரோக்கியாதிகளையும் காட்டும் ஆயுள்வேதம். (உ) தக்ஷிணை ஆச்சியம் சருமுதலான உபகரணங்களைத் தர்மாதிசதுட்டயங்கட்குச் சாதனமாகக் கற்பிக்கும் அருத்தவேதம். (ங) சத்துருஜயார்த்தமான மந்திராஸ்திரப் பிரயோகங்களைக் கற்பிக்கும் தனுர்வேதம். (ச) சாமவேதாதிகளின் சரிகமபதநியென்னும் சப்தஸ்வர கீதப்பிரபந்தங்களைக் கற்பிக்கும் காந்தருவவேதம் ஆகிய இவைகளென அறிக.

| (பதம்.) | (பொருள்). |
|---|---|
| இப்படித் தரிக்கின்ற | இங்ஙனம் அவகாசந்தந்துகொண்டிராநின்ற |
| விருத்திக்கு | அந்தக்கரண பரிணாமமாகிய விருத்திக்கு |
| உள்ளமென்று பெயர் | உள்ளமென்று நாமமாம் |

வினா:-இவ்விருத்திக்கு உள்ளமெனப் பெயர்வந்தது எதனாலெனின்.



விடை:—உள் என்பது உட்புரத்தையுடைய கிரகம் அது பலபதார்த்தங்களிருத்தற்கு இடமாக இருத்தல்போல கிருகிக்கப்பட்ட சகல கல்விகளுமிருத்தற்கு இடமாக இருத்தலினென அறிக.

வினா:—உள்ளம் ஆகாயமல்லாத மற்றைய பூதாம்ஸங்களில் ஒன்றல்லவோ வெனின். (233)

விடை:—உள்ளமாகிய விருத்தியில் வாயுவைப்போல விஷயங்களிலொன்றை விடுத்து மற்றொன்றைப்பற்றிச் சலித்தலும் அக்கினியைப்போல விஷயங்களை இஃதின்னதென்று விளக்குவித்தலும் அப்புவைப்போல விஷயங்களைப்பற்றியிழுத்தலும் பிருதிவியைப்போல கடினமாக நின்று விஷயங்களை அபிமானித்தலுமாகிய காரியங்கள் காணப்படாமையின் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| வாயுவினம்ஸம் | வாயுபூதத்தின் சத்துவாம்ஸம் |
| கூடியதற்கடையாளம் | சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது |
| அந்தக்கரணமும் | சத்துவாம்சஸமட்டியாகிய அந்தக்கரணமும் |
| வாயுவைப்போல | வாயு சதாசலிப்பதுபோல |
| அலைகின்றது | சங்கற்பவிகற்பாத்மகமாகச் சலிக்கின்றது |

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இப்படி அலைகின்ற | இந்தப்பிரகாரஞ்சலித்துக் கொண்டிராநின்ற |
| விருத்திக்கு | அந்தக்கரண பரிணாமமாகிய விருத்திக்கு |
| மனமென்று பெயர் | மனமென்றுநாமமாம் |

வினா :--இவ்விருத்திக்கு மனமெனப்பெயர் வந்தது எதனாலெனின். (234)

விடை :—நிச்சயமின்றித் தீபச்சுவாலையின் பரம்பரை போல மேலுமேலும் சங்கற்ப விகற்பமாத்திரமாக மனனஞ் செய்கின்றமையினென அறிக.

வினா :—மனம் வாயுவல்லாத மற்றைய பூதாம்சங்களி லொன்றல்லவோவெனின். (235)

விடை :—மனமாகிய விருத்தியில், ஆகாயம், அக்கினி, அப்பு, பிருதிவி, பூதங்களின் தருமங்களான இடங்கொடுத் தல், விளக்குவித்தல் இழுத்தல் அபிமானித்தலாதிகள் காணப்படாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| அக்கினியினம்சம் | அக்கினிபூதத்தின் சத்துவாம்சம் |
| கூடியதற்கடையாளம் | சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது |



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அந்தக்கரணமும் | சத்துவாம்ச சமட்டியாகிய அகக்கரணமும் |
| அக்கினியைப்போல | அக்கினி விஷயங்களைப் பிரகாசிப்பதுபோல |
| ஈதின்னதென்று | இதுஇன்னது, என்பதாக விஷயங்களை. |
| விளக்குவிக்கின்றது | பிரகாசிப்பிக்கின்றது |
| இப்படி விளக்குகின்ற | இப்படிப் பிரகாசிப்பிக்கின்ற |
| விருத்திக்கு | அந்தக்கரண பரிணாமமாகிய விருத்திக்கு |
| புத்தியென்று பெயர் | புத்தியென்று நாமமாம் |

வினா :—இவ்விருத்திக்குப் புத்தியெனப் பெயர்வந்தது எதனாலெனின். (236)

விடை :—புத்தியென்பது அறிவு, விஷயாவரணங்களை நீக்கி விஷயங்களை இஃதின்னதென நிச்சயாத்மகமாக அறி கின்ற ஞானரூபமாக இருத்தலினென அறிக

வினா :—புத்தி அக்கினியல்லாத மற்றைய பூதாம்சங்களி லொன்றல்லவோவெனின். (237)

விடை :—புத்திவிருத்தியில் ஆகாயம், வாயு, அப்பு, பிரு திவி பூதங்களின் தருமங்களான இடங்கொடுத்தல், சலித்தல் இழுத்தல் அபிமானித்தலாதிகள் காணப்படாமையின் அல்ல வென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| அப்புவினம்சம் | அப்புபூதத்தின் சத்துவாம்சம் |
| கூடியதற்கடையாளம் | சேர்ந்திருப்பதற்குஅறிகுறியாவது |
| அந்தக்கரணமும் | சத்துவாம்சசமட்டியாகிய அகக்கரணமும் |
| அப்புவைப்போல | அப்புசார்ந்த பதார்த்தங்களை யிழுப்பதுபோல |
| விடயங்களைப்பற்றி | முன்னிட்ட விஷயங்களைப் பொருந்தி |
| இழுக்கின்றது | அவதானஞ்செய்கின்றது |
| இப்படி இழுக்கின்ற | இங்ஙனம் அவதானிக்கின்ற |
| விருத்திக்கு | அந்தக்கரண பரிணாமமாகிய விருத்திக்கு |
| சித்தமென்றுபெயர் | சித்தமென்று நாமம் |

வினு :—இவ்விருத்திக்குச் சித்தமெனப் பெயர்வந்தது எதனுலெனின். (238)

விடை :—விடயங்களைப்பற்றி மென்மேலுஞ் சிந்திக்கின்றதே சொரூபமாக இருத்தலினென அறிக.



னும் ஒரே தொழிலையுடைய அந்தக்கரண விருத்தியை ஒரே பெயரிட்டு ஒரேதத்துவமாகக் கூருமல் மனமென்றும் சித்தமென்றும் இரண்டு பெயரிட்டு இரண்டு தத்துவங்களாக கூறியதென்னை யெனின் (239)

விடை :— சங்கர்பித்தலென்பதற்கும் சிந்தித்தலென்பதற்கும் நினைத்தலெனப் பொருளொன்ருயிருக்கினும் மனதின் தொழில் நிச்சயமின்றியொன்றை நினைத்தலும் அதனை விடுத்து மற்ருென்றை நினைத்தலுமாகப் பலவற்றினுஞ்செல்லும் நினைப்பாகும் சித்தத்தின் தொழில் மனதால் நினைக்கப்பட்ட ஓர் விஷயத்தைப் புத்தியால் நிச்சயிக்கப்பட்ட பின்னர் அஃதொன்றையே உள்ளத்திற்றங்கும்படி மேலுமேலும் நிச்சயசகிதமாக ஆவிருத்தி செய்வதாகிய நினைப்பாகும் ஆதலால் வேறுபெயரிட்டுப் பிரித்துக் கூறியதென அறிக.

வினு :—சித்தம் அப்புவல்லாத மற்றைய பூதாம் சங்களிலொன்றல்லவோ வெனின் (240)

விடை :—இவ்விருத்தியில் ஆகாயம், வாயு, அக்கினி, பிருதிவிபூதங்களின் தருமங்களான இடங்கொடுத்தல் சலித்

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| பிருதிவியினம் சம் | பிருதிவிபூதத்தின் சத்துவாம் |
| கூடியதற்கடையாளம் | சேர்ந்திருப்பதற்கு அறி [சம் குறியாவது |
| அந்தக்கரணமும் | சத்துவாம்சசமட்டியாகிய அகக்கரணமும் |
| பிருதிவியைப்போல | பிருதிவுபூதம் கடினமாக இருப்பதுபோல |
| கடினமாக நின்று | உரப்பாக இருந்துகொண்டு |
| நானென்றபிமானிக்கின்றது | தேகாதிகளை யகமென்றபிமானிக்கின்றது |
| இப்படியபிமானிக்கின்ற | இங்ஙனம் அபிமானத்தைச் செய்கின்ற |
| விருத்திக்கு | அந்தக்கரண பரிணாமமாகிய விருத்திக்கு |
| அகங்காரமென்று பெயர் | அகங்காரமென்று நாமமாம் |

வினா.—இவ்விருத்திக்கு அகங்காரமெனப் பெயர் வந்தது எதனாலெனின் (241)

விடை:—தேகாதிகளில் யானெனதென்னும் அகந்தை மமதைவடிவமாக நிற்றலிலென அறிக.



விடை:—இவ்விருத்தியில், ஆகாயம், வாயு, அக்கினி, அப்புபூதங்களின்றருமங்களான இடங்கொடுத்தல், சலித்தல், விளக்குவித்தல், அவதானித்தலாதிகள் காணப்படாமையின் அல்லவென அறிக.

வினா:—அந்தக்கரணம் பூதங்களின் இராஜஸதாமஸங்களல்லவோ வெனின் (243)

விடை:—கிரியாசாதனங்களாக இராமல் அறிவதாகிய ஞானசாதனங்களாக இருத்தலால் அல்லவென அறிக.

வினா:-அந்தக்கரணம் * வியட்டியல்லவோவெனின் 244

விடை:-வியட்டியானால் ஒன்றறிந்ததை மற்றையவைகளறியாமலும் ஒன்று கெட்டால் மற்றையவைகள் கெடாமலுமிருக்கவேண்டும். அங்ஙனமின்றி ஒன்றறிந்ததை மற்றைய விருத்திகளு மறிகின்றமையினானும் ஒரு விருத்திகெட்டால் மற்றைய விருத்திகளுங் கெட்டுப்போகின்றமையினானும் அல்லவென அறிக.

வினா:—விருத்திசப்தங்களுக் கருத்தங்களெவை யெனின் (245)

விடை:—விடயங்களைப் பிரகாசிப்பிக்கிறதாகிய அவி

குரோதசுகாதிகள் அவித்தைஅந்தக்கரணங்களின் பரிணாமங்களாக இருக்கினும், அவைகள் விடயங்களைப் பிரகாசிப்பிக்கும் ஞானரூபமாக இராமையால் விருத்தி சப்தத்துக்கு அருத்தங்களாகாவாம். இவைகளின் விரிவை யறிய விரும்பில் விருத்திப்பிரபாகரமென்னும் நூலிற் காண்க.

வினு :—சடமாகிய அவித்தை அந்தக்கரணங்களில் ஞானரூபவிருத்திக ளுதயமாவது எதனுலெனின் (246)

விடை :—அப்பிரகாசப் பொருளாகிய தருப்பணம் பிரகாசமாகிய சூரியப்பிரதிவிம்பத்தைப் பெற்றிருத்தலால் அதன்பால் பிரகாசமாகிய கிரணங்களுதயமாவதுபோல அவித்தைஅந்தக்கரணங்கள் சடங்களாக இருக்கினும் ஞானமயமாகிய பிரஹ்மப்பிரதிவிம்பத்தைப் பெற்றிருத்தலால் அவற்றின்பால் ஞானரூபவிருத்திக ளுதயமாயினவென அறிக.

வினு :—விக்ஷேபசத்தியும் அதன் காரியமான பஞ்சபூதங்களும் பிரஹ்மப்பிரதிவிம்பந் தோன்றற்கான யோக்கியத்திரவியங்களல்லனவா யிருக்க, அவைகளின் காரியமாகிய அந்தக்கரணம் பிரதிவிம்பந் தோன்றற்கான யோக்கியத்திரவியமாகியது எதனுலெனின் (247)

விடை :—சூரியப்பிரதிவிம்பயோக்கியதையின்றிய தே



சூரியப்பிரதிவிம்பந்தோன்றற்கான யோக்கியத்திரவியமாவது போல, தமசிற்சத்துவம் தமசில்ரஜசு தமசிற்றமசென்னும் முக்குணசொரூபமாகிய விக்ஷேபசத்தியும் அதன்காரியமாகிய பஞ்சபூதங்களும் பிரஹ்மப் பிரதிவிம்பந்தோன்றற்கான யோக்கியத்திரவியங்க ளல்லனவாயினும், அவைகளிலுள்ள இராஜததாமதகுணங்களை நீக்கிச் சத்துவகுணத்தை மாத்திரம் வேறுபடுத்திவைக்கப்பட்டது அந்தக்கரணமானமையின் பிரஹ்மப்பிரதிவிம்பந் தோன்றற்கான யோக்கியத்திரவியமாயிற்றென அறிக.

வினு :—அந்தக்கரணத்துக்கு அதிதேவதைகளெவையெனின் (248)

விடை :—உள்ளத்துக்குச் சதாசிவனும், மனதுக்குச் சந்திரனும், புத்திக்குப் பிரஹ்மனும், சித்தத்துக்கு வாசுதேவனும், அகங்காரத்துக்கு உருத்திரனுமென அறிக,

(நூல் கங)

பின்னும் ஆகாயமாதிய பஞ்சபூதங்களின் சாத்வீகாம்சத்திலே பூதத்திற் கொவ்வொருமாத்திரையெடுத்துத் தனித்

ளென்று சொல்லப்படும். இவைகளில் சுரோத்திரம் ஆகாசத்தின் அம்சமானபடியால் ஆகாசத்தின் குணமான சத்தத்தைமாத்திர மறியும். துவக்கு வாயுவினம்சமானபடியால் வாயுவின் குணமான பரிசத்தைமாத்திர மறியும். சட்சு அக்கினியினம்சமானபடியால் அக்கினியின் குணமான ரூபத்தைமாத்திரமறியும். சிங்குவை அப்புவினம்சமானபடியால் அப்புவின் குணமான இரசத்தைமாத்திர மறியும். ஆக்கிராணம் பிருதிவியினம்சமானபடியால் பிருதிவியின்குணமான கந்தத்தை மாத்திரமறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக்கரணம் ஐந்தும் ஒன்றாகக்கூடியதானமையால் ஐந்திந்திரியங்களினாலும் ஐந்துவிடயங்களையு மறியும். அந்தக்கரணம் (ரு) ஞானேந்திரியம் (ரு) ஆகியபத்தும் சத்துவாம்சமானபடியால் ஞானசாதனமாயின.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| பின்னும் ஆகாயமாதிய பஞ்சபூதங்களின் சாத்விகாம்சத்திலே பூதத்துக்கொவ்வொரு மாத்திரையெடுத்துத் தனித்தனியே வைக்கப்பட்டது சுரோத்திராதி ஞானேந்திரியங்களென்று சொல்லப்படும் | வெளி |



| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| இவைகளிற் சுரோத்திரம் | இவ்விந்திரியங்களிற் சுரோத்திரேந்திரியமானது |
| ஆகாயத்தினம்சமானபடியால் | ஆகாயபூத சத்துவாம்சமானமையால் |
| ஆகாயத்தின் குணமான | ஆகாயபூதத்தின் சுபாவகுணமாகிய |
| சத்தத்தைமாத்திரமறியும் | ஒலியைமாத்திர மறியும் |

வினா:—சத்தங்களெத்தனை விதமாமெனின். (249)

விடை:—தொனிரூப வருணரூபங்களென இரண்டுவிதமாமென அறிக.

வினா:—தொனிரூப சத்தங்களெவையெனின். (250)

விடை:—தம்புரு, வீணை, பிட்டில், சாரந்தா, சுரபத்து முதலிய நரம்புக்கருவிகளினின்றும், நாகசரம், புல்லாங்குழல், முகவீணை, திருச்சின்னம், எக்காளம், வாங்கா, கொம்பு, சங்குமுதலிய துளைக்கருவிகளினின்றும், வெண்கலத்தாலாகிய தாளமாதியகஞ்சக்கருவிகளினின்றும், பேரிகை, டங்கா, டவண்டை, தவில், மிர்தங்கமாதிய தோற்கருவிகளினின்றும், மேகம், மலையருவி, மழை, சமுத்திரம், அக்கினி, காற்று, இடி,

வினா:—வருணரூப சத்தங்களெவையெனின். (251)

விடை:—வருணரூபசத்தம் லௌகிகம் வைதிகமென்னும் பேதத்தாலிருவகையாம். அவைகளில் ஆரியம் திராவிடமாதிய பதினெண் பாஷைகளாற் செய்யப்பட்ட வினோதாதி சரித்திரப்பிரசங்கங்களி லெழாநின்ற சத்தங்கள் லௌகிகசத்தங்களாகும். வேதாகமசாஸ்திர புராண படனங்களினும், பிரணவ பஞ்சாக்கர அஷ்டாக்ஷர சடாக்ஷராதிய மந்திரோச்சாரணங்களினும், பகவத் சங்கீர்த்தனமாதிய தேவதா தோத்திரங்களினும் நின்றெழாநின்ற சப்தங்கள் வைதிக சப்தங்களாகும். இவ்வைதிகசப்தங்களும் வியாவகாரிகதத்துவபோதகவாக்கிய சப்தங்கள் பாரமார்த்திக தத்துவபோதகவாக்கியசப்தங்களென இருவகைத்தாம். பிரஹ்மத்துக்கு அன்னியமாகிய யாவும் வியாவகாரிக தத்துவங்களானமையால் அவைகளைப் போதிக்கும் வாக்கியங்களினின்றெழாநின்ற சப்தங்கள் வியாவகாரிக தத்துவபோதகவாக்கிய சப்தங்களாம். பிரஹ்மமாத்திரம் பாரமார்த்திக தத்துவமானமையால் அதனைப் போதிக்கும் வாக்கியங்களினின்றும் எழாநின்ற சப்தங்கள் பாரமார்த்திக தத்துவபோதகவாக்கிய சப்தங்களாம். இச்சப்தங்களும் அவாந்தர...



சொரூபத்தை அல்லது இருதயத்தினுட் சுயம்பிரகாசமாயுள்ள புருடனெனத் துவம்பதார்த்த சொரூபத்தை யறிவிக்கும் வாக்கியங்களினின்றும் எழாநின்ற சப்தங்கள் அவாந்தர வாக்கிய சப்தங்களாகும். சச்சிதானந்த பரிபூரணப் பிரஹ்மமே இருதயத்தினுட் சுயம்பிரகாசமாயுள்ள ஆத்மா, இருதயத்தினுட் சுயம்பிரகாசமாயுள்ள ஆத்மாவே சச்சிதானந்த பரிபூரணப்பிரஹ்மமெனத் தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் அபேதத்தை அறிவிக்கும் தத்துவமசிமகாவாக்கியங்களினின்றெழாநின்ற சப்தங்கள் மகாவாக்கிய சப்தங்களாகும். இவைகளும் உபாதிபேதத்தால் பலவிதமாகுமென அறிக.

வினா:—இச்சப்தபேதங்களை சுரோத்திரம் தனியேயறிகிறதோ அல்லது மற்றையவைகளின் சகாயத்தாலறிகிறதோ வெனின் (252)

விடை:—சுரோத்திரம் சப்தத்தைப் பிரத்தியக்ஷமாக அறியும்போது அந்தக்கரணத்தின் ஆபாசசகிதவிருத்தி சுரோத்திரமூலமாக வெளிப்பட்டுச் சப்தசமானாகாரத்தையடைகிறது. அதில் விருத்திபாகம் சப்தத்தின் ஆவரணத்தைப் பங்கம் செய்கிறது; ஆபாசபாகம் சப்தத்தைப் பிரகாசிப்பிக்கிறது; ஆதலால் தனியேயறிகிறதில்லை; ஆபாசசகிதவிருத்திசகாயத்தா லறிகிறதென அறிக.

விடை :—ஆகாயகுணமாகிய சப்தத்தையன்றி மற்றைப் பூதங்களின் குணங்களாகிய பரிசரூப இரதகந்தங்களையறியாமையால் அல்லவென அறிக.

| (பதம்) | (பொருள்.) |
|---|---|
| துவக்கு | துவக்கிந்திரியமானது |
| வாயுவின்சமானபடியால் | வாயுபூதசத்துவாம்சமானமையால் |
| வாயுவின் குணமான | வாயுபூதத்தின் சுபாவகுணமாகிய |
| பரிசங்களை மாத்திரமறியும் | ஊறுகளை மாத்திரமறியும். |

வினு :—பரிசங்களெத்தனை விதமெனின் (254)

விடை :—வெம்மை தண்மை மென்மை வன்மை திண்மை நொய்மை *சீர்மை †சர்ச்சரையென எட்டுவிதமாம். இவைகளும் தொழிற்பேதத்தால் ஒவ்வொன்றும் ஊன்றல் கட்டல் குத்தல் தடவல் தட்டல் தீண்டல் பற்றல் வெட்டலென எட்டுவிதமாகுமென அறிக.

* சீர்மை-என்பது ஒப்பரவு அதாவது நில முதலியவற்றின் சமத்துவம்.



வினு :—இப்பரிசபேதங்களைத் துவக்குத் தனியே யறிகிறதோ அல்லது மற்றையவைகளின் சகாயத்தாலறிகிறதோவெனின் (255)

விடை :—துவக்குப் பரிசகுணத்தையும் அதற்காசிரயமான கடாதிகளையும் பிரத்தியக்ஷமாக அறியும்போது, அந்தக்கரணத்தின் ஆபாசசகிதவிருத்தி சரீரத்தைவிட்டு வெளியேசெல்லுகிறதில்லை; சரீரமான கோளகத்திலேயே யிருக்கிறது; ஆனால் சரீரமானகோளகத்துடன் சம்பந்தப்பட்ட கடாதிவிஷயாகாரத்துக்கும் விஷயங்களை யாசிரயித்திருக்கும் கடினாதி பரிசாகாரத்துக்கும் சமானுகாரத்தை யடைகிறது. அதில் விருத்திபாகம் விஷயும் விஷயத்தையாசிரயித்த பரிசங்களின் ஆவரணத்தைப் பங்கஞ்செய்கிறது. ஆபாசபாகம் விஷயத்தையும் விஷயத்தையாசிரயித்திருக்கும் கடினாதி பரிசத்தையும் பிரகாசிப்பிக்கிறது. ஆதலால் தனியேயறிகிறதில்லை; ஆபாசசகிதவிருத்தியின் சகாயத்தாலறிகிறதென அறிக.

வினு :—துவக்கு வாயுவல்லாத மற்றைப்பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின். (256)

விடை :—வாயுவின் குணமான பரிசத்தையன்றி மற்

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| சட்சு | சட்சுவிந்திரியமானது |
| அக்கினியினம்சமானபடியால் | அக்கினிபூதசத்துவாம்சமானமையால் |
| அக்கினியின் குணமான | அக்கினிபூதத்தின்சுபாவகுணமாகிய |
| ரூபங்களை மாத்திரமறியும் | உருவங்களை மாத்திரமறியும் |

வினா :—ரூபங்களெத்தனை விதமாமெனின் (257)

விடை :—வெண்மை பொன்மை கருமை செம்மை பசுமை யென ஐந்துவிதமாம். இவ்வைந்தின் கலப்பாகிய விசித்திர ரூபங்களும் இவைகளின் சகிதமாகிய அகலம் நீளம் கட்டை நெட்டை வட்டம் சிறிது பெரிது முதலிய வைகளும் ரூபங்களாகும். இவைகளும் உபாதிபேதத்தால் பலவிதமாகுமென அறிக.

வினா :—இவ்வுருவபேதங்களைச் சட்சு தனியேயறிகிறதோ அல்லது மற்றையவைகளின் சகாயத்தாலறிகிறதோ வெனின் (258)

விடை :—சட்சு ரூபத்தைப் பிரத்தியக்ஷமாயறியும் போது அந்தக்கரணத்தின் ஆபாசசகிதவிருத்தி சட்சுவாயி



யக்கிறது. ஆபாசபாகம் ரூபங்களைப் பிரகாசிப்பிக்கிறது. ஆதலால் தனியே யறிகிறதில்லை. ஆபாசசகித விருத்தியின் சகாயத்தாலறிகிறதென அறிக.

வினா :—சட்சுவிந்திரியம் அக்கினியல்லாத மற்றைப் பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின் (259)

விடை :—அக்கினியின் குணமான ரூபத்தையன்றி மற்றையப் பூதங்களின் குணங்களாகிய சப்த பரிச இரத கந்தங்களில் ஒன்றையு மறியாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
| --- | --- |
| சிங்குவை | சிங்குவை யிந்திரியமானது |
| அப்புவினம்சமானபடியால் | அப்புபூத சத்வாம்சமானமையால் |
| அப்புவின்குணமான | அப்புப்பூதத்தின் சுபாவகுணமாகிய |
| இரதங்களை மாத்திரமறியும் | சுவைகளைமாத்திர மறியும். |

வினா :—இரதங்களெத்தனைவித மெனின் (260)

விடை :—உவர்ப்பு கைப்பு கார்ப்பு துவர்ப்பு புளிப்பு தித்திப்பு என ஆறுவிதமாம். இவைகளும் கலப்பினாலும் உபாதிபேதத்தினாலும் பலவிதமாமென அறிக.

வினா :—இவ்விரத பேதங்களைச் சிங்குவை தனியே யறி
...வைகளின் சகாயத்தாலறிகிறதோ (261)

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சட்சு | சட்சுவிந்திரியமானது |
| அக்கினியினம்சமானபடியால் | அக்கினிபூதசத்துவாம்சமானமையால் |
| அக்கினியின் குணமான | அக்கினிபூதத்தின்சுபாவகுணமாகிய |
| ரூபங்களை மாத்திரமறியும் | உருவங்களை மாத்திரமறியும் |

வினு :—ரூபங்களெத்தனை விதமாமெனின் (257)

விடை :—வெண்மை பொன்மை கருமை செம்மை பசுமை யென ஐந்துவிதமாம். இவ்வைந்தின் கலப்பாகிய விசித்திர ரூபங்களும் இவைகளின் சகிதமாகிய அகலம் நீளம் கட்டை நெட்டை வட்டம் சிறிது பெரிது முதலியவைகளும் ரூபங்களாகும். இவைகளும் உபாதிபேதத்தால் பலவிதமாகுமென அறிக.

வினு :—இவ்வுருவபேதங்களைச் சட்சு தனியேயறிகிறதோ அல்லது மற்றையவைகளின் சகாயத்தாலறிகிறதோவெனின் (258)

விடை :—சட்சு ரூபத்தைப் பிரத்தியக்ஷமாயறியும்போது அந்தக்கரணத்தின் ஆபாசசகிதவிருத்தி சட்சுவாயி



ய்கிறது. ஆபாசபாகம் ரூபங்களைப் பிரகாசிப்பிக்கிறது. ஆதலால் தனியே யறிகிறதில்லை. ஆபாசசகித விருத்தியின் சகாயத்தாலறிகிறதென அறிக.

வினு :—சட்சுவிந்திரியம் அக்கினியல்லாத மற்றைப் பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின் (259)

விடை:—அக்கினியின் குணமான ரூபத்தையன்றி மற்றையப் பூதங்களின் குணங்களாகிய சப்த பரிச இரத கந்தங்களில் ஒன்றையு மறியாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| சிங்குவை | சிங்குவை யிந்திரியமானது |
| அப்புவினம்சமானபடியால் | அப்புபூத சத்வாம்சமானமையால் |
| அப்புவின்குணமான | அப்புப்பூதத்தின் சுபாவகுணமாகிய |
| இரதங்களை மாத்திரமறியும் | சுவைகளைமாத்திர மறியும். |

வினு :—இரதங்களெத்தனைவித மெனின் (260)

விடை :—உவர்ப்பு கைப்பு கார்ப்பு துவர்ப்பு புளிப்பு தித்திப்பு என ஆறுவிதமாம். இவைகளும் கலப்பினுனும் உபாதிபேதத்தினுனும் பலவிதமாமென அறிக.

வினு :—இவ்விரத பேதங்களைச் சிங்குவை தனியே யறி

விடை :—சிங்ஙுவை யிந்திரியம் இரதங்களைப் பிரத்தியக்ஷமாக அறியும்போது அந்தக்கரணத்தின் ஆபாசசகித விருத்தி சிங்ஙுவையாகிறகோளகத்தைவிட்டு வெளியே செல்லுகிறதில்லை. ஆனுல் சிங்ஙுவையுடன் சம்பந்தப்பட்ட இரதங்கட்குச் சமாஞகாரத்தையடைகிறது. அதில் விருத்திபாகம் இரதங்களின் ஆவரணத்தைப் பங்கம்செய்கிறது. ஆபாசபாகம் இரத விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிறது. ஆதலால் தனியே யறிகிறதில்லை. ஆபாசசகிதவிருத்தியின் சகாயத்தாலறிகிறதெனஅறிக.

வினு :—சிங்ஙுவை இந்திரியம் அப்புவல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன்றல்லவோ வெனின் (262)

விடை :—அப்புவின் குணமான இரதத்தையன்றி மற்றைப்பூதங்களின் குணங்களாகிய சப்தபரிசரூபகந்தங்களை யறியாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| ஆக்கிராணம் | ஆக்கிராணேந்திரியமானது |
| பிருதிவியினம்ஸமானபடியால் | பிருதிவிபூத சத்துவாம்சமானமையால் |
| பிருதிவியின் குணமான | பிருதிவிபூதத்தின் [illegible] |



வினு :—கந்தங்களெத்தனைவிதமாமெனின் (263)

விடை :—நற்கந்த துர்க்கந்தங்களென இரண்டுவிதமாம். இவ்விரண்டில் மல்லிகை முல்லை பாரிசாதம் சண்பகம் பங்கஜம் பாதிரியாதிய மலர்களினும் வெட்டிவேர் விலாமிச்சைவேர் மருக்கொழுந்து பன்னிர் அத்தர் புனுகு சவ்வாது சந்தனமாதிகளினும் உள்ள கந்தங்கள் நற்கந்தங்களாகும். மலமூத்திரசாக்கடைநீராதிகளினும் மதுமாமிசப்பிரேதாதிகளினுமுள்ள கந்தங்கள் துர்க்கந்தங்களாகும். இவைகளும் கலப்பினுனும் உபாதிபேதங்களினுனும் பலவிதமாகுமென அறிக.

வினு :—இக்கந்த பேதங்களை ஆக்கிராணம் தனியேயறிகிறதோ மற்றையவைகளின் சகாயத்தாலறிகிறதோவெனின் (264)

விடை :—கிராணேந்திரியம் கந்தங்களைப் பிரத்தியக்ஷமாக அறியும்போது அந்தக்கரணத்தின் ஆபாசசகிதவிருத்தி நாசியாகிற கோளகத்திலிருந்து நாசியாகிற கோளகத்துடன் சம்பந்தப்படும் புட்பாதிகளின் கந்தங்கட்குச் சமானமான ஆகாரத்தையடைகிறது. அதில் விருத்திபாகம் கந்தத்தின் ஆவரணத்தைப் பங்கஞ்செய்கிறது. ஆபாசபாகம் கந்தத்தைப் பிரகாசிக்கிறது. ஆதலால் தனியே யறிகிறதில்லை.

வினு :—ஆக்கிராணேந்திரியம் பிருதிவியல்லாத மற்றைப்பூதாம்ஸங்களிலொன்றல்லவோ வெனின் (265)

விடை :—பிருதிவியின் குணமான கந்தத்தையன்றி மற்றைப்பூதங்களின் குணங்களாகிய சப்த பரிச ரூப இரதங்களிலொன்றையு மறியாமையால் அல்லவென அறிக.

வினு :—இவ்வைந்திந்திரியங்களும் பாஹ்யவிஷயங்களை யறிவதுபோல ஆந்தரவிஷயங்களையு மறிவனவாமோ வெனின் (266)

விடை :--செவிகள் மூடியபோதுள்ளிரைச்சலும், அன்னாதிகளைப் புசிக்கும்போது சீதோஷ்ணங்களும், கண்களை மூடியபோது உள்ளிருட்டாதிய வருணங்களும், வாந்தி பண்ணும்போது புளிப்பாதிய இரதங்களும், ஏப்பமிடும்போது நற்கந்த துர்க்கந்தங்களும் அறியப்படுகின்றமையால் ஆந்தரவிஷயங்களையும் அறிவனவாமென அறிக.

வினு :—இவ்விந்திரியங்கள் * சமட்டியல்லவோ வெனின் (267)

விடை :—ஒன்றறிந்ததை மற்ற நான்குமறியாமலும் ஒன்று கெட்டால் மற்றைய நான்குங்கெடாமலுமிருத்தலால் அல்லவென அறிக.



வினு :-ஞானேந்திரியங்கள் பூதங்களின் இராஜதகுணாம்சங்களல்லவோ வெனின் (268)

விடை :—வசனாதிக்கிரியா சாதனங்களாக இராமல் ஞானசாதனங்களாக இருத்தலின் அல்லவென அறிக.

வினு :—இவ்விந்திரியங்கட்கு முறையே சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்நுவை ஆக்கிராணம் என்னும் பெயர்கள் வந்தது எதனுலெனின் (269)

விடை :—சுரோத்திரமாகிய காது, துவக்காகிய தோல், சட்சுவாகிய கண், சிங்நுவையாகிய நா, ஆக்கிராணமாகிய மூக்கு என்னும் ஐந்துறுப்புக்களையும் ஐந்திந்திரியங்களும் இடமாகப் பொருந்தியிருத்தலால் இவைகட்கு இடவாகுபெயராக முறையே அப்பெயர்கள் வந்ததென அறிக.

வினு :—செவியாதி ஐந்துறுப்புகளும் ஐந்திந்திரியங்களல்லவோவெனின். (270)

விடை:—மரண மூர்ச்சை சமாதிகளில்இவ்வுறுப்புக்களிருந்தும் சப்தாதிவிஷயங்களை யறியாமையினுனும், இவைகள்

விஞ :—பூதங்களின் சத்துவகுணம்சமான அந்தக்கர
ணத்தில் சேதனப் பிரதிவிம்பந் தோன்றியதுபோலச் சத்து
வகுணம்சமான ஞானேந்திரியங்களினுந் தோன்ருததது எத
னுலெனின். (271)

விடை :-பலசலாணுக்கள் சேர்ந்திருப்பதாகிய கடசலத்
திற் சந்திரப் பிரதிவிம்பந்தோன்றுகிறது. அணு அணுவாகப்
பிறிவுபட்டிராநின்ற சலாணுக்களாகிய பனியாதிகளில் பிரதி
விம்பம் அணுமாத்திரமாக இருக்கினும் தோன்றுகிறதில்லை.
அதுபோல அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களும் சத்து
வாம்சங்களாக இருக்கினும் அவ்வம்சங்கள் சமட்டியாகச்
சேர்ந்திருப்பது அந்தக்கரணமானமையால் அதிற் சேதனப்
பிரதிவிம்பந் தோன்றுகிறது. சமட்டியாகச் சேராமல் வியட்
டியாகப் பிரிவுற்றிருப்பவை ஞானேந்திரியங்களானமை
யால் அவைகளிற் சேதனப்பிரதிவிம்பங்கள் அற்பமாக இருக்
கின்றன. ஆதலால் தோன்றவில்லையென அறிக.

விஞ :—ஞானேந்திரியங்களிற் சேதனப்பிரதிபிம்பங்கள்
அற்பமாக இருக்கினும், அப்பிரதிவிம்பங்களுக்குத்தக்கதாக
அதிட்டான சேதனப்பிரகாச சம்பந்தமும் விஷயப்பிரஞ்
ஞை, விருப்பு, வெறுப்பு, கருத்துருத்துவாதி ஜீவத்துவம்
பந்தமோக்ஷமாதிகளும் உள்ளனவாகும். ஆதலால் அவை
களையும் ஜீவர்களாகக்கொண்டு ஒரு சரீரத்தில் ஆறு ஜீவர்க
[illegible] யெனின். (272)



விடை :—ஞானேந்திரியங்களில் சேதனத்தின் ஆபாசங்
களுள்ளனவாயினும் எந்தஆபாசத்துக்கு விருத்திசம்பந்த
முண்டோ அதற்கு விஷயப்பிரஞ்ஞையாதிகளுண்டாகும்
எந்த ஆபாசத்துக்கு விருத்தி சம்பந்தமில்லையோ அதற்கு
விஷயப்பிரஞ்ஞையாதிகளுண்டாகாவாம். ஆதலின் அந்தக்
கரணத்துக்கு விருத்திரூப பரிணாமயோக்கியதை யிருக்கிற
துபோல ஞானேந்திரியங்கட் கில்லாமையால் அவைகளிலு
ள்ள ஆபாசங்களுக்கு விஷயப் பிரஞ்ஞை விருப்பு, வெறுப்பு,
கருத்திருத்துவமாதிய ஜீவத்துவம் பந்தமோக்ஷங்களுண்டா
கவில்லை. ஆனதுபற்றி அவைகளைச் சீவர்களாகக் கூறவில்லை
யென அறிக.

விஞ :—அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களும் பூதங்
களின் சத்துவாம்சங்களாகவே யிருப்பதுமன்றிச் சேதனப்
பிரதிவிம்பங்களை யுடையனவாகவுமிருக்க. விருத்திரூப பரி
ணாமங்களை யடைதற்கான யோக்கியதை அந்தக்கரணத்துக்
கிருப்பதும் ஞானேந்திரியங்கட் கில்லாததும் எதனுலெ
னின். (273)

விடை :—பூதங்களின் சூட்சுமமாகிய தாமதாம்சங்கள்
ஐந்தும் கலப்புற்று ஒன்று சேர்ந்தமைப்பற்றி யவைகளுக்குத்
தூலிகரிக்கும் யோக்கியதை யுண்டாகியதுபோல, பூதங்க
ளின் சத்துவாம்சங்கள் ஐந்தும் கலப்புற்று ஒன்றுசேர்ந்தது

அந்தக்கரணமானமைபற்றி அதற்கு விருத்திரூப ரிணாமயோக்கியதை யுண்டாகியது. ஞானேந்திரியங்கள் ஒன்றுசேராமல் வேறுவேறாக இருப்பனவானமைபற்றி அவைகளுக்கு விருத்திரூப பரிணாமயோக்கியதை யுண்டாகவில்லையென அறிக.

வினா:—ஞானேந்திரியங்கள் ஐந்தினிடத்தும் விஷயக்கிரகணத்துவம் காணப்படுகிறதே யெனின். (274)

விடை:—அதுவும் சத்துவாம்சச் சேர்க்கையான அந்தக்கரணவிருத்தி சம்பந்தித்தபோது அதன்சேர்க்கை விசேடத்தாற் காணப்படுமேயன்றி மற்றப்போது காணப்படாதென அறிக.

வினா:-அற்றேல் சப்தபரிசமாதிய விஷயஞானம் கேவலம் அந்தக்கரண விருத்திக்கேயுண்டு, இந்திரியங்களுக்கில்லையெனலாமெனின். (275)

விடை:—அங்ஙனமாயின் அந்தக்கரணவிருத்தி இந்திரிய சகாயமின்றி விஷயங்களை யறியவேண்டும் அல்லது ஓரிந்திரியத்தைப் பற்றிக்கொண்டாவது ஐந்து விடயங்களையுமறியவேண்டும். அங்ஙனமின்றி ஓரோரிந்திரியத்தைப் பற்றிக்கொண்டு ஓரோர்விடயத்தை மாத்திரமறிவது அநுபவமானமையினும் சுருதிகளில் இவ்விந்திரியங்கட்கு ஞானேந்திரியங்களெனப் பெயர் கூறுகின்றமையினும் வி



வேண்டும். விருத்திக்குமாத்திர முண்டென்றும் சொல்லப்படாதென அறிக.

வினா:--விடயங்களை இந்திரியங்களும் அந்தக்கரணவிருத்தியுஞ் சேர்ந்துமாத்திர மறிகின்றனவோ இவைகளோடு வேறு தத்துவங்களுஞ் சேர்ந்தறிகின்றனவோ வெனின் (276)

விடை:—இந்திரியங்களும் அந்தக்கரண விருத்தியும் விருத்தியிலுள்ள ஆபாசனும் இவைகளுக் கதிட்டானமாகிய சாட்சியுஞ் சேர்ந்தறிகிறதென அறிக.

வினா:—அற்றேல் ஓர் விடயத்தையறியும்போது நிகழப்படும் இந்திரியத்தின் செயல் யாது? அந்தக்கரண விருத்தியின் செயல் யாது? அதிலுள்ள ஆபாசன் செயல் யாது? இவைகளுக் கதிட்டானமாய் அந்தக்கரணவிருத்தியி லாரூடமாயுள்ள சாட்சியின் செயல் யாதெனின். (277)

விடை:—விடயத்தின் பொருட்டன்மை தோன்றாத பேதத் தோற்றரவைமாத்திரம் நிகழச்செய்வது இந்திரியத்தின் செயல்; விஷயத்தை மறைத்திருந்த ஆவரணத்தைப் பங்கஞ்செய்வது அந்தக்கரண விருத்தியின் செயல்; ஆவரணபங்கமாகிய விஷயத்தை லோகாந்தகுந்தம்போல விருத்தியில் நின்றும் இன்னதென்னச் சுட்டுதல் ஆபாசனாகிய ஜீவன்செ

வினா :—இவ்விந்திரியங்கட்கு அதிதேவதைகளெவை யெனின். (278)

விடை:—சுரோத்திரத்துக்குத் திக்கும், துவக்குக்கு வாயுவும், சட்சுவுக்குச் சூரியனும், சிங்குவைக்கு வருணனும், ஆக்கிராணத்துக்கு அசுவினி குமாரரும் அதிதேவதையென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| இவ்வைந்திந்திரியங்களும்ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்காது. அந்தக்கரணம் ஐந்துமாத்திரையும் ஒன்றாகக் கூடியதானமையால் ஐந்திந்திரியங்களினாலும் ஐந்து விடயங்களையும் அறியும். இந்த அந்தக்கரணம் (ரு) ஞானேந்திரியம் (ரு) ஆகிய (ய)ம் சத்துவாம் சமானபடியால் ஞானசாதனங்களாயின. | வெளி. |

(நூல் கச.)

பின்னும் ஆகாயமாதிய ஐந்து பூதங்களி னிராஜதாம்சங்களிற் பூதத்துக்கோரொரு மாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டி வைக்கப்பட்டவை வியானாதி பஞ்சவாயுக்களாம். இவைகளில், வியானவாயுவு ஆகாயத்தினம்ச மானபடியால் ...சர்வாங்கமும் வியாபித்திருக்கும்...



யத்திலிருந்து நாசியாதிபரியந்தம் அலையும். அபானவாயுவு அக்கினியினம்சமானபடியால் அக்கினியைப்போல சாடராக்கினியாக உஷ்ணித்துக்கொண்டு குதத்தைப் பற்றிநின்று உண்ட அன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவாயுவு அப்புவினம்சமானபடியால் சரீரநடுவான நாபிஸ்தானத்தினின்று உண்ட அன்னரசங்களை அப்புவைப்போல இழுக்கும். உதானவாயுவு பிருதிவியினம்சமானபடியால் கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப்போல கடினமாகநின்று உண்ட அன்னபானாதிகளைக் கடையும். இந்த ஐந்து வாயுவுக்களையுமல்லாமல் வாந்தி பண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மனென்றும், குறுகுறுத்துத் தும்முவிக்கின்றது கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளுவிக்கின்றது தேவதத்தனென்றும், வீங்குவிக்கின்றது தனஞ்சயனென்றும், வேறே ஐந்துவாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவர். இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியால் வேறல்ல.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பின்னும் ஆகாயமாதிய ஐந்துபூதங்களின் இராஜதாம்சத்திலே பூதத்துக்கு ஒரொரு மாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைக்கப்பட்டது | வெளி. |

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| இவைகளில் வியானவாயு | இப்பஞ்சவாயுக்களில் வியான வாயுவானது |
| ஆகாயத்தினம்சமானபடியால் | ஆகாயபூத விராஜதாம்சமான மையால் |
| ஆகாயத்தைப்போல | ஆகாயபூதம் சகலபூதங்களி னும்வியாபித்திருப்பது போல |
| சர்வாங்கமும் | சிரசரணுதிய சகல அங்கங்க ளினும் |
| வியாபித்திருக்கும் | வியாபித்துத் தாங்கிக்கொண் டிருக்கும் |

வினு :—இவ்வாயுவுக்கு வியானனெனப் பெயர்வந்தது எதனுலெனின். (279)

விடை :—வியானமென்பதுநான்குமுழ அளவின்பெயர் இவ்வாய்வு நான்குமுழ அளவாகச் சரீரத்தில் வியாபித்திருப் பதுபற்றி இதற்கு அளவையாகு பெயராக வியானனெனப் பெயர் வந்ததென அறிக.

வினு :—வியானவாயு வல்லாத மற்றைய வாயுக்கள் சரீ ரத்தைத் தாங்காவோவெனின். (280)

விடை :-புகைக்கூண்டின் நிரம்பிய புகைக்கூண்டைத் தூக்கும அல்லது தாங்குமேயன்றி குறைவாயுள்ள புகையால் தூக்கவும் அல்லது தாங்கவுமாகாததுபோலச் சரீர முழுவ



தும் வியாபித்து நிரம்பியுள்ள வியானவாயு சரீரத்தைத் தாங் குமேயன்றி சரீரத்தில் ஏகதேசமாகிய இருதயஸ்தானம், குதஸ்தானம், நாபிஸ்தானம், கண்டஸ்தானங்களிற் பின்ன பின்னமாகக் குறைவுற்றிருப்பவைகள் மற்றைய வாயுக்களா னமையால் அவைகள் சரீரத்தைத் தாங்காவென அறிக.

வினு :—வியானவாயு ஆகாயமல்லாத மற்றைப் பூதாம் சங்களிலொன்றல்லவோவெனின். (281)

விடை :—இவ்வாயுவினிடத்து ஆகாயத்தைப்போல சரீ ரத்தில் வியாபித்துத் தாங்குதலாகிய கிரியையன்றி மற்றைப் பூதங்களுக்குள்ள சலித்தல், தகித்தல், இழுத்தல், கடின மாகநின்று கடைதல்களாகிய கிரியைகளி லொன்றேனுங் காணப்படாமையின் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| பிராணவாயு | பிராணவாயுவானது |
| வாயுவினம்சமானபடியால் | வாயுபூத விராஜதாம்சமான மையால் |
| வாயுவைப்போல | வாயு சதா சலித்துக்கொண் டிருப்பதுபோல |
| இருதயத்திலிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும். | இருதயஸ்தானத்திலிருந்து மூக்கினடிவரையில் சலித்துக்கொண்டிருக்கும். |

வினு:—இவ்வாயுவுக்குப் பிராணவாயுவெனப் பெயர் வந்தது எதனுலெனின். (282)

விடை:—பிராணமென்பது பலத்தின்பெயர். இவ்வாயு சரீரத்துக்குப் பலத்தைச் செய்துகொண்டு பல ரூபமாயிருப்பதுபற்றி இதற்குப் பண்பாகுபெயராகப் பிராணனெனப் பெயர் வந்ததென அறிக.

வினு:—பிராணவாயு வாயுவல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன்றல்லவோவெனின். (283)

விடை:—இவ்வாயுவினிடத்தில் வாயுவின் கிரியையாகிய சலித்தலன்றி மற்றைப்பூதங்களுக்குள்ள தாங்கல், தகித்தல், இழுத்தல், கடைதல்களாகிய கிரியைகள் காணப்படாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| அபானவாயு | அபானவாயுவானது |
| அக்கினியினம்சமானபடியால் | அக்கினிபூத விராஜதாம்சமானமையால் |
| அக்கினியைப்போல | அக்கினி கிட்டியவைகளைத் தகிப்பதுபோல |
| சாடராக்கினியாக | * மூலாக்கினிபோல |
| உஷ்ணித்துக்கொண்டு | உஷ்ணகாரமாகி |
| குதத்தைப்பற்றி நின்று | மலவாயிலைப் பொருந்திநின்று |
| உண்ட அன்னுதிகளை | புசித்த அன்னமுதலியவற்றை |



வினு:—இவ்வாயுவுக்கு அபானவாயுவெனப் பெயர் வந்தது எதனுலெனின். (284)

விடை:—அபானமென்பது குதம் குதமாகிய அபானஸ்தானத்தைப் பொருந்தி யிருத்தலாலிதற்கு இடவாகுபெயராக அப்பெயர் வந்ததென அறிக.

வினு:-அபானவாயுவு அக்கினியல்லாத மற்றைப் பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின். (285)

விடை:—இவ்வாயுவினிடத்து அக்கினியைப் போலத் தகித்தலன்றி மற்றைப் பூதங்களுக்குள்ள தாங்கல், சலித்தல் இழுத்தல், கடைதல்களாகிய கிரியைகள் காணப்படாமையின் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சமானவாயு | சமானவாயுவானது |
| அப்புவினம்சமானபடியால் | அப்புபூத விராஜதாம்சமானமையால் |
| அப்புவைப்போல | அப்புபதார்த்தங்களையிழுப்பதுபோல |
| சரீர நடுவான | சரீர மத்தியாகிய |
| நாபிஸ்தானத்தினின்று | உந்தியாகியவிடத்திலிருந்து |
| உண்ட அன்னரசங்களை | புசிக்கப்பட்ட அன்னசாரங்களை |

வினா :—இவ்வாயுவுக்குப் பிராணவாயுவெனப் பெயர் வந்தது எதனாலெனின். (282)

விடை :—பிராணமென்பது பலத்தின்பெயர். இவ்வாயு சரீரத்துக்குப் பலத்தைச் செய்துகொண்டு பல ரூபமாயிருப்பதுபற்றி இதற்குப் பண்பாகுபெயராகப் பிராணனெனப் பெயர் வந்ததென அறிக.

வினா :—பிராணவாயு வாயுவல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன்றல்லவோவெனின். (283)

விடை :—இவ்வாயுவினிடத்தில் வாயுவின் கிரியையாகிய சலித்தலன்றி மற்றைப்பூதங்களுக்குள்ள தாங்கல், தகித்தல், இழுத்தல், கடைதல்களாகிய கிரியைகள் காணப்படாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| அபானவாயு | அபானவாயுவானது |
| அக்கினியினம்சமானபடியால் | அக்கினிபூத விராஜதாம்சமானமையால் |
| அக்கினியைப்போல | அக்கினி கிட்டியவைகளைத் தகிப்பதுபோல |
| சாடராக்கினியாக | * மூலாக்கினிபோல |
| உஷ்ணித்துக்கொண்டு | உஷ்ணாகாரமாகி |
| குதத்தைப்பற்றி நின்று | மலவாயிலைப் பொருந்திநின்று |
| உண்ட அன்னாதிகளை | புசித்த அன்னமுதலியவற்றை |
| ஜீரணிப்பிக்கும். | சமிப்பிக்கும். |

* ...க்கினி—உதராக்கினி.



வினா :—இவ்வாயுவுக்கு அபானவாயுவெனப் பெயர் வந்தது எதனாலெனின். (284)

விடை :—அபானமென்பது குதம் குதமாகிய அபானஸ்தானத்தைப் பொருந்தி யிருத்தலாலிதற்கு இடவாகு பெயராக அப்பெயர் வந்ததென அறிக.

வினா:-அபானவாயுவு அக்கினியல்லாத மற்றைப் பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின். (285)

விடை :—இவ்வாயுவினிடத்து அக்கினியைப் போலத் தகித்தலன்றி மற்றைப் பூதங்களுக்குள்ள தாங்கல், சலித்தல் இழுத்தல், கடைதல்களாகிய கிரியைகள் காணப்படாமையின் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சமானவாயு | சமானவாயுவானது |
| அப்புவினம்சமானபடியால் | அப்புபூத விராஜதாம்சமானமையால் |
| அப்புவைப்போல | அப்புபதார்த்தங்களையிழுப்பது போல |
| சரீர நடுவான | சரீர மத்தியாகிய |
| நாபிஸ்தானத்தினின்று | உந்தியாகியவிடத்திலிருந்து |
| உண்ட அன்னரசங்களை | புசிக்கப்பட்ட அன்னசாரங்களை |
| இழுக்கும். | சகல நாடிகளினுமிழுத்து சமப்படுத்தும் |

வினு :—இவ்வாயுவுக்குச் சமானவாயுவெனப் பெயர் வந்தது எதனுலெனின். (286)

விடை :—சமானமென்பது ஒப்பு. (அதாவது சமம்) புசிக்கப்பட்ட பக்ஷிய, போஜ்ஜிய, சோஷிய லேகியரூபமான நாலுவகை யாஹாரங்களையும் சாடராக்கினியினுல் பாகஞ் செய்தபின், அவைகளின் தூலபாகமாகிய மலசலங்களை மல சலக் குழியிற்றள்ளி சூட்சுமமான ரசபாகங்களைச் சகல அவயவங்களினும் சகல நாடிகளினும் இழுத்துச் சமப்படுத்துவதாகிய தொழில்பற்றி இதற்குத் தொழிலாகு பெயராக அப்பெயர் வந்ததென அறிக.

வினு :-பக்ஷிய போஜ்ஜிய சோஷிய லேகியமென்னும் நால்வகை யாஹாரங்களெவை யெனின். (287)

விடை :—பற்களாற் கடித்துச் சாப்பிடத்தக்க காய்) கிழங்குமுதலிய வஸ்துக்கள் பக்ஷியமென்னப்படும். நாக்கினுல் மென்று குதப்பிச் சாப்பிடத்தக்க அன்னமுதலிய வஸ்துக்கள் போஜ்ஜியமென்னப்படும். வாயினுலுருஞ்சிச் சாப்பிடத்தக்க பாயசம் பால் முதலியவஸ்துக்கள் சோஷியமென்னப்படும். நாக்கினல் நக்கி



வினு :—சமானவாயு அப்புவல்லாத மற்றைப்பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின். (288)

விடை :—இவ்வாயுவினிடத்து அப்புவைப்போலிழுத்தலன்றி மற்றைப் பூதங்களுக்குள்ள தாங்கல், சலித்தல், தகித்தல், கடைதல்களாகிய கிரியைகள் காணப்படாமையால் அல்லவென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| உதானவாயு | உதானவாயுவானது |
| பிருதிவியின் அம்சமானபடியால் | பிருதிவிபூதவிராஜதாம்சமானமையால் |
| கண்டத்தைப்பற்றி | கண்டஸ்தானத்தைப்பொருந்தி |
| பிருதிவியைப்போல | பிருதிவி கடினமாயிருப்பது போல |
| கடினமாகநின்று | கடுமையாக இருந்து |
| உண்ட அன்னபானுதிகளைக் | புசிக்கப்பட்ட அன்னபான முதலியவைகளை |
| கடையும். | கடைந்துதள்ளும். |

வினு :—இவ்வாயுவுக்கு உதானமெனப் பெயர் வந்தது எதனுலெனின். (289)

விடை:- * உத்தானமென்பது இசைப்பு (அதாவது கல

தியில் சகல இந்திரியங்களையும் அஞ்ஞானத்திற் கலந்தொடுங்கச்செய்தலும் சாக்கிரத்தில் அவைகளைத் தத்தமிடங்களிற் சேர்த்து நிலைபெறச் செய்தலும் இஃதன்றி உத்தானமென்பது எழும்புதல். மரணகாலத்தில் சகல இந்திரியங்களையும் சேர்த்துக்கொண்டு லோகாந்திரங்களை யடைதற்கெழும்புதலுமாகிய தொழில்களுடையதானமையின் இதற்குத் தொழிலாகுபெயராக அப்பெயர் வந்ததென அறிக. (வாசு-அ-வரு)

வினா :—உதானவாயு பிருதிவியல்லாத மற்றைய பூதாம்சங்களிலொன்றல்லவோ வெனின். (290)

விடை :-இவ்வாயுவினிடத்தில் பிருதிவியைப்போல் கடினமாகின்று கடைதலன்றி மற்றைப்பூதங்களுக்குள்ள தாங்கல் சலித்தல் தகித்தல் இழுத்தல்களாகிய கிரியைகள் காணப்படாமையால் அல்லவென அறிக.

வினா :—இப்பஞ்சவாயுக்களும் இந்திரியங்கள்போல வியட்டி யல்லவோவெனின். (291)

விடை :—இந்திரியங்கள் ஒன்று கெட்டு மற்றொன்றிருத்தல்போல வாயுக்கள் ஒன்றுகெட்டு மற்றொன்றிராமையால் வியட்டியல்லவென அறிக.



ணத்திற் பிரதிபலித்த சேதனம் வியானாதிவாயுக்களில் பிரதிபலிக்காதது எதனாலெனின். (292)

விடை :—தருப்பணமும் ஓடும்மண்ணின் காரியமாகவும் பல அணுக்கள் சேர்ந்ததாகவுமிருக்கினும் சூரியன் பிரதிபலித்தற்குத் தருப்பணம் ஸ்வச்சத்திரவியமானமையால் யோக்கியதையுள்ளதும் ஓடு மலினத்திரவியமானமையால் யோக்கியதை யில்லதுமாயிருத்தல்போல அந்தக்கரணமும் வியானாதிவாயுக்களும் பஞ்சபூதகாரியங்களாகவும் சமட்டியாகவுமிருக்கினும் சேதனம் பிரதிபலித்தற்கு அந்தக்கரணம் நின்மலமாகிய சத்துவகுணம்சமானமையால் யோக்கியதையுள்ளதும் வியானாதிவாயுக்கள் மலினமாகிய இராஜதாம்சமானமையால் யோக்கியதையில்லனவு மானமையினென அறிக.

வினா :-இப்பஞ்சவாயுக்களுக்கும் அதிதேவதைகளெவையெனின். (293)

விடை :—வியானனுக்கு விசுவயோனியும் பிராணனுக்கு

| (பதம்.) | (பொருள்) |
| --- | --- |
| இவ்வைந்து வாயுக்களையல்லாமல் வாந்தி பண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மனென்றும், குறுகுறுத்துத் தும்முவிக்கின்றது கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளுவிக்கின்றது தேவதத்தனென்று வீங்குவிக்கின்றது தனஞ்சயனென்றும் வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவார். இவ்வைந்தும் பிராணனுடையதொழிலானபையால் வேறல்ல. | வெளி. |

(நூல் ௧௫)

பின்னும் ஆகாயமாதிய ஐந்துபூதங்களின் இராஜதாம்சத்திற் பூதத்துக்கோரொரு மாத்திரையெடுத்துத் தனித்தனியே வைக்கப்பட்டவை வாக்காதிப கன்மேந்திரியங்களென்று சொல்லப்படும். இவைகளில் ஆகாயத்தினிடமாக வாக்கு வசனிக்கும். வாயுவினிடமாகப் பாணியிடுதலேற்றல் செய்யும். அக்கினியினிடமாகப் பாதம் நடக்கும். அப்புவினிமாகப் பாயுரு மலசலங்களை வெளியிற் றள்ளும். பிருதிவியினிடமாக வுபத்தம் சுகத்தைப்பண்ணும். இவ்வைந்திந்திரியங்களும் தனித்தனியே யிருக்கின்றமையால் ஒன்று மற்றொன்



யும் ஐந்தின் வழியினுனும் ஐந்து தொழிலையும் செய்து முடிக்கும் இவ்வாயுக்கள் (௫) கன்மேந்திரியங்கள் (௫) ஆகிய (௰)ம் இராஜதாம்சமானமையால் கிரியாசாதனமாயின.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| பின்னும் ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சத்திற்பூதத்துக்கோரொரு மாத்திரையெடுத்துத் தனித்தனியே வைக்கப்பட்டவை வாக்காதி கன்மேந்திரியங்களென்று சொல்லப்படும். | வெளி. |

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| இவைகளில் | இவ்வைந்திந்திரியங்களில் |
| ஆகாயத்தினிடமாக | ஆகாயத்தைப்பற்றிக்கொண்டு |
| வாக்கு | அட்டதானங்களைப் பொருந்தி வாக்கிந்திரியமானது |
| வசனிக்கும் | அக்ஷராதி பதசமூக வாக்கிய வுச்சாரணக் கிரியைகளைச் செய்யும். |

வினா:—வாக்கிந்திரியம் ஆகாயத்தைப் பொருந்தி வசனக்கிரியைகளைச் செய்யுமென்றது யாதினுலெனின். (294)

விடை:—தனக்குக் காரணமாயும் சப்தகுணமுடையதாயுமிருத்தலினென அறிக.

விடை :-நாநுனி, தாலுமூலம், மேலுதடு, கீழுதடு, இருதயம், கண்டம்தந்தம், பிரமரந்திரமாகிய உச்சித்துவாரம் ஆகிய எட்டுமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| வாயுவினிடமாக | வாயுவைப்பற்றிக்கொண்டு |
| பாணி | பாணியிந்திரியம் கைகளிலிருந்து |
| இடுதலேற்றல் செய்யும் | தானுதானக் கிரியைகளைச் செய்யும் |

வினு:-பாணியிந்திரியம் வாயுவைப் பொருந்தித் தானுதானக்கிரியைகளைச் செய்யுமென்றது யாதினுலெனின். (296)

விடை :-வாயு தனக்குக் காரணமாயும் சலித்தலுடையதாயும் தானுதானங்கட்கான பலத்தைத் தருவதாயுமிருத்தலாலென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அக்கினியினிடமாக | அக்கினியைப்பற்றிக்கொண்டு |
| பாதம் | பாதேந்திரியம் கால்களிலிருந்து |
| நடக்கும். | கமனுகமனக்கிரியைகளைச் செய்யும். |



விடை :—அக்கினி தனக்குக் காரணமாயும் ஊர்த்துவமுகமாக எழும்புதலுடையதாயுமிருத்தலினென அறிக.

| (பதம) | (பொருள்) |
|---|---|
| அப்புவினிடமாக | அப்புவைப்பற்றிக்கொண்டு |
| பாயுரு | பாயுருவிந்திரியம் (குதத்திலிருந்து) |
| மலசலாதிகளை | மலமூத்திராதிகளை |
| வெளியிற்றள்ளும் | வெளியில் விசர்ச்சனஞ்செய்யும் |

வினு .-பாயுருவிந்திரியம் அப்புவைப் பொருந்தி விசர்ச்சனக் கிரியைகளைச் செய்யுமென்றது யாதினுலெனின்(298)

விடை:- அப்பு தனக்குக் காரணமாயும் பற்றியதை இழுத்துச் செல்லுதலுடையதாயுமிருத்தலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பிருதிவியினிடமாக | பிருதிவியைப் பற்றிக்கொண்டு |
| உபத்தம் | உபத்தேந்திரியம் யோனியிலிருந்து |
| சுகத்தைப்பண்ணும் | இந்திரிய விசர்ச்சனத்தாலின்பத்தைச் செய்யும் |

விடை:—பிருதிவி தனக்குக் காரணமாயும் தான் விறைப்புறுதற்கேதுவான கடின சுபாவமுடையதாயுமிருத்தலினென அறிக.

வினு:—இவ்வைந்திந்திரியங்களும் பூதங்களின் சத்துவாம்சங்களல்லவோ வெனின். (300)

விடை:—ஞானசாதங்களாக இராமல் கிரியாசாதனங்களாக இருத்தலால் அல்லவென அறிக.

வினு:-இவ்விந்திரியங்கள் சமட்டியல்லவோவெனின் (301)

விடை:—ஒன்றின் கிரியையை மற்றைய நான்குஞ் செய்யாமையினுனும் ஒன்று கெட்டால் மற்றைய நான்குங் கெடாதிருத்தலினுனும் அல்லவென அறிக.

வினு:—இவைகட்கு வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தமெனப் பெயர் வந்தது யாதினுலெனின். (302)

விடை:—வாக்கு, பாணி, பாதம்பாயுரு, உபத்தமென்னும் உறுப்புக்களை யிடமாகப் பொருந்தியிருத்தலால் இவ்விந்திரியங்கட்கு இடவாகு பெயராக முறையே அப்பெயர்கள் வந்தனென அறிக.



விடை.-இவ்வுறுப்புக்கள் சுழுத்தி மூர்ச்சை மரணகாலங்களிலிருந்தும் வசனுதிக்கிரியைகளைச் செய்யாமையினுனும் இந்திரியங்களால் பிரத்தியக்ஷமாக அறியப்படுவதாகத் தூலீகரித்துள்ள தூல சரீரத்தின் அவயவங்களாக இருத்தலினுனும் அல்லவென அறிக.

வினு:—இவ்விந்திரியங்கட்கு அதிதேவதை களெவை யெனின். (304)

விடை:—வாக்குக்கு அக்கினியும் பாணிக்கு இந்திரனும் பாதத்துக்குச் சூரியனும், பாயுருவுக்கு மிருத்தியுவும் உபத்தத்துக்கு பிரஜாபதியும் அதிதேவதைகளென அறிக.

| (பதம்) | (பொருள் |
| --- | --- |
| இவ்வைந்து இந்திரியங்களும் ஒன்ருேடு ஒன்று கூடாதிருக்கின்றமையால், ஒன்று மற்ருென்றின் தொழிலைச் செய்யமாட்டாது. வியானுதி வாயுக்கள் ஐந்துமாத்திரம் ஒன்ருகக்கூடியிருக்கின்றமையால் கன்மேந்திரியம் ஐந்தின் வழியினுனும் ஐந்து தொழில்களையும் செய்து முடிக்கும் இவ்வாயுக்கள் (ரு) கன்மேந்திரியம் (ரு) ஆகிய (யி) ம் இராஜதாம்சமானமையால் கிரி | வெளி. |

வினு :-கன்மேந்திரியங்களைந்தும் ஒன்று மற்ருென்றின் தொழிலைச் செய்யமாட்டாதெனின் தன்தன் தொழிலைச் செய்யுமென்பது துணிபாயிருக்க வியானுதி வாயுக்களைந்தும் கன்மேந்திரியம் ஐந்தின் வழியினுனும் ஐந்து தொழிலையுஞ் செய்து முடிக்குமெனக் கூறில் கன்மேந்திரியங்கட்கு அதிவியாப்திதோடம் வருமேயெனின். (305)

விடை :—வாயுக்களால் பிரேரிப்பிக்கப்பட்டுக் கன்மேந்திரியங்கள் தன் தன் தொழிலைச் செய்யுமேயன்றிச் சுதகாச் செய்யமாட்டா வென்பதுபற்றி அங்ஙனம் கூறினமையால் கன்மேந்திரியங்கட்கு அதிவியாப்திதோடம்வராதென அறிக.

வினு :—வாயுக்களும் இந்திரியங்களைப்போல சடப்பொருள்களானமையால் அவைகள் மற்ருென்றைப் பிரேரிப்பிக்குமென்பது அசம்பாவிதமெனின். (306)

விடை :—அக்கினி சடமாயிருக்கினும் சடமாகிய கந்தகம் உப்பு கரித்தூள்களாகிய வெடிமருந்துடன் சம்பந்தித்து பீரங்கியினுள் கெட்டிக்கப் பட்டிராநின்ற இருப்புக்குண்டை வெளியிற்சென்று தூரத்திருப்பதாகிய சதுரங்கசேனைகளை நாசஞ்செய்யும்படி யேவுதல்போல வாயுக்கள் சடமாயிருக்கினும் கன்மேந்திரியங்களைப் பிரேரிப்பிக்கக்கூடும்; ஆதலின் அசம்பாவித மல்லவென அறிக.



வினு :—சடவஸ்துக்களுக்கும் பிரேரகசத்தியிருக்குமாயின் பிரேரக கருத்தாவெனச் சுருதிகளிற் கூறப்படுகிற ஈசுவரனுக்கு அதிவியாப்திதோடம் வருமேயெனின். (307)

விடை :—சகலசத்திகட்குங் காரணமாகிய மாயாசத்தியையுடையவன் ஈசுவரனுனமையால் சகலசத்திகளும் ஈசுவரனுடைய சத்திகளேயாகும்; ஆதலின் ஈசுவரனுக்கு அதிவியாப்திதோடம் வராதென அறிக.

(நூல் கசு)

அந்தக்கரணம் (ரு) ஞானேந்திரியம் (ரு) வாயுக்கள்(ரு) கன்மேந்திரியம் (ரு) ஆகிய (உ0) தத்துவங்களும் சூட்சுமசரீரங்களென்று சொல்லப்படும் இச்சூட்சுமசரீரங்களை மாயாப் பிரதிவிம்பராகிய ஈசுவரன் அவித்தியாப் பிரதிவிம்பராகிய ஜீவர்கள் அனேகரானமையால் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சரீரமாகச் சிருட்டித்தளித்தான். இப்படிச் சூட்சும சரீரகற்பனை சொல்லப்பட்டது.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| அந்தக்கரணம் (ரு) ஞானேந்திரியம் (ரு) வாயுக்கள் (ரு) கன்மேந்திரியம் (ரு) ஆகிய (உ0) தத்துவங்களும் சூட்சுமசரீரமென்று சொல்லப்படும். | வெளி. |

வினு :—ஞானேந்திரியங்களில் சுரோத்திர சட்சு ஆக்கிராணங்களும் கன்மேந்திரியங்களில் பாணி பாதகங்களும் முறையே இரண்டு செவிகளினும், இரண்டு கண்களினும், இரண்டு நாசிகளினும், இரண்டு கைகளினும், இரண்டு கால்களினும், இரண்டிரண்டாகவே யிருப்பது அவவிந்திரிகங்களின் காரியங்களாற்றுனே காணப்படுகிறதா யிருத்தலால் (உரு) தத்துவம் சூட்சுமசரீரமெனக் கூருமல் (உய) தத்துவம் சூட்சுமசரீரமெனக் கூறியதென்னையெனின். (308)

விடை :—ஒரு மரம்மேலிரண்டு கவராகப் பிரிவுற்று வளர்ந்து தனித்தனியே பத்திரபுட்ப பலாதிகளைத் தரினும் அது இரண்டுமரமாக எண்ணப்படாமல் ஒருமரமாகவே எண்ணப்படுவதுபோல சிரசின் மத்தியிலிருந்து சுரோத்திரம் சட்சு ஆக்கிராணமென்னும் மூன்றும் முக்கமலத்திலிருந்து பாணிபாதமென்னும் இரண்டு மாகிய ஐந்திந்திரியங்களில் ஒவ்வொரிந்திரியமும் இரண்டிரண்டு கவராகப் பிறிவுற்று நீண்டு முறையே இரண்டுகாது இரண்டுவிழி இரண்டுநாசி இரண்டுகை இரண்டுகால்களினுமிருந்து சப்தரூபங்களை யறியினும் தானகமன கமனங்களைச்செய்யினும் அவைகள் இரண்டிரண்டாக எண்ணப்படாமல் ஒன்றென்றுகவே யெண்ணப்படு



வினு :—சில சாஸ்திரங்களிற் சூட்சுமசரீரதத்துவங்கள் (கசு) எனவும் சில சாஸதிரங்களிற் (கஎ) எனவும் கூறுகின்றன; அது இந்நூலுக்கு விரோதமல்லவோ வெனின். (309)

விடை :—சிலசாஸ்திரங்களில் அந்தக்கரணம் (ரு) ல் உள்ளத்தைச் சித்தத்திலடக்கி (கசு) எனவும் சில சாஸ்திரங்களில் உள்ளம் சித்தம், அகங்காரமாகிய மூன்றையும் மனம் புத்தியென்னு மிரண்டிலடக்கி (கஎ) எனவும் கூறியிருத்தலால் விரோதமல்லவென அறிக.

வினு :—இருபது தத்துவங்கட்கும் சூட்சுமசரீரமெனப் பெயர் வந்தது யாதினுலெனின். (310)

விடை :-தூலசரீரம்போல இந்திரியங்கட்கு விஷயமாகத் தூலிகரித்துத்தோன்றுமல் அனுமானத்தாலறியத்தக்கதாக இருத்தலினென அறிக.

வினு :—பிராணவாயுவும் அபானவாயுவும் நாசிவாயிலாகவும் குதவாயிலாகவும், சப்தபரிசங்கள் தோன்ற வெளிப்படுதலாதிகள் சுரோத்திரேந்திரியத்தாலும், துவக்கிந்திரியத்தாலும், பிரத்தியக்ஷமாக அறியப்படுகின்றமையால் சூட்சும சரீ

விடை :—நாசிவாயிலாகவும் குதவாயிலாகவும் சப்தபரி
சங்கள் தோன்ற வெளிப்படும் வாயுக்கள் சூட்சுமசரீரதத்து
வங்களிற் சேர்ந்த பிராணன் அபானனென்னு வாயுக்களன்
ரும். இவைகளுக்கன்னியமாய் அனுமானத்தாலறியத்தக்கதா
கவே அவ்வாயுக்களிருக்கின்றன ஆதலால், அங்ஙனங்கூறுதல்
பொருந்துமென அறிக.

வினு :—அற்றேல் சப்தபரிசங்கள் தோன்ற வெளிப்ப
டும் வாயுக்களெவை இவைகளுக்கன்னியமாயுள்ள பிராணு
பான வாயுக்களெவை யெனின். (312)

விடை :—மூங்கிற்கழி நாணற்கழிகளின் புரைவெளிக
ளில் தூலபூதமாகிய வாயுவு பொருந்தியிருப்பதுபோல, தூல
சரீரத்தில் இருதய முதல் நாசிபரியந்தமுள்ள புரைவெளிக
ளிலும் குடர் மலக்குழியாதியபுரை வெளிகளிலும் பொருந்
தியிருப்பதாய்ப் பிராணவாயு வாற்றள்ளப்பட்டு நாசிவாயிலாக
வும், அபானவாயுவாலும் பாயுருவாலும் தள்ளப்பட்டு குதவா
யிலாகவும், சப்தபரிசங்கள் தோன்ற வெளிப்படும் வாயுக்
கள் தூலவாயுக்களாகும். இவ்வாயுக்களில் இருதய முதல்
நாசிபரியந்தமுள்ள வாயுவை வெளியிற்றள்ளிக்கொண்டு வரு
தலும் உள்ளேயிழுத்துக்கொண்டு போதலுமாகிய கிரியாசத்
தியையுடையதா யிந்திரியங்கட்கு விஷயமாகாமல் சூட்சும
மாக இருப்பது பிராணவாயுவாகும். குடர்மலக்குழியாதிய



புரைவெளிகளிலுள்ள வாயுவை அதோமுகமாக வெளியிற்
றள்ளுவதும், உண்ட அன்னபானதிகளைத் தகிப்பதுமாகிய
கிரியாசத்தியையுடையதாய், இந்திரியங்கட்கு விஷயமாகாமற்
சூட்சுமமாக இருப்பது அபானவாயுவாகும், ஆதலால் பிரா
ணனும் அபானனும் பிரத்தியக்ஷமாக அறியத்தக்கதல்ல
வென அறிக.

வினு :—கைவல்லிய நவநீதம் தத்துவவிளக்கப்படலத்
தில் வெறியதோர் துருத்திமூக்கின் விடுவதுபோ லுன்மூக்
காலெறி பிராணனும் நீயல்லை எனவும். சந்தேகந்தெளிதற்
படலத்தில துருத்திபோலூதும் மூச்சைச் சுகமுடனடக்கிற்
றிருமெனவும் வேதாந்த சூளாமணிதிரிசிய விவேகத்தில் நின்
றிதயத்தனையடைந்து பிராணனு சுவாசநிசுவாசமியற்றுமென
வும் மற்றைய சாஸ்திரங்களினும் பிராணன் மூச்சு சுவாச
மென்னும் பெயருடையதாய் நாசிமார்க்கமாகச் சலிக்கும் (313)
வாயுவெனவும் கூறப்படுகிறதேயெனின்.

விடை :—அங்ஙனம் சாத்திரங்கள் கூறுகின்றனவெனப்
பொருள்கொள்ளுதல் ஆராய்வுக்குறைவேயன்றி வேறல்ல;
அச்சாத்திரங்களை நன்ருயாராயுமிடத்து கைவல்லியநவநீதம்
தத்துவ விளக்கப்படலத்திலுள்ள வெறியதோர் துருத்திமூக்
கின் விடுவதுபோலுன்மூக்காலெறி பிராணனும் நீயல்லை)
யென்னும் வாக்கியத்துக்கு மூக்கினல் காற்றைவிடுவதாகிய

துருத்தியும். அதனால் விடப்படுவதாகிய காற்றும். உவமானம். மூக்கின் வழியால் காற்றையெறிவதாகிய பிராணனும். அதனால் யெறியப்படுவதாகிய காற்றும், உவமேயமும் ஆகின்றன. இப்படியே சந்தேகந்தெளிதற் படலத்திலுள்ள (துருத்திபோலூதும் மூச்சைச்சுகமுடனடக்கிற்றீரும்) என்னும் வாக்கியத்துக்கு ஊதுந்தொழிலையுடைய துருத்தியும் அதனால் ஊதப்படுவதாகிய தூலவாயுவான காற்றும். உவமானம். ஊதுந்தொழிலையுடைய மூச்சென்னும் பிராணனும் அதனாலூதப்படுவதாகிய காற்றும் உவமேயம் ஆகின்றன. இதல்லாமல் தொழிற்செய்வது பிராணவாயுவெனவும். தொழிற்படுவது தூலவாயுவெனவும் இவ்வாக்கியங்கள் கூறுகின்றபடியேவேதாந்தசூளாமணி திரிசிய விவேகத்திலுள்ள (கின்றிதயந் தனையடைந்து பிராணனுசுவாசநிசுவாசமியற்றும்) என்னும் வாக்கியமும், பிராணனானது இருதயத்தைப் பொருந்திகின்று சுவாசமென்னுந் தூலவாயுவைமேலும் கீழும் செல்லும்படி வெளியிற்றள்ளுதலும் உள்ளிலிழுத்தலுமாகிய தொழிலைச்செய்யுமெனக்கூறுகின்றமையால் தொழிற்செய்வது பிராணனெனவும் தொழிற்படுவது தூலவாயுவெனவும் பொருள்படுகின்றன. இச்சாத்திரங்களல்லாத மற்றைச் சாத்திரங்களின் வாக்கியங்களையும் உய்த்து நோக்குமிடத்து இங்ஙனமே



தாலறியத்தக்க சூட்சும சரீரமாகுமெனக்கூறும் சகல சாஸ்த்திரங்கட்குப் அப்பிரமாணத்துவம் வருமென அறிக.

வினு :—இதனைச் சரீரமென்றதுயாதினாலெனின். (314)

விடை :—சுழுத்தியினும் பிராரப்தக்ஷயத்தினும சிரணிக்குந் தன்மையதாதலினென அறிக.

வினு :—இதனைத்தேகமென்றது யாதினாலெனின் 315

விடை :—சதா தாபத்திரய துக்கங்களாற்றகிக்கப்படுகின்றமையினென அறிக.

வினு :—தூலசரீரத்தையன்றிச் சூட்சும சரீரம் பிரத்தியக்ஷமாகக் காணப்படாமையால் அஃதுண்டென்றெங்ஙனம் அறியலாமெனின். (316)

விடை .-காரியமாகிய புகையைக்கொண்டு காரணமாகிய அக்கினி யுண்டென்றறிவதுபோல, (௨௰) வித காரியங்களைகொண்டு (௨௰)தத்துவமாகிய சூட்சுமசரீர முண்டென்றறியலாமென அறிக.

வினு :—இருபதுவித காரியங்களும் தூலசரீரமுள்ள
...ப்போதிற் காணப்படாமையால் அக்காரி

விடை :—சுழுத்தி மூர்ச்சை மரணகாலங்களில் தூலசரீரமிருந்தும ஒருவித காரியங்களுங் காணப்படாமையால் அங்ஙனங் கூறலாகாதென அறிக.

வினு :—அற்றேல் தூலசரீரத்தையன்றிச் சூட்சுமசரீரம் ஒருகாரியமும் செய்கிறதாகக் காணப்படாமையால் சூட்சுமசரீரகாரியங்களென்று தான் எங்ஙனம் கூறலாமெனின் (318)

விடை :-தூலசரீரமின்றிய சொப்பனுவத்தையில் சூட்சுமசரீர காரியங்கள் காணப்படுகின்றன. இஃதன்றி, அக்கினி காஷ்டத்தை யனுசரித்துக்கொண்டு தகனபாகக் கிரியைகளைச் செய்யினும், அக்கிரியைகள் அக்கினியின் கிரியைகளேயாவதுபோல சூட்சுமசரீரம் தூலசரீரத்தை யனுசரித்துக்கொண்டு இருபதுவித காரியங்களைச் செய்பினும் அக்காரியங்கள் சூட்சுமசரீர காரியங்களேயாகும்; ஆதலின் அங்ஙனங் கூறலாமென அறிக.

(நூல் கள)

இனித்தூலபூதவுற்பத்தி சொல்லப்படுகிறது மிஞ்சியதாமதாம்சமாக இருக்கின்ற ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றை இரண்டிரண்டாகப் பகுத்து முதற்பாதியைந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து இரண்டாம்பாதி யைந்திலும் பூதத்துக்கு அரைக்கால் அரைக்கால் மாத்திரை [illegible] தன்னம்சத்துடன் கூட்டாமல் மற்றைய நான்கு பூதங்களுட



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இனித்தூலபூத உற்பத்தி | மேலே தூலபூதங்களின் உற்பத்தியை |
| சொல்லப்படுகிறது | கூறப்படுகிறது |
| மிஞ்சிய | சத்துவ இராஜதாசம்ங்கள் நீங்கி மீதியாகிய |
| தாமதாம்சமாக இருக்கின்ற | தமோம்சமாயிராநின்ற |
| ஐந்து பூதங்களையும் | பஞ்சபூதங்களையும் |
| ஒவ்வொன்றை | ஒவ்வொரு பூதத்தையும் |
| இரண்டிரண்டாகப் பகுத்து | இரண்டிரண்டு பூதமாகப்பாகித்து |
| முற்பாதி ஐந்தையும் | முதற்பாதியாகிய ஐந்து பூதத்தையும் |
| ஒவ்வொன்றை | ஒவ்வொரு பூதத்தை |
| நான்கு நான்காகப்பகுத்து | நான்குநான்கு பாகமாகப் பாகித்து |
| இரண்டாம்பாதி ஐந்தில் | பிற்பாதியாகிய ஐந்து பூதங்களில் |
| தன்னம்சத்துடன் கூட்டாமல் | தன்தன்னம்சத்துடன் சேர்க்காமல் |
| மற்றை நான்கு பூதங்களுடன் | ஏனையநான்கு பூதங்களோடு |
| அரைக்கால் அரைக்கால் மாத்திரையாக | அரைக்காலரைக்கால் மாத்திரையாக |
| | ஒன்று படுத்துகிறது |

வினு :—ஒவ்வொரு பூதங்களும் பஞ்சிகரணத்தால் ஐந்து வித பூதங்களாயினது எங்ஙனமெனின். (319

விடை :-ஐந்து சினேகர்கள் பலகாரக்கடையில் ஒருவன் அப்பமும், ஒருவன் அதிரசமும், ஒருவன்மோதகமும், ஒருவன் வடையும், ஒருவன் தோசையும், வாங்கிப்புசிக்க எத்தனித்த போது ஒவ்வொருவனும் தன்தன்பலகாரத்தை இரண்டிரண்டு பாகமாக்கித் தனக்கு ஒருபாதியை வைத்துக்கொண்டு மற்றொருபாகத்தை நான்குபாகமாக்கி மற்றைய நால்வருக்கும் ஒவ்வொருபாகமாகக்கொடுக்க ஒவ்வொருவனிடத்தும் ஐந்து வித பலகாரங்களுஞ் சேர்ந்ததுபோலுமென அறிக.

(பிரமாணம்.)

(கைவல்லிய நவநீதம்)

ஐந்துபூதமும் பத்தாக்கியவை பாதி நன்னான்காக்கி நந்தன்பாதிவிட்டுநான்கொடு நான்குங்கூட்டவந்தது தூலபூதம்.

வினு :—சூட்சுமபூதங்கள் கலத்தலினுற் றூலபூதங்களாயின வெங்ஙனமெனின். (320)

விடை :-சூட்சுமமாகிய பாலும் சூட்சுமமாகிய மோரும் கலத்தலினுற்றூலமாகிய தயிராவது போலென அறிக.

வினு :-இப்பூதங்கட்குத் தூலபூதங்களெனப் பெயர் வங்..யாதினுலெனின். (321



விடை :—இந்திரியங்கட்கு விஷயமாகத் தூலிகரித்திருத்தலினென அறிக.

(நூல் கஅ)

இங்ஙனம் பஞ்சீகரிக்கப்பட்ட தூலபூதங்களில் ஆகாயத்திற் பரிசரூபரச கந்தமாகிய நான்கு குணங்களும் வியாப்பியமானமையால் அதிரிசியமாம், நிசகுணமாகிய சப்தம் திரிசியமாம், வாயுவில் ரூபரச கந்தமாகிய மூன்று குணங்களும் வியாப்பியமானமையால் அதிரிசியமாம், காரணகுணமாகிய சப்தமும் நிசகுணமாகிய பரிசமும் திரிசியமாம் அக்கினியில் ரசகந்தமாகிய இரண்டுகுணங்களும் வியாப்பியமானமையால் அதிரிசியமாம், காரணகுணங்களாகிய சப்தபரிசமும் நிசகுணமாகிய ரூபமும் திரிசியமாம், அப்புவில் கந்தகுணம் வியாப்பியமானமையால் அதிரிசியமாம், காரணகுணங்களாகிய சப்தபரிச ரூபமும் நிசகுணமாகிய ரசமுந்திரிசியமாம், பிருதிவியில் காரணகுணங்களாகிய சப்தபரிசரூப ரசமும் நிசகுணமாகிய கந்தமுந்திரிசியமாம்.

வினு :—கலத்தலின்றிய சூட்சுமபூதங்களின் தனித்தனிகுணங்கள் கலப்புற்ற தூலபூதங்களில் எங்ஙனந்தோன்றுகிறதெனின். (322)

விடை :—தூலமாகிய ஆகாயத்தில் சத்தம் பிரதித்துவமாகத்தோன்றும். வாயுவில் சத்தஞ்சிறுசிறெனவும், பரிசம்

சீதோஷ்ண விலக்ஷணமாகவும் தோன்றும், அக்கினியில் சத்
தம் திருதிரு புகுபுகு எனவும், பரிசம் உஷ்ணமாகவும்
ரூபம் உலோகிதப் பிரகாசமாகவும் தோன்றும். அப்புவில் சத்
தம் சள சள கள கள கொள கொள வெனவும், பரிசம் சீதள
மாகவும், ரூபம் சுக்கிலமாகவும் தோன்றும். பிருதிவியில்
சத்தம் கடினமாகக் கட கடவெனவும், பரிசம் வன்மை
திண்மை சற்சரையாகவும், ரூபம் வெண்மையாதிய பஞ்சவ
ருணமாகவும், இரதம் கைப்பு கார்ப்பு புளியபு உவர்ப்பு துவா
ப்பு தித்திப்பு எனச்சடுவிதமாகவும், கந்தம் நற்கந்ததுர்க
கந்தமிசிரகந்தமாகவுந் தோன்றுமென அறிக.

வினு :—மலர்ச்சோலேயிற் படிந்து செல்லும் வாயுவினி
டத்து நற்கந்தமும், மலக்குழிநாதி மார்க்கமாகச் செல்லுப்
வாயுவினுடத்துத் துர்க்கந்தமும், சந்தனுடவியிற் பற்றியெ
றியும் அக்கினியினிடத்து நற்கந்தமும், உரோமங்களிற் ப
றியெறியும் அக்கினியினிடத்துத் துர்க்கந்தமும், அத்தர் ப
னீராதிய அப்புவினிடத்து நற்கந்தமும் சாக்கடையில் நிற்கு
அப்புவினிடத்துத் துர்க்கந்தமும் காணப்படுவதாயிரு
பிருதிவியில் மாத்திரம் கந்தகுணம் திரிசியமாமென்றதெ
ன்னேயெனின். (32

விடை :—மலர்களும் மலமாதிகளும் அக்கினியுள்ளி



களிற் சேர்த்துள்ள வாசனுத்திரவியங்களும், சாக்கடை நீரா
திகளிற் கலந்துள்ள சேருதிகளும், பிருதிவியினம்ஸமாகவே
யிருப்பதுபற்றி அவைகளில் கந்தகுணங்களுள்ளனவாகும்.
அக்குணங்கள் தாமேவிரிந்து வெளிப்படுவனவாயும் வாயுவா
லிழுக்கப்படுவனவாயுமிருக்கும். இக்கந்தகுணங்களேப் பிருதி
வியின் குணங்களாக அறியாமல் வாயு அக்கினி அப்புவின்
குணங்களாக அறிதல் ஆராய்வுக்குறைவாம்; அற்றன்று;
குணம் குணியைவிட்டுப்பிரியாதெனின். பிருதிவியின் அ
ணுக்கள் வாயுவினிடத்தும், அக்கினியினிடத்தும், அப்புவி
னிடத்தும் கலந்திருப்பதுபற்றி கந்தகுணங்கள் தோன்றுகிற
தெனச் சொல்லவேண்டும். அங்ஙனம் சொல்லப்படாதெ
னின், கீழ்ப்பூதங்களின் குணம் மேற்பூதங்களிற் திரிசியமா
கத் தோன்ருதென்னும் சகல சாஸ்திரங்கட்கும் அப்பிரமா
ணத்துவம் வருமென அறிக.

வினு :—சமமாகக் கலப்புற்ற நாலபூதங்களில் பிருதிவி
யில் ஐந்து குணங்களுந் தோன்றுவதுபோல மற்றைய நான்கு
பூதங்களினுந் தோன்ருமல் சில சில குணங்கள் குறைவுற்றி
ருப்பதற்குக் காரணமென்னேயெனின். (324)

விடை :—தாய்தேகத்துக்குப் பிள்ளேதேகம் சிறியதாக

தத்துக்குக்காரியபூதம் பத்திலொருபங்காகக் குறைவுற்றிருத்தலின்மிகுதியாகிய பத்துப்படி பாலில் ஒருபடிஜலஞ் சேரில் மிகுதியாகிய பால் தோன்றுவதும் குறைவாகிய சலந்தோன்றுததுமா யிருப்பதுபோல, ஒவ்வொரு பூதங்களினும் காரண பூத குணங்களும் சுயகுணங்களும் தோன்றுவன வாகவும், காரியபூதகுணங்கள் தோன்ருதனவுமாயினவென அறிக.

(பிரமாணம்)

(அத்துவிதானுபவம்)

தாங்கிய சத்துவமிராசதந்தமோகுண மூன்றுஞ் சமமாகும்போ தோங்கியது பிரளயமாமது மாயை பின்பு ஜகத்திக்குங் காலந்தூங்கி வெளியநில மனல்சலம் பாருண்டாய்ப் பின்பார்தொட் டொவ்வொன்றுக், காங்கதுவே பத்துமடங்கதிகமெனக் கடைமுதலாய் லயமுண்டாமே.

வினு :—ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் தருமங்களெவை யெனின். (325)

விடை :-முறையே நிராகாரம் சலனம் வெப்பம் நெகிழ்ச்சி கடினமென அறிக.

வினு :—ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் தொழில்களெவை யெனின். (326)

விடை :-முறையே யிடங்கொடுத்தல், உலர்த்தல், தகித்



வினு :-ஆகாயமாதிய ஐந்து பூதங்கட்கும் அதிதேவதைகளெவை யெனின். (327)

விடை :—முறையே சதாசிவன், மயேசுரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் ஆகிய ஐந்துமென அறிக.

(நூல் கக)

சூட்சும பூதங்களினின்றும் சூட்சுமசரீரங்கள் தோன்றினாற்போலப் பஞ்சீகரிக்கப்பட்ட தூலபூதங்களினின்றும் ஆறு தத்துவமாய் நால்வகைப் பிறப்பாய் மூவகைச்சாதியா யிருக்கின்ற தூலசரீரங்கள் தோன்றின. இவற்றுள் ஆறு தத்துவங்களாவன சருமம், உதிரம், மாம்சம், சஞயு, அஸ்தி, மச்சையாகிய இவைகளாம். நால்வகைப் பிறப்புக்களாவன:- சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிச்சம் ஆகிய இவைகளாம. மூவகைச் சாதிகளாவன:-இகலோக பரலோகபுத்தியைத் தருகின்ற மானுடசரீரங்கள் உத்தமசாதியாம். பரலோகபுத்தியை மறைத்து இகலோகபுத்தியை மாத்திரந்தருகின்ற பசுபக்ஷியாதிய சரீரங்கள் மத்திமசாதியாம். இருவகைப்புத்தியையு மறைத்திருக்கின்ற மரங் கொடி செடியாதிகள் அதமசாதியாம்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சூட்சும பூதங்களினின்றுஞ் சூட்சுமசரீரங்கள் தோன்றினாற்போல பஞ்சீகரிக்கப்பட்ட தூலபூதங்களினின்றும் ஆறு தத்துவமாய் நால்வகைப் பிறப்பாய் மூவகைச்சாதியாயிருக்கின்ற தூலசரீ | வெளி. |

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இவற்றுள் | (சா) தத்துவம் (ச) வகைப்பிறப்பு (ஙு) வகைச் சாதிகளாகிய இவைகளினுள் |
| ஆறு தத்துவங்களாவன | (சா) தத்துவமென்று சொல்லப்பட்டவைகள் |
| சருமம், உதிரம், மாம்சம், சனுயு, அஸ்தி, மச்சை ஆகிய இவைகளாம். | தோல், இரத்தம், மேதசு நரம்பு, எலும்பு, மூளைகள் ஆகிய இத்தத்துவங்களாம் |
| நால்வகைப் பிறப்புக்களாவன | (ச) வித ஜனனமென்றுசொல்லப்பட்டவைகள் |
| ஜராயுஜம் | பையுள் கட்டுப்பட்டிருந்து தோன்றுவன |
| அண்டஜம் | முட்டையிலிருந்து தோன்றுவன |
| சுவேதஜம் | வேர்வையினின்றுந் தோன்றுவன |
| உத்பிச்சம் | வித்து வேர் கிழங்காதிகளினின்றுந்தோன்றுவன |
| ஆகிய இவைகளாம் | ஆகிய இச்சனனங்களாம் |

வினு :—எழுவகைத்தோற்றமும் நால்வகைப் பிறப்பிலடங்கியுள்ளனவோ வெனின். (328)

விடை :-தேவரும் மனிதரும்



வனவும், நீர் வாழ்வனவும், அண்டஜத்திலும், சிலபறப்பனவும் சில ஊர்வனவும், சுவ்வதஜத்திலும், இருப்பன உத்பிச்சத்திலும் அடங்கும். இவைகளில் தேவர், மனிதர், நான்குகாலால் நடக்கும் யானை, புலி, கரடி, குதிரை, மாடு, நாய், ஆடு முதலியன நடப்பனவாகும். கருடன், அன்னம், கிளி, குயில், காகம், சொக்கு முதலியனவும், விட்டில் கொசுகாதியவைகளும் பறப்பனவாகும், பாம்பு, பல்லியாதிகளும் கிருமி கீடம் பேனுதிகளும், ஊர்வனவாகும். திமிங்கிலம், திமிங்கிலகிலம், மகரம், கெண்டையாதிகள் நீர் வாழ்வனவாகும். கற்பகம் பாரிசாதம், தெங்கு, கமுகு முதலிய மரங்கொடி செடிகள் இருப்பனவாகுமென அறிக.

வினு :—ஒவ்வொரு தோற்றத்தின் பேதங்களெத்தனையெனின். (329)

விடை :—தேவர்களின் பேதம், (கச) லக்ஷம் மனிதர்களின்பேதம், (கூ) லக்ஷம் விலங்குகளின்பேதம், (൰) லக்ஷம்

(பிரமாணம்)
(நிகண்டு)

ஊர்வனபதினொன்றுகு மொன்பான்மானிடர்தம்பேதம்
நீரினில் விலங்குபுள்ளும் பப்பத்தா நெடியதேவர்
சாருமீரேழ் நாலைந்தே தாபர யோனிபேத
மாருமெண் பானுன்கோடே யமைந்தநூ றாயிரங்கள்.

வினா :—இவைகளில் அசுராதிய பேதங்களை யேன் கூறவில்லை யெனின். (330)

விடை :—தேவர்களின் பேதத்தொகையில் அசுராதியபேதங்கள் சேர்ந்திருக்கின்றமையினென அறிக.

வினா :—எழுவகைத் தோற்றங்களாகிய உயிர்களும் சம அறிவுள்ளனவோ அல்லனவோ வெனின். (331)

விடை :—சிலஓரறிவும், சில ஈரறிவும், சிலமூவறிவும் சிலநாலறிவும், சில ஐயறிவும், சில ஆறறிவுமுள்ளனவாயிருத்தலின் சமஅறிவுள்ளன அல்லவென அறிக.

வினா :—ஓரறிவுயிர்களெவை யெனின். (332)

விடை :—மெய்யினாற் பரிசத்தை ...

புல், இசு...



வினா :—ஈரறிவுயிர்களெவை யெனின் (333)

விடை :—மெய்யோடு நாவினானும் பரிசத்தோடு இரசத்தையும் அறிவதாகிய இப்பி சங்காதிகளிலுள்ள உயிர்களென அறிக.

வினா :—மூவறிவுயிர்களெவை யெனின். (334)

விடை :—மெய் நாக்கோடு மூக்கினானும் பரிச இரதங்களோடு கந்தத்தையுமறிவதாகிய கறையான் எறும்பு முதலிய உயிர்களென அறிக.

வினா :—நாலறிவுயிர்களெவையெனின் (335)

விடை —மெய் நாக்கு மூக்கொடு கண்ணினானும் பரிசஇரத கந்தத்தோடு ரூபத்தையும் அறிவனவாகிய தும்பி வண்டு முதலிய உயிர்களென்ன அறிக.

வினா :—ஐயறிவுயிர்களெவை யெனின். (336)

விடை :—மெய் நாக்கு மூக்குக் கண்ணோடு செவியினானும் பரிசஇரத கந்தரூபத்தோடு சப்தத்தையுமறிவதாகிய விலங்கு பறவை முதலிய உயிர்களென அறிக.

(337)

தீமைகளைப் பகுத்தறிவதாகிய மக்கள் தேவராகிய உயிர்க ளென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| மூவகைச்சாதிகளாவன | மூன்றுவித சாதிகளெவையெனின் |
| இகலோகபுத்தி | இகலோகபோகவிருப்பப்புத்தியையும் |
| பரலோகபுத்தியைத் | பரலோகபோகவிருப்பப்புத்தியையும் |
| தருகின்ற மானுட சரீரம் | கொடுக்கின்ற மானுட சரீரங்கள் |
| உத்தம சாதியாம் | முதன்மைச் சாதியாகும். |

வினு :—இகலோக விருப்பபுத்தி யாதெனின் (338)

விடை :—பூமிலோகத்திலுள்ள தயில ஸ்நான ஆடை ஆபரண போசன தாம்பூல பரிமளமாலை சந்தன ஸ்திரியாதிய போகவிஷயங்களையடைய வேண்டுமெனக் கருதிப் பிரவிர்த்திக்கப்பட்ட புத்தியென அறிக.

வினு :—பரலோகபோக விருப்பபுத்தி யாதெனின்339

விடை :—சுவர்க்காதி லோகங்களிலுள்ள அரம்பாஸ்திரி அமிர்தாதி போக விஷயங்களையடைய வேண்டுமெனக் கருதி யாகம் தானம் தவமாதி



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பரலோக புத்தியைமறைத்து இகலோக புத்தியை மாத்திரந் தருகின்ற பசுபக்ஷியாதிய சரீரங்கள் மத்திமசாதியாம். | வெளி. |

வினு :—பசுபக்ஷியாதிகளுக்குள்ள இகலோகபோகவிருப்பப்புத்தியாவது யாதெனின். (340)

விடை :—ஆகார நித்திரை மைதுனங்களை மாத்திரம் விரும்பிப் பிரவிர்த்திக்கும் புத்தியென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இருவகைப் புத்தியையுமறைத்திருக்கின்ற மரங்கொடி செடியாகிய சரீரங்கள் அதமசாதியாம் | வெளி. |

வினு :—சத்துவகுணசூட்சுமபூத காரியமாயும் சேதன சம்பந்தத்தால் ஞானரூபமாயும் உள்ள அந்தக்கரண விருத்தியாகிய புத்திக்குத் தாமதகுணதூலபூத காரியங்களாயும் சடங்களாயுமுள்ள தூல சரீரங்கள் போகாதிகளின் விருப்பங்களைத் தருமென்பதெங்ஙனமெனின். (341)

விடை :—மேகத்தினின்றுவிழும் சூட்சுமமாகிய சுத்த ... நெய்தலாகிய நிலங்கள் தத்தம்

போல சூட்சுமமாகிய அந்தக்கரண விருத்திக்குத் தூலசரீரங்கள் தத்தம் வேறுபாட்டுக்குத்தக்கதாகப் புத்தியைத்தருகின்றனவென அறிக.

(நூல் உ௰)

இப்படிப் பிருதிவிதத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற்றோற்றுகின்றதுபோல, அப்பு அக்கினி, வாயுவு, ஆகாயமென்னப்பட்ட தத்துவங்களாய் நிரனிறையே யிருக்கின்ற பிதிர்லோக, தேவலோக, யக்ஷகந்தர்வலோக சித்தர்லோகங்களினும் சந்திரன் நட்சத்திரமாகத் தோற்றுகின்ற பிதிர்க்கள் சூரியன் முதலான தேவதை கந்தருவர் சித்தர்கள் சரீரங்கள் உத்தமசாதியாம். காமதேனு, ஐராவதம், அன்னம், கருடனாதிய சரீரங்கள் மத்திமசாதியாம். கற்பகவிருக்ஷம், பாரிஜாதமாதிய சரீரங்கள் அதமசாதியாம்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இப்படிப் பிரகிருதிமுதற் றூலசரீரமீருயுள்ள தத்துவங்களின் தோற்றங்கள்சொல்லப்பட்டன | வெளி. |

வினு :—இச்சரீரங்களைத் தூலமென்றது யாதினுலெனின். (342)



சாத்மகமாய்க்கரசரணுதிபவயவாகாரமாய் காஷ்டகுட்டியம்போற் சடமாய் நான்குமுழமட்டாய்ப் பிரத்தியக்ஷமாய் அறியத்தக்கதாய்ஸ்தம்பம்போல்தூலிகரித்திருத்தலினென அறிக.

வினு :—சட்பாவவிகாரங்களெவை யெனின் (343)

விடை :—கருவாகத்திரளுதல் சனித்தல், வளர்தல், பருத்தல், குறைதல், மரித்தல் ஆகிய இவைகளென அறிக.

வினு :-தூலசரீரத்தைச் சட்கோசாத்மகமென்றது யாதினுலெனின். (344)

விடை :—ஆறுதத்துவங்களும் ஒவ்வொன்றை ஒவ்வொன்று மறைத்திருத்தலினென அறிக.

வினு :—சருமம் உதிரத்தையும், உதிரம் மாம்ஸத்தையும், மாம்ஸம் சனுயுவையும், சனுயு அஸ்தியையும், அஸ்தி மச்சையையும் மறைத்திருப்பதுபோல மச்சையொன்றையு மறைத்திராமையால் தூலசரீரம் சட்கோசமாகாதெனின் (345)

விடை :—மச்சையுஞ் சுக்கிலத்தை மறைத்திருத்தலால் † சட்கோசமாகுமென அறிக.

† உரோமத்தால் சருமமும், சருமத்தால் உதிரமும் உதிரத் ... ஸத்தால் சனுயுவும், சனுயுவால் அஸ்தியும்,

வினா :—அற்றேல் இந்நூல் தூலசரீரத்தை (எ) தத்துவமாகக் கூறாமல் (சு) தத்துவமாகக் கூறியதென்னை யெனின். (346)

விடை :—சில நூல்கள் சுக்கிலத்தையுஞ் சேர்த்து (எ) தத்துவங்களாகவுள்ளது தூலசரீரமெனக்கூறுகின்றன. இந்நூல் மச்சைக்கும் சுக்கிலத்துக்குமுள்ள மிகுந்த ஒற்றுமை பற்றி சுக்கிலத்தை மச்சையில் அடக்கி (சு) தத்துவமாகக் கூறிற்று. இங்ஙனம் பலநூல்களுங் கூறுகின்றனவென அறிக.

வினா :—இதற்குத் தேகமெனப் பெயர் வந்தது யாதினாலெனின் (347)

விடை :—பூதாக்கினியினாற் றகிக்கப்படுகின்றமையினென அறிக.

வினா :—பொய்யாகிய தேகத்துக்கு மெய்யெனப் பெயர் வந்தது யாதினாலெனின். (348)

விடை :—விளக்கிருந்தற்குத் தானமாகிய தண்டினுக்கு விளக்கெனப் பெயர் வந்ததுபோல மெய்ப்பொருள் விளங்குதற்குத் தானமாகிய தேகத்துக்குத் தானியாகு பெயராக மெய்யெனப் பெயர் வந்ததாகும்



வினா :—இதற்குச் சரீரமெனப் பெயர் வந்தது யாதினாலெனின் (349)

விடை :—அன்னாதிபாகரரக்குறைவினாலும் வியாதியாதிகளினாலும் முதுமையினாலும் சிரணித்துப்போகின்றமையினென அறிக.

வினா :—தூலசரீரங்கள் மரிக்கில் அவைகளிலிருந்த ஜீவர்கள் வேறு சரீரங்களையடையுங் கிரமம் எங்ஙன மெனின். (350)

விடை :—ஜீவர்கள் சரீரங்கள் மரிக்கில் சூட்சுமகாரண சரீரங்களோடு வெளிப்பட்டு ஆகாயத்திற் கலந்து, பின் வாயுவிலும், பின் அக்கினியினும், பின் புகையினும், பின் மேகத்தினும், பின் வருஷசலதாரையினுங் கலந்து அதனோடு பூமியிலிறங்கிச் சமுத்திரம் நதி தடாககூபாதிய சலங்களிலும், வித்து வேர் கிழங்காதிகளினும், புல் பூடு கொடி செடி மரம் காய் கனியாதிகளினும், நெல் உழுந்து கடலையாதிய தானியங்களினும் பிரவேசித்து அன்னமயமாவர்கள். இவர்களிற் புண்ணிய பலமுடையார் இச்சென்மங்களையும் இச்சென்மங்களுக்குரிய சுகதுக்கங்களையுமடையாதவர்களாய் இச்சென்ம சம்பந்தமாத்திர முடையவர்களாயிருந்து பின்பு அன்னசலமார்க்

மச்சமாதிய சரீரங்களிற் பிரவேசித்து, யானை குதிரை புலி பசுவாதிய மிருகசரீரங்களையும் கருடனாதிய பட்சி சரீரங்களையும் மகரமாதிய மச்சசரீரங்களையும் சிலபாவ பலமுடையார் புற்பூடாதிய தாவர சரீரங்களையும் அடைந்து கன்மதாரதம்மியப்படி சுகதுக்கங்களை யனுபவிப்பார்கள். பாவபலமுடைய இருதிறத்தர்களும் பாவம் குறைந்து புண்ணியம் அதிகரித்தபோது அந்தந்தத் தேகங்களை விடுத்து முன்போல வேவந்து அன்னமார்க்கமாகவே மானுட சரீரங்களை யெடுப்பர்களென அறிக.

வினா:—மானுட சரீரத்திற் ஜீவசம்பந்தமாய்ப் பிரவேசித்த அன்னம் சரீராகாரமாகிப் பூமியிற் சனிக்குங் கிரமமெங்ஙனமெனின்.

விடை :-சரீரத்துட் பிரவேசித்த அன்னம் பிரதமத்தில் (351)
ரசமாய், பின்புதிரமாய், பின்பு மேதசாய், பின்பு அஸ்தியாய் பின் மச்சையாய், பின் சுக்கிலமாய்ப் பரிணமித்திருக்கும். புருடனும் ஸ்திரீயும் புணரும்போது பாலும் மோரும் கலந்து தடித்துத் தயிராவதுபோலப் புருடதேகத்திலிருந்து வெளிப்படும் சுக்கிலமும் ஸ்திரீயினிடமாக இருந்து பெருகுஞ்சுரோணிதமும் கலந்து ஸ்திரீயின் வயிற்றிலுள்ள கருப்பகோளகத்திற் கருப்பமாகத் தடிப்புற்று முதன்மா... இரண்டாமாதத்தி...



கருப்பமிறுகி மாமிசபிண்டமாகும். மூன்றாமாதத்தில் பிண்டம் விருத்திபாகி யதிற் கரசரணாதி யவயவங்கள் அங்குரிக்கும். நான்காமாதத்தில் அவயவங்களோடு சரீரம் விருத்தியடைந்து அதனால் கருப்பஞ்சலித்தசையும். ஐந்தாமாதத்தில் அதிகரித்திருந்தது சுக்கிலமானால் ஆண்குறியோடும், சுரோணிதமானால் பெண்குறியோடும், இரண்டும் சமமாயிருந்தால் அலிக்குறியோடும், மனாதிதத்துவங்களும் பிராணசலனமாதிய காரியங்களுந்தோன்றும். ஆறாமாதத்தில் அறிவுதயமாவதோடு மாதாவுக்குள்ள பசி தாகங்கள், புசிக்கும் ஆகாரங்கள் சிசுவுக்கும் உளவாம், இஃதன்றிச் சிசு கருப்பாயசப்பையுறுத்தல் அதிற் சலம்பூரித்தல் உதிராக்கினியினால் வேவுதல் முதலியவற்றாற் றுன்புறும். ஏழாமாதத்திற் பூர்வஞான முதயமாகி முன்பெடுத்த அனந்த சனனமரணங்களும் சனனமரண நரகாதிகளால் அளவின்றித் துக்கங்களை யனுபவித்ததுந் தோன்றும். எட்டாமாதத்தில் நரகத்தை யனேககோடி காலம் அனுபவித்தாலும் மநுபவிக்கலாம். கருப்பவேதனையை ஒரு கணமேனும் அனுபவிக்க முடியாது ஆதலின் பூமியிற் சனித்தவுடனே துறந்து குருவையடைந்து அவர் கிருபையால்ஞானமடைந்தாலன்றிச்சனனமரணாதிதுக்கங்கள்நிவிர்த்தியாகாவாமென்னும்நிச்சயத்தால்பூமியிற்சனிக்கும் நாளென்றோவென்றோவெனத்தீவிரமான சிந்தனையோடிருக்கும் ஒன்பதாமாதம் ...

கீழத் தள்ளுவதுபோலும் குடத்துட் பருத்த பூசணிக்காயை வெளிப்படுத்துவதுபோலும், சிசுவைப் பிரசூதவாயு அதோமுகமாக யோனிரந்தர வழியாய்த் தள்ளி வெளிப்படுத்தும். அப்போது சிசு ஆலையில் நெருக்குண்ட இளங்கரும்புபோல நெருக்குண்டு சகிக்கமுடியாத துக்கத்தால் மூர்ச்சித்துப் பூர்வஞானத்தையுமறந்து பூமியில்விழும். விழுந்தபின்னர், மூர்ச்சை தெளியும்போது, பூர்வஞான முதயமாகாதவண்ணம் விஷ்ணுமாயையாகிய வாயுவால் மூடப்பட்டுப் பூர்வம்போல அஞ்ஞானவசமாகவே யிருக்குமென அறிக.

வினா :—சுக்கில சுரோணிதங்களே ஆறு தத்துவங்களாயினவெனின் சுக்கிலபரிணாமதத்துவங்களெவை சுரோணிதபரிணாமதத்துவங்களெவை யெனின். (352)

விடை :—சனுயு, அஸ்தி, மச்சையாகிய மூன்றும் சுக்கிலபரிணாமமாகும், சருமம், உதிரம் மாம்ஸமாகிய மூன்றும் சுரோணிதபரிணாமமாகுமென அறிக.

வினா :—பஞ்சபூதமே தூலசரீரமானால் தூலசரீரத்தில் பூதங்களின் அம்ஸங்கள் காணப்படுகிறதோ வெனின். (353)

விடை :—ஆகாய முதலிய ஐந்து பூதங்களின் அம்ஸங்களும் தூலசரீரத்தில் முறையே வெளி, சலனம், உஷ்ணம், திரவம், கடினமாகக்



வினா :—தூலசரீரங்களிற் சேர்ந்துள்ள ஐந்து பூதாம்ஸங்களிலொன்று குறைவுபமோயின் அதனை யெதனாலறியலாமெனின். (354)

விடை :—சரீரத்தில் மடிப்புக்களுண்டாயின் பிருதிவி பூதாம்சசத்தியும், நரையுண்டாயின் அப்புப்பூதாம்சசத்தியும் பசியும் அழகுங்குறையின் அக்கினிபூதாம்சசத்தியும், நடுக்கலுண்டாயின், வாயு பூதாம்சசத்தியும், சரீரஞ்சீவியாது மரிக்குமானால் ஆகாயபூதாம்சசத்தியும் குறைந்ததென அறியலாமென அறிக.

(பிரமாணம்.)

(வராகோபநிஷத் ரு வது அத்தியாயம்)

சரீரத்திற் பிருதிவிமண்டலங் குறைந்தால் மடிப்புகளுண்டாகின்றன. ஜலபாகங்குறைந்தால் கிரமமாக நரையுண்டாகிறது. அக்கினிபாகங் குறைந்தால் பசியுங் காந்தியுங் குறைகிறது. வாயுபாகங் குறைந்தால் எப்போதும் நடுக்கலுண்டாகிறது. ஆகாசபாகங் குறைந்தால் ஜீவித்திருக்கிறதேயில்லை.

வினா :—இத்தத்துவங்களின் தோற்றங்களைச் சுருதிகள் கூறியது யாது நிமித்தமெனின். (355)

விடை :—மண்ணிற்றோன்றிய கடாதிகள் மீண்டுமே

ரேன்றிய (௩டு) தத்துவங்களும் மித்தையெனவும் பிரஹ்மமே சத்தியமெனவும் அதுவே தாமெனவும் அறிந்து முமுட்சுக்கள் பந்தநிவர்த்தர்களாகும் நிமித்தமென அறிக.

வினு:—சுருதிகள் கூறிய தத்துவோற்பத்திக்கிரமங்களெத்தனை? அக்கிரமங்களில் எந்தக் கிரமவாயிலாக இந்நூல் உற்பத்தியாதிய கிரமங்கள் கூறிற்றெனின். (356)

விடை:—ஏகஜீவவாதம் அநேக ஜீவவாதமென இரண்டாம். இவ்விரண்டில் மந்தாதிகாரிகளை நோக்கி ஏகஜீவவாதத்தை விடுத்துத் தூலாருந்ததிநியாயம் சாகாசந்திரநியாயமாக முன்னர்க் காரியப்பிரபஞ்சத்தோற்றமுரைத்துப் பின்னர் அப்பிரபஞ்சம் காரணமாகிய பிரஹ்மத்துக்கு அந்நியமாக இல்லையென அபவாதித்து, இருப்பது பிரமமேயெனத் தெரிவிக்கின்ற அநேக ஜீவவாதக்கிரமமாக இந்நூல் கூறிற்றென அறிக.

வினு:—அற்றேல் இந்நூற்கு அநேக ஜீவவாதக்கட்டளையெனப்பெயர் கூறுமல் நாஞுஜீவவாதக்கட்டளை யெனப்பெயர் கூறியது யாதினுலெனின். (357)

விடை:—ஜீவர்களனேக



ரு ஜீவனிடத்திலுமிராநின்ற நாஞுவித ஜீவத்துவங்களை வாதிக்கும் கிரமங்களையும் தெரிவிக்கின்றமையினென அறிக.

வினு:—அற்றேல் பிரபஞ்சோற்பத்திக் கிரமத்தைச் சுருதிகள் ஒரே பிரகாரமாகக் கூறுமல் நாஞுப்பிரகாரமாகக் கூறியது யாதினுலெனின். (358)

விடை:—பிரபஞ்சம் சத்தியமாயின் அதன்உற்பத்திக் கிரமங்களைச் சுருதிகள் ஒரே பிரகாரமாகக்கூறும். அங்ஙனமின்றி மலடிமகன் கயிற்றரவு, கானற்சலம், சொப்பனப்பிரபஞ்சம்போல மித்தையானமையால் மூலைத்தாதிகள்பாலகர்கட்கு மலடிமக னுற்பததியாதிய சரிததிரங்களை நாஞுப்பிரகாரமாகக் கூறுதல்போலக் கூறினவென அறிக.

வினு:—பிரபஞ்சம் மித்தையென்பதற்கு மலடிமகன் கயிற்றரவு கானற்சலம் சொப்பனப்பிரபஞ்சங்கள் என்பவற்றில் ஏதேனும் ஓர் திருட்டாந்தங் கூறுதல் போதுமானதாயிருக்க நாலு திருட்டாந்தங் கூறுதல் மிகையன்றேவெனின். (359)

விடை:—பிரபஞ்சம் பொருளாகவிராமல் பெயர்மாத்திரமாகவுள்ள மித்தையென்பதற்கு மலடிமகனும், மலடிமகன்போல் பெயர்மாத்திரமாகஇராமல் உருவமாகவுந்தோற்றுகிற

வும்; கயிற்றரவு விசாரிக்குங்கால் தோற்றமின்றிக் கெடுவது போலப் பிரபஞ்சம் விசாரிக்கினுங் கெடாமற்றோற்றுகிறதேயென ஆசங்கைவரின் அதனை நிராகரித்தற்கு விசாரித்து மித்தையென அறியினும் கெடாமற்றோன்றுவதாகிய கானல்சலமும், கானற்சலம் தோன்றினும் அனுபவத்துக்கு வராதிருப்பதுபோலன்றிப் பிரபஞ்சம், சப்தபரிச, சுகதுக்கானுபவத்துக்கு வருகின்றதேயென ஆசங்கைவரின் அதனை நிராகரித்தற்கு பொருளல்லாததாயும் தோற்றமாத்திரமாயும் சப்த பரிச சுகதுக்கானுபவத்துக்கு வருவதாகிய சொப்பனப் பிரபஞ்சமும் திருட்டாந்தமாகும். ஆதலின் மிகையன்றென அறிக.

வினா:—மித்தையாகிய பிரபஞ்சத்துக்கு உற்பத்திக்கிரமந்தான் யாதுக்குக் கூறிற்றெனின். (358)

விடை:—மாங்கொட்டை காலிற்கௌவ சர்ப்பந்தீண்டியதெனவும் அதனால் விடமேறியதெனவும் பிராந்திமேற் பிராந்தியையுற்றுக் கலங்காநின்ற பிராந்தனுக்கு உண்மை கூறிற்றெளிவுறானென அறிந்த ஆப்தனானவன் அவன்புத்தியையனுசரித்து விடந்தீர்ப்பதாக வேப்பிலையாதிகளாலடித்து மந்திரிப்பதுபோல மித்தையாப் பிரபஞ்சத்தைச் சத்தியமாகக் கருதிக்கலங்காநின்[illegible]



விவுறானென அறிந்து நூலாருந்ததிநியாயம் சாகசந்திரநியாயமாகத் தெரிவிக்கவேண்டுமெனக்கருதி முன்காரியப்பிரபஞ்சத்தோற்ற முரைத்து அப்பிரபஞ்சம்காரணமாகிய பிரஹ்மத்துக்கு அன்னியமாக இல்லையென அபவாதித்து அத்வைதப்பிரஹ்மத்தைத் தரிசிப்பிக்கும் நிமித்தம் கூறிற்றென அறிக.

வினா:—சுருதிகள் காலகன்மவாசனைப் பிராந்தனிமித்தம் பிரபஞ்சோற்பத்திகள் கூறினும் ஒன்றோற்கொன்று முரணுந்தன்மை நோக்காமற்கூறிய தென்னையெனின். (369)

விடை:—மாசித்திங்களிற் சிற்சிலரால் கொண்டாடப்படு மதன்பண்டிகையில் மதன் சிவபெருமான் நுதல்விழியாலெரிந்த சரிதையையுருவகப்படுத்தித் தெரிவிக்கும் நிமித்தம் மூங்கிற்சிம்பாதிகளால் மதனுருவங்களை யமைப்பவர்களுக்கு அவ்வுருவங்களை அக்கினியினாற் கொளுத்திவிடுவதில் அபிப்பிராயமேயன்றி யொழுங்குற அமைத்துவைத்து ஆராதிப்பதில் அபிப்பிராயமின்மையால் அதனுருவம் ஒருவரமைத்ததுபோலவே யமைக்க வேண்டுமெனவும் அதனவயவங்கள் சாமுத்திரிகா லக்ஷணங்கட்கு விரோதமாக இராமல் பொருத்தமாகவே யிருக்கவேண்டுமெனவும் எண்ணும லமைப்பதுபோலச் சுருதியாதிகட்கு அத்வைதப் பிரஹ்மத்தைத் தரிசிப்பிக்கும்நிமித்தம் இரச்சுவிற் சர்ப்பம்போற் பிரஹ்மத்திற் கற்பிதமாகிய பிரபஞ்சத்தை மித்தையென நிஷேதஞ்செய்வதில் அபிப்பிராயமேயன்றிச் சத்தியமென நிலைநிறுத்தற்கு அபிப்பிராயமின்மையால் பிரபஞ்சோற்பத்திகளை யொன்றற்கொ[illegible]ணும் வழிநோக்காமற் கூறிற்றென அறிக.

உ

பரப்பிரஹ்மணே நம:

சிதம்பரதேசிகன் திருவடி வாழ்க.

# நானுஜீவவாதக்கட்டளை வியாக்கியானம்.

(திதி நிரூபகம்)

அவதாரிகை.

பிரமத்திற்றோன்றிய சரீரத்திரயங்களின் நிலைமைகளும் ஜீவேசுரர்கட்குச் சாக்கிராதியவத்தைகளால் வரும் நாமங்களும், தூலசரீராதிகளைப்பற்றி யெழாநின்ற விவகாரங்கட்குக் கூடுந் தத்துவங்களும் இவைகளெனத் தெரிவிப்பான் றொடங்கினனர் சரீரத்திரயங்கள் ஐந்து கோசங்களாயிருக்கும் நிலைமைகளை நிரூபிக்கின்றார்.

(நூல் உக)

தூலசரீரமே அன்னமயகோசம் சூட்சுமசரீரம் மூன்று கோசமாயிருக்கும். எங்ஙனமெனின், பிராணவாயு வுங்கன்மேந்திரியமுங்கூடிப் பிராணமயகோசம். மனதும் ஞானேந்திரியமுங்கூடி மனோமயகோசம். புத்தியும் ஞானேந்திரியமுங் கூடி விஞ்ஞானமயகோசம்



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| தூலசரீரமே | ஆறுதத்துவமாகிய தூலசரீரமே |
| அன்னமயகோசம். | அன்னமயமறைப்பாம். |

வினா :—தூலசரீரத்தை அன்னமயமென்றது யாதினாலெனின். (1)

விடை :—மட்சுவர் மண்ணாற்றோன்றி மட்பூச்சாற்றிதிபெற்று மண்ணே சொரூபமாயிருத்தல்போல, மாதாபிதாக்களுண்ட அன்னசாரமாகிய சுக்கிலசுரோணிதங்களே மாதா கருப்பத்திற்பிண்டமாகி மேலும், மாதாவுண்ட அன்னசாரங்களையருந்திக் கரசரணாதிய அவயவாகாரமாகிப் பூமியிற் சனித்தபின்னரும், அன்னசாரமாகிய பாலையும் அன்னத்தையுமேயுண்டு, வளர்ந்து பருத்துச் சீவித்து அன்னக்குறைவால் மரித்து நாய் நரி கழுகாதிகளுக்கு அன்னமாவதுமன்றி அன்னகாரணமாகிய பிருதிவியிற்றானே லயமாகின்றமையினென அறிக.

(பிரமாணம்.)

(சாமவேதம் மைத்திராணியோபநிஷத் சு-வது பிரபாடகம்)

பிருதிவியை ஆசிரயித்திருக்கிற பிரஜைகள் அன்னத்தினால் ஜீவிக்கிறார்கள். மூனுலுண்டாகிறார்கள்.

வினு :—தூலசரீரத்தைக் கோசமென்றது யாதினுலெ
னின். (2)

விடை :-கத்தியையுறைமறைத்தல்போல நான், மனு
ஷ்யன், நான் பிராஹ்மணன், நான் பிரஹ்மசாரி, நான் பருத்
தேனிளைததேனென அகஞ்சத்தார்த்தமாகிய ஆத்மாவை
மறைத்துக்கொண்டிருத்தலினென அறிக.

வினு :—கூட்டினுள் குருவி யிருப்பதுபோலத் தூலசரீ
ரத்தினுள் ஆத்மாவெனவோர் பொருளிருக்குமாயின், அத
னைத் தூலசரீரம் மறைக்குமெனல் பொருந்தும். தூலசரீரங்
களைப் பிளந்து தோலிரத்தாதிகளை வேறுவேருகப் பிரித்துப்
பார்க்கில் ஆத்மாவென ஓர் பொருள் காணக்கிடையாமை
யால் தூலசரீரமே ஆத்மாவாகும். ஆதலின் தூலசரீரத்துக்கு
வேருக ஆத்மாவுண்டெனலும் அதனைத் தூலசரீரமறைக்கிற
தெனலும் அசம்பாவிதமெனின். (3)

விடை :-கடத்துள்ளிருக்கும் பதார்த்தங்களையும் துவா
ரவாயிலாக வெளியிலிருக்கும் பதார்த்தங்களையும் கடத்துள்
ளிருந்து விளக்கிவைக்கின்ற தீபமானது கடத்துக் கன்னிய
மாகப் பிரகாசித்துக்கொண்டிருப்பதுபோலத் தூலசரீரத்தினு
ள்ளிராநின்ற மனுதிதத்துவங்களையும் இந்திரியவாயிலாக வெ



மனையறியாத கோட்டான் பட்சியைப்போல அறியாமல் தூல
சரீரத்தினுள் ஆத்மா இல்லையென்பதே அசம்பாவிதமும் சுரு
தியுத்தியனுபவங்கட்கு விரோதமுமாமென அறிக.

வினு :—தூலசரீரம் ஆத்மாவென்பதற்கு விரோசன
மதானுசாரமான பல சுருதிகளிருத்தலினுனும், அரசனுள்
ளபோது இராச்சிய விவகாரம் நடக்குதல்போலத் தூலசரீர
முள்ளபோது இடுதலேற்றலாதி விவகாரங்கள் நடக்குதலாதிய
யுத்திகளிருத்தலினுனும், அகவிருத்திக்கு விஷயமாயுள்ளது
ஆத்மாவென்னும் சுருதிகட்கேற்க, நான் மனுஷ்யன் நான்
பருத்தே னிளைத்தேனென அகவிருத்திக்குத் தூலசரீரம்
விஷயமாகின்ற அனுபவமிருத்தலினுனும் தூலசரீரத்தை ஆத்
மாவெனல் சுருதியுத்தியனுபவங்கட்கு விரோதமில்லையே மெய
னின். (4)

விடை :—சுழுத்தி மூர்ச்சை சமாதிகளிற்றூலசரீரமிரு
ந்தும் இடுதலேற்றலாதி விவகாரங்கள் நடவாதிருக்கத் தூலசரீ
ரமுள்ளபோது இடுதலேற்றலாதி விவகாரங்கள் நடக்கின்றன
வெனலும், எதுமமதாவிருத்திக்கு விஷயமோ அது அகவி
ருத்திக்கு விஷயமல்லவென்பது துணிபாயிருக்க. என்தேக
மென மமதாவிருத்திக்கு விஷபமாகின்ற தூலசரீரத்தை
அகவிருத்திக்கு விஷயமாகிய ஆத்மாவெனலும் அத்தியாச
... வெளியிட்ட

ளியநான்குவேதங்களும் அவைகளை முன்னூல்களாகக் கொ
ண்டொழுகும் பிரஹ்மசூத்திரமுதலிய வழிநூல்களும், சார்பு
நூல்களும் சுருதிகளாகும். அச்சுருதிகளுக்கு அவிரோத
மாகிய திருட்டாந்தங்கள் யுத்திகளாகும். இவ்விரண்டிற்கு
மொத்த அனுபோகம் அனுபவமாகும். அவைகளை விடுத்து
அஞ்ஞானத்தாற் சனனமரணாதி சம்சாரத்திற்சுழலும் பிராந்
தர்களாகிய விரோசனாதியர் கூறிய நூல்களைச் சுருதிகளெ
னவும், இவ்வாபாச நூல்களுக்கனுசாரமாகிய குயுத்திகளை
யுத்திகளெனவும், இவ்விரண்டிற்கும் ஒத்ததாகக் கானலைச்ச
லமென்றறிந்ததுபோல அனாத்மாவை ஆத்மாவென்றிந்த அத்
தியாசானுபவத்தை யதார்த்தானுபவமெனவும்மயங்கி ஆத்ம
இலக்கணம் அற்பமேனுமின்றி அனாத்ம இலக்கணங்களே
யமையப்பெற்ற தூலசரீரத்தை ஆத்மாவெனக் கூறுதல் உண்
மையாகிய சுருதி யுத்தி யனுபவங்கட்கு விரோதமென்பதே
சித்தாந்தமென அறிக.

வினா:—ஆத்ம இலக்கணங்களெவை அனாத்ம இலக்கண
ங்களெவை யெனின்.

(5)

விடை:-இறப்பெதிர்வு நிகழ்வு என்னும் முக்காலத்தினு
முள்ளதாகிய (சத்து) சகலத்தையு



ளிப்படாமல் தானாகவேயுள்ள (அனன்னியம்) ஆதிய இலக்
கணங்கள் ஆத்ம இலக்கணங்களாம். இவ்விலக்கணங்கட்கு
மாறாகவுள்ள அசத்து, சடம், துக்கம், கண்டம், விகாரம்,
அன்னியம், ஆதிய இலக்கணங்கள் அனாத்ம இலக்கணங்க
ளாகுமென அறிக.

வினா:-நான் சென்றவருடம் இராமேசுரத்திலிருந்தேன்,
இவ்வருடம் சிதம்பரத்திலிருக்கிறேன், வருகிறவருடம் வார
ணாசியிலிருப்பேன் எனத் தூலசரீரத்தை மூன்றுகாலத்தினு
முள்ளதாக விவகரிக்கின்றமையால் (சத்திலக்கணமும்) தன்
னைப்பற்றிய பதார்த்தங்களையும், சிதோஷ்ணாதிகளையுந், தூல
சரீரமறிந் தனுபவிக்கையால் (சித்திலக்கணமும்) மனைவி புத்
திர தனதானியாதிகள் தூலசரீரத்துக் குபகாரமாமேல்
அவைகளிற் பிரியமும் அல்லனவாயின் வெறுப்புஞ் சனிக்கி
ன்றமையினாலும் தயிலோதகமஞ்சனம், கிருதகுளபாயசபவ
லக்ஷண போசனங்களால் சகலரும் தூலசரீரத்தையே யுபச
ரித்தலினாலும் பரமப்பிரீதிக்கு விஷயமாயுள்ள (ஆனந்த இலக்
கணமும்) கரசரணாதி அவயவங்கள் வேறு வேறாகக்கண்டப்
பட்டிராமல் ஒரு சரீரமாகவே யிருத்தலால் (அகண்ட இலக்
கணமும) மனுஷ்யனென்பது மாறுபடாமலிருத்தலால் (நிரு
விகார இலக்கணமும்) நான் மனுஷியன் நான் பிராஹமணனெ
னத் தானாகவே வழங்கப்படுகின்றமையால் (அனன்னியஇலக்
இலக்கணங்கள் தூலசரீரத்தினி

மாகக் காணப்படுகின்றமையால் தூலசரீரத்தை ஆத்மாவா
கிய தானெனக் கூறலாமெனின். (6)

விடை :—சென்றவருடம் இவ்வருடம் வருகிறவருடமா
கிய மூன்றுவருடங்களும் நிகழ்காலத்துள்ளும் அற்பகாலத்தி
னும் அற்பகாலமாதலால் இவ்வற்பகாலத்துள்ளது சத்திலக்
கணமன்றும். சிருட்டிக்கு முன்னுள்ள பூதகாலமும் மகாப்பிர
ளயத்துக்குப் பின்னுள்ள பௌஷியத்காலமும் சிருட்டிக்கும்
பிரளயந்துக்கும் மத்தியிலுள்ள வர்த்தமான காலமுமாகிய
மூன்றுகாலத்தினுமுள்ளது சத்திலக்கணமாகும். இவ்விலக்
கணம் அற்பமேனு மமையப்பெறுமல் கருவாயுதித்தற்கு
முன்னரும், மரணமுற்றழலிற் கொளுத்தப்பட்ட பின்னரும்,
சுழுத்திமூர்ச்சை சமாதிகாலங்களினும் இல்லாததுந் தவிர
சாக்கிறகாலத்தினும் கடத்தை மண்மயமாக அபவாதிக்
கிற் கடத்துக்குச் சொரூபமில்லாததுபோலத் தூலசரீர
த்தைப் பஞ்சபூதமயமாக அபவாதிக்கில் அது சொரூப
மின்றிய அபாவப்பொருளே யாகின்றமையால் (அசத்தா
யும்) தன்னைச்சூழ்ந்த பதார்த்தங்களையும் சிதோஷ்ணாதிகளை
யும் சரீரத்துக்கு வேறாகிய ஆத்மா அறிகிறதேயன்றிச் சரீர
மறிவதன்றும், அறியுமெனின், சுழுத்தி மூர்ச்சை சமாதி
மரணகாலங்களினும் தூலசரீர...



ன்மறியாமையாற் (சடமாயும்) மாவானது வெல்லத்தோடு
கூடியபோது மதுரமாயும் கூடாதபோது மதுரமின்மையதாயு
மிருப்பதுபோல ஆன்மா தூலசரீத்தோடுகூடியபோது
ஆனந்தரூபமாயும் கூடாதபோது துக்கரூபமாயுமிருக்கவே
ண்டும், அங்ஙனமின்றிச் சாக்கிரத்தில் கூடியிருக்கும்போது
துக்கானுபவியாயும் சுழுத்திசமாதியில் கூடாதிருக்கும்போது
சுகானுபவியாயுமிருக்கிறது. வெல்லமானது மாவுடன்கூடிய
போதும் கூடாதபோதும் மதுரமாகவே யிருப்பதுபோலத்தூ
லசரீரம் ஆத்துமாவுடன் கூடியபோதும் கூடாதபோதும்
பிரியத்துக்கு விஷயமாகவேயிருக்கவேண்டும், அங்ஙனமின்றி
ஆன்மாவுடன் கூடியிருக்கும்போது நரை திரை மூப்பு வி
யாதிகளினானும், மரணமாகி ஆன்மா நீங்கியபோது பிரேத
மாய் வீங்கிவெடித்து நாறுதலினானும், பிரியத்துக்கு விஷய
மாகாமல் வெறுப்புக்கே விஷயமாதலால் (துக்கமாயும்) கா
சரணாதி அவயவங்கள் பிரிந்திராமல் சேர்ந்திருப்பது அக
ண்ட இலக்கணமன்றும். ஓர்காலத்துள்ளதாய் மற்றோர் கா
லத்தில்லாததாயிராமல் எல்லாக்காலங்களினும் ஓர் தேசத்
துள்ளதாய் மற்றோர் தேசத்தில்லாததாயிராமல் எல்லாத் தே
சங்களினும் ஓர் வஸ்துவிலுள்ளதாய் மற்றோர் வஸ்துவிலில்
... எல்லா வஸ்துக்களினும் வியாபித்திருப்ப

மமையப்பெருமல் ஜீவிக்குங்காலத்திருந்து சனித்தற்குமுன்
னரும் மரித்தபின்னரும் இராமையால் காலத்தினுனும்,
காசியிலிருக்கும்போது இராமேசுரத்தினும் கருப்பததிலிருக்
கும்போது வெளியினும் வெளியிலிருக்கும்போது கருப்பத்தி
னுமில்லாமையால், தேசத்தினுனும், தூலவஸ்துக்களிலொ
ன்றுயிருந்து சூட்சும சரீரதத்துவங்களிலொன்று யிராமை
யால் வஸ்துவினுனும் பின்னப்பட்டு நான்கு முழமட்டாயிரு
த்தலால் (கண்டமாயும்) மனுஷ்யனென்பது மாறுபடாமலிரு
ப்பது நிருவிகார இலக்கணமன்றும். சனித்தல் மரித்தலாதி
விகாரங்களின்றியிருப்பதே நிருவிகார இலக்கணமாகும். இவ்
விலக்கணம் அற்பமேனுமமையப் பெருமல் கருப்பத்திற்
குழம்பாயிருந்து பிண்டமாகத் திரளுதல் அவயவாகாரமாகு
தல் சனித்தல் வளருதல் பருத்தல் இளைத்தல் மரித்தலாதிக
ளைப் பொருந்துதலால் (விகாரமாயும்) அத்தியாசத்தால் அ
கம்புத்தி செய்யப்படுவது அனன்னிய இலக்கணமன்றும். ஓர்
காலத்தினும் மமதாவிருத்திக்கு விஷபமாகாமல் எப்போதும்
அகவிருத்திக்கே விஷயமாயிருப்பது அன்னியவிலக்கணமா
கும். இவ்விலக்கணம் அற்பமேனுமமையப்பெருமல் என் சரீ
ரம் பருத்தது இளைத்தது என மமதாவிருத்திக்கு விஷயமா
கின்றமையால் (அன்னியமாயும்) பஞ்சபூதகாரியமு...
களை..ல் (உற்பத்தியுடை...



ழிவதாயிருத்தால் (அநித்தியமாயும்) உள்ளிற்சார்ந்த கிருத
குள பாயசம் வெளியிற்சார்ந்த புட்பசந்தனுதி பரிமளவஸ்து
க்களையும் துர்க்கந்த வஸ்துக்களாகச் செய்தலுமன்றி நவத்து
வாரங்களினுனும் மலமூத்திரகோழையாதிகளை யொழுக்கிக்
கொண்டிருத்தலால் (அசுத்தமாயும்) இது தேகமெனக்கடம்
போல அறியப்படுதலால் (திரிசியமாயும்) உள்ள அனுத்ம
இலக்கணங்களைப் பொருந்திய அன்னமயகோசமாகிய தூல
சரீரத்தை ஆத்மாவெனல் தாணுவைப் புருடனெனல்போல
மயக்கமாமென அறிக.

வினு :—அன்னமயகோசம் ஆத்மாவல்லவென்பதற்குச்
சுருதியுத்தி அனுபவங்களெவை யெனின். (7)

விடை :—(கவி) என்னுடைய புந்தியினுவெண்ணினே
னுனிச் சகநானல்லமலவுடல் நானல்லவென்னும் (வாசிட்ட
மும்) (கவி) இடையுறுமென்பினை நரம்பினுர்த்திடாப்புடை
யுறுமிறைச்சியாற்பொதிந்து போக்கற மிடைதருதோலினுல்
வேயப்பட்டதோருடலினையானென வுரைக்கவொண்ணுமோ
வென்னும் (பாகவதமும்) (கவி) திரிசியமாய்ச் சிதைகின்றவு
டல் நானல்லவென்னும் (ரிபுகீதையும்) (கவி) மேதைதொக்
கத்தியாதிமேவிய கூட்டமான எதமாங்தேகம் நானென்
றென்னுமவன் மூடனானேன். என்னும் (விவேகசூடாமணி

னென்னும் அறிவினைக்கொல்லவேண்டுமென்னும் (கைவல்லிய நவநீதமும்) (கவி) அறிகின்ற பொருளென்றும் அறிவானில்வேறேயானுலிவ்வூனுக ஈானென்னலாமோ செறிகின்ற புள்ளல்லவே கூடிவ்வகையே சேடமானவுடல் நின்னில்வேறென்றுதெளியே யென்னும் (சசிவண்ணபோதமும்) சுருதிகளாகும்) விளக்கப்படு பொருளாகிய கடபடாதிகள் விளக்கும் பொருளாகிய தீபத்துக்கன்னியமாவதுபோல அறியப்படு பொருளாகிய அன்னமயகோசம் அறியும் பொருளாகிய ஆத்மாவுக்கன்னியமென்பதும் பலவேடந்தரித்துத்தாளதாரதம்மியப்படி நடிக்குங்கூத்தன் கூத்தைப்பார்க்கும் பிரபுவுக்கு அன்னியமாவதுபோல பால்ய கௌமாராதிய பலபருவங்களையடைந்து கன்பதார்தன்மியப்படி நடிக்கும் அன்னமயகோசம் அதனையறிந்துகொண்டு சாட்சிமாத்திரமாக இருக்கின்ற ஆத்மாவுக்கன்னிபமென்பது யுத்திகளாகும். அன்னியமிகைஇராகின்ற வஸ்திரத்தை என் வஸ்திரமென்பதுபோல் வியட்டியாக என் சிரம், என் மார்பு, என்காலென்பதும், சமட்டியாக என் தேகமென்பதும் அனுபவமாகுமென அறிக.

வினு :—அன்னமயகோசம் அகமென்னும் புத்தியைவிடுவதால் வரும் பலன் யாதெனின். (8)

விடை :-அதற்குள்ள சனனமரண, நரை, திரை, மூப்புபிணியாதிகளும் அவைகளாற்றோன்றுந்துக்கங்களுந்தனக்கில்லாமற்போவதெனஅறிக.



| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| சூட்சுமசரீரம் மூன்று கோசங்களாயிருக்கும் எங்ஙனமெனின் | வெளி. |

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| பிராணனும் கன்மேந்திரியமுங்கூடிப் பிராணமயகோசம் | பிராணவாயுவும் கன்மேந்திரியமுஞ் சேர்ந்து பிராணமய மறைப்பாம் |

வினு :—பிராணனல்லாத கன்மேந்திரியங்களையும் பிராணமயமென்றது யாதினுலெனின் (9)

விடை:—பிராணமென்பது பெலம். பெலமயமாகச் சலிக்கின்ற பிராணவாயுவின் பெலத்தை கன்மேந்திரியங்கள் பெற்றே தத்தந்தொழில்களைச் செய்கின்றவைகளாக இருத்தல் பற்றியென அறிக.

வினு :—இவைகளைக் கோசமென்றது யாதினுலெனின் (10)

விடை :—வீணையைக் கவுசனைமறைத்தல்போல நான் பலவான், பலவீனன், நான் வசனித்தேன் சுமனித்தேனென அகஞ்சத்தார்த்தமாகிய ஆத்மாவைமறைக்கின்றமையினென அறிக.

வினு :—பிராணனுக்கன்னியமாக ஆத்மாவென்னவோர் பொருளிருக்குமாயின் அதனைப்பிராணமயகோசமறைக்கி

தெனல் பொருந்தும் அவைகளைச் சோதிக்கில் பிராணாதிகன்
மேந்திரியங்களைத் தவிர ஆத்மாவெனவோர்பொருள் காணக்
கிடையாமையால் பிராணகன்மேந்திரியங்களே ஆத்மாவாகும்
அவைகட்கன்னியமாக ஆத்மாவுண்டெனலும் அதனைப்பிரா
ணாதிகள் மறைக்கிறதெனலும் அசம்பாவிதமெனின். (11)

விடை:—வீட்டினுளிருந்து வெளியேபோதலும் உள்
ளே வருதலுமாக இராநின்ற குழந்தையைப் பார்த்துக்கொ
ண்டிராநின்ற பிதாவானவன் அக்குழந்தைக் கன்னியமாக
இருப்பதுபோல இருதயத்திருந்து இடைகலை பிங்கலைமார்க்க
மாகத் தூலவாயுவை வெளியிற்றள்ளுதலும் உள்ளிழுத்தலு
மாகச் சலித்துக்கொண்டிராநின்ற பிராணனை அறியாநின்ற
ஆத்மா பிராணனுக்கன்னியமாக விளங்கிக்கொண்டிருப்பதை
நாவிலுள்ள வெல்லத்தின் சுவையையறியாத சுரரோகியைப்
போலறியாமல் பிராணாதி கன்மேந்திரியங்களுக்கன்னியமாக
ஆத்மா இல்லையெனலே அசம்பாவிதமும், சுருதியுக்தியனு
பவங்களுக்கு விரோதமுமாமென அறிக.

வினா:—பிராணன் ஆத்மாவென்பதற்கு இரணிய கருப்
பவுபாசிகள் மதானுசாரமான பலசுருதிகளிருத்தலினாலும்
பிராணனடங்கியபோது தேகம்பிணமாதல், சகலமுமடங்
கிய சுழுத்தியில் பிராணன் ஜீவிதமாயிருத்தல், காற்றுள்ள
போது கப்பலோடுந்தொழில் நடக்குதல் போலப்பிராணனுள்
ளபோது சரீராதிகளின் தொழில்நட[illegible]



ளிருத்தலினாலும், அகவிருத்திக்கு விஷயமாயுள்ளது ஆத்மா
வென்னுஞ் சுருதிகட்கேற்க நான் பலவான் நான் பலவீனன்,
நான் வசனித்தேன் கொடுத்தேனெனப் பிராணாதி கன்மேந்
திரியங்கள் அகவிருத்திக்கு விஷயமாகின்ற அனுபவமிருத்த
லினாலும் பிராணமயகோசத்தை ஆத்மாவெனல் சுருதியுக்தி
யனுபவங்கட்கு விரோதமில்லையேயெனின். (12)

விடை:-சமாதி மூர்ச்சைகளிற் பிராணனடங்கியபோது
தேகம் பிணமாகாதிருத்தலும் பிராணன் தோன்றுதடங்கி
யிராநின்ற விருக்ஷங்கள் ஜீவித்தலும் காணப்படுகின்றமை
யால்பிராணனடங்கியபோது, தேகம் பிணமாகுமென்றதும்
மீகாமன் கப்பலைநடத்த முயற்சியாதபோதுகாற்றிருந்தும் கப்
பலோடுந்தொழில் நடவாததுபோல மனமடங்கிய சுழுத்தியில்
பிராணனிருந்தும் சரீராதிகளின் தொழில் நடவாதிருக்கின்ற
மையால் பிராணனுள்ளபோது சரீராதிகளின்தொழில் நடக்கி
றதெனலும், எது மமதாவிருத்திக்கு விஷயமோ அது அகம்
விருத்திக்கு விஷயமல்லவென்பது துணிபானமையின் என்
பிராணன், என் வாக்கு, என்கைகாலென மமதாவிருத்திக்கு
விஷயமாகின்றபிராணமயகோசத்தை, அகம்விருத்திக்குவிஷ
யமாயுள்ள ஆத்மாவெனலும் அத்தியாசமேயாம். இஃதன்றி
இயற்கை ஞானபரனாகிய ஈசுவரனால் வெளியிட்டருளியவே
தாதிகளும் அவைகட்கொத்த திருட்டாந்தங்களும் அவ்விரண்

ரும். அவைகளையன்றி அஞ்ஞானத்தாற் சனன மரணசமுசாரத்திற் சுழலும் இரணியகருப்பவுபாசிகள் கூறும் ஆபாசநூல்களைச் சுருதிகளெனவும் இவ்வாபாசநூல்களுக்கனுசாரமாகக் கூறும் குயுத்திகளை யுத்திகளெனவும் இவ்விரண்டிற்கு மொத்ததாகத் தானுவைப் புருடனாகக் கண்டதுபோற்கண்ட அத்தியாசானுபவத்தை யதார்த்தானுபவமெனவும் மயங்கி, ஆத்ம இலக்கணம் அற்பமேனுமமையப்பெறாமல் அனாத்ம இலக்கணங்களேயமையப்பெற்ற பிராணமயகோசத்தை ஆத்மாவெனக் கூறுதல்உண்மையானசுருதியுத்தி அனுபவங்கட்கு விரோதமென்பதே சித்தாந்தமென அறிக.

வினா :—பிராணனைச் சச்சிதானந்தாதி யிலக்கணங்களுடையதல்ல வென்பது யாதினாலெனின். (I3)

விடை :-பிராணனைச் சத்தெனின் முக்காலத்தினுமுள்ளதாயிருக்கவேண்டும் அங்ஙனமின்றி யுதித்தற்கு முன்னரும் நசித்தற்குப் பின்னரும் இல்லாததுந் தவிர மத்தியகாலத்திலும் காரியமாகிய பூடணத்தைக் காரணமாகிய பொன்மயமாக அபவாதிக்கில் பூடணம் அபாவப்பொருளாவதுபோல அதன்காரணமாகிய பூதமயமாக அபவாதிக்கிற் பிராணன் அபாவப்பொருளேயாகின்றமையால் அசத்தாயும், சித்தெனின் சகலத்தையும் அறியும் அறிவாகவே யிருக்க



இன்ன இடத்திலிருந்து இன்னவழியாக இயங்குகிறேனென்பதையு மறியாமையால் சடமாயும், ஆனந்தமெனின் பிரியத்துக்கு விஷயமாக இருக்கவேண்டும். அங்ஙனமின்றிப் பசிதாக மூச்சடைப்பு மூச்செறிவாதிகளால் வெறுப்புக்கு விஷயமாயிருத்தலால் துக்கமாயும், அகண்டமெனின் கண்டப்படாமலிருக்கவேண்டும். அங்ஙனமின்றி நான்குமுழ அளவாகிய சரீரத்துள் மாத்திரம் இயங்குகின்றமையால் கண்டமாயும் நிருவிகாரமெனின் விகாரப்படாமலிருக்கவேண்டும் அங்ஙனமின்றி சூட்சுமபூதத்திருந்துண்டாதல் கெடுதல் பலம்பலமின்மையாதிகளையுறுதலால் விகாரமாயும், அன்னியமெனின் அகவிருத்திக்கே விஷயமாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி என் பிராணனென மமதாவிருத்திக்கு விஷயமாகின்றமையால் அன்னியமாயும் அநாதியெனின் உற்பத்திரகிதமாயிருக்கவேண்டும், அங்ஙனமின்றி சூட்சுமபூதகாரியமானமையால் உற்பத்தியுள்ளதாயும், நித்தியமெனின் நாசரகிதமாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி விதேகமுத்தியில் நாசமடைவதால் அநித்தியமாயும் சுத்தமெனின் அசுத்தமின்றியிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி எப்பமுதலியவற்றால் அசுத்தமாயும் அதிருசியமெனின் அறியப்படாமலிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிஇடைகலைபிங்கலைவழியாயியங்குதல்வசனித்தலாதி

த்ம இலக்கணங்களைப் பொருந்திய பிராணமய கோசத்தை ஆத்மாவெனல் மயக்கமாமென அறிக.

வினு:—பிராணன் ஆத்மாவல்லவென்பதற்குச் சுருதி யுத்தியனுவங்களெவை யெனின். (14)

விடை:—(கவி) பிரிவுபெறும் நாஞவாமுயிர் நானல்லவென்னும், ரிபுகீதையும் (கவி) உன்னியவாயுவைப்போலுள்ளிலும் வெளியிலும் போயின்னதின் விகாரமாகியெங்குமேயிட்டானிட்டம்; அன்னியந்தனதிதென்ன அணுவுமேயறியாததால்; பின்னரும் பரவசத்தால் பேசுமீதான்மாவாகாதென்னும், விவேகசூடாமணியும் (கவி) பிராணனுமல்ல துஞ்சிலறிவின்மையாலென்னும், சசிவன்னபோதமுப் (கவி) ஊசுமுடலிலுழல்கின்ற காற்றையுணர்வென்பரேயேசுமுறக்கத்தியங்கியுசஞ்சொல்லும், பேசுமனிதர் பொருளறியாமற் பிதற்றுவரே யென்னும் அறிவானந்தசித்தியும் சுருதிகளாகும், இலாயத்திருந்து வெளியிலும் உள்ளிலுஞ்செல்லுதலுடைய குதிரையைப்பார்த்துக் கொண்டிராநின்ற புருடனுக்கு அக்குதிரை அன்னியமாவதுபோலப் பிராணன் இருதயத்திலிருந்து நாசிமார்க்கமாக வெளியிற் போதலும் வருதலுமாக இரு...
தையறிந்து கொண்...



பதுபோல என் பிராணன், என்வாக்கு என்பது அனுபவமாகுமென அறிக.

வினு:—பிராணமயகோசம் அகமென்னும் புத்தியை விடுவதால் வருமிலாபம் யாதெனின். (15)

விடை:—பசி, தாகம், பலம், பலமின்மையாதிகளும் வசனுதிகளும் அவைகளால் வருந்துக்கங்களுமில்லாமற்போவதென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| மனதும் ஞானேந்திரியமுங்கூடி மனேமயகோசம் | வெளி. |

வினு:—மனமல்லாத ஞானேந்திரியங்களையும் மனேமயமென்றது யாதினுலெனின். (16)

விடை:—சுரோத்திராதி ஞானேந்திரியங்கள் சங்கற்பவிகற்பாத்மகமாகிய மனதின் செயலைப்பெற்று தத்தம் விடயங்களைப்பற்றுகின்றனவாக இருக்கின்றனவேயன்றித் தனியேபற்றுகின்றனவாக இராமையினென அறிக.

வினு:-இவைகளைக் கோசமென்றது யாதினுலெனின் (17)

விடை:—புருடனைச் சட்டை மறைத்தல்போல ஆத்மா

நான் கண்டேன் கேட்டேனென மறைக்கின்றமையினென அறிக.

வினா :—மனதுக்கன்னியமாக ஆத்மாவென்றொரு பொருளிருக்குமாயின் அதனை மனது மறைக்கிறதெனல் பொருந்தும், மனதைச்சோதிக்கில் அதனையன்றி யாத்மாவெனவோர்பொருள் காணக்கிடையாமையினால் மனதே ஆத்மாவாகும். ஆகலின் அதற்கன்னியமாக ஆத்மாவுண்டெனலும் அதனை மனது மறைக்கிறதெனலும் அசம்பாவிதமெனின். (18)

விடை :—ஆரணியத்துள்ள, ஓர்மரத்திலிருந்து மற்றோர் மரத்தைப் பாய்ந்து பற்றுதலும் அதனைவிடுத்து மற்றோர் மரத்தைப் பாய்ந்து பற்றுதலுமாகச் சஞ்சரிக்கின்ற வானரத்தைப் பார்த்துக்கொண்டிராநின்ற முனீசுவரன் அவ்வானரத்துக்கன்னியமாக இருப்பதுபோல ஓர் விஷயத்திலிருந்து மற்றோர் விஷயத்தைப் பற்றுதலும் அதனைவிடுத்து மற்றோர் விஷயத்தைப் பற்றுதலுமாகச் சலிக்கின்ற மனதையறிந்துகொண்டிராநின்ற ஆத்மாமனதுக் கன்னியமாயிருப்பதைக் கோடையிடிச் சப்தமறியாத செவிடன்போலறியாமல் மனதுக்கன்னியமாக ஆத்மா இல்லையெனலே அசம்பாவிதமும், சுருதி யுத்தியனுபவங்கட்கு விரோதமுமாமென அறிக.



யுள்ளபோது பதுமையின் நடனத்தொழில் நடக்குதல்போல மனமுள்ளபோது சரீராதிகளின் தொழில் நடக்குதல் முதலிய யுத்திகளிருத்தலினானும், அகவிருத்திக்கு விஷயமாயுள்ளது ஆத்மாவென்னுஞ் சுருதிகளுக்கேற்க நான் சங்கற்பவான், விகற்பவான், நானிராகி துவேஷி நான் கண்டேன் கேட்டேன் என அகவிருத்திக்கு விஷயமாகின்ற அனுபவமிருத்தலினானும், மனதை ஆத்மாவெனல் சுருதி யுத்தியனுபவங்கட்கு விரோதமில்லையே யெனின். (19)

விடை :--கூத்தைப் பார்க்கும் எஜமானனில்லாதபோது கூத்தனிருந்தும் கூத்தின் தொழில் நடவாததுபோலப்புத்தி நிச்சயமில்லாதபோது மனதிருந்தும் சரீராதிகளின் தொழில் நடவாதிருத்தலால் மனதுள்ளபோது சரீராதிகளின் தொழில் நடக்குமெனலும், எது மமதாவிருத்திக்கு விஷயமாகிறதோ அது அகவிருத்திக்கு விஷயமல்லவென்பது துணிபானமையின் என் மனது சஞ்சலப்படுகிறது,என்காது செவிடாய்விட்டது, என் கண் குருடாய்விட்டது என மமதாவிருத்திக்கு விஷயமாகின்ற மனோமயகோசத்தை அகவிருத்திக்கு விஷயமாயுள்ள ஆத்மாவெனலும் அத்தியாசமேயாகும். இஃதன்றி, ஈசுவரனால் வெளியிட்டருளிய வேதாதிகளும் அவைகட்கொத்த திருட்டாந்தங்களும் அவ்விரண்டிற்கு மொத்த சுவானுபவமுமே, சுருதி யுத்தியனுபவங்களா

சாரத்திற் சுழலும் பிராந்தர்களாகிய உபாசகராதியர் கூறும்
நூல்களைச் சுருதிகளெனவும் இவ்வாபாசச் சுருதிகட்கனுசா
ரமாகக்கூறும் குயுத்திகளை யுத்திகளெனவும் இவ்விரண்
டிற்கு மொத்ததாக இப்பியை வெள்ளி யென்றறிந்ததுபோல
அனாத்மாவை ஆத்மாவென்றறிந்த அத்தியாசானுபவத்தை
யதார்த்தானுபவமெனவும், மயங்கி ஆத்ம இலக்கணம் அற்
பமேனும் அமையப்பெறுமல் அனாத்ம இலக்கணங்களே யமை
யப்பெற்ற மனோமயகோசத்தை ஆத்மாவெனக் கூறுதல் மெய்
மையாகிய சுருதியுத்தியனுபவங்கட்குவிரோதமென்பதே சித்
தாந்தமென அறிக.

வினா :--மனோமயகோசத்தைச் சச்சிதானந்தாதி யிலக்க
ணங்களையுடைய தல்லவெனக் கூறுவது யாதினாலெனின் (20)

விடை :-மனோமயகோசத்தைச் சத்தெனின் முக்காலத்
தினுமுள்ளதா யிருத்தல்வேண்டும் ; அங்ஙனமின்றி, சுழுத்தி
மூர்ச்சை சமாதிகாலங்களினும் சங்கற்பமயமாக வுதித்தற்கு
முன்னரும் நீங்கிய பின்னருமில்லாததுந்தவிர, மத்தியினும்
கடத்தை யதன்காரணமாக அபவாதிக்கிற் கடம் அபாவப்
பொருளாவதுபோல அதன் காரணமாகிய சூட்சுமபூதங்க



ளொழிந்து அதற்கு வேறாகவிருத்தலில்லாமையாலும் அசத்தா
யும், சித்தெனின் எல்லாவற்றையும் அறியவேண்டும்; அங்
ஙனமின்றி சுழுத்தி மூர்ச்சை சமாதிகளில் லயமடைந்து இல்லா
திருக்கும்போது சத்தமாதிகளை யறியாமையால் சட
ல்மூர்த்தி யிருக்கும்போது சத்தமாதிகளை யறியாமையால் சட

மாயும், ஆனந்தமெனின் பிரியத்துக்கு விஷயமாகவே யிருக்
கவேண்டும்; அங்ஙனமின்றிக் காமக்குரோதாதிகளை யுற்று
வெறுப்புக்கு விஷயமாயிருக்கின்றமையால் துக்கமாயும்,
அகண்டமெனின், கண்டப்படாத தாயிருக்கவேண்டும்; அங்
ஙனமின்றி அந்தக்கரணவிருத்திகளி லொன்றாயிருத்தலால்
கண்டமாயும், நிருவிகாரமெனின், விகாரமின்றியதாயிருக்க
வேண்டும்; அங்ஙனமின்றித் தோன்றல், திரிதல், கெடுதலாதி
விகாரங்களை யுறுதலால், விகாரமாயும், அன்னியமெனின்,
எப்போதுந்தானாகவே யிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி
என்மனம் என்னிந்திரியமென மமதாவிருத்திக்கு விஷயமா
கின்றமையால், அன்னியமாயும், அனாதியெனின் உற்பவாகி
தமாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி பஞ்சபூத காரியமா
யிருத்தலால் உற்பவமுள்ளதாயும், நித்தியமெனின் நாசரகித
மாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி சுழுத்திமூர்ச்சை சமா
திகளில் நாசமுறுதலால் நித்தியமாயும் சுத்தமெனின் அசு
த்தமின்றியதாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிக் காமாதி
களை யுறுதலால் அசுத்தமாயும், அதிருசியமெனின் திருசியமா
காதிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி இதுமனமென அறியப்
படுதலால் திரிசியமாயும் உள்ள அனாத்ம இலக்கணங்களைப்

வினா :—மனோமயகோசம் ஆத்மாவல்லவென்பதற்குச் சுருதியுத்தி யனுபவங்களெவை: யெனின். (21)

விடை :— (கவி) பிறந்துநசிக்கின்ற மனமுதனானல்லவென்னும் (ரிபுகீதையும்), (கவி) பரவியே யொடுங்கலாலும் பரிணாமியாதலாலும், விரிதுயர்வடிவதாலும், விடயமாந்தன்மையாலும், உரை மனோமயகோசந் தானுணர்வுருவான்மாவாகாவென்றும் (விவேகசூடாமணியும்)(கவி) கரணமாமனது புந்திகருத்தாவாமவையான்மாவோவென்றும் (கைவல்லியநவநீதமும்), (கவி) இனமுறவெண்ணவுள்ள கரணத்திலொன்றிதெனலாவிதென்னதெனலால், மனமுளமன்னவென்றவதனாலுமல்லவென்னும் (சசிவண்ணபோதமும்) (சுருதிகளாகும்) தீபத்தைப்பார்க்கின்ற கண்ணுக்குத்தீபம்அன்னியமாவதுபோலவிடயாகாரமாக மேனுமேலும் உதியாநின்ற மனதையறிந்துகொண்டிராநின்ற ஆத்மாவுக்கு மனது அன்னியமென்பது யுத்தியாகும், அன்னியமாகிய மனைவிமக்களை யென்மனைவியென்மக்களென்பதுபோல என்மனம், என்செவியென்பது அனுபவமாகுமென அறிக.

வினா :—மனோமயகோசத்திலுள்ள அகம்புத்தியை விடுவதால் வரும் பலம்யாதெனின். (22)

விடை :—இராகம், துவேஷம், பயம்,



| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமயகோசமாம் | வெளி. |

வினா:—புத்தியை விஞ்ஞானமயமென்றது யாதினாலெனின். (23)

விடை:—விசேட ஞானமென்னும் அறிவையுடையதாயிருத்தலினென அறிக.

வினா :—புத்தியல்லாத சுரோத்திரமாதிய ஞானேந்திரியங்களையும் விஞ்ஞானமயமென்றது யாதினாலெனின். (24)

விடை :—சுரோத்திரமாதிய ஐந்திந்திரியங்களும், விஞ்ஞானமயமாயுள்ள புத்திவிருத்தி சம்பந்தித்தபோதுதான் தத்தம் விடயங்களை யறியுஞ் செயலுள்ளனவாகின்றமையினென அறிக.

இதுநிற்க. பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயமென்பவற்றில் முறையே கன்மேந்திரியங்களைப் பிராணமயமென்றதற்கும், ஞானேந்திரியங்களை மனோமயம் விஞ்ஞானமயமென்றதற்கும், வேறு காரணங் கூறுதலுமுளது, அது இந்நிரூபகத்தில் மேல்வரும் 31-வது விடையிலெழுதப்பட்டிருக்கிறது ஆண்டு கண்டுகொள்க.

விடை :—புளியம்பழத்தைத் தோடுமறைப்பதுபோல
ஆத்மாவை நானிச்சயவான் யூகவான் நான்கண்டேன் கேட்
டேனென மறைக்கின்றமையினென அறிக.

வினு :—விஞ்ஞானமயத்துக் கன்னியமாக ஆத்மாவென
வோர் பொருளிருக்குமாயின் அதனை விஞ்ஞானமய மறைக்
குமென்பது பொருந்தும். விஞ்ஞானமயத்தைச் சோதிக்கில்
அதனையன்றி ஆத்மாவென வோர்பொருளும் காணக்கிடை
யாமையால் விஞ்ஞானமயமே ஆத்மாவாகும். அதற்கன்னி
யமாகஆத்மாவுண்டென்பதும் அதனை விஞ்ஞானமய மறை
க்குமென்பதும் அசம்பாவிதமெனின். (26)

விடை :—கடபடாதிகளை மறைத்திராநின்ற அந்தகா
ரத்தை நிவர்த்திக்கின்ற தீபத்தையும் தீபமவிந்தபோது
அதனபாவத்தையும் பார்க்குங்கண் தீபத்துக் கன்னியமாக
இருப்பதுபோலச் சாக்கிரத்தில்விடயங்களைமறைத்திராநின்ற
ஆவாணத்தைப் பங்கஞ்செய்கின்ற விஞ்ஞானமயமாகிய புத்
திவிருத்தியின் விகாசத்தையும் சுழுத்தியில் அதன் சங்கோ
சத்தையும் அறியாநின்ற ஆத்மா அவ்விஞ்ஞானமயத்துக் கன்
னியமாக விளங்கிக்கொண்டிருப்பதைப் பூரணச்சந்திரனை
யறியாத பிறவிக்குருடன்போலறியாமல் விஞ்ஞானமயத்துக்
கன்னியமாக ஆத்மாஇல்லையெனலே



வினு :-விஞ்ஞானமயமே ஆத்மாவென்பதற்கு க்ஷணிக
விஞ்ஞானவாதிகளான பௌத்தமதானுசாரமான பல சுருதி
களிருக்கின்றமையினுனும் உபாத்தியாயருள்ளபோது பள்ளிப்
பிள்ளைகள் படிக்கும் விவகாரங்கள் சரியாக நடக்குதல்போல
புத்தியுள்ளபோது இந்திரிய விவகாரங்கள் சரியாகநடக்குதல்
முதலிய யுத்திகளிருப்பது மல்லாமல் அகவிருத்திக்கு விஷய
மாயுள்ளது ஆத்மாவென்னுஞ் சுருதிக்கேற்க நானிச்சயவான்
யூகவான், நான்கண்டேன், கேட்டேனென விஞ்ஞானமயத்
தை யகவிருத்திக்கு விஷயமாக விவகரிக்கும் அனுபவமிருத்
தலினுனும், விஞ்ஞானமயத்தை ஆத்மாவென்பது சுருதி
யுத்தி யனுபவங்கட்கு விரோதமில்லையேயெனின். (27)

விடை :—சூரியகிரண சம்பந்தமில்லாத தருப்பணத்து
க்குத் திரணமாதிகளைத் தகிக்குஞ்சத்தியில்லாததுபோல
ஆத்மப்பிரதிபலின சம்பந்தமில்லாத புத்திக்கு இந்திரியங்
களைத் தத்தந்தொழில்களிற் செலுத்துஞ்சத்தி யில்லையாம்.
இஃதன்றிப் பக்ஷவாதம் திமிர்வாதம், மூகவாதமுதலிய வியா
திகள் மேலிட்டபோது புத்தியிருந்தும் பாத, பாணி, வாக்
காதியிந்திரிய விவகாரங்கள் சரியாக நடவாதிருக்கின்றன.
ஆதலின் புத்தியுள்ளபோது இந்திரியாதி விவகாரங்கள் சரி
யாக நடக்குமென்பதும், எது மமதாவிருத்திக்கு விஷயமோ
அது அகவிருத்திக்கு விஷயமல்லவென்பது துணிபானமை

டது என்செவி சத்தமறியவில்லை என்கண் குருடாய்விட்டது என்மமதாவிருத்திக்கு விஷயமாயுள்ள விஞ்ஞானமய கோசத்தை ஆத்மாவென்பதும் அத்தியாசமேயாகும். இஃதன்றிஈசுவரனால்வெளியிட்டருளிய வேதாதிகளும் அவைகட்கொத்த திருட்டாந்தங்களும் அவ்விரண்டினுக்கு மொத்த சுவானுபவமுமே சுருதியுத்தி யனுபவங்களாகும், அவைகட்கு மாறாக அஞ்ஞானத்தாற் சனனமரண சம்சாரத்திற் சுழலும் பிராந்தர்களாகிய பௌத்தராதியர் கூறும் நூல்களைச் சுருதிகளெனவும் அவ்வாபாச நூல்களுக்கனுசாரமாகக் கூறும் குய்யுத்திகளை யுத்திகளெனவும் அவ்விரண்டினுக்குமொத்ததாக இரச்சுவைச் சர்ப்பமாக அறிந்ததுபோல அனாத்மாவை ஆத்மாவாக அறிந்த அத்தியாசானுபவத்தை யெதார்த்தானுபவமெனவும் மயங்கி ஆத்மஇலக்கணம் அற்பமேனுமமையப் பெறாமல் அனாத்மஇலக்கணங்களே யமையப்பெற்ற விஞ்ஞானமயகோசத்தை ஆத்மாவென்பது மெய்மையாகிய சுருதி யுத்தி யனுபவங்கட்கு விரோதமென்பதே சித்தாந்தமென அறிக.

வினா:—விஞ்ஞானமய கோசத்தை சச்சிதானந்தாதி யிலக்கணங்களையுடைய ஆத்மாவல்லவென்பது யாதினாலெனின்.

(28)



சுழுத்தி, மூர்ச்சைகாலங்களினும், சாக்கிரத்தில் நிச்சயாத்மகமாகத் தோன்றற்குமுன்னரும் பின்னருமில்லாததுமன்றி மத்தியகாலத்தினும் அலைநுரையாதிகளைக் காரணமாகிய சலமாக அபவாதிக்கில் அலையாதிகள் அபாவப்பொருளேயாவதுபோல அதன்காரணமாகிய சூட்சுமபஞ்சபூதமாக அபவாதிக்கில் விஞ்ஞானமயகோசம் அபாவப்பொருளேயாகின்றமையால் அசத்தாயும், சித்தெனின் சகலத்தையும் அறியும் அறிவாகவே யிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிப் பிரியமில்லாத விடயங்களைச் சரியாக அறியாமையால் சடமாயும், ஆனந்தமெனின் பிரியத்துக்கு விஷயமாகவே யிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி ஒன்றை மற்றொன்றாக நிச்சயித்து வருந்துதல் பற்றி வெறுப்புக்கு விஷயமாதலால் துக்கமாயும், அகண்டமெனின் கண்டப்படாமலிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி அந்தக்கரணவிருத்திகளி லொன்றாயிருத்தலால்கண்டமாயும், நிருவிகாரமெனின் விகாரமின்றியிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிப் பூதங்களினின்றும் தோன்றல் திரிதல் கெடுதலாதிய விகாரங்களையுறுதலால் விகாரமாயும், அன்னியமெனின் அகவிருத்திக்கே விஷயமாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி என்புத்தி என்னிந்திரியமென மமதாவிருத்திக்கு விஷயமாகின்றமையால் அன்னியமாயும், அனாதியெனின் உற்பத்திரகிதமா

உற்பத்தியுள்ளதாயும், நித்தியமெனின் நாசரகிதமாயிருக்கவே
ண்டும்; அங்ஙனமின்றி சுழுத்திமூர்ச்சைகளில் அல்லது விதே
கமுத்தியில் நாசமுறுதலால் அனித்தியமாயும், சுத்தமெ
னின் அசுத்தமுறாதிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிக்காமக்கு
ரோதாதி வாசனைகளைப் பொருந்தி யிருத்தலால் அசுத்தமா
யும், அதிருசியமெனின் திருசியமாகாதிருக்கவேண்டும்; அங்
ஙனமின்றி இது புத்தியென அறியப்படுதலால் திருசியமா
யும் உள்ள அனாத்ம இலக்கணங்களைப் பொருந்தி யிராநின்ற
விஞ்ஞானமயகோசத்தை ஆத்மாவெனல் மயக்கமாமென
அறிக.

வினா :—விஞ்ஞானமயம் ஆத்மாவல்ல வென்பதற்குச்
சுருதி யுத்தியனுபவங்களெவை யெனின். (29)

விடை :—(கவி) துன்னுபொறிகளுமல்ல மனமுமல்ல
துடர்புத்தியல்ல அகங்காரமல்ல வென்னும் (வாசிட்டமும்),
(கவி) இனமுறவென்னவுள்ள கரணத்திலொன்றி தெனலாவி
தென்னதெனலால், மனமுனமன்னமென்றவ தனுலுமல்ல
மதியல்லவந்த வகையே, யென்னும் (சசிவன்னபோதமும்),
(கவி) ஓதும் விஞ்ஞானகோச முண்மையாமான்மாவாகா
தென்னும் (விவேகசூடாமணியும்) சுருதிகளாகும். சூரியப்பிர
திவிம்பத்தைப் பொருந்தி ஆந்தரக்கிரகத்தை விளக்குவிக்
கின்ற தருப்பணத்தைப் பிரகாசிப்பிக்கின்



விம்பத்தைப் பொருந்தி விஷயங்களை விளக்குவிக்கின்ற விஞ்
ஞானமயகோசத்தை யறிந்துகொண்டிராநின்ற ஆத்மாவுக்
கன்னியமென்பது யுத்தியாகும், அன்னியமாகிய மனைவி
மைந்தராதியரை என் மனைவி, என் புத்திரராதியரென்பது
போல என் புத்தி, என் செவி, என் கண்ணென்பது அனு
பவமாகுமென அறிக.

வினா :—தனக்கு மனைவி மைந்தராதியர் பிரிவுபட்டுத்
தனியே யிருப்பதுபோல ஆத்மாவில் நின்றும் புத்திபிரிவு
பட்டு ஓர் காலத்திலேனும் தனித்திருப்பதை யறிந்த அனுபவ
மிருந்தாலன்றோ புத்திவேறென்பதற்கு என் புத்தியென்பது
அனுபவமாகும். தீபப்பிரகாசமும் ஆகாயமும், காச்சிய இரு
ம்பும் அக்கினியும் போல விஞ்ஞானமயமாகிய புத்தியும் ஆத்
மாவும் வேறுபடாமல் ஒன்றாகிய ஞானரூபமாகவேபிரகாசித்
துக்கொண்டிருக்கின்றமையால் அதனை வேறென்பதற்கு என்
புத்தியென்பது வாக்கு மாத்திரமேயன்றி யனுபவமாகாதெ
னின். (30)

விடை :—தீபப்பிரகாசமும் ஆகாயமும் அபின்னமா
கத்தோற்றினும் ஒளிமாத்திரமாயுள்ளது தீபப்பிரகாசமென
வும் பிரகாசத்துக்கு இடங்கொடுத்துக்கொண்டு வெளியாயி
...மெனவும் அறிவதுபோலும், காச்சிய இரும்

ணமாயிருப்பது இரும்பெனவும் உஷ்ணப்பிரகாச மாத்திரமாயிருப்பது அக்கினியெனவும் அறிவதுபோலும், புத்தியும் ஆத்மாவும் அபின்னமாக விளங்கினும் விருப்பு வெறுப்பு அபிமானநிச்சயாத்மகமாகவும் சுழுத்தியிலடங்கி விரிவதாகவுமிருப்பது புத்தியெனவும் அறிவுமயமாகப் பிரகாசிப்பதும் சுழுத்தியாதிகளிலடங்கி விரியாததுமாயிருப்பது ஆத்மாவெனவும் விவேகத்தால் பிரித்தறியலாகும். இங்ஙனமறிந்த அனுபவசம்ஸ்காரபலத்தினுனும் சுழுத்தியில் புத்தி அஞ்ஞானத்திலடங்கி யதன்மயமாகியபோது ஆத்மாவாகிய தானும் அஞ்ஞானத்திலடங்கி யதன்மயமாகிவிடாமல் அஞ்ஞானத்துக்குச் சாட்சிமாத்திரமாகச் சேடித்து விளங்கிக்கொண்டிருக்கின்ற அனுபவசம்ஸ்காரபலத்தினுனும் புத்தியை வேறுபடுத்தியென் புத்தியெனக் கூறுகின்றமையால் அது அனுபவமென்பதற்கையமின்றென அறிக.

வினா :—விஞ்ஞானமய கோசத்திலுள்ள அகம்புத்தியை விடுவதால் வருமிலாபமியாதெனின். (31)

விடை :—விஞ்ஞானமயத்தின் விருப்பு வெறுப்பு கருத்திருத்துவ முதலிய தருமங்களும் அவைகளின் பலமாகிய ஜனனமரணாதி துக்கங்களுமில்லாமற் போவதென அறிக.

வினா :—பிராணனோடு கன்மேந்திரியங்



கின்றமையால் அவ்விந்திரியங்களுந்தோன்றப் பிராணகன்மேந்திரியமயகோசம், மனஞானேந்திரியமயகோசம், புத்திஞானேந்திரியமயகோசமென கோசநாமங்கூறமல், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசமெனப் பிராணன், மனம், புத்திகட்கு மாத்திரம் கோசநாமங்கூறியது நியாயவிரோதமாமெனின். (32)

விடை :—சாத்திரங்களிலுள்ள வாக்கியங்களின் பொருள்களைக் கிரகிப்பதற்கு இலக்கணாவிருத்தி, குணவிருத்தி, முக்கியவிருத்தியென விருத்திகள் மூன்றுள. அவைகளில் முற்சொல்லிய இரண்டு விருத்திகளாலும் பொருள் கொள்ளாமல் பிற்சொல்லிய முக்கிய விருத்தியால் பிராணமயகோசம் மனோமயகோசம் விஞ்ஞானமயகோசமென்னும் வாக்கியங்கட்குப் பொருள்கொள்ளில் நியாயவிரோதமல்லவென அறிக.

வினா:—இலக்கணாவிருத்தி, குணவிருத்தி, முக்கியவிருத்தியென்பவை யெவை, அவைகளில் முக்கியவிருத்தியால் எங்ஙனம் பொருள்கொள்வதெனின். (33)

விடை :—இலக்கணாவிருத்தியைப்பற்றிப் பின்வரும் தத்துவவிவேசனநிரூபகத்தில் (82-வது வினாவிற்குக் கூறும் விடையில்) எழுதப்பட்டிருக்கிறது. ஆண்டுக் கண்டுகொள்க.

பின்னமாகப் பொருள் கிரகிக்காமல் நீலவருணமுள்ளது புட்பமெனப்பொருள் கிரகிப்பதும், அப்படியே அக்கினிமாணவகனென்னும் வாக்கியத்துக்கு அக்கினி பிரஹ்மசாரியெனப் பின்னமாகப் பொருள் கிரகிக்காமல் அக்கினியைப்போல சொலித்துக்கொண்டிருக்கின்ற பிரஹ்மசாரியெனப்பொருள் கிரகிப்பதும் குணவிருத்தியாகும். அரசனானவன் மந்திரி பிரதானிமுதலிய பரிசனங்களோடு மார்க்கத்திற் செல்வதை தூரத்திருந்து பார்த்த ஒருவன் மத்தியிலுள்ள ஒருவனை அழைத்து அங்குச் செல்பவர்கள் யாவர்களெனவினவ மத்தியிலுள்ளவன் அரசன் செல்லுகிறானெனக் கூறக் கேட்டு அவன் கூறியதற்கு அரசனானவன் மந்திரி பிரதானிமுதலியவர்கட்குப் பிரதான (முக்கிய) னாயிருப்பதுபற்றி அவர்களை யரசனில் அடக்கி யரசன் செல்லுகிறானெனப் பொருள் கிரகிப்பது முக்கியவிருத்தியாகும். இதுபோல, பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம் என்னும் வாக்கியங்கட்கு கன்மேந்திரியங்கட்குப் பிராணன் பிரதான (முக்கிய) மாயும் இனமாயும் ஞானேந்திரியங்கட்கு மனமும் புத்தியும் பிரதான(முக்கிய) மாயும் இனமாயுமிருப்பதுபற்றிக் கன்மேந்திரியங்களைப் பிராணனிலடக்கிப் பிராணமயகோசமெனவும் ஞானேந்திரியங்களை மனதினும் புத்தியினுமடக்கி மனோமயகோசம் விஞ்ஞானமய கோச



வினா :—கன்மேந்திரியங்கட்குப் பிராணனும், ஞானேந்திரியங்கட்கு மனமும் புத்தியும், பிரதானமும் இனமுமாகுமென்பது யாதினாலெனின். (34)

விடை :-பிராணனையன்றிக் கன்மேந்திரியங்கட்கு இயக்கங்கூடாமையால் கன்மேந்திரியங்கட்குப் பிராணன் பிரதானமும், பிராணனுங் கன்மேந்திரியங்களும் இராஜதாம்சமானமையாலினமும், மனதையும் புத்தியையுமன்றி ஞானேந்திரியங்கட்கு விஷயங்களையறியுந்தன்மை கூடாமையால் ஞானேந்திரியங்கட்கு மனமும் புத்தியும் பிரதானமும், மனமும் புத்தியும் ஞானேந்திரியங்களும் சத்துவாம்சமானமையால் இனமுமென்றதென அறிக,

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| காரணசரீரமே ஆனந்தமயகோசமாம் | வெளி. |

வினா :—காரணசரீரமென்பது யாதெனின். (35)

விடை :—ஜீவாசிரயமாயுள்ள அஞ்ஞானமெனஅறிக

வினா :—அஞ்ஞானத்தின் செயல் யாதெனின். (36)

விடை ;-ஆத்மாவை மறைவுசெய்துகொண்டிருப்பதென அறிக.

அஞ்ஞானம் ஆத்மாவை யெங்ஙனம் மறைவு

விடை:—அகம் அஞ்ஞானியெனும்படி ஆத்மாவின் சாமான்யாம்சத்தை மறைபாமல் விசேடாம்சத்தை மறைவுசெய்துகொண்டிருக்கிறதென அறிக.

வினு:—சாமானிய அம்சம் யாது விசேடாம்சம் யாதெனின். (38)

விடை:—எது பிராந்திகாலத்திற்றோன்றுகிறதோ எதுவன்றியில் பிராந்தி தோன்றுகிறதில்லையோ, எது அதிகதேசங்களினும் அதிககாலங்களினுமிருக்கிறதோ அது சாமானிய அம்சமாகும். எது பிராந்திகாலத்திற்றோன்றுகிறதில்லையோ, எது தோற்றுவதால் பிராந்தி நிவர்த்தியாகிறதோ, எது சொற்பதேசங்களினும் சொற்பகாலங்களினு மிருக்கிறதோ அது விசேடாம்சமாகும். சாமான்யாம்சம் ஆதாரமெனவும் விசேடாம்சம் அதிட்டானமெனவும் சொல்லப்படுமென அறிக.

வினு:-ஆத்மாவுக்குள்ள சாமான்ய அம்சம் யாது விசேடாம்சம் யாதெனின். (39)

விடை:—நான் அகர்த்தா, நான் அசங்கன், நான் ஆனந்தவியாபகப் பிரஹ்மமென்பவற்றில் நான் நானென்பது சாமானிய அம்சமும்; அகர்த்தா, அசங்கன், ஆனந்தவியாபகப்பிரஹ்மமென்பவை விசேடாம்சமுமாமென அறிக.

வினு:—சாமான்ய அம்சம் அதிகதேச அதிக காலங்களினும் விசேடாம்சம்



விடை:—நான் கர்த்தா, நான் மனுஷன், நான் ஜீவன், நான் அகர்த்தா, நான் அசங்கன், நான் ஆனந்தவியாபகப்பிரஹ்மமென்பவற்றிலுள்ள நான் நானென்னும் சாமானிய அம்சம் அஞ்ஞானி ஞானிகளாகிய இருவர்களிடத்தினும் அஞ்ஞானகாலம் ஞானகாலமாகிய இரண்டு காலங்களினும் காணப்படுகின்றமையால் அதனை அதிகதேசம் அதிககாலங்களிலுள்ளதெனவும்; கர்த்தா, மனுஷன், ஜீவனென்னும் விசேடாம்சம் அஞ்ஞானியிடத்தினும், அஞ்ஞானகாலத்தினு மாத்திரமன்றி ஞானியிடத்தினும் ஞானகாலத்தினும் காணப்படாமையினும், அகர்த்தா, அசங்கன் ஆனந்தவியாபகப் பிரஹ்மமென்னும் விசேடாம்சம் ஞானியிடத்தினும் ஞானகாலத்தினுமாத்திரமன்றி அஞ்ஞானியிடத்தினும் அஞ்ஞானகாலத்தினுங் காணப்படாமையினும் அதனைச் சொற்பதேசம் சொற்பகாலங்களிலுள்ளதெனவுங் கூறியதென அறிக.

வினு:—அஞ்ஞானம் ஆத்மாவின் சாமானியாம்சத்தை மறையாமல் விசேடாம்சத்தைமாத்திரம் மறைத்திருப்பதெங்ஙனமெனின். (41)

விடை:—மந்தாந்தகாரமானது இரச்சுவிற் சர்ப்பந்தோன்றுவதற்கேதுவாக இரச்சுவின் இதுவென்னும் சாமான்யாம்

த்துவாதி ஜீவத்துவங்கள் தோன்றுதற்கேதுவாக நானென்னும் ஆத்மாவின் சாமான்யாம்சத்தை மறையாமல் அகர்த்தா, அசங்கன், ஆனந்தவிபாபகப் பிரஹ்மமென்னும் விசேடாம்ஸத்தை மாத்திரம் மறைத்திருக்கிறதென அறிக.

வினு :—அஞ்ஞானம் எதை ஆசிரயித்திருந்துகொண்டு ஆத்மாவை மறைக்கிறதெனின். (42)

விடை :—அந்தகாரம் ஓர் கிரகத்தை ஆசிரயித்திருந்துகொண்டு அக்கிரகத்தையே மறைப்பதுபோல அஞ்ஞானம் ஆத்மாவை யாசிரயித்திருந்துகொண்டு ஆத்மாவையே மறைக்கிறதென அறிக.

வினு :—இதனை ஆனந்தமயமென்றது யாதினுலெனின். (43)

விடை :—ஆனந்தசொரூபமாகிய ஆத்மப்பிரதிபலினத்தையுடையதாயும் பிரியமோதப்பிரமோதவிருத்திகளுதித்தடங்குதற்கு ஸ்தானமாயுமிருத்தலினென அறிக.

வினு :—பிரிய மோதப் பிரமோதவிருத்திகளெவை, அவைகளெந்தக் காலத்திலுதிக்கின்றன எந்தக்காலத்திலடங்குகின்றனவெனின். (44



இட்டவிடயானுபவத்தாலுதயமாவதுபிரமோதவிருத்தியாம். இவைகள் சாக்கிரத்தினும், சொப்பனத்தினும், புண்ணியகன்மபலபோகானுபவகாலங்களி லுதயமாகின்றன. புண்ணிய கன்மபலபோகம் நிவர்த்தியாகும்போது நித்திரைவடிவமாக அடங்குகின்றனவென அறிக.

வினு:—இவ்வானந்தமயமாகிய அஞ்ஞானத்தைக் கோசமென்றது யாதினுலெனின். (45)

விடை :—பசலிப்பூச்சியைத் தோடு மறைப்பதுபோல நான் பிரியன், நான் மோதன், நான் பிரமோதன், நானறிவேன், அறியேனென அகஞ்சத்தார்த்தமாகிய ஆத்மாவை மறைக்கின்றமையின் அறிக.

வினு :—ஆனந்தமயத்துக் கன்னியமாக ஆத்மாவென ஓர் பொருளிருக்குமாயின் அதனை ஆனந்தமயம் மறைக்குமென்பது பொருந்தும். அதனைச் சோதிக்கில் அதற்கன்னியமாக ஆத்மாவென்ருெருபொருள் காணக்கிடையாமையினுல் ஆனந்தமயமாகிய அஞ்ஞானமே ஆத்மாவாகும். அதற்கன்னியமாக ஆத்மாவுண்டென்பதும் அதனை அஞ்ஞானம் மறைத்திருக்கிற தென்பதும் அசம்பாவிதமெனின். (46)

—சந்திரனை மறைத்திருக்கின்ற களங்கத்தைச்

பதுபோல, ஆத்மாவை மறைத்திருக்கின்ற ஆனந்தமயமாகிய அஞ்ஞானம் சுழுத்தியினும் புண்ணியகன்மபலபோகானுபவ காலங்களினும் ஆனந்தப்பிரதிபலனத்துடனே கூடிப் பின்நட்டமாவதையறிந்துகொண்டு அதற்கன்னியமாகச் சாட்சிமாத்திரமாகப் பிரகாசிப்பதைப் பூரணசந்திரனை யறியாத பிறவிக்குருடன்போலறியாமல் ஆனந்தமயத்துக்கன்னியமாக ஆத்மா இல்லையெனலே அசம்பாவிதமும் சுருதி யுத்தியனுபவங்கட்கு விரோதமுமாமென அறிக.

வினா:—ஆனந்தமயமே ஆத்மாவென்பதற்குப் பட்டர் மதானுசாரமான அனந்தசுருதிக ளிருத்தலினானும் பிரியமுள்ளபோது காயைக் கனியாகச்செய்யுந் தொழில் நடக்குதல்போலப் பிரியமுள்ளபோது புத்தி நிச்சயாதி தொழில் நடக்குதலாதிய யுத்திகளிருத்தலினானும், அகவிருத்திக்கு விஷயமாயுள்ளது ஆத்மாவென்னுஞ் சுருதிகளுக்கேற்க நான் பிரியன், நான் மோதன், நான்பிரமோதன், நான் அறிவேன், நான் அறியேனென அகம்விருத்திக்கு ஆனந்தமயகோசம் விஷயமாகின்ற அனுபவமிருத்தலினானும் ஆனந்தமயகோசத்தை ஆத்மாவென்பது சுருதியுத்தியனுவங்கட்கு விரோதமில்லையே யெனின். (47)

விடை:-பாம்பு, புலி, கரடி, அல்லது திருடரைக்கண்டு பிரியமுதியாமல் துவேஷாதிகளுதயமாகியபோதும் அப்



பாம்பு முதலியவைகளைச் சம்மரித்தற்கான புத்தி நிச்சயாதி
தொழில் நடக்கின்றமையால் பிரியமுள்ளபோதுதான் புத்தி
நிச்சயாதி தொழில் நடக்குமென்பதும், எது மமதாவிருத்
திக்கு விஷயமாயுள்ளதோ அது அகம் விருத்திக்கு விஷயமா
யுள்ள ஆத்மாவல்லவென்பது துணிபானமையால், என்னுஞ்
ஞானம், என் ஜீவன், என் பிரியமென மமதாவிருத்திக்கு
விஷயமாகின்ற ஆனந்தமயத்தை அகம்விருத்திக்கு விஷயமா
யுள்ள ஆத்மாவென்பதும் பிராந்தியேயாகும். இஃதன்றி இய
ற்கை ஞானபரனுகியாசுவரனால் வெளியிட்டருளிய வேதாதி
களும், அவைகட்கொத்த திருட்டாந்தங்களும, அவ்விரண்டி
னுக்குமொத்த சுவானுபவமும் சுருதி யுத்தியனுபவங்களா
கும். இவைகளையன்றி அஞ்ஞானத்தாற் சனனமரணசம்சா
ரத்திற் சுழலும் பிராந்தர்களாகிய பட்டராதியோர் கூறும்
ஆபாசநூல்களைச் சுருதிகளெனவும் அந்நூல்களுக்கொத்த
திருட்டாந்தங்களாகிய குயுத்திகளை யுத்திகளெனவும் அவ்
விரண்டிற்கு மொத்ததாகச் சொப்பனவுலகைச் சத்தியவுலக
மாக அறிந்ததுபோல அனாத்மாவை ஆத்மாவாக அறிந்த அத்
தியாசானுபவத்தை யதார்த்தானுபவமெனவும் மயங்கி,
ஆத்ம இலக்கணம் அற்பமேனும் அமையப்பெறாமல் அனாத்ம
இலக்கணங்களே யமையப்பெற்ற ஆனந்தமயமாகிய அஞ்ஞா
னத்தை ஆத்மாவெனக்கூறுதல் உண்மையாகிய சுருதி யுத்திய
யனுபவங்கட்கு விரோதமாமென அறிக.

வினு :-ஆனந்தமய கோசத்தைச் சச்சிதானந்தாதி இலக்கணங்களையுடையதல்ல வென்பது யாதினுலெனின். (48)

விடை :—ஆனந்தமய கோசத்தைச் சத்தெனின் முக்காலத்திலுமுள்ளதாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி நிருவிகற்பசமாதியிலில்லாததுந் தவிர ஆகாயத்திலுள்ள நீலவருணுதிகளை விசாரிக்குமிடத்து ஆகாயத்தையன்றி யோர்பொருளாக நிலைபெருமல் அபாவப்பொருளேயாவதுபோல ஆனந்தமயகோசத்தை விசாரிக்குமிடத்து ஆத்மாவையன்றி யோர்பொருளாக நிலைபெருமல் அபாவப்பொருளேயாகின்றமையால் அசத்தாயும், சித்தெனின் அறிவாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி அறியாமையேவடிவமாயிருத்தலால் சடமாயும்,ஆனந்தமெனின் சுகசொரூபமாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி அறியாமையினுல் வருந்துதலால் துக்கமாயும், அகண்டமெனின் கண்டப்படாமலிருக்கவேண்டும்;அங்ஙனமின்றி ப்பிரகிருதியின் முக்குணங்களிலொன்ருயிருத்தலால் கண்டமாயும், நிருவிகாரமெனின் விகாரமில்லாதிருக்கவேண்டும். அங்ஙனமின்றி ஆத்மஞானத்தாற் கெடுதலாகிய விகாரமுறுதலால் விகாரமாயும், அன்னியமெனின் சதா அகம்விருத்திக்கே விஷபமாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி



கவேண்டும்; அங்ஙனமின்றி நாசமாவதாகிய கற்பித அனுதியாயும்,இஷ்டவிடயதரிசன சாமீப்பியசையோகங்களால் பிரியமோதப் பிரமோதரூபமாக உதிப்பதாயிருத்தலால் உற்பத்தியுடையதாயும், நித்தியமெனின் நாசமில்லாதாயிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிப் புண்ணியகன்ம பலபோக நிவர்த்தியினுனும் தத்துவஞானத்தினுனும் நட்டமாவதால் அநித்தியமாயும்,சுத்தமெனின் அசுத்தமில்லாதிருக்கவேண்டும்; அங்ஙனமின்றிச் சீவர்கள் பந்தப்பட்டு வருந்துதற்குக் காரணமாயிருத்தலால் அசுத்தமாயும், அதிருசியமெனின் திருசியமாகாதிருக்கவேண்டும். அங்ஙனமின்றி அறிவறியாமை பிரியமோதப்பிரமோதங்கள் அறியப்படுகின்றமையால் திருசியமாயுமிராநின்ற அனுத்ம இலக்கணங்களைப் பொருந்திய ஆனந்தமயகோசத்தை ஆத்மாவெனல் மயக்கமாமென அறிக.

வினு :-ஆனந்தமயகோசம் ஆத்மாவல்லவென்பதற்குச் சுருதி யுத்தியனுபவங்களெவை யெனின். (49)

விடை :—(சுவி) இருள்வடிவாமஞ்ஞானவுரு நானல்ல வென்னும் (ரிபுகீதையும்), (சுவி) வரமறுதுயிலானந்தமயனேயும் நானென்னுதே, விரவியதமவஞ்ஞானவிருத்தியின் விகாரமாமே யென்னும் (கைவல்லியமும்), (சுவி) காரணசூக்குமதூலதேக மூன்றும் கண்டறியிலன்னியமா யிருக்கையாலே

பகுதியின் விகாரத்தாலும், கருதிய புண்ணியத்தின் காரிய மாதலாலும், தாமுறுவிகாரக்கூட்டந்தன்னிலுட்பட்டதாலும், மருவுமானந்தகோசம் மாசிலாவான்மாவாகா வென்னும் (விவேகசூடாமணியும்), சுருதிகளாகும். சூரியனை மறைத்திருக்கின்ற மேகம் அதனை விளக்கிவைத்துக்கொண்டிராநின்ற சூரியனுக்கன்னிய மென்பதுபோல ஆத்மாவை மறைத்திருக்கின்ற ஆனந்தமயகோசம் அதனைச்சாட்சிமாத்திரமாக அறிந்துகொண்டிராநின்ற ஆத்மாவுக்கன்னிய மென்பது யுத்தியாகும். கூப குள வனுதிகளை என்கூபம், என்குளம், என்வனமென்பதுபோல என்னஞ்ஞானம், என்ஜீவன், என் பிரியமென்பது அனுபவமாகுமென அறிக.

வினு:-ஆனந்தமயகோசமாகிய அஞ்ஞானம் ஆத்மாவை யாருக்கு அறியவொட்டாமல் மறைத்திருக்கிற தெனின். (50)

விடை:—அவித்தை அந்தக்கரணங்களின் பிரதிபிம்பனுகிய ஜீவனுக்கென அறிக.

வினு:—கடசலத்திற் பிரதிவிம்பித்த சூரியப்பிரதிவிம்பம்போல, அவித்தை அந்தக்கரணங்களிற் பிரதிவிம்பித்த ~~ராகின்ற~~ ஆத்மப்பிரதிவிம்பமே சீவனெனக் கூறுகின்றனை...



னுகிய சீவனில்லாதவனுகிருன். இங்ஙனமில்லாத சீவனுக்கு ஆத்மாவை அஞ்ஞானம் மறைத்திருக்கிறதெனல் வந்தியாசுதனுக்குச் சூரியனை மேகமறைத்திருக்கிறதெனல்போலசங்கதமாகுமெனின். (51)

விடை:—அஞ்ஞானம் ஆத்மாவின் விசேடாம்சத்தை மாத்திரம் மறைத்துச் சாமன்யாம்சத்தை மறையாமையால் சீவன் வந்தியாசுதன்போல் அத்தியந்தமில்லாதவனல்ல. ஆதலின் சீவனுக்கு அஞ்ஞானம் ஆத்மாவை மறைத்திருக்கிறதெனல் அசங்கதமல்லவென அறிக.

வினு:-ஆனந்தமயகோசத்திலுள்ள அகம்புத்தியை விடுவதால் வரும் லாபம் யாதெனின். (52)

விடை:—அறிவறியாமை பிரிய[illegible]ப் பிரமோதாதிகளும் அவைகளாற்ருேன்றுஞ் சனன[illegible] சம்சாரங்களுமில்லாமற்போவதென அறிக.

வினு:—பஞ்சகோசங்கட்கும் ஆத்மாவுக்குமுள்ள சம்பந்தம் யாதெனின். (52)

வினா :—ஆத்மாவுக்கும் பஞ்சகோசங்கட்கு முள்ள சம்பந்தம் சம்யோகமாகவேனும் சமவாயமாகவேனு மிராதோ வெனின். (54)

விடை:—திரவியமாகிய பேரிகைக்கும் குருந்தடிக்கும் விஷயத்துக்கும் இந்திரியத்திற்குமுள்ள சம்பந்தம் சம்யோக சம்பந்தமாகும் ஆத்மா ஓர் திரவியமல்லாமையால் சம்யோக சம்பந்தமும்; அவயவத்துக்கும் அவயவிக்கும் குணத்துக்கும் குணிக்குமுள்ள சம்பந்தம் சமவாய சம்பந்தமாகும், ஆத்மாநிரவயவ நிர்க்குணசொரூபமாதலால் சமவாயசம்பந்தமுமல்லவென அறிக.

வினா :-அன்னமயாதி ஐந்துகோசங்களையும் ஆத்மாவன்றென வேறுபடுத்திப் பார்க்கும்போது பாழாகிய சூனியமே சேடிக்கிறது. ஆதலின் சூனியந்தானே ஆத்மாவாகு மெனின். (55)

விடை :—ஒன்பது பெயரையெண்ணிப் பத்தாமவனில்லையெனக் கவலையுற்ற ஒருவனாகிய தானே பத்தாமவனாவது போல ஐந்து கோசங்களையும் அவைகட்கப்பாலுள்ள சூனியத்தையுமறிந்த அறிவாகிய தானே ஆத்மாவாகும். ஆதலின் அறியப்படுவதாகிய சூனியம் அறியும்பொருளாகிய ஆத்மாவாகாதென அறிக.



வினா :—ஐந்துகோசங்கட்கும் வேறாக இராநின்ற ஆத்மாவுக்குச் சச்சிதானந்தாதி இலக்கணங்களமைந்துள்ளனவோ வெனின். (56)

விடை :—மண்கடாதிகள் தோன்றற்குமுன்னும், அழிந்தபின்னும், மத்தியினுங்கெடாமல் அவைகட்காதாரமாயிருப்பதுபோல ஆத்மா அவத்தாத்திரயப் பிரபஞ்சந் தோன்றற்கு முன்னும், அழிந்தபின்னும், மத்தியினும் கெடாமல் அவைகட்காதாரமாயிருத்தலால் சத்திலக்கணமும்; சூரியன் தீபாதி சாதனாந்தரங்களை யபேக்ஷியாமல் தானும் பிரகாசமாயிருந்து கொண்டு ரூபவிஷயங்களை விளக்கிவைப்பதுபோல ஆத்மா சூரியாதி யட்டப்பிரகாசங்களையும் அபேக்ஷிக்காமல் தானும் பிரகாசமாயிருந்துகொண்டு அவத்தாத்திரயப் பிரபஞ்சங்களை விளக்கிவைக்கின்றமையால் சித்திலக்கணமும்; திரவியம், புத்திரன், மனைவி, தேகம், இந்திரியம், சிவனாகிய பிரியவஸ்துக்களில் காலபேதத்தால் எதேது கைவிடப்படினும் தான் கைவிடப்படாமல் பரமப்பிரீதிக்கு விஷயமாயிருத்தலால் ஆனந்த இலக்கணமும்; தேகாதிகளுக்குள்ள தோன்றல் திரிதல் கெடுதலாதி விகாரங்களின்றி யெப்போதும் அறிவுமயமாகவே யிருத்தலால் நிருவிகார இலக்கணமும்; ஐந்துகோசங்களும் என்தேகம், என்பிராணன், என்மனம், என்புத்தி, என்னஞ் ஞானம் என அன்னியமாக அறியப்படுவதுபோல ஆத்மா ஒன்றினாலு மறியப்படாமல் எப்போதுந் தானாகவே விளங்கிக்

கொண்டிருத்தலால் அன்னிய இலக்கணமும்; மண்ணானது
கடாதிகள் தோன்றற்குமுன்னும், அழிந்தபின்னும், மத்தியிற்
கடாதிகளனைத்தினும் இருப்பதுபோல அவத்தாத்திரயப் பிர
பஞ்சங்கள் தோன்றற்கு முன்னரும், அழிந்தபின்னரும்,மத்தி
யிற் சகல பிரபஞ்சங்களினும் இருக்கிறதிருக்கிறதென விளங்
கிக்கொண்டிருத்தலால் நித்தியவிலக்கணமும்; அவத்தாத்தி
ரயப் பிரபஞ்சங்கட்குள்ள உற்பவநாசமாதிய அசுத்தங்களி
ன்றி அனுதினித்த சுயம்பிரகாசமாயிருத்தலால் சுத்தவிலக்க
ணமும்; கடபடாதிகளை விளக்கிவைக்கின்ற சூரியனை விளக்கி
வைத்தற்கு வேறு சூரியனில்லாததுபோல அவத்தாத்திரயப்
பிரபஞ்சங்களை விளக்கிவைக்கின்ற ஆத்மாவை விளக்கிவைத்
தற்கு வேறுபொருளில்லாமையால் அதிருசிய இலக்கணமும்
ஆகிய இவைகளோடு சுருதிகளிற் கூறப்படுஞ் சொரூபஇலக்
கணங்களனைத்தும் பூரணமாக அமைந்துள்ளனவென அறிக.

(நூல் உ௨)

ஆறுதத்துவங்களாயுள்ள தூலசரீரத்தில் இருபது தத்து
வங்களாயுள்ள சூட்சுமசரீர மிருக்கின்றது. †அஃதெங்ங
னெனின்கன்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்க
ளுள் சிங்குவையும் வாயிலிருக்கும். உதானவாயுவும் மனதுங்
கண்டத்திலிருக்கும். பிராணவாயுவும் புத்தியும் இருதயத்திலி

† அஃதெங்ஙனெனின் = அஃதெவ்விடத்தெனின்.





ருக்கும். சமானவாயுவும் சித்தமும் நாபியிலிருக்கும். அபான
வாயுவும் பாயுருவும் குதத்திலிருக்கும். வியானவாயுவும் துவக்
கிந்திரியமும் அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.
உச்சியிலே யுள்ளமும், கருவிழிநுனியில் சட்சுவிந்திரியமும்,
காதினுள்ளே சுரோத்திரேந்திரியமும், மூக்குநுனியிலே
கிராணேந்திரியமும், கழுத்துக்குமேல் தனித்தனியேயிருக்
கும். கழுத்திற்குக்கீழே கை கால் குய்யங்களில் பாணி,
பாதம், உபத்தம்மூன்றுந் தனித்தனியே யிருக்கும். இப்படித்
தூலசரீர தத்துவங்களாறு; அதிற் குடிபுகுந்த சூட்சும சரீர
தத்துவங்களிருபது; ஆகத் தத்துவங்கள் இருபத்தாறும் பஞ்ச
பூதங்களின் காரியங்களானபடியினலே ஒருமைப்பாடாகக்
காரியசரீரமென்று சொல்லப்படும். (இதன்பொருள் வெளி.)

(நூல் உ௩)

அவித்தையிற் பிரதிவிம்பனுயுள்ள சிதாபாஸன் சாக்கிர
த்தில் இந்த இருபத்தாறு தத்துவங்களுடன் கலந்துநிற்கும்
போது விசுவனென்றும், வியாவகாரிக சீவனென்றுஞ்சொல்
லப்படுவன். சொப்பனத்தில் தூலசரீரத்தைவிட்டுச் சூட்சு
மசரீரத்துடன் கூடிநின்றபோது, தைஜசனென்றும் பிராதி
பாசிக சீவனென்றும் சொப்பன கற்பிதனென்றுஞ் சொல்
லப்படுவன். சுழுத்தியில் காரியசரீர தத்துவங்களிருபத்தா
றையும் விட்டுக் காரணசரீரத்தைமாத்திரம் பொருந்தியிருக்கில்

கும்போது, பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திகசீவனென்றுஞ் சொல்லப்படுவன். இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவத்தைகளுஞ் சொல்லப்பட்டன.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அவித்தையிற்பிரதிவிம்பனுயுள்ள சிதாபாசன் சாக்கிரத்தில் இந்த இருபத்தாறு தத்துவங்களுடன் கலந்துநிற்கும்போது | வெளி. |

வினு :—சாக்கிராவத்தையாவது யாதெனின். (57)

விடை :—சொப்பனசுழுத்திகளின்றிச் சகல இந்திரியங்களாலும் புத்திகர்த்திருத்துவாதியாகாரமாய் ஸ்திரமாகிய பாஹியார்த்த ஞானத்தோடு விவகரித்தற்கும் இந்திரியஜன்னியஞானத்திற்கும் ஆதாரமான காலமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| விசுவனென்றும், வியாவகாரிகஜீவனென்றும் சொல்லப்படுவன். | வெளி. |

வினு :—சாக்கிரத்தில் சிதாபாசனுக்கு விசுவனெனப் பெயர் வந்தது யாதினுலெனின். (58)

விடை:—விசுவமென்பது உலகம் சாக்கிரத்தில் ஜீவன் உலகாபிமானியா யிருத்தலினென அறிக.

வினு :—இச்சிதாபாசனுக்கு வியாவகாரிக ஜீவனெனப் பெயர்வந்தது யாதினுலெனின். (59)



விடை :—சாக்கிரத்தில் வியாவகாரிக சத்தைகளாகிய மனைவி தனபுத்திராதிய விஷயாபிமானியாயும் தானும் வியாவகாரிக சத்தையாயுமிருந்துகொண்டு பந்தமோக்ஷங்களைத் தருவதாகிய லௌகிக வைதிக வியவகாரங்களைக் கர்த்தாவாகவிருந்து விவகரிக்கின்றமையினென அறிக.

வினு :—அற்றேல், விசுவனென்னும் நாமத்தை முன்னரும் வியவகாரிகனென்னும் நாமத்தைப் பின்னரும் வைத்துக் கூறியதென்னையெனின். (60)

விடை :—பிரபஞ்சாபிமானமின்றி விவகாரங்கூடாமையால் அபிமானத்தால் வந்த நாமத்தை முன்னரும், அபிமானபூர்வகமாகவுண்டாகிய விவகாரத்தால்வந்த நாமத்தைப் பின்னரும் வைத்துக் கூறியதென அறிக.

வினு :—வியாவகாரிக சத்தையாவது யாதெனின். (61)

விடை :-பிரஹ்மஞானமன்றியில் பாதமாகாததாயும் பந்தமோக்ஷவிவகாரஞ் சித்திக்கச் செய்வதாயுமுள்ள சேதனுசேதனப் பிரபஞ்சங்களென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சொப்பனத்திற் றூலசரீரத்தை விட்டு அந்தக்கரணத்துடனேகூடிநின்றபோது. | வெளி. |

வினு :—சொப்பனுவத்தையாவது யாதெனின். (62)

விடை :—இந்திரியசம்பந்தமும், இந்திரியகோசரமாகிய பாஹியார்த்த ஞானமுமின்றி வாசனுபூர்வகமாக மனது விஷயாகாரமாகப் பரிணமித்து அஸ்திரமாக விவகரிக்குங் காலமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| தைஜசனென்றும் பிராதிபாசிகஜீவனென்றும் சொப்பனகற்பிதனென்றுஞ் சொல்லப்படுவன். | வெளி. |

வினு :-சொப்பனுவத்தையில் ஜீவனுக்குத் தைஜ்சனெனப் பெயர்வந்தது யாதினுலெனின். (63)

விடை :—தேஜோமயமான அந்தக்கரணவிருத்தியோடு கூடித் தேஜோமயமாக விளங்குகின்றமையினென அறிக.

வினு:—இச்சிதாபாசனுக்குப் பிராதிபாசிகஜீவனெனப் பெயர்வந்தது யாதினுலெனின். (64)

விடை :—சொப்பனுவத்தையிற் பிராதிபாசிகசத்தையாகிய விஷயாகாரமாகத் தோன்றிக்கெடுகின்றமையினென அறிக.

வினு :—பிராதிபாசிகசத்தையாவது யாதெனின். (65)

விடை :—பிராதிபாசிகமென்றுல் பிரதீதிமாத்திரம்; சத்தையென்றுல் இருக்குதல்; பிரதீதிமாத்திரமாக இருப்ப அஞ்



தாயும், பிரஹ்மஞானமன்றியில் பாதமாவதாயுமுள்ள சொப்பனப்பிரபஞ்சம், கயிற்றரவு, கானற்சலம், கட்டையிற்கள்வன், இப்பிவெள்ளியாதிகளென அறிக.

வினு :—இவனைச் சொப்பனகற்பிதனென்றது யாதினுலெனின். (66)

விடை :—நித்திராசத்தியாற் றேன்றிச் சொப்பனத்தைக் கற்பிக்கின்றவனுதலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| சுழுத்தியிற் காரியசரீரதத்துவங்களிருபத்தாறையும் விடுத்துக்காரணசரீரத்தைமாத்திரம் பொருந்தியிருக்குப்போது. | வெளி. |

வினு :—சுழுத்தியவத்தையாவது யாதெனின். (67)

விடை :—பாஹியாந்தர விவகாரங்களும் தேகேந்திரியாதிப் பிரஞ்ஞையுமின்றிப் புத்திவிருத்தி காரணுத்மகமாக அடங்கிச் சுககோசரமும் அவித்தியாகோசரமுமான கேவல அஞ்ஞானத்தின் பரிணுமரூப விருத்திமாத்திரமுள்ள காலமென அறிக.

வினு :—சகல நூலாசிரியர்களும், சாக்கிரசொப்பனங்கட்குக் காரணமாகிய சுழுத்தியவத்தையை முன்னர் வைத்துக் கூருமல் காரியமாகிய சாக்கிராவத்தையை முன்னரும், ணை

தாக்

ார் வாயில்

சொப்பனவத்தையை மத்தியினும், சுழுத்தியவத்தையைக் கடையினும் வைத்துக் கூறியது யாதுபற்றியெனின். (68)

விடை :—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியாகிய மூன்றவத்தைகட்கும் நிரனிரையே தானம் நேத்திரம், கண்டம், இருதயமும், குணம் சத்துவம், இராஜதம், தாமதமும், ஞானம், ஸ்திரம், அஸ்திரம் மூலாஞ்ஞானமுமாக இருக்கின்றன. இவைகளில் சாக்கிரமானது நேத்திரத்தானம், சத்துவகுணம், ஸ்திரஞானங்களைப் பொருந்தியிருத்தலினானும், சாக்கிரத்திற்றானே தசமனுக்குண்டாகிய சப்தாவத்தைகள்போல ஜீவனுக்குண்டாகிய சப்தாவத்தைகள், அஞ்ஞானசத்தபூமிகள், ஞானசத்த பூமிகளின் அனுபவங்களும் அனுபவஸ்மரணைகளுமாகிய விசேடஞானங்கள் தோன்றுகின்றமையினானும் தான குண ஞானவிசேடம்பற்றிச் சாக்கிரத்தை முன்னரும், கண்டத்தானம் இராஜதகுணம் அஸ்திரஞானமுடையதாகிய சொப்பனத்தை மத்தியினும், இருதயத்தானம் தாமதகுணம் மூலாஞ்ஞானமுடையதாகிய சுழுத்தியைக் கடையினும் வைத்துக் கூறியதென அறிக.

வினா :—தசமனென்பவன் யாவன் அவனுக்குண்டாகிய சப்தாவத்தைகளெவையெனின். (69)

விடை :—கங்காநதிதீரத்தில் சாதன சம்பன்னர்களான
கட
அ பலசீடர்களோடுவசிக்கும் பிரஹ்மநிஷ்டர்களாகிய யதீசுரர்க



ட்கு அரசர்முதலாயினோர் பலபொருள்களைப்பாதகாணிக்கை
வைத்து உபசரிப்பதைப் பார்த்து நாமும் யதீசுரர்கள் வேடந்
தரித்துப் பலசீடர்களோடு கூடியிருக்கில் நமக்கும் அரசர்
முதலாயினோர் பாதகாணிக்கைவைத்து உபசரிப்பர்களெனக்
கருதி யதிசுரவேடந் தரித்துச் சில முழுமூட சிகாமணிகளைச்
சீடர்களாகச் சேர்த்துக்கொண்டிருந்த அவிவேகபூரண அனு
சாரியன் தன்சீடர்களை நோக்கி அரசர் முதலாயினோர்க்கு
நாமிருப்பது தெரியின் வெகு திரவியங்களைக்கொண்டுவந்து
நமக்குப் பாதகாணிக்கையாகவைப்பர்கள் அவைகளைக் கட்டி
வைப்பதற்குப் பலபைகள் தைத்து வைத்துக்கொள்ள வேண்
டியிருத்தலால் நகரத்துட்சென்று வர்த்தகர்களிடத்தில் நமது
பெருமையைக் கூறி ஓர்ஊசியும் இரண்டுபலம்நூலும் மூன்
றுமுழ வத்திரமும் வாங்கிவரத்தக்க புத்திமானாகிய சீடன்
யாரெனவினவ, அவ்வுரைகேட்ட சீடர்கள் பதின்மர்களில்
நானே புத்திமான் நானே புத்திமானென ஒவ்வொருவரும்
தன்தன்மார்பைத்தட்டிக் காட்டிச் சொல்லிக்கொண்டு முன்
பாக வந்துநின்றனர். அங்ஙனம் வந்துநின்ற முழுமூட சிகா
மணிகளாகிய சீடரை அவிவேகபூரண அனுசாரியர் பார்த்து
நீங்கள் பதின்மர்களுஞ்சென்று வாங்கிக்கொண்டு வந்துசேரு
ங்களெனக் கட்டளையிட்டனர். அக்கட்டளையின்படி பதின் ாக
மர்களும் நகரத்துட்சென்று ஓர் வர்த்தகனிடத்தில் ஆசாரியர் யில்

பெருமையையும் தங்கள் பெருமையையும் கூறி ஒரூசியும் இரண்டுபல நூலும் மூன்றுமுழ வத்திரமும் யாசிக்க, வர்த்தகன் இவர்கள் யாசிப்பது அற்பமாகத்தானேயிருக்கிறதெனக் கருதி யாசித்தபடி கொடுக்க அவைகளைப் பதின்மர்களும் நானே கொண்டுபோவேன் நானேகொண்டுபோவேனென்று ஒருவர் கையிலிருப்பதை ஒருவர்பறித்துச் சண்டையிட்டுக் கொள்வதை வர்த்தகன்பார்த்து நகைத்து, ஐயா! நீங்கள் சண்டையிட்டுக் கொள்ளவேண்டாம். ஊசியையும் வத்திரத்தையும் நூலினால் நீண்ட மூங்கிலில்வைத்துக் கட்டித்தருகிறேன் பதின்மர்களுந் தூக்கிக்கொண்டு போகலாமெனக் கேட்டு வாங்கிக் கட்டிக்கொடுத்தான். அதனைப்பார்த்துப் பதின்மர்களும் சந்தோஷித்துச் சிநேகமுடையராகித் தோளிற்றூக்கிக்கொண்டு செல்லும்போது மார்க்கத்திலிருந்த சிறு நதியிற் சலம் வரக்கண்டு கலக்கத்தோடு சலத்திலிறங்கி நதியைக் கடந்து கரையேறினர். கரையேறிய பதின்மர்களில் நம்மோடு வந்த யாவருங் கரையேறினர்களா இல்லையா எண்ணிப்பார்க்கவேண்டுமென முயற்சித்தவனே தசமனாகும். அவன் தன்னைவிடுத்து மற்றையர்களைவரிசையாக நிறுத்திக் கையை நீட்டி ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழு எட்டு ஒன்பது எனஎண்ணி ஒன்பதுபேர்களையு மெண்ணி



னம். பத்தாமவனில்லை யிருந்தால் எண்ணியதிலிரானாவெனலே ஆவரணம். பத்தாமவன் ஆற்றோடே போய்விட்டானெனக் கலக்கமுற்றழுதலே விக்ஷேபம். அழுவதைப் பார்த்துக்கொண்டு மார்க்கத்தில் வந்த ஆப்தன் பத்தாமவனிருக்கிறானென்ற வார்த்தையை நம்புதலே பரோக்ஷஞானம். ஆப்தன் ஒன்பதுபேர்களையும் கைநீட்டியெண்ணிய நீயே பத்தாமவனென்றறிவிக்க அறிந்ததே அபரோக்ஷஞானம். பத்தாமவன் ஆற்றோடே போய்விட்டானென்றழுத அழுகை நீங்கியதே துக்கநிவர்த்தி. பத்தாமவனே தானெனக் கண்ட சந்தோஷமே தடையற்ற ஆனந்தம் ஆகிய இவைகளே தசமனிடத்திற் கண்ட சத்தாவத்தைகளென அறிக.

வினா :-தசமனிடத்திற் காணப்படுவதுபோலச் சீவனிடத்திற் காணப்படும் சப்தாவத்தைகளெவை யெனின். (70)

விடை :—சிதாபாசன் சுருதிவிசாரத்துக்குப் பூர்வம் அனாதி சம்சாரத்தி லழுந்திப் பிரஹ்மமாகிய பிரத்தியகாத்மாவை ஸ்மரியாதிருந்த அறியாமையே அஞ்ஞானம். பிரஹ்மத்தைப்பற்றிய பிரசங்கம் நேர்ந்தபோது பிரஹ்மமில்லை. இருக்கிற் பானமாகாதாவெனலே அசத்வாபாதகம் அபானபாதகமென்னும் ஆவரணம். நான்மனுஷ்யன் நான்கருத்தருத்துவாதிகளையுடைய சீவனெனத் தன்னைக் காண்டலேவிக்ஷே

தம் பிரஹ்மமென்னும் அவாந்தரவாக்கியத்தால் பிரஹ்மம் உண்டென்றறிகுதலே அசத்தாவரண நிவர்த்தகமான பரோக்ஷஞானம். நீயே பிரஹ்மமென்னும் மகாவாக்கியத்தால் தானே பிரஹ்மமென் றறிகுதலே அபானாவரண நிவர்த்தகமான அபரோக்ஷஞானம். தான் கருத்தா போக்தா அல்லவென்று போனதே துக்கநிவர்த்தி. செய்யத்தக்கவை யனைத்துஞ்செய்து அடையத்தக்கவை யனைத்தும் அடைந்தனமென்னுஞ் சந்தோஷமே தடையற்ற ஆனந்தம். ஆகிய இவைகளென அறிக.

வினா :—அஞ்ஞானசத்த பூமிகளெவையெனின். (71)

விடை :—பீஜசாக்கிரம் ஜாக்கிரம் மகாசாக்கிரம் சாக்கிர சொப்பனம் சொப்பனம் சொப்பனசாக்கிரம் சுழுத்தி ஆகிய இவைகளாம். இவைகளில் மாயா † சபள சைதன்னியத்தினின்றும் எழாநின்ற சிதாபாசத்தோடுகூடிய அறிவுமாத்திரமாயிருப்பது பீஜசாக்கிரமாம். அவ்வறிவின்கண் பூர்வமில்லாத அகந்தை மமதைகள் அங்குரம்போல் சூட்சுமமாக எழாநிற்பது சாக்கிரமாம். சனனங்கடோறும் அகந்தை மமதைகள் வளர்ந்து வளர்ந்து திடமாகத்தோன்றாநிற்பது மகாசாக்கிரமாம். அந்தக்கரணத்தால் சாக்கிரத்தில் முன்தான் அறிந்

† சபளம்:=கூடியது.





ததாயினும் அறியாததாயினும் அதன்மயமாய் மனோரசியஞ்செய்குதல் சாக்கிரசொப்பனமாம். நித்திரையில் அற்பகாலத்துள் அனேககால வியாபாரரூபமான மனோராச்சியஞ் செய்வது சொப்பனமாம். பூர்வஞ் சொப்பனங்கண்டு மறந்ததைத் திடமாக வெகுகாலபரியந்தம் நினைப்பது சொப்பனசாக்கிரமாம் என அறிக. ஞானசப்தபூமிகளினியல்பைப் பின்னுள்ள ஜீவன்முத்திநிரூபகத்தி லெழுதியிருக்கிறது. ஆண்டுக் கண்டுகொள்க.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திகசீவனென்றுஞ் சொல்லப்படுவன். இப்படிச்சீவனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவத்தைகளுஞ் சொல்லப்பட்டன. | வெளி. |

வினா :—சுழுத்தியில் சிதாபாசனுக்குப் பிராஞ்ஞனெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (72)

விடை :—பிரஞ்ஞாரூப சேதனங்களிற் பிரதானனும் பிரஞ்ஞானகனமாகிய அஞ்ஞானத்தை ஆசிரயமாகக்கொண்டிருப்பவனுமிருத்தலினென அறிக.

வினா :—அஞ்ஞானத்தைப் பிரஞ்ஞானகனமென்றது யாதினாலெனின். (73)

விடை :-அனந்தமழைத் துளிகளொரு தடாகசலத்தை யடைந்து ஒரேரூபமாக இருப்பதுபோல சாக்கிரசொப்பனங்களில் ஸ்திர அஸ்திரமாக இராநின்ற ஞானாகாரமான அந்தக் கரணவிருத்திகளனைத்தும் சுழுத்தியில் அஞ்ஞானத்திற் சேர்ந்து அஞ்ஞானரூபமாகவே யிருத்தலினென அறிக.

வினா :—சுழுத்தியவத்தையனாகிய சீவனுக்குப் பாரமார்த்திக சீவனெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (74)

விடை :—மூன்றவத்தையினு மிருப்பவனாதலினாலும் விசுவன் தைசதனைக்குறித்து எதார்த்தனானமையினாலு மெனஅறிக. (பமஞ்சு)

(நூல் உச)

பிரஹ்மசைதன்னியமும் சாக்கிரத்துக்குச் சாட்சியாயிருக்கும்போது சீவாத்மாவெனவும், சொப்பனத்துக்குச் சாட்சியாயிருக்கும்போது அந்தராத்மாவெனவும், சுழுத்திக்குச் சாட்சியாயிருக்கும்போது பரமாத்மாவெனவும் அவத்தாத்திரய சாட்சியாயிருக்கும்போது ஞானாத்மாவெனவும் கூடத்தரெனவுஞ் சொல்லப்படும்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பிரஹ்மசைதன்னியமும் சாக்கிரத்துக்குச் சாட்சியாயிருக்கும்போது சீவாத்மாவெனவும். | |



வினா :--சாக்கிரசாட்சியாகிய பிரஹ்மத்துக்குச் சீவாத்மாவெனப் பெயர் வந்தது யாதினாலெனின். (75)

விடை :- அயத்திற்கலந்து வியாபித்திராநின்ற அக்கினி அயத்தின் அகலநீள கனமாதிகளையும் அடித்தல் உருக்குதலாலுண்டாகிய விகாரங்களையும் விளக்கிவைத்துக்கொண்டு தான் அவ்விகாரங்களை யடையாமலிருப்பதுபோலச் சாக்கிராவத்தையிற் கலந்து வியாபித்திராநின்ற பிரஹ்மமும் விசுவனாகிய சீவன் விஷயபோகங்களைச் சகல கரணசாமக்கிரியையால் அனுபவிப்பதையும் அவ்வனுபவகாரியமாகிய சுகதுக்கங்களாலடையும் விகாரங்களையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டு தானொரு விகாரத்தையும் பொருந்தாமல் எப்போதும் நாசமின்றிய சீவிதப்பொருளா யிருத்தலினென அறிக.

| (பதம) | (பொருள்) |
|---|---|
| சொப்பனத்துக்குச் சாக்ஷியாயிருக்கும்போது அந்தராத்மாவெனவும். | வெ |

வினா:-சொப்பனசாக்ஷியாகிய பிரஹ்மசைதன்னியத்துக்கு அந்தராத்மாவெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (76)

விடை :—அந்தரமென்பது தனிமை. கமலபத்திரோதகமும் செம்புப்பத்திரோதகமும் அப்பத்திரங்களைச் சேர்ந்திருந்தும் சேராமற்றனிமையாகவே யிருப்பதுபோலப் பிரஹ்ம

அதிற் சம்பந்தமின்றித் தைசதனுகிய சீவன் சாக்கிரவாசனு பூர்வகமாக வுதயமாகின்ற போகங்களை மனமெனுங் கரணத் தாலனுபவிப்பதையும் அவ்வனுபவகாரிய சுகதுக்கங்களால டையும் விகாரங்களையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண் டிருத்தலினென அறிக. அல்லது அந்தர் என்பது உள். பாஹ்யமாகிய சாக்கிரவிவகாரங்களைக்குறித்து உள்ளாகிய சொப்பன விவகாரங்களுக்குச் சாக்ஷிமாத்திரமாக இருத்தலி னெனினும், அல்லது அந்தரமென்பது மத்தி, சுழுத்திசாக்கிர மாகிய இரண்டவத்தைக்கு மத்தியாவத்தையாகிய சொப் பனுவத்தைக்குச் சாக்ஷிமாத்திரமாக இருத்தலினெனினும் அமையுமென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சுழுத்திக்குச் சாக்ஷியாயிருக்கும்போது பரமாத் மாவெனவும். | வெளி. |

வினு:-சுழுத்திக்குச் சாக்ஷியாகிய பிரஹ்மசைதன்னியத் துக்குப் பரமாத்மாவெனப் பெயர்வந்தது யாதினுலெனின் 77

விடை:-வெளியிற் சஞ்சரிக்குங் குஞ்சுகளைத் தன் பக்ஷ ங்களிலடக்கிக்கொண்டு நித்திரைசெய்யும் வாரணப்பக்ஷியை ப்போல, சாக்கிர சொப்பனங்களில் விரிந்துள்ள காரியப்பிர அ பஞ்சங்களைச்சுழுத்தியிற்றன்னிலடக்கிக்கொண்டுசாக்கிரவாச



னுசமஸ்காரசகிதமாக இராநின்ற மூலாஞ்ஞானமாகிய அவி த்தையையும்பிரஞ்ஞானகனனுகிய சீவன் அவித்தையில்மூழ்கி விடயமின்மை, குடும்பநிவர்த்தி காரணமாக ஒன்றுமறியா மல் சுகத்துறங்குவதையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொ ண்டு அவித்தையிலடங்காமல் சகலத்துக்கு மேலாய்ப் பிரகா சித்துக்கொண்டிருத்தலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அவத்தாத்திரய சாக்ஷியாயிருக்கும்போது ஞானு த்மா கூடத்தரெனவுஞ் சொல்லப்படும். | வெளி. |

வினு:—அவத்தாத்திரயசாக்ஷியாகிய பிரஹ்மத்துக்கு ஞானுத்மாவெனப் பெயர் வந்தது யாதினுலெனின். (78)

விடை:—அவத்தாத்திரயங்களையும், அவத்தாத்திரய வியாபாரங்களையும், அவத்தாத்திரயவாசிகளான விசுவனுதிய சீவர்களையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டு நானென் னும் அபிமானத்துக்கிடமாயுள்ள புத்திரதாராதிகளை என் புத்திரதாராதிகளெனவும், நான் பருத்தே னிளைத்தேனெ னத் தானுகத்தோன்றுகின்ற தூலசரீரம் என் சரீரமெனவும், நான் கண்டேன் கேட்டேன் சிந்தித்தேனெனத் தானுகத் தோன்றுகின்ற சூட்சுமசரீரம் என் கண், என் காது, என் சித்தமெனவும், நானறியேன் அறிவேனெனத் தானுகத்தோ ன்றுகின்ற அவித்தையுஞ் சீவனும், என்னஞ்ஞானம், என் து ண த்தொக் ர் வாயில்

சீவனெனவும் வேறுபட்டுத் திருசியமாகக் காணப்படுவன
போலப்பிரஹ்மம் ஒரு காலத்திலேனும் வேறுபட்டுத் திருசிய
மாகக் காணப்படாமல் எப்போதுந் தானாகிய அறிவாகவே
விளங்குகின்றமையினென அறிக.

வினா :—அவத்தாத்திரய சாக்ஷியாகிய பிரஹ்மசைத
ன்னியத்துக்குக் கூடத்தரெனப் பெயர் வந்தது யாதினா
லெனின். (79)

விடை :—கூடமென்பது சம்மட்டியடைகல். சம்மட்
டியடைகல்லைப்பற்றி அயமாதிகள் ஈட்டி, பாலா, கத்தியாதி
யவிகாரங்களை யடையினும், சம்மட்டியடைகல் ஒரு விகார
த்தையு மடையாதிருப்பதுபோலப் பிரஹ்மத்தைப் பற்றிக்
கொண்டு அவத்தாத்திரயப் பிரபஞ்சங்கள் தோன்றல், திரி
தல், கெடுதலாதிய விகாரங்களையடையினும் பிரஹ்மம் ஒரு
விகாரத்தையுமடையாமல் அவைகளையறிந்துகொண்டு நிரு
விகாரமாயிருத்தலால் கூடத்தர். அல்லது கூடமென்பது
அறை; பஞ்சகோசமாகிய அறையில் சாக்ஷிமாத்திரமாக
விளங்குகின்றமையின் கூடத்தர். அல்லது, கூடமென்பது
மலையினுச்சி. மலையினுச்சியிலுள்ள தீபம்போலச் சுத்தசாங்
தகுணமாகிய மலையினுச்சியில் சாக்ஷிமாத்திர...



தன்
தலின் கூடத்தர். அல்லது கூடமென்பது இரகசியம்.
னைத்தானன்றி மற்றெந்தவத்துக்களினாலும் அறிதற்குக் கூ
டாத இரகசியப்பொருளாயிருத்தலின் கூடத்தர் எனப்பெ
யர் வந்ததென அறிக.

வினா :—இந்த விசாரத்துக்குப் பலம் யாதெனின். (80)

விடை:-சரீரத்திரய அவத்தாத்திரய அபிமானித்திரயங்
கள் தானல்லவென்றும், சாக்ஷிசைதன்னியமே தானென்
றும் அறிவதென அறிக.

(நூல் உரு)

ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவத்தைகளுஞ்
சொல்லப்படுகின்றன. கற்பிதப்பிரபஞ்சவடிவமாகத் தோற்று
கின்ற தூலபஞ்சபூதங்களும், அவற்றிற்றோன்றிய மூன்றுசாதி
களாயிருக்கின்ற தூலசரீரசமட்டியுங்கூடி ஈசுரதூலசரீர
மென்றும், விராட்டென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே
கூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், வைசு
வானரனென்றும், இந்த இருவகைக்குமதிட்டான சைதன்னி
யம் பிரஹ்மனென்றுஞ் சொல்லப்படும். சூக்குமபூதங்களுந்
தும் அவற்றிற்றோன்றிய சூக்குமசரீரசமட்டியுங்கூடி ஈசுர
சூக்குமசரீரமென்றும் இரணியகருப்பமென்றுஞ் சொல்லப்
...கூடிச் சொப்பனவத்தையைப் பொருந்து

திட்டானசைதன்னியம் விஷ்ணுவென்றுஞ் சொல்லப்படும். இந்தத் தூல சூக்குமமாகிய இரண்டின் வாசனையுடனேகூடியிருக்கின்ற மாயை ஈசுரகாரணசரீரமென்றும் அவ்வியாகிருதமென்றும் இந்த இருவகைக்குமதிட்டான சைதன்னியம் உருத்திரனென்றுஞ் சொல்லப்படும்.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவத்தைகளுஞ் சொல்லப்படுகின்றன. சற்பிதப்பிரபஞ்சவடிமாகத்தோற்றுகின்ற தூலபஞ்சபூதங்களும், அவற்றிற்றோன்றிய மூன்று சாதிகளாயிருக்கின்ற தூலசரீரசமட்டியுங்கூடி ஈசுரதூலசரீரமென்றும் விராட்டென்றுஞ் சொல்லப்படும். | வெளி. |

வினா:—ஈசுரதூல சரீரத்துக்கு விராட்டெனப் பெயர் வந்தது யாதினாலெனின். (81)

விடை:—நானுவித விசித்திர அழகைப் பொருந்திப் பெரியவடிவமாயிருத்தலினென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
| --- | --- |
| இதனுடனேகூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் வைசுவாரனென்றும், இரணியகருப்பனென்றும், இந்த இருவகைக்கும் அதிட்டானசைதன்னியம் பிரஹ்மனென்றுஞ் சொல்லப்படும். | வெளி. |



வினா:—விராட்டு சரீரத்துடன்கூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரனுக்கு வைசுவாநரனெனப் பெயர் வந்தது யாதினாலெனின். (82)

விடை:—சாக்கிரப்பிரபஞ்சமாகிய விசுவவியாபகனாய் நரர் முதலிய சகலப்பிராணிகளிடத்தினும் வசிப்பவனாதலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| சூக்குமபூதங்கள் ஐந்தும் அவற்றிற்றோன்றிய சூக்குமசரீர சமட்டியுங்கூடி ஈசுரசூக்கும சரீரமென்றும் இரணியகருப்பமென்றுஞ் சொல்லப்படும். | வெளி. |

வினா:—ஈசுரனுடைய சூக்குமசரீரத்தை இரணியகருப்பமென்றதென்னையெனின். (83)

விடை:—இரணியமென்பது பொன். பொன்னைப்போற் பிரகாசிப்பதாயும் பிரகாசத் திரவியங்களனைத்தையும் தன்னுதரத்திற் கருப்பமாக அடக்கியிருப்பதாயு மிருத்தலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| இதனுடனேகூடிச் சொப்பனாவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் சூத்திராத்மாவென்றும் இந்த இருவகைக்கும் அதிட்டான சைதன்னியம் விஷ்ணுவென்றுஞ் சொல்லப்படும். | வெளி. |

வினா:—இரணியகருப்ப சரீரத்துடன் கூடிச் சொப்ப னவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரனுக்குச் சூத்திராத்மா வெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (84)

விடை:—பலமணிகளினும் சூத்திரமாகிய ஓர் நூல் கோத்திருப்பதுபோலச் சகல சூக்குமசரீரங்களினுள்ளும் ஈசுரன் வியாபித்திருத்தலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இந்தத்தூல சூக்குமமாகிய இரண்டின் வாசனையோடு கூடியிருக்கின்ற மாயை ஈசுரகாரண சரீரமென்றும் அவ்வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும். | வெளி. |

வினா:—ஈசுரகாரண சரீரத்துக்கு அவ்வியாகிருதமெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (85)

விடை:—நாமரூப விஷயாகாரமாக வெளிப்படாதிருத்தலினென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இதனுடனேகூடிச் சுழுத்தியவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் அந்தரியாமியென்றும் இ... | |



வினா:—அவ்வியாகிருத சரீரத்துடன் கூடிச் சுழுத்தியவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரனுக்கு அந்தரியாமியெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (86)

விடை:—அந்தர் என்பது உள்; மறைவு. ஒருவன் பதுமையினுள் மறைவாயிருந்துகொண்டு அதன் அஸ்த பாதயவ்தகங்களை யசைப்பித்தல்போல சகலப் பிராணிகளிருதயபத்தினுள்ளும் மறைவாயிருந்துகொண்டு பிராணிகள் தத்தங் கன்மங்கட்குத்தக்கதான போகங்களை யனுபவிக்கும்படி யசைப்பிக்கின்றவனாதலினென அறிக.

வினா:—வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமியென்னும் ஈசுரர்கட்குப்பிரஹ்மனவிஷ்ணு உருத்திரனென்னும் ஈசுரர்களை யதிட்டானசைதன்னியங்களாக இந்நூல் கூறியது ஆக்ஷேபணைக்கிடமாமெனின். (87)

விடை:—வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமிநாம ஈசுரர்கட்கு முறையே பிரஹ்மன் விஷ்ணு உருத்திரர்களை யதிட்டானசைதன்னியமென்பதற்கு இலக்ஷணையால் பொருள்கொள்ளில் பிரஹ்மமேயாகின்றமையால் ஆக்ஷேபணைக்கிடமில்லையென அறிக.

அதிட்டான ... அந்தர்ப்பூதமென்பது ... கொள்ளக்கூடும். வாய்

விவேகசாரம் அத்தியாரோபப் பிரகரணத்தில் விராட்டிற் பிரஹ்மனும்இரணியகருப்பத்தில்விஷ்ணுவும்அவ்வியாகிருதத்தில் உருத்திரனும் அந்தர்ப்பூதமெனக் கூறியிருத்தலினெனின். (88)

விடை:—இந்நூல் சரீரத்தையும் சரீரத்தோடு கூடிய ஈசுரனையுஞ்சுட்டி இந்த இருவகைக்கும் அதிட்டானமெனக் கூறியிருத்தலால் பிறழ்ந்ததெனல் பொருந்தாது.இஃதன்றிப் பந்த ஏதுவாகிய தூலசூக்கும வாசனைகளோடுகூடிய அவ்வியாகிருத சரீரத்தில் அனுதிமுக்த சருவஞ்ஞனுகிய ஈசுரன் அந்தர்ப்பூகமென்பது இருளில் ஒளி அந்தர்ப்பூதமென்பது போலும், பஞ்சபூதங்களையும் அவைகளின் காரியங்களாகிய சரீரங்களையுஞ் சிருட்டித்துக் காப்பவர்களாகிய பிரஹ்மவிஷ்ணுக்களில் பிரஹ்மனை விராட்டிலும் விஷ்ணுவை இரணியகருப்பத்திலும் அந்தர்ப்பூசமென்பது கடத்தைச் சிருட்டித்துக்காக்கின்ற குலாலனைக் கடத்திலந்தர்ப்பூத மென்பது போலும் விரோதமாமென அறிக.

நூல் உகூ)

சீவன் தன் மூன்றவத்தைகளினும் மூன்று சரீரங்களாயிருக்கின்ற (உஎ) தத்துவங்களுடனும் நானென்று கலந்து நிற்பதுபோல ஈசுரனும் தன் மூன்றவத்தைகளினும் மூன்று சரீரங்களாயிருக்கின்ற (௩உ) தத்துவங்களுடனுங் கலந்து நிற்பன். சீவன் தன் சரீரமாத்திரமே கலந்து நிற்பன்.



| (பதம்) | (பொருள்) |
| --- | --- |
| ஈசுரன் தன் சரீரமாகிய சகல சரீரங்களோடும் சகல பிரபஞ்சங்களோடுங் கலந்து நிற்பன். இந்த இருவகைக்குஞ்சாக்ஷியாயிருக்கின்ற பிரஹ்மசைதன்னியமும் சகல சரீரங்களினும் சகல பிரபஞ்சங்களினும் நிறைந்து அப்பாலும் பத்துத்திக்கையும் அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும் | வெளி. |

வினு:—சீவன் ஒரு சரீரத்தையும், ஈசுரன் சகல சரீரங்களையும் கலந்து வியாபித்திருப்பதும், பிரஹ்ம சைதன்னியம் சகல சரீரங்களினும் சகல பிரபஞ்சங்களினும் நிறைந்து அப்பாலும் அதிக்கிரமித்து எல்லையற்றிருப்பதும் யாதினுலெனின். (89)

விடை:—சீவன் ஒரு சரீரத்தை மாத்திரம் கலந்திருப்பது பரிச்சின்னனுனமையின், ஈசுரன் சகல சரீரங்களையும் சகல பிரபஞ்சங்களையுங் கலந்திருப்பது சீவனையபேக்ஷித்து வியாபகனுனமையின், பிரஹ்ம சைதன்னியம் சகல சரீரங்களினுஞ் சகல பிரபஞ்சங்களினும் நிறைந்து அப்பாலும் அதிக்கிரமித்து எல்லையற்றிருப்பது நிரபேக்ஷிக பூர்ணவியாபகமானமையினென அறிக.

வினு:—அங்ஙனமாயின் சீவனில் ஈசுரனும், சீவேசுரரிருவரினும் பிரஹ்ம சைதன்னியமுங் கலந்திருக்கவேண்டும் அஃதெப்படிக்கூடுமெனின். (90)

வாயில

விடை:—தயிரில் வெண்ணெயும், தயிரிலும் வெண்ணெயிலும் நெய் அல்லது ஆகாயமுங் கலந்திருப்பதுபோல, சீவனில் ஈசுரனும், சீவேசுரர்களிருவர்களினும் பிரஹ்ம சைதன்னியமுங் கலந்திருக்கக்கூடுமென அறிக.

வினா:—சீவனில் ஈசுரன் கலந்திருக்கில் சீவனைப்போல ஈசுரனும் வெளியாகத் தோன்றவேண்டும். அங்ஙனந்தோன்றாமையால் சீவனில் ஈசுரனுண்டென் றெங்ஙனமறிகிறதெனின்.

(91)

விடை:-ஈசுரன் பரோக்ஷமானமையால் சீவனைப்போல வெளியாகத் தோன்றவில்லை. ஆயினும், ஈசுரன் சகல சீவர்களின் புத்திகளுள்ளுமிருந்து வாசனைப்படியாட்டுவிக்கிறதை அனுமானத்தாலும் ஈசுரன் சருவஞ்ஞன் அந்தரியாமியென்னும் வேதவசனத்தாலும் சீவனில் ஈசுரனுண்டென்றறியலாமென அறிக.

வினா:-சீவனில் ஈசுரன் கலந்திருக்கில் சீவனுக்குள்ள கிஞ்சிஞ்ஞத்துவம் ஈசுரனுக்கும், சீவனிலும் ஈசுரனிலும் பிரஹ்மசைதன்னியம் கலந்திருக்கில் சீவேசுரர்களுக்குள்ள கிஞ்சிஞ்ஞத்துவம சர்வஞ்ஞத்துவம் பிரஹ்ம சைதன்னியத்துக்கும் உண்டாகுமேயெனின்

(92)



விடை:-தயிரில் வெண்ணெ கலந்திருக்கினுந் தயிரின் புளிப்புத்தன்மை திரவத்தன்மை வெண்ணெய்க்கும், தயிரினும் வெண்ணெயினும் நெய் அல்லது ஆகாயங்கலந்திருக்கினும் தயிரின் புளிப்புத்தன்மையும் திரவத்தன்மையும் வெண்ணெயின் மதுரத்தன்மையும் கடினத்தன்மையும் நெய் அல்லது ஆகாயத்துக்கும் உண்டாகாததுபோல சீவேசுரர்களின் கிஞ்சிஞ்ஞத்தன்மை சர்வஞ்ஞத்தன்மை பிரஹ்மத்துக்கும் உண்டாகாதென அறிக. இதனைத் தெளிவாக அறிய விரும்பில் பிரஹ்மோபநிடதத்திற் காண்க.

(நூல் ௨௭)

சீவன்றன் தூலசரீர விவகாரத்திற்குக் கூடுந்தத்துவங்கள் தூலசரீர தத்துவங்கள்(௬), சூட்சுமசரீர தத்துவங்கள்(௨௰), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம்(௫)ஆக தத்துவங்கள்(௩௧). சூட்சுமசரீர விவகாரத்திற்குக் கூடுந்தத்துவங்கள் சூட்சுமசரீர தத்துவங்கள் (௨௰)சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம்(௫)ஆக தத்துவங்கள்(௨௫). காரணசரீர விவகாரத்திற்குக் கூடுந்தத்துவங்கள் சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம்(௫). சீவவிவகாரத்திற்குக் கூடுந்தத்துவங்கள் சீவன் ஈசுரன் பிரஹ்மம்(௩). சாக்ஷிவிவகாரத்துக்குள்ள தத்துவம் சாக்ஷி (௧).

த்தெ
வாயில

| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| ஜீவன்றன் தூலசரீர | ஜீவனானவன் தன்னுடைய சாக்கிராவத்தையிற்றூலசரீரத்தைப் பொருந்தி |
| விவகாரத்திற் கூடுந்தத்துவங்கள் | விவகரிக்கும் விவகாரத்தில் துணையாகச் சேருந்தத்துவங்கள். |

| (பதம.) | (பொருள்.) |
| --- | --- |
| தூலசரீரதத்துவம்(சு)சூட்சுமசரீரதத்துவம் (உய) சீவன்ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மப(ரு) ஆக தத்துவங்கள் (ஙக) | வெளி. |

வினா:—சீவனுடைய தூலசரீர விவகாரங்களெவை. அவைகளில் (ஙக) தத்துவங்களுஞ் சேர்ந்துள்ளனவோ வெனின். (93

விடை:-சாக்கிராவத்தையிற் கன்மேந்திரியங்கள் தொழிற்படும் விவகாரங்கள் தூலசரீர விவகாரங்களாகும். சிதாபாசன் சாக்கிராவத்தையில் வசன தான கமன விசர்க்க ஆனந்த ஸ்நான பான போஜன ஆலிங்கன வாணிப யுத்தமுதலிய விவகாரங்களைச்செய்தற்குக் கன்மேந்திரியங்கள்(ரு).கன்மேந்திரியங்கட்குச் சாதகமாக ஞானேந்திரியங்கள்(ரு). இத்தசேந்திரியங்களுமிருத்தற்குத்தானமாகத்தூலசரீரதத்துவங்கள்(சு)



தூலசரீரத்தைத் தாங்கற்கும் இந்திரியங்களைத் தொழிற்படுத்தற்கும் வியானாதிவாயுக்கள்(ரு).இவைகள் தொழிற்படுதற்குக் காரணமாக விஷயங்களிற் பிரியாப்பிரியங்களை யுறுதற்கு அந்தக்கரணதத்துவங்கள் (ரு). அந்தக்கரணம் சடமானமை பற்றி விஷயங்களைச் சுட்டியறிதற்குச் சேதனமாகிய சீவன் (க)சீவன் தனியே யிரானாதலின் அவனுக்காசிரியமாகிய அவித்தை (க). சீவன் அசுதந்தரனானமையால் சீவனைப் பிரேரித்தற்கு ஈசுரன் (க). ஈசுரன் தனியே யிரானானமையால் ஈசுரனுக்காசிரயமாகிய மாயை (க). இவைகளனைத்திற்கும் அதிட்டானமாகிய பிரஹ்மம் (க). ஆகிய (ஙக)தத்துவங்களுஞ் சேர்ந்துள்ளனவென அறிக.

வினா:—அற்றேல் சபையில்நின்று கணிகையர் நடனஞ் செய்யும் விவகாரம் எந்தவிவகாரம், அதிற்கூடியுள்ள தத்துவங்களெத்தனை யெனின். (94)

விடை:—நடனஞ்செய்வதில் கன்மேந்திரியங்களினிகழ்ச்சி காணப்படுகின்றமையால் அது தூலசரீர விவகாரமாகும். கணிகையானவள் சபையிற்சென்று நிற்றற்கும் நட்டுவர் கொட்டுந்தாளப்படி நடித்தற்கும் பாதேந்திரியம் (க). பாதேந்திரியத்துக்குப் பூப்பரிசந் தோன்றாதாயின் தாளத்துக்கிணங்க நடித்தற்குக் கூடாது. ஆதலின் பூப்பரிசமறிதற்குத்தொக்கிந்திரியம் (க). தாளவொலியையும் நட்டுவராதியோர் வாயில்

னின்றுண்டாகும் சதி கீத மாதிகளையுங் கேட்டற்குச் சுரோத்
திரேந்திரியம் (க). தானும் இராகாதிகீதங்களைப் பாடுதற்கு
வாக்கிந்திரியம் (க) கீதப்பொருடோன்ற அபிநயஞ் செய்தற்
குப் பாணியிந்திரியம் (க). சபையிலுள்ள பிரபுக்களைப் பார்த்
தற்கும் தன் முககமலத்தில் சிங்காரமாதிய நவரசங்களைத்
தெரிவித்தற்கும் சக்ஷுவிந்திரியம் (க). இவ்வாறிந்திரியங்களு
மிருத்தற்கு இடமாகத் தூலசரீரதத்துவங்கள் (கூ). தூலசரீரம்
பிரேதம்போல வீழ்ந்துவிடாமல் நிற்றற்கும் இருந்து எழும்பிக்
குதித்து நெளிந்து நிமிர்தற்கும் இந்திரியங்களைத் தந்தந் தொ
ழில்களிற் செலுத்தற்கும் தாங்குதலாதி தொழில்களையுடைய
வியானாதிவாயுக்கள் (ரு). பிரயோசனத்தை யுத்தேசியாமல்
எந்தப்பிரவிருத்தியு முண்டாகாதாதலின் நடனப்பிரவிருத்திக்
கான பிரயோசன விருப்பமுறுதற்கும் வாயுக்களையும் இந்திரி
யங்களையும் ஆட்டி அடக்கற்கும் அந்தக்கரணம் (ரு) இவை
கள் சடமானமையால் சேதன சம்பந்தமின்றித் தாமே சேட்
டித்தற்கும் மற்றொன்றைச் சேட்டிப்பித்தற்கும் விஷயங்க
ளைச் சுட்டியறிதற்கும் கூடாவாம். ஆதலின் சேட்டித்தல்
சேட்டிப்பித்தல் சபையைச்சுட்டியறிதல் முதலியவைகட்கு
ஏதுவாகச் சேதனமான சீவன் (க). சீவன் ஆபாசனானமை
யால் தனியேபிரான். ஆதலின் சீவனுக்காசிரயமாகிய அவி
த்தை (க). சீவன் அசுதந்தரனானமையால் சீவனைப் பிரியாப்
பிரியவிஷயங்களிற் பிரவிர்த்திப்பதற்கு ஈசுரன் (க). ஈசுரனும்



ஆபாசனானமையால் தனியேயிரான். ஆதலின் ஈசுரனுக்காசி
ரயமாகிய மாயை (க). இரச்சுசர்ப்பம் இரச்சுவாகிய தன்
அதிட்டானத்தையன்றித் திதிபெறாததுபோல இத்தத்துவங்
களனைத்தும் தமக்கதிட்டானமாகிய பிரஹ்மத்தையன்றித்
திதிபெறாதனவாக இருத்தலால் இவைகட் கதிட்டானமா
யுள்ள பிரஹ்மம் (க). ஆக தத்துவங்கள் (உஎ) என அறிக.
இதுபோல மற்றவிவகாரங்கட்கும் யூகிக்க.

வினா:—தூலசரீர விவகாரத்தில் (ரூக) தத்துவங்களுஞ்
சேர்வனவா மென்றபடி தூலசரீர விவகாரமாகிய நடன விவ
காரத்திற்சேராமல் (உஎ) தத்துவங்கள்மாத்திரஞ் சேர்ந்து
ஞானேந்திரியங்களாகிய சிங்குவையும் ஆக்கிராணமும் கன்
மேந்திரியங்களாகிய பாயுருவும் உபத்தமுஞ் சேராமற் குறை
வுற்றதென்னை யெனின். (95)

விடை:—(ரூக) தத்துவங்களிற் றசேந்திரியங்கள் நீங்க
லாக மற்ற (உக) தத்துவங்களுந் தூலசரீர விவகாரங்களனைத்
தினுஞ் சேர்வனவாகும். தசேந்திரியங்களிற் சில இந்திரியங்
கள் தூலசரீரவிவகாரங்களிற் சிலவற்றிற் சேர்வனவல்லனவா
யினும் சிலவற்றிற் சேர்வனவேயாகும். ஆதலால் சிங்குவை,
ஆக்கிராணம், பாயுரு, உபத்தமாகிய நான்கிந்திரியங்களும்
நடித்தலாகிய தூலசரீர விவகாரத்திற் சேர்வனவல்லனவா
யிருக்கினும் போசனமலவிசர்ச்சனமாதிய சில தூலசரீர விவ

நின்றுண்டாகும் சதி கீத மாதிகளையுங் கேட்டற்குச் சுரோத்திரேந்திரியம் (க). தானும் இராகாதிகீதங்களைப் பாடுதற்கு வாக்கிந்திரியம் (க) கீதப்பொருடோன்ற அபிநயஞ் செய்தற்குப் பாணியிந்திரியம் (க). சபையிலுள்ள பிரபுக்களைப் பார்த்தற்குந் தன் முககமலத்தில் சிங்காரமாதிய நவரசங்களைத் தெரிவித்தற்கும் சக்ஷுரிந்திரியம் (க). இவ்வாறிந்திரியங்களிருத்தற்கு இடமாகத் தூலசரீரதத்துவங்கள் (சு). தூலசரீரம் பிரேதம்போல வீழ்ந்துவிடாமல் நிற்றற்கும் இருந்து எழுப்பிக் குதித்து நெளிந்து நிமிர்தற்கும் இந்திரியங்களைத் தந்தந் தொழில்களிற் செலுத்தற்கும் தாங்குதலாதி தொழில்களையுடைய வியானாதிவாயுக்கள் (ரு). பிரயோசனத்தை யுத்தேசியாமல் எந்தப்பிரவிருத்தியு முண்டாகாதாதலின் நடனப்பிரவிருத்திக்கான பிரயோசன விருப்பமுறுதற்கும் வாயுக்களையும் இந்திரியங்களையும் ஆட்டி அடக்கற்கும் அந்தக்கரணம் (ரு) இவைகள் சடமானமையால் சேதன சம்பந்தமின்றித் தாமே சேட்டித்தற்கும் மற்றொன்றைச் சேட்டிப்பித்தற்கும் விஷயங்களைச் சுட்டியறிதற்கும் கூடாவாம். ஆதலின் சேட்டித்தல் சேட்டிப்பித்தல் சபையைச்சுட்டியறிதல் முதலியவைகட்கு ஏதுவாகச் சேதனமான சீவன் (க). சீவன் ஆபாசனானமையால் தனியேயிரான். ஆதலின் சீவனுக்காசிரயமாகிய அவித்தை (க). சீவன் அசுதந்தரனானமையால் சீவனைப் பிரியாப் பிரியவிஷயங்களிற் பிரவிர்த்திப்பதற்கு ஈசுரன் (க). ஈசுரனும்



ஆபாசனானமையால் தனியேயிரான். ஆதலின் ஈசுரனுக்காசிரயமாகிய மாயை (க). இரச்சுசர்ப்பம் இரச்சுவாகிய தன் அதிட்டானத்தையன்றித் திதிபெறாததுபோல இத்தத்துவங்களனைத்தும் தமக்கதிட்டானமாகிய பிரஹ்மத்தையன்றித் திதிபெறாதனவாக இருத்தலால் இவைகட் கதிட்டானமாயுள்ள பிரஹ்மம் (க). ஆக தத்துவங்கள் (உஎ) என அறிக. இதுபோல மற்றவிவகாரங்கட்கும் யூகிக்க.

வினா:—தூலசரீர விவகாரத்தில் (௩க) தத்துவங்களுஞ் சேர்வனவா மென்றபடி தூலசரீர விவகாரமாகிய நடன விவகாரத்திற்சேராமல் (உஎ) தத்துவங்கள்மாத்திரஞ் சேர்ந்து ஞானேந்திரியங்களாகிய சிங்ஙுவையும் ஆக்கிராணமும் கன்மேந்திரியங்களாகிய பாயுருவும் உபத்தமுஞ் சேராமற் குறைவுற்றதென்னையெனின். (95)

விடை:—(௩க) தத்துவங்களிற் றசேந்திரியங்கள் நீங்கலாக மற்ற (உக) தத்துவங்களுந் தூலசரீர விவகாரங்களனைத்திலுஞ் சேர்வனவாகும். தசேந்திரியங்களிற் சில இந்திரியங்கள் தூலசரீரவிவகாரங்களிற் சிலவற்றிற் சேர்வனவல்லனவாயினும் சிலவற்றிற் சேர்வனவேயாகும். ஆதலால் சிங்ஙுவை, ஆக்கிராணம், பாயுரு, உபத்தமாகிய நான்கிந்திரியங்களும் நடித்தலாகிய தூலசரீர விவகாரத்திற் சேர்வனவல்லனவாயிருக்கினும் போசனமலவிசர்ச்சனமாதிய சில தூலசரீர விவ

நின்றுண்டாகும் சதி கீத மாதிகளையுங் கேட்டற்குச் சுரோத்திரேந்திரியம் (௧). தானும் இராகாதிகீதங்களைப் பாடுதற்கு வாக்கிந்திரியம் (௧) கீதப்பொருடோன்ற அபிநயஞ் செய்தற்குப் பாணியிந்திரியம் (௧). சபையிலுள்ள பிரபுக்களைப் பார்த்தற்கும் தன் முககமலத்தில் சிங்காரமாதிய நவரசங்களைத் தெரிவித்தற்குஞ் சக்ஷுரிந்திரியம் (௧). இவ்வாறிந்திரியங்களு மிருத்தற்கு இடமாகத் தூலசரீரதத்துவங்கள் (௬). தூலசரீரம் பிரேதம்போல வீழ்ந்துவிடாமல் நிற்றற்கும் இருந்து எழும்பிக் குதித்து நெளிந்து நிமிர்தற்கும் இந்திரியங்களைத் தந்தந் தொழில்களிற் செலுத்தற்கும் தாங்குதலாதி தொழில்களையுடைய பிராணாதிவாயுக்கள் (௫). பிரயோசனத்தை யுத்தேசியாமல் எந்தப்பிரவிருத்தியு முண்டாகாதாதலின் நடனப்பிரவிருத்திக்கான பிரயோசன விருப்பமுறுதற்கும் வாயுக்களையும் இந்திரியங்களையும் ஆட்டி அடக்கற்கும் அந்தக்கரணம் (௫) இவைகள் சடமானமையால் சேதன சம்பந்தமின்றித் தாமே சேட்டித்தற்கும் மற்றொன்றைச் சேட்டிப்பித்தற்கும் விஷயங்களைச் சுட்டியறிதற்கும் கூடாவாம். ஆதலின் சேட்டித்தல் சேட்டிப்பித்தல் சபையைச்சுட்டியறிதல் முதலியவைகட்கு ஏதுவாகச் சேதனமான சீவன் (௧). சீவன் ஆபாசஞானமையால் தனியேபிரான். ஆதலின் சீவனுக்காசிரயமாகிய அவித்தை (௧). சீவன் அசுதந்தரனானமையால் சீவனைப் பிரியாப் பிரியவிஷயங்களிற் பிரவிர்த்திப்பதற்கு ஈசுரன் (௧). ஈசுரனும்



ஆபாசஞானமையால் தனியேயிரான். ஆதலின் ஈசுரனுக்காசிரயமாகிய மாயை (௧). இரச்சுசர்ப்பம் இரச்சுவாகிய தன் அதிட்டானத்தையன்றித் திதிபெறாததுபோல இத்தத்துவங்களனைத்தும் தமக்கதிட்டானமாகிய பிரஹ்மத்தையன்றித் திதிபெறாதனவாக இருத்தலால் இவைகட் கதிட்டானமாயுள்ள பிரஹ்மம் (௧). ஆக தத்துவங்கள் (௨௭) என அறிக. இதுபோல மற்றவிவகாரங்கட்கும் யூகிக்க.

வினா:—தூலசரீர விவகாரத்தில் (௩௧) தத்துவங்களுஞ் சேர்வனவா மென்றபடி தூலசரீர விவகாரமாகிய நடன விவகாரத்திற்சேராமல் (௨௭) தத்துவங்கள்மாத்திரஞ் சேர்ந்து ஞானேந்திரியங்களாகிய சிங்குவையும் ஆக்கிராணமும் கன்மேந்திரியங்களாகிய பாயுருவும் உபத்தமுஞ் சேராமற் குறைவுற்றதென்னையெனின். (95)

விடை:—(௩௧) தத்துவங்களிற் றசேந்திரியங்கள் நீங்கலாக மற்ற (௨௧) தத்துவங்களுந் தூலசரீர விவகாரங்களனைத்திலுஞ் சேர்வனவாகும். தசேந்திரியங்களிற் சில இந்திரியங்கள் தூலசரீரவிவகாரங்களிற் சிலவற்றிற் சேர்வனவல்லனவாயினும் சிலவற்றிற் சேர்வனவேயாகும். ஆதலால் சிங்குவை, ஆக்கிராணம், பாயுரு, உபத்தமாகிய நான்கிந்திரியங்களும் நடித்தலாகிய தூலசரீர விவகாரத்திற் சேர்வனவல்லனவாயிருக்கினும் போசனமலவிசர்ச்சனமாதிய சில தூலசரீர விவ

காரங்களிற் சேர்வனவாகும். இஃதன்றித் தூலசரீர விவகாரம் ஒன்றில் (௩௧) தத்துவங்களுஞ் சேர்ந்து விவகரிக்குமென்னும் நியமமில்லையென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சூட்சுமசரீர விவகாரத்தில் | சீவன் சொப்பனாவத்தையிற் சூக்கும சரீரத்தோடுகூடி விவகரிக்கும் விவகாரத்தில். |
| கூடுந்தத்துவங்கள். | துணையாகச் சேருந் தத்துவங்கள். |

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| சூட்சுமசரீரதத்துவம் (௨௰) சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம (௫) ஆகத்தத்துவங்கள் (௨௫). | வெளி. |

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| காரணசரீர விவகாரத்தில் | சீவன் சுழுத்தியவத்தையிற் காரண சரீரமாகிய அவித்தையோடு கூடி விவகரிக்கும விவகாரத்தில் |
| கூடுந்தத்துவங்கள். | துணையாகச்சேருந் தத்துவங்கள். |

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (௫) | வெளி. |

வினா:—சகல கரணங்களுமொடுங்கிய சுழுத்தியவத்தையில் சீவனுக்கு விவகாரங்கூறுதல் பொருந்ாதெனின். (96)



விடை:-சுழுத்தியவத்தையில் அவித்தையினது சூக்கும விருத்தியால் சீவன் பிரஹ்மானந்தலேசத்தை யனுபவிக்கும் விவகாரமுடையனாதலால் பொருந்துமென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சீவவிவகாரத்தில் | சீவனது துரியாவத்தையிலுள்ள விவகாரத்தில் |
| கூடுந்தத்துவங்கள். | சேருந்தத்துவங்கள் |

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சீவன் ஈசுரன் பிரஹ்மம் (௩) | வெளி. |

வினா:—சீவனுக்குத் துரியாவத்தையிலுள்ள விவகாரம் யாதெனின். (97)

விடை:—சீவன் தன் நிசசொரூபமாகிய ஆத்மாவை யறிந்து ஆத்மாநந்தத்தை யனுபவித்தலென அறிக.

வினா:—துரியாவஸ்தையிலுள்ள சீவவிவகாரத்தில் அவித்தையும் மாயையுஞ் சேராதது யாதினாலெனின். (98)

விடை:—மறைப்பைச்செய்வதாகிய அவித்தையும் நாம ரூபப்பிரபஞ்சமாகப் பரிணமிக்கும் மாயையும் பிரஹ்மாத்மைக்யஞானத்தால் நாசமாய்விட்டமையினென அறிக

வினா:-துரியாவத்தையில் அவித்தையும் மாயையும் நாசமாய்விட்டதென எதனாலறியலாமெனின். (99)

விடை:—சூரியப்பிரகாசத்தில் அந்தகாரமும் பிசாசின் தோற்றமுமில்லாததுபோலச்சீவன் துரியாவத்தையில் பிரஹ்மத்திற் கலந்து பிரஹ்மப்பிரகாசமயமாய் விளங்கும்போது சொரூப மறைப்பின்மையால் அவித்தையும் தேகாதிப் பிரஹ்பஞ்சத் தோற்றமின்மையால் மாயையும் நாசமாய்விட்டதென அறியலாமென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| சாக்ஷி | ஜீவன் துரியாதீதாவத்தையில் சாக்ஷிமாத்திரமாயுள்ள |
| விவகாரத்துக்குள்ள | விவகாரத்துக்கிராநின்ற |
| தத்துவம் | தத்துவமானது |
| சாக்ஷி (க) | சாக்ஷியாகிய கூடத்தர் (க) |

வினு:—துரியாதீதமாகிய சாக்ஷி விவகாரமாவது யாதெனின். (100)

விடை:--சாக்ஷிமாத்திரமாயுள்ள கூடத்தராகிய தானே பிரஹ்மமெனவும் பிரஹ்மமே கூடத்தராகிய தானெனவும் அபேதமாக அறிந்து திரிபுடித்தோற்றமின்றி யதீதானந்தமயமாகிப் பொருளெப்படியோ அப்படி யிருத்தலென அறிக.

(நூல் உஅ)

ஈசுரன் தூலசரீரவிவகாரத்திற் கூடுந்தத்துவங்கள் சமட்டி தூலசரீரதத்துவம்(சு), சமட்டி சூட்சுமசரீரதத்துவம்(உ௰),



சமட்டி சீவன் அவித்தை (உ), தூலபூதம் (ரு), ஈசுரன் வித்தை பிரஹ்மம் (ங) ஆக (ஙசு). சூட்சுமசரீர விவகாரத்திற் கூடுந் தத்துவங்கள் சமட்டிசூட்சுமசரீரதத்துவங்கள் (உ௰), சமட்டி சீவன் அவித்தை(உ), சூட்சுமபூதம்(ரு), ஈசுரன்வித்தை பிரஹ்மம் (ங) ஆக (ங௰). காரணசரீர விவகாரத்திற் கூடுந்தத்துவங்கள் ஈசுரன் வித்தை பிரஹ்மம் (ங). ஈசுரவிவகாரத்திற் கூடுந் தத்துவங்கள் ஈசுரன் பிரஹ்மம் (உ), பிரஹ்மவிவகாரத்துக்குள்ள தத்துவம் பிரஹ்மம் (க).

இதன்பொருள்வெளி.

வினு:-ஈசுரன் தூலசூட்சுமவிவகாரங்களிற் பஞ்சபூதங்களைச் சேர்த்துக் கூறியது யாதினுலெனின். (101)

விடை:—ஈசுரன் பஞ்சபூதங்களினின்றும் சீவர்கட்குத் தனு கரண புவன போகங்களையுண்டுபண்ணிக் கொடுக்கின்றமையினென அறிக.

(நூல் உகூ.)

இந்திரியவிவகாரத்திற் கூடுந்தத்துவங்கள் இந்திரியம்(க), தூலசரீரதத்துவங்கள் (சு), அந்தக்கரணம் (ரு), வாயுக்கள்(ரு), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (ரு) ஆக(உஉ). மனோராச்சிய விவகாரத்திற் கூடுந்தத்துவங்கள் அந்தக்கர

ணம் (௫), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (௫) ஆக (௰). இப்படித் தத்துவங்களின் நிலை சொல்லப்பட்டது.

வினா:-இந்திரியவிவகாரத்தில் ஓரிந்திரியத்தைமாத்திரஞ் சேர்த்து மற்ற இந்திரியங்களைச் சேர்க்காது விடுத்ததென்னை யெனின். (102)

விடை:-இந்திரியவிவகாரமென்றது ஞானேந்திரிய விவகாரமாகும். ஆதலின் ஞானேந்திரியங்களி லொன்றறிந்ததை மற்ற நான்கிந்திரியங்களும் அறியுஞ்சத்தி யில்லாதவைகளானமையால் ஓரிந்திரியம் ஓர்விஷயத்தை யறியும்போது அதற்குச் சாதகமாக அறிகருவிகளாகிய ஞானேந்திரியங்கள் நான்கும் தொழிற்கருவிகளாகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும் வேண்டுவன வல்லாமையினென அறிக.

வினா:—அற்றேல் அறிகருவியல்லனவாகிய தூலசரீர தத்துவங்களாறையும் வியானாதிவாயுக்களைந்தையும் இந்திரிய விவகாரத்துக்குச் சாதகமாகச் சேர்த்துக் கூறியதென்னை யெனின். (103)

விடை:—இந்திரியங்கட்குக் கோளகைகளாகத் தூலசரீரதத்துவங்களும் தூலசரீரத்தைத் தாங்கி நிலைபெறச் செய்தற்கு வியானாதிவாயுக்களும் வேண்டியிருத்தலினென அறிக,



வினா:—மனோராச்சிய விவகாரத்தில் தூலசரீரதத்துவங்கள் (௬)ம் வாயுக்கள் (௫)ம் இந்திரியங்கள் (௰)ம் சேராதது யாதினாலெனின். (104)

விடை:—வாசனாசம்ஸ்காரம்பற்றிச் சங்கற்பாகாரமாக எழாநின்ற மனதுக்கு இவைகளின் சாதகங்கள் வேண்டுவதில்லாமையினென அறிக.

| (பதம்.) | (பொருள்.) |
|---|---|
| இப்படி | இந்தப்பிரகாரம் |
| தத்துவங்களின் | (௩௬) தத்துவங்களினுடைய |
| நிலை சொல்லப்பட்டது. | நிலை கூறப்பட்டது. |

தீதிநிரூபகம் முற்றிற்று.

சிதம்பரதேசிகன் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

ஓம்பரப்பிரஹ்மணேநம:

சிதம்பரதேசிகன் திருவடிவாழ்க.

# நாஞசிவவாதக்கட்டளை வியாக்கியானம்.

## அபவாதநிரூபகம்.

### அவதாரிகை.

பிரஹ்மத்திற் றூலசரீரமுதற் பிரகிருதியீறுகவுள்ள (௱௫) தத்துவங்களும் ஒடுங்குதலாகிய அபவாதக்கிரமத்தை நிரூபிக்கின்றார்:—

(நூல் ௱௰)

இனித் தத்துவங்களொடுங்குகின்றவழி சொல்லுகின்றோம். சகல சீவர்களிடத்தினுமிருக்கின்ற தூலசரீரங்களனைத்தும் தமக்காதாரமான தூலபூதங்களில் மடிந்து பூதமாத்திரமாகவொடுங்கும். இந்தத் தூல பூதங்களும் பஞ்சீகரணம்விட்டுத் தன்மாத்திரைகளான தாமதகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரணியகருப்பாவத்தையென்று சொல்லப்படும்.

இதன்பொருள்-வெளி.



வினு:—தூலபூதங்கள் சூட்சுமபூதங்களாக மிஞ்சியபோது இரணியகருப்பாவத்தை யென்றது யாதினுலெனின். (1)

விடை:—இரணியமென்பது பொன். பொன் பிரகாசமாயிருப்பதுபோல அப்பிரகாசமாகிற தூலக்கலப்பின்றிப் பிரகாசமாகிய சூக்குமபூத சூக்குமசரீரமாத்திரமாய் நிற்றலினென அறிக.

(நூல் ௱௧)

சூட்சும சரீரத்துவங்கள் (௨௰)ம் கட்டுவிட்டுப் பூதங்களின் சாத்திககுணமும் இராஜதகுணமுமாக ஒடுங்கும். அஃதெங்ஙனமெனின், சகலபிராணிகளிடத்தினு மிராநின்ற அகங்காரமும் ஆக்கிராணமும் உதானவாயுவும் உபத்தமும் பிருதிவியிலொடுங்கும். சித்தமும் சிங்குவையும் சமானனும் பாயுருவும் அப்புவிலொடுங்கும். புத்தியும் சக்ஷுவும் அபானனும் பாதமும் அக்கினியிலொடுங்கும். மனதும் தொக்கும் பிராணனும் பாணியும் வாயுவிலொடுங்கும். உள்ளமும் சுரோத்திரமும் வியானனும் வாக்கும் ஆகாயத்திலொடுங்கும். அப்போது பழையபடியே முக்குணபூதங்களாகும்.

இதன் பொருள் வெளி.

வினு:—ஒவ்வொருபூதத்தினும் நான்கு நான்குதத்துவங்களொடுங்கியது யாதினுலெனின். (2)

விடை:—ஒவ்வொரு பூதத்தின் சத்துவகுணத்திலிரண்டும் இராஜதகுணத்திலிரண்டுமாக நான்கு நான்கு தத்துவங்களுண்டாயினமையினென அறிக.

(நூல் ௩௨)

இந்தச் சூட்சுமபூதங்களும் பிருதிவி அப்புவிற் கரைந்தொடுங்கும். அப்புவும் அக்கினியிற் சுவறியொடுங்கும். அக்கினியும விளக்குப்போல வாயுவிலணைந்தொடுங்கும். வாயுவும ஆகாயத்திலோய்ந்தொடுங்கும். ஆகாயமும் விக்ஷேபசத்தியிலொடுங்கும். ஆவரணசக்தியும் விக்ஷேபசக்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுணமாத்திரமாய் ஆலமரம் ஆலவிரையில் ஒடுங்கினாற்போலப் பின்னுமொரு சிருட்டிக்குவித்தாக அவித்தையினும மாயையினும் ஒடுங்கும்.

வினு:—ஆவரணசத்தியும் விக்ஷேபசத்தியும் விரிந்தபிரகாரமே தமோகுணமாத்திரமாகிப் பிரகிருதியாக ஒடுங்காமல் அவித்தையினும் மாயையினும் ஒடுங்கிய தென்னையெனின். (3)

விடை:—பிரளயகாலத்தில் பந்தநிவர்த்தியாகாத சீவர்கள் மேலுஞ்சன்மித்துக் கன்மதாரதம்மியப்படி சுகதுக்கங்களை யனுபவிப்பதற்கேதுவான மறைப்புக்கும் தனுகரணபுவனபோகங்கட்கும் பீஜரூபமாக அவித்தையினும் மாயையினும் ஈசுரநியமத்தால் ஒடுங்கியதென அறிக.



வினு:—ஆவரணசத்தி அவித்தையினும் விக்ஷேபசத்தி மாயையினும் பிரிந்தடங்கியது யாதினுலெனின். (4)

விடை:—ஆவரணசத்தி மறைப்புச்சத்தியாதலின் அது சீவர்கட்கு மறைப்புரூபமாயுள்ள சீவசத்தியாகிய அவித்தையினும், விக்ஷேபசக்தி ஈசுரன் சகசிருட்டிசெய்யும்நிமித்தம் நினைத்தற்கு ஏதுவாகிய நினைப்புச்சத்தியாதலின் அது ஈசுரசத்தியாகிய மாயையினும் அடங்கியதென அறிக.

வினு:—ஆவரணசத்தியும் மாயையிலடங்கி நிற்காதோவெனின். (5)

விடை:—மாயையானது ஈசுரன் சர்வஞ்ஞனுயிருத்தற்கேதுவாயுள்ள ஞானசத்தியாதலால் அதில் ஒளியிலிருளடங்கி நிற்காததுபோல மறப்பைச் செய்வதாகிய ஆவரணசத்தியடங்கிநிற்காதென அறிக.

(நூல் ௩௩)

இந்தமாயையும் அவித்தையும் அதிநுண்மையான மூலப்பிரகிருதியென்னும் விந்துதத்துவமாக ஒடுங்கும். அவ்விந்துதத்துவமும் பாம்புபழுதைமாத்திரமாக ஒடுங்கியதுபோலத் தனக்கதிட்டானமான பிரஹ்மசைதன்னியமாத்திரமாக ஒடுங்கும்.

வினு:—பிரஹ்மத்திற் பிரகிருதியொடுங்கியதற்குப் பழுதைப்பாம்பு திருட்டாந்தங் கூறியது யாதுநிமித்தமெனின்.

விடை:—பாம்பை விசாரிக்குமிடத்துப் பழுதையைப் போல உள்ளதென்பதும் பழுதையிலொடுங்கியதென்பதும் வாஸ்தவமல்லாததுபோலப்பிரகிருதியைவிசாரிக்குமிடத்துப் பிரஹ்மத்தைப்போலுள்ளதென்பதும் பிரஹ்மத்திலொடுங்கியதென்பதும வாஸ்தவமல்லவென விளங்குமநிமித்தமென அறிக.

(நூல் ௧௪)

இப்படித் தோற்றியொடுங்கிய தத்துவங்கள் (௧௫). அவையாவன:—பூதங்கள் (௫), தூலசரீரதத்துவங்கள் (௯), சூட்சுமசரீரதத்துவங்கள்(௨௰),காரணசரீரமான மாயை அவித்தை (௨), அவைகளிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுரன் சீவன் (௨) ஆகிய இவைகளாம்.

வினு:—மூலப்பிரகிருதியை ஓர் தத்துவமாகச் சேர்க்காதது யாதினுலெனின். (7)

விடை:—மூலப்பிரகிருதி மாயை அவித்தையென்னும் பெயரால் இரண்டுதத்துவங்களாகச் சேர்க்கப்பட்டிருத்தலி னென அறிக.

வினு:—அங்ஙனமாயின், முன்னுள்ள அத்தியாரோப நிருபகத்தில் மூலப்பிரகிருதியென்ருெரு சத்தியுண்டெனக்



கூறியபடியே அதனை ஓரேபெயரால் ஓரேதத்துவமாகக் கூருமல் வெவ்வேறுபெயரா லிரண்டுதத்துவங்களாகக் கூறியது யாதினுலெனின். (8)

விடை:—வெண்மை செம்மை கருமையாகிய நூல்கள் பிரிவின்றிச்சேர்ந்து முறுகலாயுள்ளபோது கயிறெனும் பெயரைப்பொருந்தி யொன்ருகவும், அவைகள் பிரிந்துநின்றபோது வெண்மைநூல் செம்மைநூல் கருமைநூலெனும் பெயர்களைப்பொருந்திப் பலவாகவு மிருப்பதுபோல மாயையென்னுஞ் சத்துவமாதியகுணசத்திகள் பிரிவின்றி யொன்ருய்ப் பிரஹ்மத்தி லடக்கமாயிருக்கும்போது பிரகிருதியென்னும் பெயரைப் பொருந்தி ஓர் சத்தியாகவும், அவைகள் பிரிந்து விகாசமாகியபோது மாயை, அவித்தை, ஆவரணம், விக்ஷேபமென்னும் பெயர்களைப் பொருந்திப் பலவாயிருத்தலினென அறிக.

வினு:—அற்றேல் பிரகிருதியாக இருந்து விகாசமாகிய ஆவரண விக்ஷேபசத்திகளைத் தத்துவங்களாகச் சேர்க்காதது யாதினுலெனின். (9)

விடை:—ஆவரணசத்தி அவித்தையைப்போல சீவர்கட்கு மறைப்பைச்செய்துகொண்டு அவித்தையைப் பிரியாமல் ஒன்ருயிருப்பதுபற்றி அவித்தையாதத்துவமாகவும்

விக்ஷேபசத்தி ஈசுரவீக்ஷணியத்தால் ஆகாயமாகிவிட்டமையால் ஆகாயதத்துவமாகவும் கூறப்பட்டிருத்தல்பற்றியென அறிக.

வினா:—தத்துவங்களுக்கு ஒடுக்கங்கூறும்போது இன்ன தத்துவத்தில் ஒடுங்குமெனக் கூறாது விடுபட்ட சீவேசுரர்கள் எந்தத் தத்துவத்தி லொடுங்குவர்களெனின். (10)

விடை:—கடசலமும் மேகசலமும் ஒடுங்கியபோது அவைகளிலுள்ள ஆரோபிதமாகிய பிரதிவிம்பாகாசங்கள் தமக்கதிட்டானமான மகாகாசத்திலொடுங்குவனபோல அவித்தையும மாயையும் ஒடுங்கியபோது அவைகளிலுள்ள பிரதிவிம்பர்களாகிய சீவேசுரர்கள் தமக்கதிட்டானமான பிரஹ்மத்தில் ஒடுங்குவர்களென அறிக.

வினா:-அதிட்டான இலக்கணமாவது யாதெனின். (11)

விடை:—எது பிராந்திகாலத்திற் பிரதீதியாகிறதில்லைபோ, மற்றும் எதனது பிரதீதியால் பிராந்தி நிவர்த்தியாகிறதோ அதுவாம். இஃதன்றி எது நிருவிகாரசொரூபமாகவும் அவித்தையால் செய்யப்பட்ட கற்பிதகாரியங்கட்கு ஆசிரயமாகவுமிருக்கிறதோ அதுவெனினும் அமையுமென அறிக.

வினா:—பிரஹ்மத்தை யதிட்டானசொரூபமென்றது யாதினாலெனின். (12)



விடை:—இரச்சுசர்ப்பத்தோற்றரவில் இரச்சு அதிட்டானம்; சர்ப்பம் ஆரோபிதம். ஆரோபிதமான சர்ப்பத்தோற்றரவாகிய பிராந்திகாலத்தில் இரச்சு பிரதீதியாகிறதில்லை. இரச்சுஞானத்தால் சர்ப்பத்தோற்றரவாகிய பிராந்தி நிவர்த்தியாகிறது. இதுபோல ஆரோபிதமான சகத்தோற்றரவாகிய பிராந்திகாலத்தில் பிரஹ்மம் பிரதீதியாகிறதில்லை. பிரஹ்மஞானத்தால் ஆரோபிதமான சகத்தோற்றப் பிராந்தி நிவர்த்தியாகிறது. ஆகலின் பிரஹ்மம் சர்வாதிட்டானசொரூபமென அறிக.

வினா:—ஆரோபித இலக்கணம் யாதெனின். (13)

விடை:—பிராந்திகாலத்தில் பிரதீதியுள்ளதாயும், அதிட்டான ஞானகாலத்தில் பிரதீதியில்லாதாயு மிருப்பதென அறிக.

வினா:— சகத்தை யாரோபித மென்றது யாதினாலெனின். (14)

விடை:—பிராந்திகாலத்திற் பிரதீதியுள்ளதாயிருந்து அதிட்டானஞானகாலத்தில் பிரதீதியில்லாமற் போகின்றமையினென அறிக.

வினா:—இந்நூற் பிரதிகள் பலவினும் தோற்ற வொடுக்கங்களையுடைய தத்துவங்கள் (௩௫) எனவும்; அவைகளிவைக

ளெனவும் பிரஹ்மத்தையுஞ் சேர்த்துக் கூறியிருக்க; இங்கே பிரஹ்மத்தைச் சேர்க்காமல் மற்றைய (௩௫) தத்துவங்களை மாத்திரம் தோற்றவொடுக்கங்களுடையன வென்றதெதனாலெனின். (15)

விடை:—தோற்றவொடுக்கங்களுடைய தத்துவங்கள் (௩௬) எனத் தொகுத்துக் கூறுவனவாகிய பிரதிகளும், (௩௫) தத்துவங்கட்கு மாத்திரம் இன்ன இன்ன தத்துவம் இன்ன இன்ன தத்துவத்திற்றோன்றியது, இன்ன இன்ன தத்துவத்திலொடுங்கியதென வகுத்துத் தோற்றவொடுக்கங்கள் கூறினவேயன்றி ஒரு பிரதியிலேனும் பிரஹ்மம் இன்னதத்துவத்திற்றோன்றியது இன்னதத்துவத்திலொடுங்கியதெனத் தோற்றவொடுக்கங்கள் கூறாமையினானும், பழமையாகிய ஓர் பிரதியில் தோற்றி யொடுங்கிய தத்துவங்கள்(௩௫) எனப் பிரஹ்மத்தைச் சேர்க்காமல் வகுத்துக் கூறியபடியே தொகுத்துங் கூறியிருந்தமையினானும், சகலசுருதிகளும் பிரஹ்மத்தை அனுநித்தியமெனக் கீர்த்திக்கின்றமையினானும், பிரஹ்மத்தைத் தோன்றியொடுங்கியதெனக் கூறுவதாகிய பாடபேதங்கள் எழுதியவர்கள் புத்திதோஷத்தாற் பிறழ்ந்தெழுதியதாமென ஒதுக்கித் தோன்றியொடுங்குவனவாகிய தத்துவங்களைமாத்திரம் வகுத்துந் தொகுத்தும் (௩௫) எனக் கூறுவதாகிய பாடப்பிரகாரங் கூறியதென அறிக.



வினா:—அற்றேல் மாணாக்கர்களுக்குச் சில ஆசிரியர்கள் தோன்றியொடுங்கிய தத்துவங்கள் (௩௬) எனக் கூறுவதாகிய பாடபேதப்படி போதித்துவருதல் சுருதியாதிகட்கு விரோதமாமேயெனின். (16)

விடை:—ஆசிரியர்கள் தொய்தப்பிரதிதியின்றிப் பொருளெப்படியோ அப்படியே யிராநின்ற அதீதாவத்தையாகிய தங்கள் சுபாவநிலையில் பிரஹ்மமென்னும் நாமவிகாரமும் நாம் பிரஹ்மமாயிருக்கிறோமென்னும் பிரஞ்ஞையுமில்லாமல் கழுவிப்போயிருக்கின்ற அனுபவம்பற்றிப் பிரஹ்மம் தோன்றியொடுங்கியதென்பதற்குப் பிரஹ்மமென்னும் நாமகற்பனை தோன்றியொடுங்கியதென்பதே யிந்நூலின் அபிப்பிராயமெனப் பொருள்கொண்டு அவ்வபிப்பிராயந் தோன்ற மாணாக்கர்சட்குப் போதித்துவருவர்களாயின் சுருதியாதிகளுக்கு விரோதமாகாதென அறிக.

வினா:—பிரஹ்மமென்னும் நாமகற்பனை யெதனாற்றோன்றி யெதனாலொடுங்கியதெனின். (17)

விடை:—ஓர்புருடனுக்குப் புத்திரனைக்குறித்துப் பிதா, மனைவியைக்குறித்து மணாளன், மருகனைக்குறித்து மாமன், சிறியவனைக்குறித்துப் பெரியவன் என்னும் நாமகற்பனைகள் தோன்றிப் புத்திராதியர் மரித்தபின்னர்ப் பிதா மணாளன் மாமன் பெரியவனென்னும் நாமகற்பனைகளில்லாமற்போவது

போல அனாதிசித்தியமாயுள்ளபொருளுக்குச் சிறியவாகிய ௩௫ தத்துவங்களைக் குறித்துப் பெரிதாகிய பிரஹ்மமென்னும் நாமகற்பனைமாத்திரந்தோன்றிச்சிறியவாகிய(௩௫)தத்துவங்கள் ஒடுங்கியபோது அவைகளைக்குறித்து வந்த பெரிதாகிய பிரஹ்மமென்னும் நாமகற்பனைமாத்திர மொடுங்கியதாகும். இவ்வபிப்பிராயந்தோன்ற இந்நூலானது முந்திய பிரஹ்மவிலக்கண நிரூபகத்தில் சுத்தப்பிரஹ்மத்துக்கு அதனிடத்தடங்கியிருந்த பராசத்தியினுல்லாசத்தால் பரப்பிரஹ்மமெனும் பெயர் தோன்றியதெனக் கூறி அச்சத்தி சங்கோசப்படில் அப்பெயர் நீங்கு மென்பதையும் குறிப்பாக வெளிப்படுத்தி யிருக்கிறது. ஆதலின் இந்நூலினாலும் நாமகற்பனைகள் பிரஹ்மத்துக்குத் தோன்றியொடுங்கு மென்பதை யறியலாமென அறிக.

(பிரமாணம்.)

(சூதசம்மிதை பரசிவசொரூபவிசாரம்)

மறைமுதறனக்கு நாமரூபங்கள் மருவுதலில்லையே யெனினும், கறையறவிளங்கு மாயையினாலே கற்பிக்கப்பட்டனவாகும்.

(பாகவதம்.)

கருதுசேயன்னை காதலியிப்பாருளோர்; பொருவருந் தாதை நற்புதல்வனாயக; னரசனென்றறைய நீயடைதல் போலொரு; பிரமமே மாயையாற் பெயர்கள் பெற்றவே.



வினா:-கடமென்னும் நாமமொடுங்கியபோது அதனாற் குறிக்கப்படும் கடமும் ஒடுங்கிவிடுவதுபோலப் பிரஹ்மமென்னும் நாமமொடுங்கியபோது அதனாற் குறிக்கப்படும் பிரஹ்மமும் ஒடுங்காதது யாதினாலெனின். (18)

விடை:—பிரஹ்மம் கடத்தைப்போ லுற்பவமுடையதாக இராமல் அனாதியாக இருத்தலினென அறிக.

வினா:—அற்றேல் அவித்தை மாயை சீவன் ஈசுரன் என்னுந் தத்துவங்களும் அனாதியானமையால் அவைகட்கு ஒடுக்கமாகிய நாசங்கூறியது பொருந்தாதெனின். (19)

விடை :—அவித்தையாதிகள் பிரஹ்மத்தைப்போல வாஸ்தவ அனாதியாக இராமல் கற்பித அனாதியாக இருக்கின்றமையால் அவைகட்கு நாசங்கூறியது பொருந்துமென அறிக.

வினா:—கற்பித அனாதியிலக்கணம் யாது? வாஸ்தவ அனாதியிலக்கணம் யாது? அவித்தையாதிகள் கற்பித அனாதியும், பிரஹ்மம் வாஸ்தவ அனாதியுமா மென்றது யாதினாலெனின். (20)

விடை:—உற்பவ விகாரமாகிய காரியத்துட்படாதவைகளனைத்தும் அனாதியேயாகும். ஆயினும், அவைகளில் உற்பவவிகாரமாகிய காரியத்துட்படாமல் மற்ற விகாரங்க

ளாகிய காரியங்களி னுட்படுவதாயும், ஒன்றை ஆதாரமாக வுடைய ஆதேயமாயும், குணசகிதமாயும், சாவயவமாயும் உள்ளது கற்பித அனுதியாகும். உற்பவ விகாரமாதி பல விகாரங்களாகிய காரியங்களி னுட்படாததாயும் நிராதார மாயும், குணரகிதமாயும் நிரவயவமாயுமுள்ளது வாஸ்தவ அனுதியாகும். இவ்விரண்டில் அவித்தை மாயை சீவன் ஈசுர னென்பவை உற்பவ விகாரமாகின்ற காரியத்துட்படாதன வாக இருக்கினும், மற்ற விகாரங்களாகிய காரியங்களினுட் படுவனவாயும், பிரஹ்மத்தை ஆதாரமாகவுடைய ஆதேயங் களாயும், குணசகிதங்களாயும், சாவயவங்களாயுமுள்ளனவா னமையால் கற்பித அனுதிகளாகும். பிரஹ்மம் உற்பவவிகா ரமாதிய பலவிகாரங்களாகிய காரியங்களி னுட்படாததாயும் நிராதாரமாயும் குணரகிதமாயும் நிரவயவமாயும் இருக்கின்ற மையால் வாஸ்தவ அனுதியாகும் என அறிக.

வினு:-சில மதஸ்தர்கள் பிரஹ்மம்போலச் சீவனு மா யையும் நித்தியமெனக் கூறுகின்றனரே யெனின். (21)

விடை:—அற்றேல், சீவனும் மாயையும் பிரஹ்மத்து க்குச் சினை, குணம், தொழில்களாகிய தற்கிழமை அல்லது பொருளிடங் காலங்களாகிய பிறிதின்கிழமையென்னும் இருவகைப் பொருள்களி லொருவகைப் பொருள்களாக இருக்கவேண்டும். அவ்விருவகையில்



களெனின், அவைகள் பூரணமாகிய பிரஹ்மத்தில் அபேத மாக இருக்கக்கூடும். அங்ஙனமிருக்கிறதெனின், விருக்ஷத் துக்குக் கிளையாகிய சினை பசுமைநிறமாகிய குணம் அசைத லாகிய தொழில்க ளிருத்தல்போலப் பிரஹ்மத்துக்குச் சீவ னும் மாயையும் சினையாகவேனும், அல்லது குணமாக வேனும், அல்லது தொழிலாகவேனும் இருக்கவேண்டும். இருக்கலாமெனின், சினையென்பது அவயவமானமையின் அவயவசகிதப் பிரஹ்மமெனவும் குணசகிதப் பிரஹ்மமெ னவும் கிரியாசகிதப் பிரஹ்ம மெனவும் கூறவேண்டும். அங் ஙனம் கூறலாமெனின், பிரஹ்மத்தை நிரவயவம் நிர்க்குணம் நிஷ்கிரியமெனக் கீர்த்திக்கின்ற சுருதியாதிகட்கு விரோத மாம். இஃதன்றிப் பிரஹ்மத்துக்குச் சினையாகிய சீவனுக் குள்ள சுகதுக்காதிகளும் வரும். ஆதலால் சீவனும் மாயை யும் நித்தியமெனல் பொருந்தாதென அறிக.

வினு:-அற்றேல் சீவனும் மாயையும் பிரஹ்மத்துக்குப் பிறிதின்கிழமைப்பொருள்களாக வுள்ளன வெனலாமெ னின்.

விடை:—விருக்ஷமானது கண்டமாயும் ஆதேயமாயும் உற்பவமுடையதாயு மிருத்தலால் இதர விருக்ஷமாகிய பொருளையும், இருத்தற்கு ஆதாரமாகிய இடத்தையும், இற

அதுபோலப் பிரஹ்மம் கண்டமாயும் ஆதேயமாயும் உற்பவ
முடையதாயுமிருக்கில், பொருளிடங்காலங்களாகிய பிறி
தின்கிழமைப் பொருள்களை யுடையதாகும். அங்ஙனமின்
றிப் பிரஹ்மம் அகண்டமாயும் சர்வாதாரமாயும் காலாதீத
மாயுமுள்ள பொருளெனச் சுருதிகள் கூறுகின்றமையின்
அதற்குச் சீவனும் மாயையும் பிறிதின்கிழமைப் பொருள்க
ளாகவுள்ளன வெனலும் பொருந்ாதெதன அறிக.

வினா:—சர்வாதாரமாயும் காலாதீதமாயுமுள்ள பிரஹ்
மத்துக்குச் சீவனும் மாயையும் இட காலங்களாக இரா
வென்பது சரியே. பிரஹ்மம் அகண்டப்பொருளாக இருக்
கினும் அதன் வியாபகத்தில் சீவனும் மாயையும் பொரு
ளாக இருக்கலாமெனின். (23)

விடை.—அற்றேல் சத்தாகிய பிரஹ்மவியாபகத்திற்
சீவனும் மாயையும் சத்தாகவுள்ளனவா? அல்லது அசத்
தாகவுள்ளனவா? அல்லது சதசத்தாக வுள்ளனவாவென
மூவித ஆசங்கை நிகழும். நிகழுங்கால் முதலாசங்கைக்குச்
சத்தாகவுள்ளனவென விடைகூறில் மகாகாய வியாபகத்தி
ருக்கும் கடாகாயம் மகாகாயத்துக்கு வேறாகாமல் ஏகாகாய
மாகவே நிலைபெறுதல்போலச் சத்தான பிரஹ்மவியாபகத்தி
ருக்கும் சத்தான சீவனும் மாயையும் பிரஹ்மத்துக்கு



வேறாகாமல் பிரஹ்மமாத்திரமாகவே நிலைபெறும். அல்லது
இரண்டாவதாகிய மத்திய ஆசங்கைக்கு அசத்தாகவுள்ளன
வென விடைகூறில், அசத்து சத்துக்கெதிர்மறையாகிய இல்
பொருளானமையின் பிரஹ்மமொன்றே உள்ளபொருளாக
நிலைபெறும். அல்லது மூன்றாவதாகிய இறுதி ஆசங்கைக்கு
சதசத்தாகவுள்ளனவென விடைகூறில், சத்தென்பது உள்
ளது; அசத்தென்பது இல்லது; உள்ளதும் இல்லதும் ஒன்
றற்கொன்று எதிர்மறைப் பொருள்களானமையின் இரண்
டுமொன்றாயிருக்குமெனல் ஒளியுமிருளும் ஒன்றாயிருக்கு
மெனல்போல விரோதமாம். இஃதன்றிச் சத்து உண்மைப்
பொருளும் அசத்து இன்மைப்பொருளுமானமையால் முற்
கூறியபடியே நித்தியமாக வுள்ளபொருள் சத்தொன்றாகவே
நிலைபெறும். ஆதலின் சீவன் மாயை யிரண்டையும் சத்து
அசத்து சதசத்தென்னு மிலக்கணங்களில் எவ்விலக்கண
முடையனவாகக் கூறினும் தொய்தஞ் சித்திக்காமையின்
அவைகளைப் பிரஹ்மத்துக்கு அன்னியமாகிய பொருட்களெ
னல் அசம்பாவிதமென அறிக.

வினா:-பிரஹ்மவியாபகத்திற் சீவனும் மாயையும் முதல்
வினாவிற்குக் கூறிய விடைப்படி சுசாதிக சத்தாயிருக்கிற்
சத்துஞ் சத்தும் பின்னமுறாமல் ஒரு பொருளேயாகும்.
அங்ஙனமின்றி விசாதிக சத்தாயிருக்கிற் பின்னமாயுள்ள
நித்தியப்பொருள்களாகுமே யெனின். (24)

விடை:—சத்துச்சாதிக்கு வேறுசாதி அசத்துச்சாதியேயாகும். அது இன்மைப்பொருளாய் முற்கூறியபடி அத்துவிதமாகவே பிரகாசிக்கும். அற்றன்று; பிராமணனுக்கு க்ஷத்திரியனும், வைசியனும், சாதித்துவத்திற் பேதமாக இருக்கினும் பொருட்டன்மையிற் சமமாகவுள்ளார்போலப் பிரஹ்மத்துக்குச் சீவனும் மாயையும் சாதித்துவத்திற் பேதமாக இருக்கினும் பொருட்டன்மையிற் சமமாகவுள்ளனவாமெனின், சத்தாகிய பிரஹ்மத்துக்கு அதிவியாப்திதோடம் வருவதுமின்றிக் கடமிருந்தவிடத்திற் படமும் படமிருந்தவிடத்திற் கடமுமில்லாததுபோலப் பிரஹ்மம் சீவன் மாயையாகிய மூன்றும் ஒன்றிருந்தவிடத்தில் மற்றொன்றிராததேயாகும். ஆகுமாயின் பிரஹ்மத்துக்கு அபரிபூரணத்துவம் வரும். ஆதலின் பிரஹ்மவியாபகத்திற் சீவனும் மாயையும் விசாதிகசத்தா யிருக்கிறதெனலும் அசம்பாவிதமென அறிக.

வினு:—ஆகாயவியாபகத்தில் வாயுவாதிகளிருப்பதால் ஆகாயம் பரிச்சின்ன முறுததுபோலப் பிரஹ்மவியாபகத்திற் சீவனும் மாயையுமிருப்பதால் பிரஹ்மம் பரிச்சின்ன முறுதெனின். (25)

விடை:-விவர்த்தமாக மண்ணிலடங்கியிருந்த கடசத்தி காரியப்பட்டுக் கடமாகத் தோற்றுவதால் காரணமாகிய



மண் பரிச்சின்னமுறுததுபோலக் காரணமாகிய ஆகாயத்தில் விவர்த்தமாக அடங்கியிருந்த சலனசத்தி காரியப்பட்டு வாயுவாகத் தோற்றினும் ஆகாயம் பரிச்சின்ன முறுதென்பது துணிபாம். அதுபோலப் பிரஹ்மம் காரணமெனவும் சீவனும் மாயையும் விவர்த்தமாயுள்ள காரியமெனவும் முப்பொருளும் நித்தியமென்பா ரொப்பாமையால் ஆகாயவாயுத் திருட்டாந்தம் அவர்கள் கொள்கைக்குப் பொருந்தாதென அறிக.

### ஆகாயத்தில் வாயுவுண்டானதற்குப் பிரமாணம்.

சுக்கிலயசுர்வேதம் பைங்களோபநிஷத்து

க-வது அத்தியாயம்.

அந்த ஆன்மாவினிடத்திலிருந்து ஆகாயமுண்டாயிற்று. (ஆன்மாவென்னுஞ் சொல்லுக்குப்பொருள் பிரஹ்மம்.) ஆகாயத்திலிருந்து வாயும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிருதிவியுமுண்டாயின.

வினு:-அற்றேல்ஞாயிறொளியோடு கண்ணொளிசேர்ந்து விஷயத்தை விளக்கும்போது கண்ணொளிச்சேர்க்கையில் ஞாயிறொளி பரிச்சின்னமுறுததுபோலச் சீவன் மாயைச்சேர்க்கையால் பிரஹ்மம் பரிச்சின்ன முறுதிருக்கலாமெனின். (26)

விடை:-ஞாயிறுக்கொளியிருப்பதுபோலக் கண்ணுக்குமொளியிருக்கிறதெனல் பொருந்தாது. அற்றன்று; கண் விஷயங்களை விளக்குகின்றமையால் ஒளியுள்ளதெனின், கார்கால அமாவாசை நிசியந்தகாரத்துள்ள விடயங்களையும் விளக்கவேண்டும். மின்மினி செவ்வட்டையாதிகள்போல் அற்பப்பிரகாசமுடையதாதலின் அவைகளை விளக்கமாட்டாதெனின், மின்மினி செவ்வட்டைகள் தூரவிடயங்களை விளக்காவிடினும் சமீபவிடயங்களைச் சொற்பமாகவேனும் விளக்குவதுபோலக் கண்ணும் அந்தகாரத்திற் றூரவிடயங்களை விளக்காவிடினும் சமீபத்தில் நிமையருகே வைக்கப்பட்ட புத்தகாக்ஷரங்களைச் சொற்பமாகவேனும் விளக்கவேண்டும். அங்ஙனம் விளக்காமையினானும் மின்மினி செவ்வட்டைகள்போல அந்தகாரத்தில் இதராளுக்குப் பிரகாசத்திரவியமாகக் காணப்படாமையினானும் கண் ஒளியில்லதாம். ஆதலின் கண்ணொளி ஞாயிறொளியிற் கலக்குமெனல் வெற்றுரையென அறிக.

வினா:—தருப்பணத்தில் ஞாயிறொளிச் சம்பந்தமின்றியபோது ஒளிதோன்றாமல் உள்ளபோது தோன்றுதல்போலக் கண்ணில் ஞாயிறொளிச் சம்பந்தமின்றியபோது ஒளிதோன்றாமல் உள்ளபோது தோன்றி ஞாயிறொளியிற் கலக்கிறதெனின்.





விடை:—ஞாயிறொளிச் சம்பத்தத்தால் தருப்பணத்திலொளிதோன்றுவதுபோலக் கண்ணினும் ஒளிதோன்றுகிறதெனின், அவ்வொளி ஞாயிற்றிலுள்ள காரணவொளியா? அல்லது அதனாற்றோன்றிய காரியவொளியாவென ஆசங்கைநிகழும். அவ்வாசங்கைக்குக் காரணவொளியெனிற் கடாகாயமடாகாயம்போல இரண்டொளியும் ஏகவொளியாகவே நிலைபெறும். காரியவொளியெனிற் காரியமாகிய கடம் காரணமாகிய மண்ணைப் பரிசின்னப்படுத்தாததுமன்றி மண்ணுக்கன்னியமாக ஓர்பொருளாகவும் நிலைபெறாததுபோலக் காரியவொளியாகிய கண்ணொளியும் காரணவொளியாகிய ஞாயிறொளியைப் பரிச்சின்னப்படுத்தாததுமன்றி ஞாயிறொளிக்கன்னியமாக வேறோரொளியாகவும் நிலைபெறாது. ஆதலின் ஞாயிறொளிச் சம்பத்தத்தாற் கண்ணுக்கொளிதோன்றுகிறதென்னும் பிராந்தர்மொழியை யொப்பினும் தொய்தஞ்சித்தித்தலின்றாம். இஃதன்றி ஞாயிறொளியாற்றோன்றிய தருப்பணவொளி ஞாயிறுள்ளபோது உள்ளதாகவும் இல்லாதபோதில்லாததாகவும் ஞாயிறொளிபோற் சடவொளியாகவுமிருப்பதுபோலக் கண்ணொளியும் ஞாயிறுள்ளபோதுள்ளதாகவும் இல்லாதபோதில்லாதாகவும் ஞாயிறொளிபோற் சடவொளியாகவு மிருக்கவேண்டும். அங்ஙனமின்றி ஞாயிறுள்ளபோது ஞாயிறையும் ஞாயிறின் ஒளியையும் ஞாயிறில்லாதபோது ஒளியின் அபாவமாகிய இருளையும் அறிந்துகொண்டு அவைகட்கு விலக்ஷணமாக இர

ண்டுகாலத்தினு மிருக்கிறது. அது சித்தொளியேயாகும்
ஆதலின் ஞாயிறின் சடவொளியால் சித்தொளியாகிய கண்
ணொளிதோன்றுமெனல் இருளினால் ஒளிதோன்றுமெனல்
போல் அசம்பாவிதமென அறிக.

வினா:—கண்ணானது தருப்பணம்போல் பூதகாரியமா
கிய சடமாதலின் அதனிடத்துச் சடவொளி தோன்றுமே
யன்றிச் சித்தொளி தோன்றாதெனின். (28)

விடை:-புத்தி பூதகாரியமாகிய சடமாயிருக்கினும் அதன்
பாற்றோன்றிய அறிவு சித்தின் சம்பந்தத்தாற்றோன்றிய தா
னமையின் சித்தொளியேயாவதுபோலக் கண் தருப்பணம்
போல் பூதகாரியமான சடமாயிருக்கினும் தருப்பணம்போற்
றமதகுணம்ச தூலபூதகாரியமாக இராமல் சத்வகுணம்ச
சூட்சுமபூதகாரியமாக இருத்தலின் அதன்பாற்றோன்
றிய வொளி புத்திசம்பந்தத்தாற்றோன்றிய சித்தொளியே
யாகும். அற்றன்று; சடத்தின்பாலுள்ளது சடவொளி
தானெனின் சடவொளி பூதாந்தகாரத்தையன்றி அஞ்ஞா
னாந்தகாரத்தையும் சித்தொளி அஞ்ஞானாந்தகாரத்தை
யன்றிப் பூதாந்தகாரத்தையும் நிவர்த்திக்காவென்னுந் துணி
புக்கேற்கக் கண்ணொளி பூதாந்தகாரத்தை நிவர்த்திக்காமல்
உருவிஷயங்களை மறைத்துள்ள அஞ்ஞானாந்தகாரத்தை
நிவர்த்திக்கிறது கண்கூடாயிருக்க; அதனைச் சடவொளி



யென்பது அறிவிலார்கூற்றாம். இஃதன்றிக் கண்ணுக்கு
அறியுந்தன்மையிருப்பதுபற்றியே சகலசுருதிகளும் அதற்
கு ஞானேந்திரியமெனப் பெயர் கூறுகின்றன. ஆதலின்
கண்ணொளி ஞாயிறொளியாற்றோன்றிய தென்பது யுக்திக்
கும் அனுபவத்துக்கும் விரோதமாவதுமன்றிச் சுருதிக்
கும் விரோதமாமென அறிக.

வினா:—கண்ணொளி சித்தொளியாயினும் ஞாயிறொ
ளியோடுகலந்து விஷயங்களை விளக்கும்போது கண்ணொ
ளியால் ஞாயிறொளி பரிச்சின்ன முறுதல்போல் சீவன் மா
யைக் கலப்பினால் பிரஹ்மம் பரிச்சின்னமுறா திருக்கலா
மெனின். (29)

விடை:-இரச்சுவிற்றோன்றிய சர்ப்பங் கற்பிதமானமை
யின் கற்பிதசர்ப்பத்தால் இரச்சு பரிச்சின்னமுறாதிருப்பது
போலச் சித்தொளியில் ஞாயிறொளியாதிகள் கற்பிதமான
மையின் கற்பிதமாகிய ஞாயிறொளியால் சித்தொளி பரிச்சின்
னமுறாதிருக்குமென்பது பொருந்தும். அங்ஙனம் பிரஹ்
மவியாபகத்திற் சீவனும் மாயையும் கற்பிதப்பொருள்களா
கவுள்ளன வென்பதை முப்பொருளும் நித்தியமென்னும்
பேதவாதிகள் ஒப்புவார்களாயின் சீவன் மாயைக் கலப்பி
னால் பிரஹ்மம் பரிச்சின்னமுறாதிருக்குமென்பது பொருந்
தும். அங்ஙனமொப்பாமல் சத்தியப்பொருளாகவும் ஒப்

ண்டுகாலத்தினு மிருக்கிறது. அது சித்தொளியேயாகும்
ஆதலின் ஞாயிறின் சடவொளியால் சித்தொளியாகிய கண்
ணொளிதோன்றுமெனல் இருளினால் ஒளிதோன்றுமெனல்
போல் அசம்பாவிதமென அறிக.

வினா:—கண்ணானது தருப்பணம்போல் பூதகாரியமா
கிய சடமாதலின் அதனிடத்துச் சடவொளி தோன்றுமே
யன்றிச் சித்தொளி தோன்றாதெனின். (28)

விடை:-புத்தி பூதகாரியமாகிய சடமாயிருக்கினும் அதன்
பாற்றோன்றிய அறிவு சித்தின் சம்பந்தத்தாற்றோன்றிய தா
னாமையின் சித்தொளியேயாவதுபோலக் கண் தருப்பணம்
போல் பூதகாரியமான சடமாயிருக்கினும் தருப்பணம்போற்
றாமதகுணாம்ச தூலபூதகாரியமாக இராமல் சத்வகுணாம்ச
சூட்சுமபூதகாரியமாக இருத்தலின் அதன்பாற்றோன்
றிய வொளி புத்திசம்பந்தத்தாற்றோன்றிய சித்தொளியே
யாகும். அற்றன்று; சடத்தின்பாலுள்ளது சடவொளி
தானெனின் சடவொளி பூதாந்தகாரத்தையன்றி அஞ்ஞா
னாந்தகாரத்தையும் சித்தொளி அஞ்ஞானாந்தகாரத்தை
யன்றிப் பூதாந்தகாரத்தையும் நிவர்த்திக்காவென்னுந் துணி
புக்கேற்கக் கண்ணொளி பூதாந்தகாரத்தை நிவர்த்திக்காமல்
உருவவிஷயங்களை மறைத்துள்ள அஞ்ஞானாந்தகாரத்தை
நிவர்த்திக்கிறது கண்கூடாயிருக்க; அதனைச் சடவொளி



யென்பது அறிவிலார்கூற்றாம். இஃதன்றிக் கண்ணுக்கு
அறியுந்தன்மையிருப்பதுபற்றியே சகலசுருதிகளும் அதற்
கு ஞானேந்திரியமெனப் பெயர் கூறுகின்றன. ஆதலின்
கண்ணொளி ஞாயிறொளியாற்றோன்றிய தென்பது யுக்திக்
கும் அனுபவத்துக்கும் விரோதமாவதுமன்றிச் சுருதிக்
கும் விரோதமாமென அறிக.

வினா:—கண்ணொளி சித்தொளியாயினும் ஞாயிறொ
ளியோடுகலந்து விஷயங்களை விளக்கும்போது கண்ணொ
ளியால் ஞாயிறொளி பரிச்சின்ன முறாததுபோல் சீவன் மா
யைக் கலப்பினால் பிரஹ்மம் பரிச்சின்னமுறா திருக்கலா
மெனின். (29)

விடை:-இரச்சுவிற்றோன்றிய சர்ப்பங் கற்பிதமானமை
யின் கற்பிதசர்ப்பத்தால் இரச்சு பரிச்சின்னமுறாதிருப்பது
போலச் சித்தொளியில் ஞாயிறொளியாதிகள் கற்பிதமான
மையின் கற்பிதமாகிய ஞாயிறொளியால் சித்தொளி பரிச்சின்
னமுறாதிருக்கு மென்பது பொருந்தும். அங்ஙனம் பிரஹ்
மவியாபகத்திற் சீவனும் மாயையும் கற்பிதப்பொருள்களா
கவுள்ளன வென்பதை முப்பொருளும் நித்தியமென்னும்
பேதவாதிகள் ஒப்புவார்களாயின் சீவன் மாயைக் கலப்பி
னால் பிரஹ்மம் பரிச்சின்னமுறாதிருக்கு மென்பது பொருந்
தும். அங்ஙனமொப்பாமல் சத்தியப்பொருளாகவும் ஒப்

பியிருக்கின்றனர். ஆதலின் சத்தியமாகிய சீவன் மாயையிருப்பினால் பிரஹ்மம் கண்டப்பொருளேயாகும். அங்ஙனமாயின் பிரஹ்மம் அகண்டமெனக் கீர்த்திக்கும் சுருதியாதிகட்கு அப்பிரமாணத்துவமும், அவைகளை உண்மைவாசகமென வெளியிட்டருளிய சருவஞ்ஞனாகிய ஈசுவரனுக்கு அசத்தியவாதித்துவமும் வரும். ஆதலின் சீவனும் மாயையும் நித்தியப்பொருளென்பார்கூற்றுக் கோடின்றிவட்டாடும் அறிவிலார் கூற்றென்பதற் கையமின்றென அறிக.

வினா:—முந்திய (23)வது விடையில் விகற்பித்த இடைவினாவிற்குக் கூறிய அசத்தென்பது இன்மைப்பொருளல்ல முன்தோற்றமின்றிக் காரணமாயிருந்து காரியமாகத் தோன்றிப் பின்னுங் காரணமாக ஒடுங்கிக் காரியமாகத் தோன்றிநிற்கும் பொருளாகும். ஆதலின் அதனை நித்தியமெனலாமெனின். (30)

விடை:—அற்றேல் காரணங்கெட்டுக் காரியமாகத் தோன்றிற்றா? அல்லது காரணங்கெடாமற் காரியமாகத் தோன்றிற்றாவென்னும் ஆசங்கைகள் நிகழும். அதற்குப் பால்கெட்டுத் தயிராதல்போலக் காரணங்கெட்டுக் காரியமாகச் சீவனும் மாயையுந் தோன்றினவெனின், காரணமாகிய பால்கெட்டபடியே தயிருங்கெட்டு மோராகி, அதுவுங் கெட்டு மற்றொன்றாகப் போகுமேயன்றிக் காரணமாகிய



பாலாக நிலைபெறாததுபோலக் காரணங்கெட்டபடியே காரியமாகிய சீவனும் மாயையுங் கெட்டுப்போவனவேயன்றிக் காரணமாக வொடுங்கிப் பின்னுங் காரியமாகத் தோன்றாவாம். மண்கெடாமற் கடந்தோன்றுதல்போலக் காரணங்கெடாமற் காரியமாகச் சீவனும் மாயையுந் தோன்றினவெனின், காரணமாகிய மண்ணையன்றிக் காரியமாகிய கடம் ஓர்பொருளாக நிலைபெறாததுபோலக் காரணத்தையன்றிக் காரியமாகிய சீவனும் மாயையும் ஓர்பொருளாக நிலைபெறாமல் இன்மைப்பொருளேயாகும். ஆதலின் அசத்தாகச் சீவனும் மாயையும் நித்தியமாகவுள்ளனவெனல் வந்தியாசுதன் பூரணாயுளையுடையவனெனல்போல் மயக்கமாமென அறிக.

வினா:—கடைவினாவிற்குக் கூறிய சதசத்தென்பது சத்தும் அசத்தும் ஏககாலத்தொன்றாயிருப்பதெனின் விரோதமாம். அங்ஙனமின்றிச் சத்தோடுகூடியபோது சத்தாகவும் அசத்தோடுகூடியபோது அசத்தாகவு மிருப்பதெனின் விரோதமில்லையேயெனின். (31)

விடை:—சதசத்தானது சத்தோடுகூடிச் சத்தாயிருக்குமெனின், சத்துஞ் சத்து மொன்றாய்த் திரிகாலத்தினும் உள்ளதாகிய உண்மைப்பொருளேயாகும் அது பின்னர் அசத்தாகுமென்பதும், அசத்தோடுகூடி அசத்தாயிருக்குமெனின் அசத்தும் அசத்தும் ஒன்றாய்த் திரிகாலத்தினுமில்

லாத இன்மைப்பொருளேயாகும் அது பின்னர்ச் சத்தாகுமென்பதும் ஒளியிருளாகும் இருளொளியாகுமெனல் போல் அசங்கதமாமென அறிக.

வினா:—சதசத்தென்பது சத்தோடுகூடிச் சத்துப்போலியாகவும் அசத்தோடுகூடி அசத்துப்போலியாகவுமிருப்பதேயன்றி வாஸ்தவ சத்தாகவும் வாஸ்தவ அசத்தாகவுமிருப்பதல்லவாயின் அசங்கதமாகாதேயெனின். (32)

விடை:—சத்துப்போலி சத்துக்கெதிர்மறையாகிய அசத்தாகும் அது அசத்துப்போலியாகவும், அசத்துப்போலி அசத்துக்கெதிர்மறையாகிய சத்தாகும் அது சத்துப்போலியாகவும் இருக்குமென்பது அசங்கதத்தினும் அசங்கதமாம். இஃதன்றிச் சதசத்தானது சத்தை விடுத்து அசத்தையடைதற்கும் அசத்தை விடுத்துச் சத்தையடைதற்கும் மத்தியில் அதற்கியற்கையிலக்கணம் சத்தாகவேனும் அல்லது அசத்தாகவேனுமிருக்கவேண்டும். இவ்விரண்டிற் சத்தெனினும் முற்கூறியபடியே சத்துஞ்சத்தும் ஏகமாய்ப் பிரஹ்மமொன்றே நித்தியமெனல் நிலைபெறும். அல்லது அசத்தெனினும் அஃதின்மைப்பொருளாய்ச் சத்தியமாகிய பிரஹ்மமொன்றே நித்தியமென நிலைபெறும். ஆதலின் சதசத்தாகவேனும் அல்லது சதசத்துப்போலியாகவேனும் சீவனும் மாயையும் நித்தியமென்பார்கொள்கை பிராந்தர்கொள்கையென அறிக.



வினா:—பதியிலக்கணம் பசுவையும் பாசத்தையும் நோக்கச்சத்தாகவும் தன்னிலையினுஞ் சத்தாகவும் உள்ளதெனவும், பசுவிலக்கணம் பதியைநோக்க அசத்தாகவும் பாசத்தைநோக்கச் சத்தாகவும் தன்னிலையில் சதசத்தாகவும் உள்ளதெனவும், பாசவிலக்கணம் பதியையும் பசுவையும் நோக்க அசத்தாகவும் தன்னிலையில் சத்தாகவும் உள்ளதெனவும் சிலர் திரிபதார்த்தவிலக்கணங்கள் கூறுகின்றமையால் அவைகளில் பசு பாசத்தைநோக்கச் சத்தென்பதையும் பாசம் தன்னிலையில் சத்தென்பதையும் ஒப்பிப் பசுவையும் பாசத்தையும் நித்தியமாகவுள்ளன வெனலாமேயெனின். (33)

விடை:-பதி சத்து; பசு சதசத்து; பாசம் அசத்து என நிர்ணயித்துக் கூறுநிற்பவர்க்குப் பசுவையும் பாசத்தையும் சத்தெனக் கூறுதல் முரணும். இஃதன்றி வாஸ்தவபுருடனை நோக்கக் கற்பிதபுருடர்களாகிய சொப்பனபுருடன் வந்தியாசுதனென்னு மிருவர்களில் சொப்பனபுருடன் வந்தியாசுதனையும் வந்தியாசுதன் தன்னையும் நோக்க வாஸ்தவபுருடனுவனோ? ஆகான் ஆகான். அதுபோலச் சத்தாயுள்ள பதியை நோக்க அசத்தாயுள்ள பசுபாசமென்னு மிரண்டில் பசு பாசத்தை நோக்கவும்,பாசந் தன்னை நோக்கவும்சத்தாகுமா? ஆகாது ஆகாது. யாதினாலெனின், அசத்தென்பது இல்லது,

லாத இன்மைப்பொருளேயாகும் அது பின்னர்ச் சத்தாகுமென்பதும் ஒளியிருளாகும் இருளொளியாகுமெனல் போல் அசங்கதமாமென அறிக.

வினா:—சதசத்தென்பது சத்தோடுகூடிச் சத்துப்போலியாகவும் அசத்தோடுகூடி அசத்துப்போலியாகவுமிருப்பதேயன்றி வாஸ்தவ சத்தாகவும் வாஸ்தவ அசத்தாகவுமிருப்பதல்லவாயின் அசங்கதமாகாதேயெனின். (32)

விடை :—சத்துப்போலி சத்துக்கெதிர்மறையாகிய அசத்தாகும் அது அசத்துப்போலியாகவும், அசத்துப்போலி அசத்துக்கெதிர்மறையாகிய சத்தாகும் அது சத்துப்போலியாகவும் இருக்குமென்பது அசங்கதத்தினும் அசங்கதமாம். இஃதன்றிச் சதசத்தானது சத்தை விடுத்து அசத்தையடைதற்கும் அசத்தை விடுத்துச் சத்தையடைதற்கும் மத்தியில் அதற்கியற்கையிலக்கணம் சத்தாகவேனும் அல்லது அசத்தாகவேனுமிருக்கவேண்டும். இவ்விரண்டிற் சத்தெனினும் முற்கூறியபடியே சத்துஞ்சத்தும் ஏகமாய்ப் பிரஹ்மமொன்றே நித்தியமெனல் நிலைபெறும். அல்லது அசத்தெனினும் அஃதின்மைப்பொருளாய்ச் சத்தியமாகிய பிரஹ்மமொன்றே நித்தியமென நிலைபெறும். ஆதலின் சதசத்தாகவேனும் அல்லது சதசத்துப்போலியாகவேனும் சீவனும் மாயையும் நித்தியமென்பார்கொள்கை பிராந்தர்கொள்கையென அறிக.



வினா :—பதியிலக்கணம் பசுவையும் பாசத்தையும் நோக்கச்சத்தாகவும் தன்னிலையினுஞ் சத்தாகவும் உள்ளதெனவும், பசுவிலக்கணம் பதியைநோக்க அசத்தாகவும் பாசத்தைநோக்கச் சத்தாகவும் தன்னிலையில் சதசத்தாகவும் உள்ளதெனவும், பாசவிலக்கணம் பதியையும் பசுவையும் நோக்க அசத்தாகவும் தன்னிலையில் சத்தாகவும் உள்ளதெனவும் சிலர் திரிபதார்த்தவிலக்கணங்கள் கூறுகின்றமையால் அவைகளில் பசு பாசத்தைநோக்கச் சத்தென்பதையும் பாசம் தன்னிலையில் சத்தென்பதையும் ஒப்பிப் பசுவையும் பாசத்தையும் நித்தியமாகவுள்ளன வெனலாமேயெனின். (33)

விடை:-பதி சத்து; பசு சதசத்து; பாசம் அசத்து என நிர்ணயித்துக் கூறுநிற்பவர்க்குப் பசுவையும் பாசத்தையும் சத்தெனக் கூறுதல் முரணும். இஃதன்றி வாஸ்தவபுருடனை நோக்கக் கற்பிதபுருடர்களாகிய சொப்பனபுருடன் வந்தியாசுதனென்னு மிருவர்களில் சொப்பனபுருடன் வந்தியாசுதன் தன்னையும் நோக்க வாஸ்தவபுருடனாவனா? ஆகான் ஆகான். அதுபோலச் சத்தாயுள்ள பதியை நோக்க அசத்தாயுள்ள பசுபாசமென்னு மிரண்டில் பசு பாசத்தை நோக்கவும்,பாசந் தன்னை நோக்கவும்சத்தாகுமா? ஆகாது ஆகாது. யாதினாலெனின், அசத்தென்பது இல்லது,

சத்தென்பது உள்ளது, இல்லதுஉள்ளதாகாதென்பது சித்தாந்தமானமையினென அறிக.

வினா:-பிராகபாவமாகிய கடம் பின் பாவமாகத் தோன்றுமென நையாயிகர்கள் கூறுகின்றபடி பசுவும் பாசமும் முன் அசத்தாயிருந்து பின் சத்தாகிய நித்தியப்பொருள்களாகுமேயெனின். (34)

விடை:—கடரூபசத்தி காரணமாகிய கபாலத்தில் அடங்கியிருக்கும்போது கடப்பிரதீதி அபாவமாயிருந்து பின் கபாலசையோகத்தால் விகாசமாகிப் பாவமாகத் தோன்றியதேயல்லாமல்அத்தியந்தம் காரணமில்லாதிருந்து தோன்றியதல்ல. அற்றன்றெனின் வந்தியாசுதனும் ககனாரவிந்தமுந் தோன்றவேண்டும். தோன்றாமையால் இன்மைப்பொருள் உண்மைப்பொருளாகுமெனல் மயக்கமாம். இஃதன்றி முன் அபாவமாக இருந்து பின் பாவமாகத் தோன்றிய கடத்துக்கு நையாயிகர் நாசமொப்பியதுபோல முன் அசத்தாயிருந்து பின் சத்தாகத் தோன்றினவெனக் கூறப்பட்ட பசுபாசங்கட்கும் நாசமொப்பவேண்டும். ஆதலால் பதியைப் போல பசுவும் பாசமும் நித்தியமென்னும் சத்கியாதிகள் கொள்கை அநுசிதமென விடுத்துப் பிரஹ்மமொன்றே நித்தியம், மற்றவைகள் அனித்தியமாகிய மித்தையென்னும் அநிர்வசனீயக்கியாதிகள் கொள்கையே உசிதமெனக் கொள்ளற்பாலதென அறிக.



[நூல் ௩௫]

இப்படித் தோன்றியொடுங்கிய பொய்ப்பொருள்கள் யாவும் மெய்ப்பொருளொன்றே யெனவும், அதுவே சுவபாவசித்தமாகவும் நிசமாகவுமிராநின்ற தன்வடிவமெனவும் அறிந்தவனே பிரஹ்மஞானியாம். இங்ஙனம் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

இதன்பொருள் வெளி.

வினா:—பொய்ப்பொருள் எங்ஙனம் மெய்பொருள்களாகுமெனின். (35)

விடை:-ஆரோபமாகிய இரச்சுசர்ப்பம் இப்பிவெள்ளி குற்றிமகன் முறையே அவைகளுக்கு அதிட்டானமாகிய இரச்சு இப்பி குற்றிக் கன்னியமாகாமல் இரச்சு இப்பி குற்றியேயாவதுபோல ஆரோபமாகிய பிரகிருதிமுதற் பௌதிகமீறாகிய தத்துவங்களனைத்தும் அதிட்டானமாகிய பிரஹ்மமொன்றேயாகுமென அறிக.

பிரமாணம்.

(சிவபுராணம் ஞானசங்கிதை ௰அ-வது அத்தியாயம்.)

குற்றியைக் கண்டு மானுடனென்றும், கயிற்றைக் கண்டு பாம்பென்றும், இப்பியைக் கண்டு வெள்ளியென்றும் சந்தே

சித்துஉண்மையுணர்ந்த பிறகு மானுடனல்ல குற்றியென்றும்,
பாம்பல்ல கயிறென்றும், வெள்ளியல்ல இப்பியென்றும் மனச்
சந்தேகம் நீங்கித் திடப்படுமாறு அஞ்ஞானத்தால் சிவனுக்கிர
ண்டாவதாகத் தோற்றும் பிரபஞ்சமுழுவதும் ஞானமுற்ற
போது முக்காலத்தினும் சிவனேயென்று தெரியும்.

(விவேகசூடாமணி.)

அலைநுரை குமிழி மற்று மாகிய சுழலை யாதி; பலபல
உருவமெல்லாம் பார்க்கிலோர் சலமே போல; அலையுறு தேக
மாதிய கங்கர மீறு யாவும்; நிலைபெறு சித்தே யாகும் நிம
லமாம் சித்த தொன்றே.

அபவாதநிரூபகம் முற்றிற்று.

சிதம்பரதேசிகன்றிருவடிவாழ்க.

---

உ

சிவமயம்.

ஓம்பரப்பிரஹ்மணேநம:

சிதம்பரதேசிகன் திருவடிவாழ்க.

# நானாசீவவாதக்கட்டளை வியாக்கியானம்.

## தத்துவவிவேசனநிரூபகம்.

---

### அவதாரிகை.

தத்துவம் (௮)ல் சகலர்க்கும் பொதுவாகவும் பிருத்தக்காகவும் எப்போதுந் தானாகவும் எப்போது மன்னியமாகவும் ஒருகாலத்திற் றானாகவும் ஒருகாலத்திற் றனக்கன்னியமாகவும் உள்ள தத்துவங்கள் இவையிவையென நிரூபிக்கின்றார்.

### (நூல் ௮)

தத்துவம் (௮)ல் பூதம் (௫) மாயை (௧) மாயாப்பிரதிவிம்பரான ஈசுவரன் (௧) பிரஹ்மம் (௧) ஆகிய இந்த எட்டும் சகலப்பிராணிகட்குஞ் சமுதாயமாக அனுபவிக்கப்படும். எங்ஙனமெனின், சகலர்க்கும் பிருத்வி இறக்கில் ஆதாரமில்லை. அப்பு விறக்கில் குளிர்ச்சியில்லை. தேயு விறக்கில் பாகமில்லை. வாயு விறக்கில் பிராணனியக்கமில்லை. ஆகாயமிறக்கில் அவகா

சமில்லை. மாயையும் மாயாப்பிரதிவிம்பரு மிறக்கில் சகல சமயங்கட்குந் தெய்வமில்லை. பிரஹ்மமில்லையாயின் சகலர்க்கும் அறிவில்லை. ஆதலால் இந்த எட்டும் எல்லோருக்குஞ் சமுதாயமாம்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| தத்துவம் (௩௬)ல் பூதம் (௫) மாயை (௧) மாயாப் பிரதிவிம்பரான ஈசுவரன் (௧) பிரஹ்மம் (௧) ஆகிய இந்த எட்டும் | வெளி. |

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| சகலப்பிராணிகட்கும் சமுதாயமாக அனுபவிக்கப்படும். | சகலஜீவர்கட்கும் பொதுவாக அனுபவிக்கப்படும். |

வினா:—இந்நூலாசிரியர் பஞ்சபூதம் மாயை ஈசுவரன் பிரஹ்மம் ஆகிய எட்டுத்தத்துவங்களும் பொதுவாக அனுபவிக்கப்படுமெனக் கூறிபடி பின்னர் அவைகளின் அனுபவங் கூறாமல் அனுபவஅபாவங்கூறியது முரணன்றோவெனின்.

விடை:-வெதிரேகமுகமாக எங்குப் புகையில்லையோ அங்கு நெருப்பில்லை யென்பதும், அன்னுவயமுகமாக எங்குப் புகையுண்டோ அங்கு நெருப்புண் டென்பதும் எளிதாயுணர்தற்பாலதாவதுபோல வெதிரேகமுகத்தால் பஞ்சபூதம் மாயை ஈசுவரன் பிரஹ்மாகிய எட்டுத் தத்துவங்களு மில்லன



அவகாசம், தெய்வம், அறிவு ஆகிய இவைகளில்லனவாகுமென்றபடி. அபாவமாக இராமல் ஆதாரமாகிய எட்டும் பாவமாக இருக்கின்றமையால் பிருதிவியாதிய எட்டுத்தத்துவங்களும் சகலஜீவர்கட்கும் பொதுவாகவேயிருந்து அனுபவிக்கப்படுகின்றனவென்பது அன்னுவயமுகத்தால் எளிதாகவுணர்தற்பாலதாகும் எனக் கருதிக் கூறியிருக்கின்றனர். ஆதலின் முரணன்றென அறிக.

வினா:—பிரமன், விஷ்ணு, உருத்திரன், சத்தி, கணேசன், குமரன், அக்கினி, பானு, சாத்தன், அருகன் முதலிய பலதெய்வங்களில் ஒவ்வொருதெய்வங்களை ஒவ்வொருமதஸ்தர்கள் தெய்வமாகக்கொண்டிருத்தலுமன்றிப் புற்று, மூங்கில், அரசு, எருக்குமுதலிய சிலஅசரவஸ்துக்களையும் சிலமதஸ்தர்கள் தெய்வமாகக் கொண்டிருத்தலினால் மாயோபாதிகனான ஈசுரன் இறக்கில் சகலசமயங்கட்கும் தெய்வமில்லையெனல் பொருந்ாதெனின். (2)

விடை:—சகலசீவர்களின் கன்மங்கட்கும் பலதாதாவாகிய ஈசுவரன் ஒருவனேயெனவும், சந்திரன், சூரியன், ஜீவன், ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி ஆகிய எட்டும் அவ்வீச்சுரன்வடிவமெனவும், சுருதிகள் கூறுகின்ற

ந்தவடிவங்களை ஆராதிக்கிறார்களோ அந்தந்தவடிவங்களாக விளங்கி யந்தந்தச் சமயிகட்குப் பலன்களைக் கொடுக்கும் ஈசுவரன் ஒருவனேயாகும். ஆதலின் பொருந்துமென அறிக.

வினா:— பிரஹ்மமில்லையாயின் சகலர்க்குமறிவில்லையெனின் சருவஞ்ஞனாகிய ஈசுவரனுக்கும் அறிவில்லாமற்போமோவெனின். (3)

விடை:—பிரதிவிம்பசூரியனுக் கதிட்டானமாகிய விம்பசூரிய னில்லையாயின் பிரதிவிம்பசூரியனும் பிரதிவிம்பசூரியப்பிரகாசமு மில்லாமற்போவதுபோல ஈசுவரனுக் கதிட்டானமாகிய பிரஹ்மமில்லையாயின் ஈசுரனும் ஈசுவரனுடைய சருவஞ்ஞத்துவமாகிய அறிவு மில்லாமற்போ மென்பதற் கையமின்றென அறிக.

வினா:—சூரியனுள்ளபரியந்தம் பிரதிவிம்பசூரியனுமிருப்பதுபோல நித்தியமாகிய பிரஹ்மமுள்ளபரியந்தம் பிரஹ்மப்பிரதிபலினர்களாகிய ஜீவேசுவரர்களுமிருப்பவர்கள். இங்ஙனமிராநின்ற ஜீவர்களையும் ஈசுவரனையும் அநித்தியர்களென்பது யாதினாலெனின். (4)

விடை:—பிரதிவிம்பசூரியன் தனக்கதிட்டானமாகிய விம்பசூரியன் நாசமின்றியிருக்கினும் ஆசிரயமாகிய சலம் நாசமாகும்போது தானும் நாசமாவதுபோல ஜீவேசுவரர்க்கதிட்டானமாகிய பிரஹ்மம் நாசமின்றிய நித்தியமாயிருக்கினும் ஆசிரயமாகிய அவித்தையும் மாயையும் நாசமாகிய போது ஜீவேசுவரர்களும் நாசமாய்விடுகின்றமையினென அறிக.



வினா:—அற்றேல் சிலமதஸ்தர்கள் ஈசுவரனை நித்தியராக விவகரிப்பது சுருதிக்கு விரோதமல்லவோவெனின். (5)

விடை:—அவர்கள் ஈசுவரசப்தத்துக்கு அதிட்டானம் ஆசிரயம் ஆபாசம் மூன்றுங் கூடியதாகப் பொருள்கொள்ளாமல் சச்சிதானந்த சிவசொரூபமாத்திரமாகப் பொருள்கொண்டு விவகரிப்பார்களாயின் விரோதமில்லையென அறிக.

(நூல் கஎ)

மற்றைய (உஅ) தத்துவங்களும் அவனவனுக்குப் பிருதக்காக அனுபவிக்கப்படும், அஃதெதனாலெனின் ஒருவனுக்குத் தூலசரீரமிறக்கில் எல்லோருக்கு மிறவாதபடியினாலும், சூட்சுமசரீரத்தில் ஒருவனுக்கு அங்க * வைகல்யம் வந்தால் எல்லாருக்கும் வாராதபடியினாலும், முத்தராயிருந்த சுகர் வாமதேவராதியர்கட்கு அவித்தையும் சீவனுமிறந்து போயிருக்க மற்றையர்க்கெல்லா மிறவாதபடியினாலும் இவ்

* பிருதக்கு-வேறு. * வைகல்யம்-குறைவு.

விருபத்தெட்டுத் தத்துவங்களும் பிருதக்கென்பதிற் சந்தேகமில்லை.

வினா:—ஒருவனுக்குத் தூலசரீரமிறக்கும்போது மற்றையர்க்கு மிறவாதது யாதினாலெனின். (6)

விடை:—தூலசரீரங்களையெடுத்தற்கு ஏதுவாகிய கன்மங்கள் ஒன்றுபோலொன்றிராமல் சில சொற்பகால அனுபவங்கட்கும் சில நீண்டகால அனுபவங்கட்கும் ஏதுவாகஇருத்தலினென அறிக.

வினா:—ஞானிகளாகிய சுகர்வாமதேவராதியோர் ஜீவர்களானமையால் அவர்கட்கு ஜீவனிறந்துவிடின் அவர்களு மிறந்தவர்களேயாவர்கள். அவர்கட்கு இறந்த ஜீவனுடைய அபாவானுபவம் உளதென்பது இறந்தவன் தன்னிழவுகொண்டாடுகிறானென்பதுபோல மயக்கமாமெனின். (7)

விடை:—அதிட்டானம் ஆசிரயம் ஆபாசமாகிய மூன்றுஞ் சேர்ந்துள்ளது ஜீவனாகும். ஜீவனாகச் சேர்ந்துள்ளவைகளிலொன்றாகிய ஆபாசத்திற்றோன்றிய கர்த்திருத்துவாதிய ஜீவத்துவங் களிறந்ததையே ஜீவனிறந்ததென நூல்கள் கூறுகின்றன. ஆதலின் ஜீவத்துவங்களிறந்துள்ள சுத்தஜீவன் அதிட்டானமாகிய பிரஹ்மமே நாமென்னும் பிரஞ்ஞைமாறாமல் ஜீவத்துவ அபாவங்களை யறிந்துகொண்டிருப்பதுபற்றி யங்ஙனங் கூறியது மயக்கமன்றென அறிக.



வினா:-சுகர்வாமதேவராதிய ஞானிகட்கு அவித்தையிறந்திருக்கில் அவித்தையின் காரியமாகிய விக்ஷேபமுமிறந்திருக்கவேண்டும். அங்ஙன மிறந்துவிட்டதாகக் காணப்படாமையால் அவர்கட்கு அவித்தை யிறந்ததென்பது அசம்பாவிதமெனின். (8)

விடை:—விக்ஷேபத்துக்குக் காரணம் அவித்தை கன்மமென இரண்டாம். இரண்டில் ஓர்காரணமாகிய அவித்தை கெட்டும் மற்றோர்காரணமாகிய கன்மங் கெடாதிருப்பதுபற்றி விக்ஷேபம் பிராரத்தகன்மமுள்ளபரிபந்த மிருக்கும். ஆதலின் அவித்தையிறந்ததென்பது அசம்பாவிதமல்லவென அறிக.

(நூல் ௩௮)

இத்தத்துவங்கள் முப்பத்தாறில் எப்போதுந் தானாகவே காணப்படுகிற தத்துவம் (௧). எப்போதுந் தனக்கன்னியமாகவே காணப்படுகிற தத்துவங்கள் (௭). தானாகவும் தனக்கன்னியமாகவு மனுபவிக்கப்படுகிற தத்துவங்கள் (௨௮).

(நூல் ௩௯)

அஃதெங்ஙனமெனின் அவத்தாத்திரய சாக்ஷியாகிய பிரஹ்மசைதன்னியம் எல்லா அவத்தையினும் தானாகவே விளங்குகையினாலும் மற்றத் தத்துவங்கள்போல அன்னியமாகக்

காணப்படாதபடியினுனும் பிரஹ்மசைதன்னிய மொன்றுமே தானுகக் காணப்படுகிறது. (வெளி)

வினு:—பிரஹ்மந் தானுகவே காணப்படுகிறதெனின் அதனைக் காணுதற்கு வேறோர் வினைமுதலாகிய சேதனம் வேண்டும். அற்றேல் பிரஹ்மந் திருசியப்பொருளாகுமேயெனின். (9)

விடை:—பிரஹ்மம் அசேதனமாகவும் அன்னியமாகவுமிருக்கில் அதனை அறிதற்கு வினைமுதலாகிய வேறோர் சேதனம்வேண்டும். அங்ஙனமின்றிச் சேதனமாகவும் தானுகவுமிருத்தலால் அதனை யறிதற்கு வேறுசேதனம் வேண்டுவதின்ரும். ஆதலின் பிரஹ்மந் திருசியமாகாதென அறிக.

வினு:—சேதனத்தை யறிதற்கு வேறோர்சேதனம் வேண்டுவதின்றென்பது எதுபோலுமெனின். (10)

விடை:—அப்பிரகாசமாகிய கடத்தை விளக்கிவைப்பதற்குப் பிரகாசமாகிய சூரியன் வேண்டும். பிரகாசமாகிய சூரியனை விளக்கிவைப்பதற்கு வேறுசூரியன் வேண்டுவதின்றென்பதுபோலுமென அறிக.

(நூல் சுய)

பஞ்சபூதம் மாயை மாயாப்பிரதிவிம்பராகிய ஏழும் தன்தன் தொழிலான பொறுத்தல் பிண்டீகரித்தல் தகித்தல் உலர்த்தல் இடங்கொடுத்தல் தாரவதாரம் பஞ்சகிருத்தியங்கள் ஒருகாலத்தினும் தன் தொழிலாகக் காணப்படாமையால் தனக்கன்னியமே யல்லாமற் ருனுகமாட்டா. வெளி.



வினு:—இவ்வேழு தத்துவங்களின் தொழில்கள் தன் தொழில்களாகக் காணப்படாதென்றது யாதினுலெனின்(11)

விடை:-மற்றத் தத்துவங்களில் நானென்னும்அகம்புத்தியுண்டாவதுபோல இவ்வேழு தத்துவங்களிலும் அஞ்ஞானகாலம் ஞானகாலமாகிய எந்தக்காலங்களினும் அகம்புத்தி உண்டாகாமையினென அறிக.

(நூல் சுக)

மற்றை (உ௮) தத்துவங்களுள் நான் பிராமணனுதிய வருணத்தன்; பிரமசரியமாதிய ஆச்சிரமி; நான் ஆண், பெண், கருவல், சிவலை, கட்டையன், நெட்டையன்; நான் பருத்தேனிளைத்தேனென்று தானுக வழங்கப்படுகிற தூலசரீரங்கள் ஆறு தத்துவங்களும் மற்றொருவேளையில் தனக்குப் புறம்புபட்டு என்மாடென்கன் றென்ருற்போலே என்சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத்தது; என்சரீரம் பிறந்திதனை நாளாயிற்றென்று வேருக வழங்கப்படுகின்றமையினுனும் நான் கண்டேன் கேட்டேன் பரிசித்தேன் வசனித்தேன் கொடுத்தேன் நடந்தேன் சங்கற்பித்தேன் நிச்சயித்தேன், இந்தப்பஞ

சத்திற்குச் சீவித்தேனென்று தானாக வழங்கப்படுகிற சூட்சும சரீரத்துவம்(உய)ம் மற்றொருவேளையிற் றனக்குப் புறம்புபட்டு என்னுடைமை என்விடென்றாற்போல என்கண் என்காது என்தொக்கு என்வாக்கு என்கை என்கால் என்மனம் என்புத்தி என்பிராணன் என்று வேறாக வழங்கப்படுகின்றமையினானும், நானறியேன் நானறிவேன் என்று தானாக வழங்கப்படுகிற அஞ்ஞானமும் ஜீவனும் மற்றொருவேளையிற் புறம்புபட்டு என்னஞ்ஞானம் என்ஜீவன் என்று வேறாக வழங்கப்படுகின்றமையினானும், இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் தானாகவும் தனக்கன்னியமாகவும் அனுபவிக்கப்படுகின்றனவாம்.

இதன்பொருள் வெளி.

(நூல் ௪௨)

சங்கை:-இந்த (௨௮) தத்துவங்களும் தானானால் சாக்ஷியைப்போல ஒருதன்மையாகத் தோற்றவேண்டுமேயல்லாமல் பஞ்சபூதங்களைப்போலத்தனக்கன்னியமாகத் தோற்ற நியாயமில்லை. தனக்கன்னியமானால் எப்போதும் புறம்பாகத் தோற்றவேண்டுமேயல்லாமல் தானாக வழங்கற்கு நியாயமில்லை. தானுமாய்த் தனக்கன்னியமுமாயிருக்குமெனல் இருட்டாதித்தியனென்றாற்போலும் வெள்ளாளதீக்ஷிதனென்றாற் போலும் விருத்தமாமெனின்.

இதன்பொருள் வெளி.



(நூல் ௪௩)

உத்தரம்:-பரமார்த்தமாகத் தானென்கின்றதொருவகையும் அத்தியாசத்தினாலே தானென்கின்றதொருவகையும் ஆக இருவகையுமுண்டு. சாக்ஷிசைதன்யத்தைத் தானென்கின்றது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக்கன்னியமாகிய இருபத்தெட்டையும் தானென்கின்றது கட்டையைக் கள்ளனென்றாற்போலும் பழுதையைப் பாம்பென்றாற்போலும் புத்திரதாராதிகளைத் தானென்றாற்போலும் அத்தியாசமேயன்றி உண்மையல்லாமையால் விருத்தமன்றாம்.

இதன்பொருள் வெளி.

வினா:-இருபத்தெட்டுத் தத்துவச்சேர்க்கையிலுள்ள ஜீவனாகிய ஞானி இருபத்தெட்டுத் தத்துவங்கட்கும் விலக்ஷணமாயுள்ள சாக்ஷிசைதன்னியத்தைத் தானென்பதும் அத்தியாசமல்லவோ வெனின். (12)

விடை:—ஜீவனுக்கு அதிட்டானம் ஆரோப மிரண்டுஞ் சொரூபமாயிருக்கினும் ஆரோபத்துக்கு அதிட்டானத்தைத் தவிரச் சொரூபமில்லாமையின் ஞானியாகிய ஜீவன் உபாதி கற்பிதமாகிய ஆரோப சொரூபத்தை வாதித்து அதிட்டான சொரூபமாக இருந்துகொண்டு சாக்ஷிசைதன்னியத்தைத் தானென்பது எதார்த்தமேயன்றி அத்தியாசமல்லவென அறிக.

வினு:—அத்தியாசமாவது யாதெனின். (13)

விடை:—தனதபாவாதிகரணத்திற் றனதவபாசம் அல்லது அதிட்டானசத்தையினும் விஷமசத்தையுடையதினவபாசம் அல்லதுபிராந்திஞானத்துக்குவிஷயமாயுள்ள மித்தையாவஸ்துவும் அதன்ஞானமுமென அறிக.

வினு:—அத்தியாசத்துக்கு உபாதானகாரணம் யாது? நிமித்தகாரணம் யாதெனின். (14)

விடை:—அதிட்டானத்தின் விசேஷரூபத்துள்ள அஞ்ஞானம் உபாதானகாரணமாம். சஜாதியவஸ்துஞானஜன்னியசமஸ்காரம், லோப பயமாதிய பிரமாதா (அந்தக்கரண) தோடம்,பித்தகாமாலையாதியபிரமாண(நேத்திரேந்திரிய)தோடம், இரச்சுவில் பூப்பிளவுத்துவம் தீர்க்கத்துவம் திரிவலையாகாரத்துவமும் சுத்தியில் சாகசிக்கியத்துவ (பிரகாசத்துவ)முமாகிய சாதிருசியரூபப் பிரமேய (பிரமாணத்தாலறிதற்கு யோக்கிய அதிட்டான) தோடம், இதுவென்னும் சாமானியரூபஞானம் ஆகிய ஐந்தும் நிமித்தகாரணமென அறிக.

வினு:—அத்தியாசத்துக்கு ஏது சொரூபம் காரியம் அவதி பலமாகிய ஐந்து மெவையெனின். (15)

விடை:-கீழே 14-வது விடையிற் கூறிய உபாதானகாரணம் நிமித்தகாரணங்களே ஏது. அனுத்மாக்களாகிய அஞ்



ஞானம் அஞ்ஞானதருமம் அகங்காரம் அகங்காரதருமம் இந்திரியம் இந்திரியதருமம் தேகம் தேகதருமமாகிய இவைகளுக்கும் இவைகளைப்பிரகாசிப்பிக்கும் ஆத்மாவுக்குமுள்ள தாதாத்மியம் சொரூபம். பிரியாப்பிரியமாதிய விவகாரங்கள் காரியம்; புத்திராதிகளிலுள்ள ஆத்மப்பிராந்தி அவதி. சனனமரண சம்சாரங்கள் பலம் என அறிக.

வினு:—அத்தியாசமெத்தனைவிதமாமெனின். (16)

விடை:—காரணாத்தியாசம் காரியாத்தியாசமென இரண்டுவிதமாமென அறிக.

வினு:—காரணாத்தியாசமாவது யாதெனின். (17)

விடை:—காரியப்பிரபஞ்சத் தோற்றமாகிய அத்தியாசத்துக்குக் காரணமாயுள்ள அஞ்ஞானத்தோற்றமென அறிக.

வினு:—பிரபஞ்சத்தோற்றத்துக்கு அஞ்ஞானங் காரணமாயிருப்பதுபோல அஞ்ஞானத்தோற்றத்துக்குக் காரணமாக வேறு அஞ்ஞானமில்லாமையால் அஞ்ஞானத்தோற்றம் அத்தியாசமெனல் பொருந்தாதெனின். (18)

விடை:-ரூபவிஷயங்களை விளக்கிவைத்தற்குக் காரணமாயுள்ள தீபம் தன்னையும் விளக்கிவைத்தற்குக் காரணமாயிருப்பதுபோலப் பிரபஞ்சாத்தியாசத்துக்குக் காரணமாயுள்ள

அஞ்ஞானமே தன் அத்தியாசத்துக்குங் காரணமாயிருக்கின்றமையால் அஞ்ஞானத்தோற்றமும் அத்தியாசமெனல் பொருந்துமென அறிக.

வினா:—காரியாத்தியாசமாவது யாதெனின். (19)

விடை:—காரணமாகிய அஞ்ஞானத்தாற் றோன்றுந் தேகாதிப்பிரபஞ்சங்கள் காரியங்களானமையால் இவைகளின் தோற்றமாகிய அத்தியாசம் காரியாத்தியாசமாகும். இவ்வத்தியாசமும் ஞானாத்தியாசம் அருத்தாத்தியாசமென இரண்டாம். இவ்விரண்டில் ஒன்றில் மற்றொன்றின் பிரதீதி ஞானாத்தியாசமாகும். ஞானாத்தியாசமும் பரோக்ஷம் அபரோக்ஷமென்னும் பேதத்தாலிரண்டாம். இவ்விரண்டில் வந்நிசூந்ய தேசத்திலுண்டாகின்ற வந்நியின், அநுமிதிவடிவப் பிரமஞானமும் வஞ்சகனுரையால் உண்டாகின்ற வந்நியின் சப்தப்பிரமஞானமும் பரோக்ஷப் பிரமஞானமாம். பரோக்ஷப்பிரமஞானமுண்டாகிறவிடத்து அநிர்வசநீயவிஷயத்தினுணர்ச்சி அங்கீகாரமில்லை. ஆனால் அசத்தாகிய விஷயத்தினுணர்ச்சி அங்கீகாரமாம். சுத்திரஜதம் ரச்சுசர்ப்ப முதலியவைகளின் பிரதீதி அபரோக்ஷப்பிரமஞானங்களாகும். இந்தப் பிரமஞானங்களுக்கு விஷயமாயுள்ளவை அருத்தாத்தியாசங்களாகுமென அறிக,



வினா:—அருத்தாத்தியாசங்களெத்தனைவிதமாமெனின். (20)

விடை:-கேவலசம்பந்தாத்தியாசம் சம்பந்தவிசிட்டசம்பந்தியத்தியாசம் கேவலம் தருமாத்தியாசம் தருமவிசிஷ்டதருமியத்தியாசம் அந்நியோந்நியாத்தியாசம் அந்நியதராத்தியாசமென்னும் பேதத்தால் ஆறுவிதமாம். அல்லது சொரூபாத்தியாசம் சம்சர்க்காத்தியாசமென்னும் பேதத்தால் இரண்டுவிதமாம். முற்சொல்லிய ஆறத்தியாசங்களுள் ஆன்மாவில் அனான்மாவின் அத்தியாசங்கள் சொரூபாத்தியாசத்தினும் அனான்மாவில் ஆன்மாவின் அத்தியாசம் சம்சர்க்காத்தியாசத்தினும் அடங்குமென அறிக.

வினா:-சொரூபாத்தியாசமாவது யாது சம்சர்க்காத்தியாசமாவது யாதெனின். (21)

விடை:—யாதொரு பதார்த்தத்தின் சொரூபம் சுத்தியில் ரஜதம்போல மற்றொன்றில் அநிர்வசநீயமாகத் தோன்றுமோ அது சொரூபாத்தியாசமாம். யாதொரு பதார்த்தத்தின்சொரூபம் வியாவகாரிகமாகவேனும் அல்லது பாரமார்த்திகமாகவேனும் எதிரிலிருக்கத் தருப்பணத்தில் முகம்போல மற்றொன்றில் அதன் சம்பந்தமாத்திரம் அநிர்வசநீயமாகத் தோன்றுமோ அது சம்சர்க்காத்தியாசமென அறிக.

வினு:—சொரூபாத்தியாசத்தினும் சம்சர்க்காத்தியாசத்தினும் அடங்குமென முற்கூறப்பட்ட ஆறத்தியாசங்களில் கேவலசம்பந்தாத்தியாசமாவது யாதெனின். (22)

விடை:—அனுன்மாவில் ஆன்மாவின் அத்தியாசமென அறிக.

வினு:—இவ்வத்தியாசத்தைச் சம்பந்தாத்தியாச மென்றது யாதினுல்; இதற்கு உபமானங்களெவை? இவ்வத்தியாசானுபவமெங்கே காணப்படுகிறதெனின். (23)

விடை:—ஆன்மா அத்தியஸ்தமாகிறதில்லை. ஆன்மாவின் சம்பந்தமாத்திரம் அத்தியஸ்தமாகிறது. ஆதலின் சம்பந்தாத்தியாச மென்றதாகும். தருப்பண முகத்தோற்ற ரவில் தருப்பணமும் முகமும் யாதொருசம்பந்தமுமின்றித் தனித்தனியே இரண்டும் வியாவகாரிகமாக இருக்க முகத்தின் தாதான்மிய சம்பந்தம் தருப்பணத்திலும் சிவப்புவஸ்தி ரமென்னுந்தோற்றரவில் குசும்பாத்திரவியத்திலுள்ள சிவப்பு நிறத்தின் தாதான்மியசம்பந்தம் வஸ்திரத்தினும், சிவப்புப் படிகமென்னுந் தோற்றரவில் செம்பரத்தம் புட்பத்தினுள்ள சிவப்புநிறத்தின் தாதான்மியசம்பந்தம் படிகத்தினும் அநிர் வசநீயமாகத் தோன்றுதல் உபமானங்களாகும். நானிருக் கிறேன் அல்லது அறிகிறேன் என்னுந் தோற்றரவில் நானென்



றெழுந்த அனுன்மாவாகிய அகங்காரத்தில் இருக்கிறது அல்லது விளங்குகிறது எனச்சத்துரூபம், அல்லது சித்துரூபம் அத்தியஸ்தமாகாமல் சத்துரூபசித்துரூப தாதான்மியசம்பந்தமாத்திரம் அத்தியஸ்தமாகின்ற அனுபவமும் கடமிருக்கிறது விளங்குகிறதென்னுந் தோற்றரவில் அசேதனமாகிய கடத்தில் இருக்கிறது விளங்குகிறதென சேதன ஆன்மாவின் சத்துரூபம் சித்துரூபம் அத்தியஸ்தமாகாமல் அவைகளின் தாதான்மிய சம்பந்தமாத்திரம் அத்தியஸ்தமாகின்ற அனுபவமுங் காணப்பகிறதென அறிக.

வினு:—ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகிறதில்லையென்றது யாதினுலெனின். (24)

விடை:—அத்தியஸ்தமாவதாகிய வஸ்துக்களனைத்தும் பூர்வமில்லாதவைகளும், ஞானத்தாற் பாதமாகின்றவைகளும், பிராக்திஞானத்துக்கு விஷயமாகின்றவைகளுமேயாகும். ஆன்மாவின் சொரூபம் அங்ஙனமின்றி அனுதியாதலால் பூர்வமுள்ளதும், நித்தியமாதலால் ஞானதீதாற் பாதமாகாததும், சத்தாகவும் சித்தாகவுமுள்ளதானமையால் பிராந்திஞானத்துக்கு விஷபமல்லாததுமா யிருத்தலினென அறிக.

வினு:—அனுன்மாவில் ஆன்மாவின் சம்பந்தமாத்திரம் அத்தியஸ்தமாகிறதெனின், அதிட்டானமாகிய அனுன்மா வியாவகாரிகசத்தையாக இருக்கிறது. அங்ஙனமே ஆன்மா

வின் சம்பந்தமும் வியாவகாரிகசத்தையாகவிருக்கிறது. பிராதிபாசகசத்தையன்று. சம்பந்தம்பிராதிபாசிகசத்தையாமேல் பிரமஜ்ஞானத்தாலன்றிப் பாதமாகவேண்டும். அங்ஙனமாகாமையின் அனான்மாவும் ஆன்மாவின் சம்பந்தமும் சமசத்தையாகும். ஆதலால் அதிட்டானத்தின் சமசத்தையுடையதின் அவபாசம் அத்தியாச இலக்கணமாகாதெனின். (25)

விடை:—ஆன்மாவின் சம்பந்தம் அத்தியாசமென்றதற்குத் தாற்பரியம்சம்பந்தவிசிட்டம் அத்தியாசமாம். விசேஷிய பாகத்துக்குப் பாரமார்த்திகசத்தை யிருத்தலால் விசிட்டத்துக்கும் பாரமார்த்திகசத்தையுண்டு. ஆதலால் அதிட்டானம் வியாவகாரிகசத்தையும் அத்தியஸ்தம் அதற்கு விஷமசத்தையாகிய பாரமார்த்திகசத்தையுமாய் அத்தியாச இலக்கணம் சம்பவிக்கிறதென அறிக.

வினா:—சம்பந்த விசிட்டத்தைச் சொரூபதிருஷ்டியால் பாரமார்த்திகசத்தையாகக் கொள்ளில் ஞானத்தாற் பாதமாகாததாயும் அல்லது வியாவகாரிக சத்தையாகக்கொள்ளில் அதிட்டானசத்தைக்கு விஷமசத்தையல்லாததாயு மிருத்தலின் இரண்டு சத்தைகளிலெந்தச்சத்தையாகக் கொள்ளினும் அத்தியாச இலக்கணம் பொருந்தாமல் ஆசங்கை நிகழுகிறதெனின். (26)



விடை :–சத்தியத்திற்குச் சத்தியம் பிராணன்கள் சத்தியம். அவற்றிற்கு இது சத்தியமென்று சுருதியிலெழுதப்பட்டிருக்கின்றமையால் சத்தைகளில் அபகிருஷ(தாழ்வான)சத்தைகள் உத்கிருஷ (உயர்வான) சத்தைகளென இருவகையுண்டு. சொப்பன பதார்த்தங்களாகிய பிராதிபாசிகசத்தைகளும் அபகிருஷ உத்கிருஷமென இருவகைச் சத்தைகளாகும். இவ்விருவகையில் எவை சொப்பனத்திற்றானே பாதமாய் விடுகின்றனவோ அவை அபகிருஷ சத்தைகளாகும். எவை சொப்பனத்திற் பாதமாகாமல் சாக்கிரத்தில் பாதமாகின்றனவோ, அவை உத்கிருஷ சத்தைகளாகும். இங்ஙனமே சாக்கிரத்திலுள்ள வியாவகாரிகசத்தைகளும் அபகிருஷ உத்கிருஷமென இருவகைச் சத்தைகளாகும். அவைகளில் எவை சாக்கிராவத்தையிலிருந்து சுழுத்தியவத்தையில் தோற்றாமற் போகின்றனவோ அவை அபகிருஷ சத்தைகளாகும். எவை சாக்கிராவத்தையினும் சுழுத்தியவத்தையினும் இருக்கின்றனவோ அவை உத்கிருஷ சத்தைகளாகும். அதிட்டானமாகிய அகங்காரம் சாக்கிராவத்தையிலிருந்து சுழுத்தியவத்தையிற் றோன்றாமல் போகின்றமையால் அபகிருஷ சத்தையும், சம்பந்தவிசிட்டமாகிய சீவன் சாக்கிராவத்

தையினும் சுழுத்தியவத்தையினு மிருக்கின்றமையால் உத்கிருஷ சத்தையுமாகின்றன. ஆதலால் ஒன்றற்கொன்று விஷம சத்தைகளாய் அத்தியாசம் சம்பவிக்கிறதென அறிக.

* வினா:—சம்பந்தவிசிட்ட சம்பந்தியத்தியாசமாவது யாதெனின். (27)

விடை:-ஆன்மாவில் அனான்மாவின் சம்பந்தமும் சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாவதென அறிக.

வினா:—இவ்வத்தியாசத்தின் அனுபவமெங்கே காணப்படுகிறதெனின். (28)

விடை:-சுத்திரஜதத்தோற்றரவில் சுத்தியில் ரஜதத்தின் சம்பந்தமும் அதன் சொரூபமும் அநிர்வசநீயமாகத் தோன்றுதல்போல நான் அஞ்ஞனென்னுந் தோற்றரவில் அகஞ்சத்தார்த்தமாகிய சுத்தசைதன்னியத்தினிடத்தில் அஞ்ஞானத்தின் சம்பந்தமும் அதன்சொரூபமும் அத்தியஸ்தமாகிற அனுபவங் காணப்படுகிறதென அறிக.

---

* விசிட்டமெனினும் சகிதமெனினும் ...



† வினா:-கேவல தருமாத்தியாசமாவது யாதெனின். (29)

விடை:—ஆன்மாவில் அனான்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாமல் அதன் தருமமாத்திரம் அத்தியஸ்தமாவதென அறிக.

வினா:—தருமமாவது யாதெனின். (30)

விடை:—சுதந்தரமாக இராமல் அந்நியாசிரிதமாக இருப்பது எதுவோ அதுவென அறிக.

வினா:—கேவல தருமாத்தியாசத்தின் அனுபவமெங்கே காணப்படுகிறதெனின். (31)

---

† பிரமநிஷ்ட ஸ்ரீபீதாம்பரஜீயவர்களால் இந்துஸ்தானி பாஷையில் மொழிபெயர்க்கப்பட்ட பஞ்சதசி 7-வது பிரகரணம் திருப்திதீபம் 189-வது சுலோகத்துச்கு வரைந்த டிப்பணத்தில் நான் கர்த்தா நான் போக்தாவென்பது முதலிய அந்தக்கரண தருமங்கள் சேதனத்தினிடத்தி லத்தியஸ்தமாவது கேவல தருமாத்தியாசமென் றெழுதப்பட்டிருக்கிறது. இந்தப்பிரமநிஷ்ட ஸ்ரீபீதாம்பரஜீயவர்களே செய்தருளிய விசாரசந்திரோதயம் 6-வது கலையாகிய பிரபஞ்சமித்தியாவர்ணநத்தில் உள்ள அத்தியாசங்களுக்கெழுதிய டிப்பணத்தில் அந்தக்கரணத்தின் கர்த்திருத்துவாதி தருமங்களும் சொரூபமும் அத்தியஸ்தமாகின்றது. ஆகையால் இது தர்மசகித தருமியத்தியாசமென் றெழுதப்பட்டிருக்கிறது.

விடை:—சருக்கரை கைக்கிறதென்னுந் தோற்றரவில் கைப்பினைத் தருமமாகவுடைய லவணந் தோற்றரவாகாமல் கைப்பாகிய தருமமாத்திரம் அநிர்வசநீயமாகக் காணப்படுகிறதுபோல நான் நிச்சயித்தேன் நான் சிந்தித்தேன் நான் இச்சித்தேன் என்னுந் தோற்றரவில் நிச்சயமாதிய தருமங்களையுடைய அந்தக்கரணம் நான் அந்தக்கரணமென அத்தியஸ்தமாகாமல் நிச்சயமாதிய தருமங்கள் மாத்திரமாகவும், நான் குருடு நான் செவிடு நான் கண்டேன் கேட்டேன் நான் பேசினேன் நான் நடந்தேன் என்னுந் தோற்றரவில் குருடு செவிடாதிய தருமங்களையுடைய இந்திரியங்கள் நான் சக்ஷு நான் சுரோத்திரம் நான் வாக்கு நான் பாதமென அத்தியஸ்தமாகாமல் குருடு செவிடாதிய தருமங்கள் மாத்திரமாகவும் அந்தக்கரண உபகித சேதனத்தினிடத்தில் அத்தியஸ்தமாவதும் நான் பருத்தேன் நான் இளைத்தேன் நான் கருப்பு நான் சிவப்பு என்னுந் தோற்றரவில் பருத்தலிளைத்தலாதிய தருமங்களையுடைய தேகமானது நான் தேகமென அத்தியஸ்தமாகாமல் பருத்தலிளைத்தலாதிய தருமங்கள்மாத்திரம் தேகவுபகித சேதனத்தினிடத்தி லத்தியஸ்தமாவதுமாகிய அனுபவங் காணப்படுகிறதென அறிக.

வினா:—தருமசகித தருமியத்தியாசமாவது யாதெனின். (32)



விடை:-ஆன்மாவினிடத்தில் அனான்மாவின் தருமமும் சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாவதென அறிக.

வினா:--இவ்வத்தியாசானுபவ மெங்கே காணப்படுகிறதெனின். (33)

விடை:—நான் மனுஷ்யன் நான் பாலகன் நான் குமரன் நான் பிராமணனென்னுந் தோற்றரவில் மனுஷ்யத்துவாதிய தர்மசகிததேகமானது அந்தக்கரண இந்திரியங்களின் உபகித சேதனத்தினிடத்திலே அத்தியஸ்தமாகின்ற அனுபவங் காணப்படுகிறதென அறிக.

வினா:-அந்நியோன்னியாத்தியாசமாவது யாதெனின். (34)

விடை:-ஆன்மா அனான்மாக்களுக்குப் பரஸ்பரம் உள்ள அத்தியாசமென அறிக.

வினா:—இவ்வத்தியாசானுபவ மெங்கே காணப்படுகிறதெனின். (35)

விடை:—மேகத்திற் சந்திரனோடுகிறானென்னுந் தோற்றரவில் மேகத்தின் தீவிரகதி சந்திரனினும் சந்திரன்றன் மந்தகதி மேகத்தினும், இது ரஜிதமென்னும் சுத்திகாரஜிதத் தோற்றரவில் ரஜிதத்தின் சொரூபம் சுத்தியினும் இதுவென்னும் சுத்தியின் சாமானிய தருமசம்பந்தம் ரஜிதத்தினும்

ஓடத்திருப்பவனுக்கு ஓடத்தின் செல்லுகை தீரத்திருக்கும் விருக்ஷமாதிகளினும், விருக்ஷாதிகளின் செல்லுகையின்றிய நிலைமை ஓடத்தினும் தப்தாயபிண்டத் தோற்றரவில் இரும்பின் அகல நீள கனம் அக்கினியினிடத்தினும், அக்கினியின் பிரகாசாதிகள் இரும்பினும் அநிர்வசநீயமாகத் தோன்றுதல் போல யான்றானறிகிறேன் நீதானறிகின்றாயென்னுந் தோற்றரவில் யான் நீயென்னுஞ் சொற்களின் பொருளாய் வியபிசாரியாயுள்ள சீவனது சொரூபம் தான்தானென்றெல்லாவற்றினு மிராநின்ற கூடத்தரிடத்தினும் அறிகிறதாகிய கூடத்தரது சம்பந்தம் யான் நீயென்னும் ஜீவனிடத்தினும் அத்தியஸ்தமாகின்ற அனுபவங் காணப்பகிறது. இஃதன்றி அனான்மாவின் தர்மமாகிய ஜடத்துவம் துக்கத்துவம் துவைதசகித்துவங்களானவை ஆன்மாவின் தர்மமாகிய சித்துத்துவம் ஆனந்தத்துவம் அத்துவிதத்துவங்களில் சொரூபமாக அத்தியஸ்தமாய் அவற்றை மறைக்கின்றன. அதனால் அகஞ்சத்தார்த்தமாகிய ஆன்மாவில் சித்ரூபன் ஆனந்தரூபன் அத்துவிதரூபனென்னு ஞானமுண்டாகாமல் நான் சடன் துக்கி நான் ஈசுராதிகளினும் வேறாயிருக்கிறேனென்னு ஞானமுண்டாகிறதும் ஆன்மாவின் தர்மமாகிய சித்துத்துவம் ஆனந்தத்துவம் அத்துவிதத்துவங்களானவை அனான்மாவின் தர்மமாகிய ஜடத்துவம் துக்கத்துவம் துவைதசகிதத்துவங்களில்



சம்பந்தவாயிலாக அத்தியஸ்தமாய் அவற்றை மறைக்கின்றன. அதனால் நானென்றெழாநின்ற அகங்காரமாகிய அனான்மாவில் நான் ஜடனாயும் துக்கியாயும் ஈசுராதிகளினும் வேறாயுமிருக்கிறேனென்னும் ஞானமுண்டாகாமல், நான் விளங்குகிறேன் நான் சுகி நான் ஏகனென்னும் ஞானமுண்டாகிறதுமாகிய அனுபவங் காணப்படுகிறது. இஃதுமன்றிப் பிரஹ்மத்துக்கும் மாயாப்பிரதிவிம்பனாகிய ஈசுவரனுக்கும் பரஸ்பரம் அத்தியாசமுண்டாகிறது. யாங்ஙனமெனின், பிரஹ்மத்தின் சத்தியத்தன்மை அவிசாரதிருஷ்டியில் சம்சர்க்க (சம்பந்த)வாயிலாக ஈசுவரனிடத்தில் ஈசுவரனுண்டென அத்தியஸ்தமாகிறது. மாயாப்பிரதிவிம்பனாகிய ஈசுவரனது சகத்காரணத்தன்மை பிரஹ்மத்தினிடத்தில் பிரஹ்மம் ஜகத்காரணமென அத்தியஸ்தமாகிறதென அறிக.

வினா:—அந்நியதராத்தியாசமாவது யாதெனின். (36)

விடை:—ஒன்று ஆன்மாவில் அனான்மாவின் அத்தியாசமும், மற்றொன்று அனான்மாவில் ஆன்மாவின் அத்தியாசமுமாம். அனான்மாவில் ஆன்மாவின்சொரூபம் அத்தியஸ்தமாகிறதில்லை. ஆன்மாவில் அனான்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாம். ஆதலின் இவ்விரண்டில் ஒன்றன் அத்தியாசமாம். இது சொரூபாத்தியாசத்தி லடங்குமென அறிக.

வினா:—அன்னியதராத்தியாசானுபவ மெங்கே காணப்படுகிறதெனின். (37)

விடை; யாதொரு உத்தேசமும் சத்தமுமின்றி அகங்காரம் நானென்றெழாநின்றபோது அஞ்ஞானஉபகிதசேதனமாகிய ஆன்மாவில் அனான்மாவாகிய சாமானியஅகங்காரம் அத்தியஸ்தமாகின்ற அனுபவங் காணப்படுகிறதென அறிக.

விடை:—வேதாந்தசூளாமணியிற் கூறப்படுகிற மித்தை இதரம் இதரேதரம் சத்தியம் நிருபாதிகம் சோபாதிகம் தத்தருமம் சம்பந்தமாத்திரமென்னு மெட்டத்தியாசங்களும் இவ்வாறத்தியாசங்களு ளடங்குமோவெனின் (38)

விடை:—மித்தை இதரம் இதரேதரம் சத்தியம் ஆகிய நான்கும் தருமாத்தியாசத்தினும், சோபாதிகம் தத்தருமமாகிய இரண்டும் தருமசகிததருமியத்தியாசத்தினும், நிருபாதிகம் அந்நியதராத்தியாசத்தினும் சம்பந்தமாத்திரம் சம்பந்தசகித சம்பந்தியத்தியாசத்தினு மடங்குமென அறிக.

(நூல் ௪௪)

ஆகையால் அஞ்ஞானகாலந் தொடங்கி தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள் (௭). இப்படிப்பட்ட விவேகம் உண்டாகியபின்பு தானல்லவென்று காண...



துவங்கள் (௨௮). ஆகிய இந்த (௩௫) தத்துவங்களையும் அததற்குள்ள குணங்குறிகளுடனே கூட்டிக் காண்கின்ற அறிவானது கடத்தைப் பார்க்கின்றவன் கடத்துக்குப் புறம்பாகவேயிருந்து கடத்தைப் பார்க்கின்றதுபோல அவைகட்கன்னியமாகவேயிருந்து அவைகளை அறிகிறதென்றும் முப்பத்தாறுந்தத்துவமாகிய அதுவே தானென்றும் தானே பரமசிவமென்றுங் கலக்கமறத் தெளிந்தவனே சிவதரிசனமுடையவனாம்.

| (பதம) | (பொருள்) |
|---|---|
| ஆகையால் அஞ்ஞானகாலந் தொடங்கித் தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள் (௭). இப்படிப்பட்ட விவேகம் உண்டாகிய பின்பு தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள் (௨௮) ஆகிய (௩௫) தத்துவங்களையும் | (வெளி.) |

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அததற்குள்ள | அந்தந்தத் தத்துவங்களுக்கிராநின்ற |
| குணங்குறிகளுடனே | பண்புகள் அடையாளங்களோடு |
| கூட்டிக்காண்கின்ற | சேர்த்துப்பார்க்கின்ற |
| அறிவானது | அறிவானது |

வினு:—(௩௫) தத்துவங்களுங் குணங்குறிகளுடையன வாயின் மாயைக்கும் அவித்தைக்கும் குணங்குறிகளெவை யெனின். (39)

விடை:—மாயைக்கு வியாவகாரிக நாமரூப பரிணாமம் அகடிதகடிதசாமர்த்தியம் குணங்களாம். இவைகளோடு ஈசுராச்சிரயம் அநிர்வாச்சியசொரூபம் குறிகளாம். அவித்தைக்குப் பிராதிபாஸிக நாமரூபபரிணாமம் எதார்த்தத்தை மறைத்தல் குணங்களாம். இவைகளோடு ஜீவாசிரயம் அநிர்வாச்சியசொரூபம் குறிகளென அறிக.

வினு:—ஈசுரனுக்கும் ஜீவனுக்கும் குணங்குறிகளெவை யெனின். (39)

விடை:—ஈசுரனுக்குச் சருவஞ்ஞத்துவாதிகள் குணங்களாம். இவைகளோடு மாயோபாதிக சிற்சாயாமயமாயிருத்தல் குறிகளாம். ஜீவனுக்குக் கிஞ்சிஞ்ஞத்துவ *கர்த்திருத்துவாதிகள் குணங்களாம். இவைகளோடு அவித்தையோபாதிக சிற்சாயாமாத்திரமாயிருத்தல் குறிகளென அறிக.

வினு:—சூட்சுமசரீரமாகிய (௨௰) தத்துவங்களில் உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்காரமாகிய ஐந்துதத்துவங்கட்குங் குணங்குறிகளெவையெனின். (40)

*கர்த்திருத்துவம் காரியத்தி னுபாதானஞானம்,செய்யும்விருப்பம், முயற்சியாகியதன்மை.



விடை:—உள்ளத்துக்குச் சகலகேள்விகளுக்கு மிடங்கொடுத்தல் குணமாம். இதனோடு ஆகாயபூதசத்தவாம்சமாய் உச்சியிலிருத்தல் குறியாம். மனதுக்கு இராகத்துவேஷசங்கற்பவிகற்பாதிகள் குணங்களாம். இவைகளோடு வாயுபூதசத்துவாம்சமாய்க் கண்டத்திருத்தல் குறியாம். புத்திக்கு விவேகம் அவிவேகம் இச்சை பத்தி சிரத்தை நிச்சயமாதிகள் குணங்களாம். இவைகளோடு அக்கினிபூத சத்துவாம்சமாய் இருதயத்திருத்தல் குறியாம். சித்தத்துக்கு விடயசிந்தனைகள் ஏகாக்கிரம் குணங்களாம். இவைகளோடு அப்புபூதசத்துவாம்சமாய் நாபியிலிருத்தல் குறியாம். அகங்காரத்துக்கு அபிமானம் குணமாம். இதனோடு பிருதிவிபூதசத்துவாம்சமாய் சர்வாங்கங்களிலு மிருத்தல் குறியாமென அறிக.

வினு:—புத்திக்குக் குணங்களாகச் சொல்லிய இச்சை பத்தி சிரத்தையென்பவை யெவையெனின். (41)

விடை:—புத்தியில் சௌசாதிக்கிரியை செய்யவேண்டுமென் றுதயமாவது இச்சையாம். குருவினிடத்தினும் ஈசுவரனிடத்தினும் உதயமாகின்ற பிரீதி பத்தியாம். குருவாக்கிய வேதவாக்கியங்களிலுள்ள நம்பிக்கை சிரத்தையாமென அறிக.

வினா:—சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்களாகிய ஐந்து தத்துவங்கட்கும் குணங்குறிகளெவையெனின்.

விடை:—சுரோத்திரத்துக்குச் சத்தமறிதல் குணமாம். இதனோடு ஆகாயபூதசத்துவாம்சமாய்க் கர்ணகோளகத்திருத்தல் குறியாம். துவக்குக்குப் பரிசமறிதல் குணமாம். இதனோடு வாயுபூதசத்துவாம்சமாய்ச் சர்வாங்கங்களினுமிருத்தல் குறியாம். சக்ஷுவுக்கு உருவமறிதல் குணமாம். இதனோடு அக்கினிபூதசத்துவாம்சமாய்க் கருவிழிமத்தியிலிருத்தல் குறியாம். சிங்குவைக்கு ரசமறிதல் குணமாம். இதனோடு அப்புப்பூத சத்துவாம்சமாய் நாவினுனியிலிருப்பது குறியாம். ஆக்கிராணத்துக்குக் கந்தமறிதல் குணமாம். இதனோடு பிருதிவிபூத சத்துவாம்சமாய் நாசிதுனியிலிருப்பது குறியாமென அறிக.

வினா:—வியானன், பிராணன், அபானன், சமானன் உதானன் என்னும் வாயுக்களாகிய ஐந்து தத்துவங்கட்கும் குணங்குறிகளெவையெனின். (43)

விடை:—வியானனுக்குச் சரீரத்தைத் தாங்குதல் குணமாம். இதனோடு ஆகாயபூத இராசதாம்சமாய்ச் சர்வாங்களினும் வியாபித்திருத்தல் குறியாம். பிராணனுக்குப் பலம் பலமின்மை குணங்களாம். இவைகளோடு வாயுபூத இராச



தாம்சமாய் இருதயத்திற் சலனரூபமாயிருத்தல் குறியாம். அபானனுக்கு உண்ட அன்னாதிகளைச் சீரணிப்பித்தல் குணமாம். இதனோடு அக்கினிபூத இராசதாம்சமாய்க் குதத்திலிருத்தல் குறியாம். சமானவாயுக்கு அன்னசாரங்களை நாடிகளிற் சேர்ப்பித்தல் குணமாம். இதனோடு அப்புபூத இராசதாம்சமாய் நாபியிலிருத்தல் குறியாம். உதானவாயுவுக்கு அன்னாதிகளை யுதப்பித்தள்ளுதல் குணமாம். இதனோடு பிருதிவிபூத இராசதாம்சமாய்க் கண்டத்திருத்தல் குறியாமென அறிக.

வினா:—வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தமென்னுங் கன்மேந்திரியங்களாகிய ஐந்து தத்துவங்கட்குங் குணங்குறிகளெவையெனின். (44)

விடை:—வாக்குக்கு வசனித்தல் குணமாம். இதனோடு ஆகாயபூத இராசதாம்சமாய் வாயில் நாநுனியாதிய அட்டதானங்களையும் பற்றியிருத்தல் குறியாம். பாணிக்கு இடுதலேற்றலாதிகள் குணங்களாம். இவைகளோடு வாயுபூதஇராஜதாம்சமாய் உள்ளங்கைகளை ஆசிரயித்திருப்பது குறியாம். பாதத்துக்குக் கமனம் குணமாம். இதனோடு அக்கினிபூதஇராஜதாம்சமாய்க் கால்களை யாசிரயித்திருப்பது குறியாம். பாயுருவுக்கு மலஜலவிசர்ச்சனம் குணமாம். இதனோடு அப்புப்பூதஇராஜசதாம்சமாய்க் குதத்தை ஆசிரயித்திருத்தல் குறியாம். உபஸ்தத்துக்கு இந்திரியவிசர்ச்சனம் ஆனந்தித்தல் குணங்களாம்.

இவைகளோடு பிருதிவிபூதஇராஜதாரசமாய் யோனியை ஆசிரயித்திருத்தல் குறியென அறிக.

வினா:—ஆறுதத்துவமாகிய தூலசரீரத்துக்குக் குணங் குறிகளெவையெனின். (45)

விடை:—பருத்தலிளைத்தலாதிகள் குணங்களாம். இவை களோடு பஞ்சபூதகாரியமாய்க் கரசரணாதி அவயவாகார மாயிருத்தல் குறியென அறிக.

வினா:—ஆகாயம், வாயுவு, அக்கினி, அப்பு, பிருதிவி என்னும் பூதங்களாகிய ஐந்துதத்துவங்கட்கும் குணங்குறிக ளெவையெனின். (46)

விடை:—ஆகாயத்துக்குச் சத்தம் குணமாம். விக்ஷேப சத்தியின் காரியமாய் வெளியாயிருப்பது குறியாம். வாயு வுக்குப் பரிசம் குணமாம். இதனோடு ஆகாயத்தின்காரியமாய்ச் சலனரூபமாயிருப்பது குறியாம். அக்கினிக்கு ரூபங் குண மாம். இதனோடு வாயுவின் காரியமாய் லோகிதப்பிரகாசமாயி ருப்பது குறியாம். அப்புவுக்கு ரஜம் குணமாம். இதனோடு அக்கினியின் காரியமாய்த் திரவசுக்கிலரூபமாயிருப்பது குறி யாம். பிருதிவிக்குக் கந்தம் குணமாம். இதனோடு அப்புவின் காரியமாய்க் கடினமாக இருப்பது குறியாமென அறிக.



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| கடத்தைப் பார்க்கின்றவன கடத்துக்குப் புறப பாகமேயிருந்து கடத்தைப் பார்க்கிறதுபோல. | வெளி. |

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| அவைகட்கு | முற்சொல்லிய (கூரு) தத்துவங்கட்கு |
| அன்னியமாகவேயிருந்து | வேறாகவேயிருந்து |
| அவைகளையறிகின்றதெனவும | அந்தத்தத்துவங்களை அறிகின்றதெனவும் |
| முப்பத்தாருந்தத்துவமாகிய | (கூசு)வது தத்துவமாயுள்ள |
| அதுவே தானென்றும் | அந்த அறிவே கூடத்தராகிய தானெனவும் |
| தானே பரசிவமென்றும் | கூடத்தராகிய தானே மேலாகிய சிவமெனவும |

வினா:—சர்ப்பந்தோன்றுதற்கு இரச்சு ஆதாரமும் முன் னுள்ளதுமாயிருப்பதுபோல ஜகஜீவபரமாகிய (கூரு) தத்து வங்களும் தோன்றற்குப் பிரஹ்மம் ஆதாரமும் முன்னுள் ளதுமாயிருத்தலால் அதனை முதற்றத்துவமாகக் கூறுமல் இந்நூலாசிரியர் (கூரு) தத்துவங்கட்கும் பிற்பட்ட முப்பத் தாருவது தத்துவமாகக் கூறியதென்னையெனின். (47)

விடை:—சர்ப்பத்துக்கு இரச்சு ஆதாரமும் முன்னுள்ள துமாகவிருக்கினும் முன்னர்த் தீபாதிசாதனங்களைக் கொண்டு

சர்ப்பத்தை விசாரித்துப்பார்த்து சர்ப்பங்காலத்திரயத்திலுமில்லை. மித்தையாகத் தோன்றியதென அறிந்தபின்னர் இரச்சுதோன்றுதல்போலப் பிரஹ்மம் சகலதத்துவங்களுந் தோன்றற்கு ஆதாரமும் முன்னுள்ளதுமாக இருக்கினார், முன்னர் அவிவேகதிசையிற் றோற்றாமல் விவேகமுதயமாகிய பின்னர் ஒவ்வொருதத்துவமாகத் தத்துவங்களின் சொரூபங்களை விசாரித்துப்பார்த்து (ஙடு) தத்துவங்களையும் மித்தையெனவும் தானல்லவெனவும் நீக்கியபின்னர் விளங்கத்தக்க தத்துவமாக இருத்தல்பற்றிக் கூறினரென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| கலக்கமற | சம்சயபாவனை அசம்பாவனை விபரீதபாவனைகளாகிய குழப்பங்கள் நீங்கும்படி |
| தெளிர்தவனே | சாக்ஷாத்கரித்தவனே |
| சிவதரிசனமுடையவனும். | சிவானுபமுடையவனாகும். |

வினா:—சம்சயபாவனை அசம்பாவனை விபரீதபாவனைகளெவையெனின். (48)

விடை:—மார்க்கத்திற் செல்பவன் மந்தாந்தகாரம் அல்லது தூரதிருஷ்டியாதி தோடங்களால் மார்க்கத்திலூர்த்தாகாரமாக நிற்கின்ற தாணுவை காமமுதலியவற்றாற் பிரித்தறியாமல் பொருளுண்மைமாத்திரம் நிருவிகற்பமாக அறிந்து



பின்னர் இது தாணுவோ புருடனோவென ஒன்றிற் றுணிபுபெறாமல் ஆராய்தல் சம்சயபாவனையாகும். இங்கே தாணுவரக் காரணமில்லை. வராது; வரினும் உளர்த்தாகாரமாக நிற்காது. நிற்கின்றமையால் தாணுவல்லவென நினைத்தல் அசம்பாவனையாகும் தாணுவாகிய அப்பொருளை அப்பொருளோடொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கித் தாணுவல்லபுருடனேயென நிச்சயித்தல் விபரீதபாவனையாகும். இப்பாவனாத்திரயங்கள் அனாத்மகதமாயுள்ளவைகளானமையால் இவைகளையும் இவைபோன்றவைகளையும் நிவர்த்திக்கவேண்டுமென்பது அவசியமில்லை. ஆத்மகதசம்சயமாதி பாவனாத்திரயங்களையே நிவர்த்திக்கவேண்டுமென அறிக.

வினா:--அனாத்மகதபாவனாத்திரயங்களை நிவர்த்திக்கவேண்டுமென்பது அவசியமில்லையென்றது யாதினாலெனின். 49

விடை:—இவைகளிருக்கிற் பந்தம் நீங்காது இவைகள் நீங்கிற் பந்தம் நீங்குமென்பதில்லாமையினென அறிக.

வினா:—ஆத்மகதபாவனாத்திரயங்களெவையெனின். (50)

விடை:—பிரமாணப் பிரமேயங்களைப்பற்றி யெழாநின்ற சம்சய அசம்பவ விபரீதபாவனைகளென அறிக.

வினா:—பிரமாணகத சம்சயபாவனையாவது யாதெனின்

விடை:--பிரமாணத்துக்கு எது காரணமோ அது பிரமாணமெனப்படுதலால் இங்கே வேதப்பிரதிபாதித மோக்ஷமாதி பதார்த்தங்களின் எதார்த்தானுபவரூபமாகிய யாதொருசாப்திப்பிரமா வுண்டோ அதன் கரணரூபமாகிய உபநிடதரூப சப்தமானது பிரமாணசப்தத்துக் கருத்தமாகும். ஆதலின் உபநிடதரூபமாகிய பிரமாணங்களைப்பற்றி யிவ்வுபநிடதவாக்கியம் தொய்தமாகிய கன்மங்களைப் பிரதிபாதிக்கின்றதோ, அல்லது அத்வைதமாகிய பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கின்றதோ, அல்லது அன்னிய அர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றதோவெனச் சடுவிதலிங்கரூப யுத்திசகித வேதாந்த சிரவணத்துக்குப்பூர்வம் உதயமாகின்ற பாவனையென அறிக.

வினா:—பிரமாணகத அசம்பாவனையாவது யாதெனின்

விடை:—பிரஹ்மம் சுதசித்தவஸ்துவானமையினாலும், பிரமாணாந்தரங்களினால் பிருதிவியாதிகளைப்போல அறியப்படாததானமையினாலும் சுருதியாதிகள் பிரஹ்மத்தை யெங்ஙனம பிரதிபாதிக்கும பிரதிபாதிக்கமாட்டாதெனச சித்தத்திலுதயமாகின்ற பாவனையென அறிக.

வினா:—பிரமாணகதவிபரீதபாவனையாவதுயாதெனின்

விடை:—பிரஹ்மந் தானாகவே சித்தித்துள்ள பொருளானமையால் அதனைப் பிரதிபாதிக்கிறதில் சுருதிகட்கு அபிப்பிராயமிராது. அல்லது பிரதிபாதிக்குமானால் புருடர்



களிடத்திற் பிரவிருத்திநிவர்த்தி போக்குவரவு காணப்படாமலிருக்கவேண்டும். அங்ஙனமின்றிக் காணப்படுகின்றமையால் அவைகட்குப பிரயோசனமில்லாமற்போம். உலகில் பிரவிருத்திபூர்வமாகவே பிரயோசனங் காணப்படுகிறது. ஆதலின் சகலசுருதிகளும் பிரஹ்மத்தைப் பிரதிபாதிப்பனவல்ல கர்மங்களையே பிரதிபாதிப்பனவாமென்னுந் திடபாவனையென அறிக.

வினா:—பிரமேயகத சம்சயபாவனையாவது யாதெனின்

விடை:—உபநிடதரூப வேதாந்தவாக்கியங்களாகிய பிரமாணங்களால் அறிதற்கு யோக்கியமாகிய மோக்ஷமுதலிய பதார்த்தங்களனைத்திற்கும் பிரமேயமென்று பெயராம். அவைகளின் சொரூபங்களைபபற்றி யுண்டாகின்ற சம்சயவிருத்தியாகும். அதுவும் விஷயபேதத்தால் பலவாயிருக்குமென அறிக.

வினா:—பிரமேயகதசம்சய பாவனைகள் பலவாயிருக்குமென்பது யாதினாலெனின். (55)

விடை:—மோக்ஷமென்பது (1) சித்தாந்தத்திற் கூறுகின்றபடி சர்வதுக்கநிவர்த்தி பரமானந்தப்பிராப்தியா? (2) அல்லது சாங்கியர் மதத்திற் கூறுகின்றபடி தாபத்திரய நாசமா? (3) அல்லது நியாயமதத்திற் கூறியிருக்கின்றபடி

யிருபத்தொரு துக்கங்களின் நாசமா?(4)அல்லது யோகமதத்திற் கூறியிருக்கின்றபடி பஞ்சக்கிலேச நாசமா? (5) அல்லது கர்மிஷ்டர்களின் அல்லது உபாசகர்களின் மதங்களிற் கூறுகின்றபடி சுவர்க்கவைகுண்டாதிய சுகலாபமா என மோக்ஷத்தின் சொரூபத்தைப்பற்றி யுண்டாகின்றவைகள் பலரூபப் பிரமேயகதசம்சயங்களாகும். இவைகளில் சித்தாந்தத்திற் கூறுகின்றபடி சர்வதுக்கநிவர்த்திபரமானந்தப் பிராப்தியே மோக்ஷமென்றெருப்பினால் அதற்கு,

(அந்தரங்கசாதனம்) (1) மீமாம்சர் கர்மிஷ்டர்கள் மதத்திற் கூறுகின்றபடி கர்மமா? (2) அல்லது உபாசகர்கள் மதத்திற் கூறுகின்றபடி உபாசனையா? (3) அல்லது சமுச்சயவாதி பர்த்திருப்பிரபஞ்சத்தின் மதத்திற் கூறுகின்றபடி கர்ம உபாசனைகளோடுகூடிய ஞானமா? (4) அல்லது சாங்கியர் நையாயிகர்மதங்களிற் கூறுகின்றபடி கேவலஞானமா? கேவலஞானமெனின்,(5)அது சாங்கியாதிய பேதவாதிகள் மதங்களிற் கூறுகின்றபடி பேதஞானமா? (6) அல்லது சித்தாந்தத்திற் கூறுகின்றபடி அபேதஞானமா எனல் முதலியவைகள் மோக்ஷசாதனரூபப் பிரமேயகத சம்சயங்களாகும். மோக்ஷத்திற்குச் சாதனம் சித்தாந்தத்திற்கூறிய அபரோக்ஷ ஞானமாகிய அபேதஞானமேயெனக் கொள்ளின் அபேத ஞானத்திற்கு,



(1) அந்தரங்கசாதனம்) (1) கருமமா?(2)உபாசனையா? (3) விவேக வைராக சமாதிஷட்கசம்பத்தி முமுட்சுத்துவமாகிய நான்குமா? (4) அல்லது சிரவணமனன நிதித்தியாசனமாகிய மூன்றுமா? (5) அல்லது பதார்த்தசோதனையா? (6) அல்லது மகாவாக்கியோபதேசமா? மற்றும் அபரோக்ஷ ஞானத்தின் பகிரங்கசாதனம் (7) சிரவணாதிகளா? (8) அல்லது விவேகாதிகளா? (9) அல்லது கருமமுதலியனவா என உண்டாகின்றவைகளும் சாதனரூபப்பிரமேயகதசம்சயங்களாகும். அபரோக்ஷஞானத்திற்கு மகாவாக்கியோபதேசமே முக்கிய அந்தரங்க சாதனங்களெனவும், விவேகாதிகள் சிரவணாதிகள் பதார்த்தசோதனமாகிய எட்டும் அமுக்கிய அந்தரங்கசாதனங்களெனவும், எஞ்ஞாதி கருமங்கள் பகிரங்க சாதனங்களெனவும் கொள்ளின,

(அந்தஞானத்தின் விஷயம்) (1) சாங்கியர் நையாயிகர் முதலிய பேதவாதியர் மதங்களிற் கூறுகின்றபடி பேதமா? (2) அல்லது சித்தாந்தத்திற் கூறுகின்றபடி அபேதமா? அபேதமெனினும், (3) உபநிடத சித்தாந்தத்திற் கூறுகின்றபடி ஆத்மாவுக்கும் பிரஹ்மத்துக்கும் அபேதமா? (4) அல்லது அகங்கிரக உபாசகர்கள்மதத்திற் கூறுகின்றபடி அந்தக்கரண விசிட்டசேதனவடிவ ஜீவனுக்கும் விராட்டு அல்லது இரணியகருப்பன் அல்லது அந்தரியாமியென்னும் ஈசுவரனுக்கும் அபேதமாமெனல் முதலிய ஞானவிஷயங்களைப்பற்றி

யுண்டாகின்ற சம்சயங்களும் பிரமேயகத சம்சயங்களாகும். ஆத்மாவுக்கும் பிரஹ்மத்துக்குமுள்ள அபேதஞானத்துக்கு விஷயமெனக் கொள்ளின்,

(முற்கூறிய ஆத்மா) (1) சகல ஆஸ்திகர்களின் மதங்களிற் கூறுகின்றபடி தூலதேகத்திற்குப் பின்னமா? (2) அல்லது தேகாத்மவாதிகளாகிய சார்வாக லோகாயதர்கள மதங்களிற் கூறுகின்றபடி அபின்னமா? பின்னமாயினும், அது (3) நையாயிகர் பிரபாகரர் மதங்களிற் கூறுகின்றபடி ஜடமா? (4) அல்லது சித்தாந்தபக்ஷ சாங்கியமத யோகமதங்களிற் கூறுகின்றபடி சேதனமா? (5) அல்லது பட்டர் மதத்திற் கூறுகின்றபடி ஜடசேதனமென்னும் உபயவடிவமா? சேதனமெனினும், அது (6) நியாயமதத்திற் கூறுகின்றபடி கர்த்தா போக்தாவா? (7) அல்லது சாங்கிய வேதாந்தங்களிற் கூறுகின்றபடி அகர்த்தா அபோக்தாவா? அகர்த்தா அபோக்தாவெனினும், அது (8) உபாசகராதிய மதங்களிற் கூறுகின்றபடி தேகாதிகளில் அகந்தாமமதாரூப சங்கமுடையதா? (9) அல்லது சித்தாந்தியர் சாங்கியர் மதங்களிற் கூறுகின்றபடி அசங்கமுடையதா? அசங்கமாயினும், அது (10) சில நையாயிகர் உபாசகர் மதங்களிற் கூறுகின்றபடி பரமாணுபரிமாணமா (ரோமத்தில் ஆயிரத்தொருபங்கு சூக்குமமா)? அல்லது நவீனநையாயிகர் திகம்பரர்களின் மதங்களிற் கூறுகின்றபடி



மத்திமபரிமாணமா (தேகத்தளவா)? அல்லது (12) சித்தாந்தம் சாங்கியம் யோகம் நியாயம் வைசேடிகம் பிரபாகரம் பாட்டமென்னும் மதங்களிற் கூறுகின்றபடி மகத்பரிமாணமா (விபுவா)? மகத்பரிமாணமுடையதாயிருக்கினும் அதற்கு (13) நையாயிகாதிய பேதவாதியர் மதங்களிற் கூறுகின்றபடி தத்பதார்த்தத்தோடு பேதமிருக்கிறதா? (14) அல்லது சித்தாந்தத்திற் கூறுகின்றபடி அபேதமிருக்கிறதாவெனல் முதலிய துவம்பதார்த்தத்தைப்பற்றி யுதயமாகின்ற சம்சயங்களும் பிரமேயகத சம்சயங்களாகும். ஆத்மா பதார்த்தங்களோடு அபின்னமாயினும் (அவ்வாத்மா) (15) அகங்கிரக உபாசகர்மதத்திற் கூறுகின்றபடி தத்பதவாச்சியார்த்தவடிவ ஈசுவரனோடு அபின்னமா? (16) அல்லது சித்தாந்தத்திற் கூறுகின்றபடி அவ்வீசுவரனுக் கதிட்டான தத்பதலக்ஷியார்த்தவடிவசுத்தப்பிரஹ்மத்தோடு அபின்னமா? இலக்ஷியார்த்த சுத்தப்பிரஹ்மத்தோடு அபின்னமாகவிருக்கினும்.

(ஜகத்துக்குக் காரணம்) .(1) சாங்கியராதியர் மதங்களிற் கூறுகின்றபடி பிரதானாதிகளா? (2) அல்லது வேதாந்திகள் நையாயிகர் மதங்களிற் கூறுகின்றபடி தத்பதவாச்சியார்த்தனாகிய ஈசுவரனா? ஈசுவரனானாலும்,

(அவ்வீசுவரன்) (1) சில உபாசகர்மதங்களிற் கூறுகின்றபடி ஏகதேசவர்த்தியாகிய பரிச்சின்னனா? (2) அல்லது நியாயயோக வேதாந்தங்களிற் கூறுகின்றபடி வியாபகனா? வியாபக

ணுயினும், (3) வல்லபாசாரியின் மதத்திற்கூறுகின்றபடி ‡கோலோகமுதலிய லோகங்களில் லீலாவிக்கிரகதாரியாயுள்ள வியாபகனா? (4) அல்லது சித்தாந்தத்திற் கூறுகின்றபடி ஏகரசவியாபகனா? ஏகரசவியாபகனாக இருக்கினும், அவன் (5) சில உபாசகர்மதங்களிற் கூறுகின்றபடி ஜகத்துக்கு உபாதான காரணனா? அல்லது (6) நியாயம் யோகமுதலிய மதங்களிற் கூறுகின்றபடி நிமித்தகாரணனா? (7) அல்லது சித்தாந்தபக்ஷமும் வல்லபராதியோர் மதங்களும் கூறுகின்றபடி சிலந்திப்பூச்சி அல்லது சொப்பன ஏது சாக்ஷிபோல அபின்ன நிமித்தோபாதான காரணனா? அபின்ன நிமித்தோபாதான காரணனுயிருக்கினும், அவன் (8) பக்தஜன மதங்களிற் கூறுகின்ற ஜீவர்களின் கருமாபேக்ஷாரகித சிருட்டிகருத்தாவாகிய விஷமகாரித்துவ நிர்த்தயாளத்துவ முதலிய தோடசகிதனா? (9) அல்லது வேதாந்திகள் மதத்திற் கூறுகின்றபடி கர்மாபேக்ஷாசகித சிருட்டிகர்த்தாவாகிய விஷமகாரித்துவ நிர்த்தயாளத்துவமுதலிய தோடரகிதனா? கர்மாபேக்ஷையால் சிருட்டிசெய்வனுதலால் விஷமகாரித்துவமாதிய தோடரகிதனுயினும், அந்த ஈசுவரன் (10) உபாசகர்முதலியோர் மதங்களிற் கூறுகின்றபடி பரமார்த்தமாக மாயாசத்தி யதன்தர்மமாகிய சருவஞ்ஞத்துவாதிகள் அவற்றின் கன்மமாகிய சிருட்

‡ சுலோகம் கிருஷ்ணலோகம்.



டியாதிகளென்னும் கற்பனைகளின் சகிதரா? (11) அல்லது சித்தாந்தபக்ஷத்திலும் யோகமதத்திலுங் கூறுகின்றபடி அக்கற்பனைகளின் ரகிதரா? ரகிதராயினும பூர்வஞ்சொல்லிய ஆத்மாவுக்கு (12) யோகமதத்திற் கூறுகின்றபடி பின்னரா? (13) அல்லது சித்தாந்தபக்ஷத்திற் கூறுகின்றபடி அபின்னரா எனல் முதலிய தத்பதார்த்தத்தைப்பற்றி யுண்டாகின்ற சம்சயங்களும் தத்பதலக்ஷிபார்த்தமாகிய சுத்தப்பிரஹ்மம் துவம்பதலக்ஷிபார்த்தமாகிய ஆத்மாவுக்கு அபின்னமாயினும்,

அந்தப்பிரஹ்மாத்மாவினது ஏகத்துவமானது (1) பார்த்திருப்பிரபஞ்சத்தின் (பிராசீனவிருத்திகாரர்களின் மதத்திற் கூறுகின்றபடி மோக்ஷகாலத்திலுண்டாகிறதா? (2) அல்லது சித்தாந்தபக்ஷத்திற்கூறுகின்றபடி எப்போதுமிருக்கிறதா? எப்போதுமிருக்கிறதெனின், அவ்வேகத்துவம் (3) பேதவாதிகளனைவரும் அங்கீகரியாததாகிய சச்சிதானந்த ஐசுவரியமின்றியதா? (4) அல்லது அபேதவாதிகளாகிய வைதிகரனைவரும் அங்கீகரிப்பதாகிய சச்சிதானந்த ஐசுவரியமுடையதா? சச்சிதானந்த ஐசுவரிய முடைதாயிருக்கினும் அச்சச்சிதானந்த முதலியன (5) நையாயிகராதிய ஆத்மாவின் சடத்தன்மைவாதிகள் மதங்களிற் கூறுகின்றபடி குணவடிவமா? (6) அல்லது சித்தாந்திகள் முதலியோர் பக்ஷங்களிற் கூறுகின்றபடி பிரஹ்மாத்மாவின் சொரூபமா? சொரூபமாயினும், அவைகளொன்றற்கொன்று பேதமுள்ளனவாயிருத்தலின் அப்பே

தம் வாஸ்தவமா? அல்லது கற்பிதமா? வெனல் முதலியன தத் பதார்த்தத்திற் கபின்னமான துவம்பதார்த்தங்களைப்பற்றி யுண்டாகின்ற சம்பவங்களும் பதார்த்தரூபப் பிரமேயகத சம் சயங்களாகும். பிரமேயகத சம்சயங்கள் பலவிதமா மென்ற தென அறிக.

வினு:-பிரமேயகத அசம்பாவனையாவது யாதெனின்()

விடை:—ஜகத்துக்குப் பிரஹ்மம் அன்னியமாயும் விலக்ஷணமாயுமிருத்தலால் ஜகத்துக்குப் பிரஹ்மம் காரணமல்லவெனவும் கர்த்திருத்துவாதி தருமசகிதனுயும் பரிச்சின்னனுயும் ஜனனமரணாதி விவகாரங்களோடு கூடியிருப்பவனுயுமுள்ள தனக்குப் பிரஹ்மசொரூபத்துவமெப்படிக் கூடும் கூடாதெனவுமுள்ள பாவனைகளென அறிக.

வினு:—பிரமேயகத விபரீதபாவனையாவது யாதெனின். (57)

விடை:—காரியகாரணமாயுள்ள வஸ்திரம் நூலிரண்டற்கும் சமானரூப தத்துவமிருப்பதுபோல ஜகத்துப் பிரஹ்மமிரண்டற்கும் சமானரூபத்துவமின்றி ஜடசேதனமாயிருத்தலின் ஜகத்துக்குப் பிரஹ்மம் காரணமல்ல சஜாதீயப்பிரதான பரமாணுக்களே காரணமெனவும் தான் அகர்த்தாவானுல் இந்தக்கர்மத்தைப்பண்ணு, இந்தக் கர்மத்தைப்பண்ணுதே, இதைப்பூசி இதைப்பூசியாதேயென விதிவிலக்குகளை வேதஞ்



சொல்லமாட்டாது. சொல்லுகின்றமையால்தான் கர்த்தாவென்பதிற் சந்தேகமில்லையெனவும் ஜீவப்பிரஹ்மங்கட்குப் பேதஞ்சத்தியமெனவும் உள்ள நிச்சயாத்மகபுத்தி யென அறிக.

வினு:—பிரமாணங்களைப்பற்றியும் பிரமேயங்களைப்பற்றியும் எழாநின்ற சம்சய அசம்பவ விபரீதபாவனைகள் எதனுல் நிவர்த்தியாகுமெனின். (58)

விடை:—சிரவணமனன நிதித்தியாசனங்களால் நிவாத்தியாகத் தக்கவைகளாகும். ஆயினும் அவைகள் பிரஹ்மசாக்ஷாத்காரஞானம் உதயமானுல் அத்தியந்த நிவர்த்தியாகுமென அறிக.

வினு:—சிரவணுதிகளால் நிவர்த்தியாகிய பாவனுத்திரயங்கள் சிரவணுதிகட்குப் பின்னருதயமாகும் பிரஹ்மஞானத்தால் அத்தியந்த நிவர்த்தியாகுமென்பது புத்திரனுல் மரணமமைடந்த பிதாவானவன் புத்திரனுக்குப் பின்புண்டாகும் பௌத்திரனுல் அத்தியந்த மரணமாவானென்பதுபோல அசம்பாவிதமெனின். (59)

விடை:—அரிவாளாலறுக்கப்பட்ட கொடிசெடியாதிகள் கெடினும் அவைகட்குக் காரணமாகிய வேர்கிழங்காதிகள் கெடாதிருக்கின்றமையால் காரியமாகிய கொடிசெடியாதி

கள் பின்னரும் உற்பத்தியாகின்றன. அவைகளை மண்வெட்டியாதிகளால் அடியோடேவெட்டிவிடின் காரணமாகிய வேர்கிழங்காதிகள் கெட்டுப்போகின்றமையால் அவைகளின் காரியமாகிய கொடிசெடியாதிகள் பின்னரும் உற்பத்தியாகாமல் அத்தியந்தநாசத்தையடைகின்றன. அதுபோல சிரவண மனன நிதித்தியாசனத்தால் சம்சயமாதியபாவனைத்திரயங்கள் நிவர்த்தியாயினும் அவைகட்குக் காரணமாகிய அவித்தை கெடாமலிருக்கின்றமையால் பின்னரும் உற்பத்தியாகும். பிரஹ்மஞான முதயமாகில் சாரணமாயிருக்கின்ற அவித்தை கெட்டுப்போகின்றமையால் அதன்காரியமாகிய சம்சயமாதிபபாவனைத்திரயங்கள் பின்னரும் உற்பத்தியாகாமல் அத்தியந்தம் நாசமாய்விடும். ஆதலின் அங்ஙனங்கூறியது அசம்பாவிதமென் அறிக.

வினா:—பாவனைத்திரயங்கட்கு மூலமாகிய அஞ்ஞானம் கருமத்தாலும் நாசமாகுமேயெனின். (60)

விடை:—அஞ்ஞானநாசம் ஞானத்தாலன்றிக் கருமத்தால் நாசமாகாதென அறிக.

வினா:—பிரமஹத்தியாதிய மகாபாதகங்களையும் அத்தியந்தம் நாசஞ்செய்வதாகிய வல்லபமுடைய பிராயச்சித்தாதிரூப சற்கருமங்கள் அஞ்ஞானத்தையேன் நாசஞ்செய்யாதெனின். (61



விடை:—மேகாவரணம் இருளுக்கு விரோதமாக இராமல் உறவாகவேயிருப்பதுபோல, சருமமும் அஞ்ஞானத்துக்கு விரோதமாக இராமல் உறவாகவேயிருத்தலிலென அறிக.

வினா:—கருமங்கள் மனம் வாக்குக் காயங்களென்னும் முக்கரணங்களின் காரியங்களாக இருப்பதுபோல ஞானமும் முக்கரணங்களி லொன்றாகிய அந்தக்கரணத்திலுண்டாகிய விருத்தியேயானமையால் கருமமேயாகும். ஆதலால் அதுதானெப்படி அஞ்ஞானத்தை நாசஞ்செய்யுமெனின். (62)

விடை:—விருத்தியானது முக்கரணங்களிலொன்றாகிய அந்தக்கரணத்தி லுண்டாகியதாயிருக்கினும் ரூப விஷயங்களை அறிகிற விஷயத்தில் கண்களைப்போல அஞ்ஞானத்தை நிவர்த்திசெய்கிற விஷயத்தில் ஞானத்துக்குச் சாதனமாயிருக்கிறது. ஞானமல்ல; ஞானமோ ஆத்மாவின் சொரூபம் ஞானமும் சூரியன் திரணத்தைத் தனியே தகியாததுபோல அஞ்ஞானத்தைத் தனியே நாசஞ்செய்யாது. விருத்தியும் தருப்பணம் தனியே திரணத்தைத் தகியாததுபோலத் தனியே அஞ்ஞானத்தை நாசஞ்செய்யாது. சூரியன் எதிரிட்ட தருப்பணத்திற் பிரவேசித்து அத்தருப்பணச்சேர்க்கைவிசேடத்

தாற் றிரணத்தைத் தகிப்பதுபோல ஆத்மாவும் ஆத்மாகாரமான விருத்தியிற் பிரவேசித்து அவ்விருத்தியின் சேர்க்கைவிசேஷத்தால் ஆத்மாவிலுள்ள அஞ்ஞானத்தை நாசஞ்செய்கின்றமையால் பிரகாசத்தோடுகூடிய மாணிக்கம் சிலாரூபமாகவிருக்கினும் ரத்தினதீபமென்று சொல்லப்படுகிறதுபோல விருத்தி அந்தக்கரணத்தின் காரியமாக இருக்கினும் ஞானமென்று கௌணமாகச் சொல்லப்படுகிறது. ஆதலால் இந்த ஞானம் அஞ்ஞானத்தை நாசஞ்செய்யுமென்பதிற் சந்தேகமில்லையென அறிக.

(நூல் சரு)

இப்படிப் பிரஹ்மமே தாமென்றும், மற்றை ஙடு. தத்துவங்களும் தமக்கன்னியமென்றும் பிரித்தறியாத அவிவேகிகள் அகங்காரக்கிரந்தியினுலே புத்திரதாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கின்ரேமென்கின்ற மூடகரம்போல இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் தந்தொழில்களென்று மயங்குகின்றமையால் இந்த இருபத்தெட்டினுலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவமாதிய கன்மங்களிற் கட்டுப்பட்டு அந்தக்கன்மங்களின்படியே சனனமரணுதி சம்சாரங்களில் அடிபடுகிரேமென்று மயங்குவர்.



| பதம். | பொருள். |
| --- | --- |
| இப்படி | இப்போது விசாரம்பண்ணிய பிரகாரமே |
| பிரஹ்மமே தாமென்றும், | ஙசு-ம் தத்துவமாகிய பிரஹ்மமே கூடத்தராகிய தாமெனவும், |
| ஙடு தத்துவங்களும் | ஙடு தத்துவங்களும் |
| தமக்கன்னியமென்றும் | தங்கட்கு வேறெனவும் |
| பிரித்தறியாத அவிவேகிகள் | வேறுபடுத்தியறியாத விவேகசூனியர் |
| அகங்காரக்கிரந்தியினுலே. | அகங்காரமுடிச்சினுலே |
| புத்திரதாராதிகள் | மைந்தர் மனைவியாதியர்கள் |
| தபிக்கின்றதை | தாபப்படுகின்றதை |
| தாம் தபிக்கிரேமென்கிற | நாங்கள் தாபப்படுகிரோமென்று புலம்புகின்ற |
| மூடகரம்போல | மூடக்கழுதைகள்போல |
| இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் | இவ்விருபத்தெட்டுத் தத்துவங்களினுடைய காரியங்களையும் |
| தம் தொழில்களென்று | தங்கள் காரியங்களென்று |
| மயங்குகின்றமையால் | பிரமிக்கின்றபடியால் |

வினு :—ஙடு தத்துவங்களையும் அன்னியமென்று அறியாத அவிவேகிகள் ஙடு தத்துவங்களின் தொழில்களையும் தம் தொழில்களென மயங்காமல், உஅ தத்துவங்களின்

தொழில்களைமாத்திரம் தம் தொழில்களென மயங்குவரென்றது யாதினாலெனின்

விடை:—௩௫ தத்துவங்களில் பஞ்சபூதம், மாயை, ஈசுரன் ஆகிய ஏழு தத்துவங்களிலும் ஞானகாலம் அஞ்ஞானகாலமாகிய எந்தக்காலங்களிலும் ஒருவர்க்கேனும் அகம்புத்தி யுண்டாகாமையால் அவைகளின் தொழில்களைத் தம் தொழில்களென்னும் மயக்கம் ஒருவருக்கேனும் உண்டாகிறதில்லை .ஆதலால் அவ்வேழு தத்துவங்களையும் விடுத்து அவிவேகதிசையில் அகம்புத்தி செய்யப்படுவதாயுள்ள ௨௮ தத்துவங்களின் தொழில்களில் மயங்குவரென்றதென அறிக.

(64)

வினா:—௨௮ தத்துவங்களின் காரியங்களையும் அவிவேகிகள் தங்கள் காரியங்களென எங்ஙன மயங்குகின்றனரெனின்.



வசனித்தல், கமனித்தாதிகளை நான் சங்கற்பித்தேன், விகற்பித்தேன், நான் கண்டேன், கேட்டேன், நான் பலவான், பலவீனன், நான் வசனித்தேன், கமனித்தேனெனவும், ஜீவன் அவித்தைகளின் அறிவறியாமைகளை நானறிவேன் அறியேனெனவும் மயங்குகின்றனரென அறிக.

| பதம். | பொருள். |
|---|---|
| இந்த இருபத்தெட்டினாலும் | இந்த ௨௮ தத்துவங்களினாலும் |
| ஆர்ச்சிக்கப்பட்ட | சம்பாதிக்கப்பட்டிராநின்ற |
| புண்ணியபாவமாதிய | புண்ணிய பாவமுதலியனவாகிய |
| கன்மங்களிற் கட்டுப்பட்டு | கன்மங்களிற் பந்திக்கப்பட்டு |
| அந்தக்கன்மங்களின்படியே | அவ்வினைகளின்படியே |
| சனனமரணாதிசம்சாரங்களில் | பிறத்தலிறத்தலாதியசம்சாரங்களிலே |
| அடிபடுகிறோமென்று | துன்பப்படுகிறோமென்று |

கருவிகளாக இருத்தலின் அவைகளில் மற்றைய தத்துவங் களை யடக்கி யங்ஙனங் கூறுகின்றனவென அறிக.

வினு:—மனம் வாக்குக் காயங்களாற் செய்யப்படுவதா கிய கிரியைகள் யாவும் கன்மங்களாகுமோ வெனின் (66)

விடை:—வேதத்தில் பிரவிருத்தி அல்லது நிவர்த்தியின் பொருட்டு சொல்லப்படுகிற கிரியைகளே கன்மங்களாகும். இவைகளன்றியில் வேதத்தில் விதிக்க அல்லது நிஷேதிக்கப் படாதனவாயும் இராகத்துவேஷங்களின்றிச் செய்யப்படு வனவாயுமுள்ள உதாசீனக்கிரியைகள் கன்மங்களன்றென அறிக.

வினு:—கன்மங்களெத்தனை விதமெனின்; (67)

விடை:—புண்ணியம், பாவம், மிசிரமென மூன்று வித மாமென அறிக.

வினு:—அற்றேல் மனதாற் செய்யப்படுகிற மூவிதகன் மங்களெவையெனின். (68)

விடை:—சிவவிஷ்ணு வாதிய மூர்த்திகளைச் சிந்தித்தல், குருவையும் பெரியோர்களையும் விசுவசித்தல், சுருதிஸ்மிரு தியாதிகளைப் பிரமாணமாகக் கொள்ளுதல், அவைகளிற் கூ றிய யாகாதிசற்கருமங்களையும் பரலோகப்பிராப்தி மோக்ஷப்



பிராப்திகளையும் பராளுக்கு இதப்பிராப்திகளையும் விரும் புதலாதிகள் மனதாற் செய்யப்படுகிற புண்ணியகருமங்களா ம். சிவவிஷ்ணுவாதிய மூர்த்திகள் தருமாதரும சுவர்க்க நரகங்கள் இல்லையெனப் பாவித்தல், குரு பெரியோர்களைத் துவேஷித்தல், சுருதிஸ்மிருதியாதிகளை அப்பிரமாணங்களெ னவெறுத்தல், பரஸ்திரீ பரதனம் பரசிலமாதிய விஷயங் களை விரும்புதல், பராளுக்கு அஹிதப்பிராப்திகளைச் சிந்தித்த லாதிகள் மனதாற் செய்யப்படுகிற பாவகருமங்களாம். புண் ணிய கருமானுட்டான காலத்தில் அதற்கு மாருன விஷயங் களைச் சிந்தித்தல் மனதாற் செய்யப்படுகிற மிசிரகருமங்களெ ன அறிக.

வினு:—வாக்காற் செய்யப்படுகிற மூவித கருமங்களெ வையெனின் (69)

விடை:—வேதாத்தியயனம், சாஸ்திரபடனம், பிரணவ காயத்திரி பஞ்சாக்ஷர சடாக்ஷர அட்டாக்ஷர மாதிய மந் திரஜெபம், பகவந்நாமசங்கீர்த்தனம், சிவ விஷ்ணுவாதிய மூர்த்திகள் குருவாதிய பெரியோர்களின் தோத்திரங்களைச் செய்தல், மெய்ம்மைகூறல், பராள் மகிழ்வுற இதமுரைத் தல், மிருதுவார்த்தைபூர்வ வார்த்தைகள்பேசுதலாதிகள் வாக் காற்செய்யப்படுகிற புண்ணியகருமங்களாம். வேதாத்திய யனம் மந்திரஜெபமாதியவைகளையும், சிவ விஷ்ணுவாதிய

மூர்த்திகள் குரு பெரியோராதிகளையும் தூடணித்தல், பொய்ம்மைகூறல், கோட்சொல்லுதல், பராள் தன்புறப் பரிகாசம் பேசுதல், அஹந்தமுரைத்தல், கடுஞ்சொற்கூறலாதிகள் வாக்காற் செய்யப்படுகிற பாவ கன்மங்களாம். வேதாத்தியனம், சாஸ்திரபடனம், தேவார்ச்சனை, மந்திரஜெபாதிகள் செய்யும்போது இடை யிடையே உலக விவகாரம், பராள் நிந்தை, பொய்ம்மைகூறல், தூர்த்தரோடுரையாடலாதிகள் வாக்காற் செய்யப்படும் மிசிரகன்மங்களாமென அறிக.

வினு:—காயத்தாற் செய்யப்படுகிற மூவித கருமங்களவை யெனின். (70)

விடை:—சிவ விஷ்ணுவாதிய தேவாலயம் பெரியோராலயமாதிய மடங்கள் அலகிடல், மெழுகல், கோலமிடல், தீர்த்தாடனம், பிரதக்ஷணம், நமஸ்காரம், தலயாத்திரை, மூர்த்திதரிசனம், குருதரிசனம், பெரியோர் மாதாபிதாக்களுளமகிழப்பணிவிடையாதிகள் செய்குதல், ஆலயம் மடம் சத்திரம் திருவாசல் சுமைதாங்கிகள் கட்டுதல், குளம் கூபங்கள் வெட்டுதலாதியவைகள் காயத்தாற் செய்யப்படும் புண்ணிய கருமங்களாம். ஸ்நான முதலிய ஆசாரங்களின்றி ஆலயடங்களினுட் செல்லுதல், சிவ விஷ்ணு...



ரீகளைச்சேருதல், திருடுதலாதிகள் காயத்தாற் செய்யப்படுகிற பாவ கருமங்களாம். அன்னியர்பொருளை வைத்து வலுவிலாயினும் மறைவிலாயினும் கவர்ந்து புகழைக்கருதியும் வேலை செய்பவர்கட்குச் சரியாகக் கூலி கொடாமலும், தேவாலயம் பிரஹ்மாலயம், பெரியோராலயம், மடம் சத்திரங்கள் கட்டுதலும், குளம் கூபங்கள் வெட்டுதலும் காயத்தாற் செய்யப்படுகிற மிசிர கன்மங்களென அறிக.

வினு:—புண்ணியம் எத்தனை விதம் அவைகளின் பலம் யாதெனின். (71)

விடை:—புண்ணியம், உத்கிருஷ்டம், மத்திமம் சாமானியமென மூவிதமாகும். இவைகளில் உத்கிருஷ்டமாயின் இரணியகருப்பாதி சரீரப்பிராப்தியும், மத்திமமாயின் இந்திராதி சரீரப்பிராப்தியும், சாமானியமாயின் யக்ஷராக்ஷச கின்னர கிம்புருடாதிய சரீரப்பிராப்தியும் பலமாமென அறிக.

வினு:—பாவகன்மம் எத்தனை விதம் அவைகளின் பலம் யாதெனின். (72)

விடை:—பாவம் உத்கிருஷ்டம் மத்திமம் சாமானிய

லியவும் எருமை பருந்து முதலியவுமாகிய சரீரப்பிராப்தி யும், சாமானியமாயின் பசு யானை குதிரை அரசு துளசி முதலிய சரீரப்பிராப்தியும் பலமா மென அறிக.

வினு:—மிசிரகன்மமெத்தனை விதம் அவைகளின் பலம் யாதெனின். (73)

விடை:—மிசிரம் உத்கிருஷ்டம் மத்திமம் சாமானிய மென மூவிதமாகும். இவைகளில் உத்கிருஷ்டமாயின் நிஷ் காமபுண்ணியவ்வாயிலாகச் சித்தசுத்தி சாதனசதுட்டயம், சற் குருலாபம் சிரவணமனனநிதித்தியாசனம் அபரோக்ஷஞானம் ஆகிய இம்மார்க்கங்களால் சீவன்முத்தியடைதற்கான சரீரப் பிராப்தியும், மத்திமமாயின் வருணாச்சிரமத்துக்குசிதமான காமிய கன்மயோக்கிய சரீரப்பிராப்தியும், சாமானியமாயின் சண்டாள பாண்டு குன்ம குஷ்டமாதிய சரீரப்பிராப்தியும் பலமாமென அறிக.

வினு:—கன்மங்களெங்ஙனமிகுந்து பலன்களைக் கொடுக் கின்றனவெனின். (74)

விடை:—கர்த்திரு கரண சம்பந்தமாகச் சரீராந்தம் வரைப் பலன்களை விரும்பிச் செய்யுங்காரணத்தால் ஆகாமி யங்களெனப் பெயர்பெற்று அளவில்லனவாய்ச் சேர்ந்து பரி பக்குவகாலம்வரை கட்டுப்பட்டிருத்தல்காரண[illegible] தங்களெனப் பெயர் பெற்[illegible]



வுற்று பிராப்பியங்களை யனுபவித்தற்குக் காரணமாக இருத்தல் பற்றி பிராப்தங்களெனப் பெயர்பெற்றிருந்து பலன்களைக் கொடுக்கின்றன. இவைகளில் ஆகாமியங்கள் வர்த்தமான சரீ ரத்திற் செய்யப்படுவனவாகும். சஞ்சிதங்கள் பூர்வ சரீரத்திற் செய்யப்பட்டுப் பலன் கொடுத்தற்குப் பரிபக்குவப்படாமல் கட் டுப்பட்டிருப்பனவாகும். பிராரப்தங்கள் பரிபக்குவப்பட்டு வர்த்தமான சரீரத்தில் சுக துக்க பலன்களைக் கொடுப்பனவா குமென அறிக.

வினு:—சஞ்சித கன்மங்கட்கு ஆசிரயம் யாது பிராரப் தகன்மங்கட்கு ஆசிரயம் யாதெனின் (75)

விடை:—சஞ்சித கன்மங்கட்கு அந்தக்கரணவுபகித சாட்சியை ஆசிரயித்திராநின்ற அஞ்ஞானத்தின் சத்தியாகி கிய ஆவரணசத்தி ஆசிரயமாகும். பிராரப்தகன்மங்கட்கு அஞ்ஞானத்தின சத்தியாகிய விக்ஷேபசத்தி ஆசிரயமாகு மென அறிக.

வினு:—பிராப்தகன்மங்கட்கும் ஆவரணசத்தி ஆசிரய மாகாதோவெனின். (76)

விடை:—அற்றேல் ஞானத்தால் அஞ்ஞானமும் ஆவா [illegible]

களாகிய ஜீவன்முத்தர்களும் குரு சிஷ்யபாரம்பரியக்கிரமங்களுமில்லாமற் போம். அங்ஙனமின்றிச் சுகர்வாமதேவர் முதலிய அனேக ஜீவன்முத்தர்களும் குரு சிஷ்யபாரம்பரியக்கிரமங்களு மிருக்கின்றமையால் ஆகாதென அறிக.

(நூல் ௬௬)

பிரஹ்மசைதன்னியமே தானென்றும் மற்றைய (௩௫) தத்துவங்களுந் தானல்லவென்றுமதெளிந்தவிவேகியானவன் அகங்காரக் கிரந்தியற்றபடியினாலே இந்த இருபத்தெட்டின் தொழில்களையும் நான் செய்யவில்லையென்றும் இந்த இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லையென்றுந் திடப்படத் தேறி மயக்கமற்றிருக்கின்றமையால் இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கன்மசம்பந்த மில்லாமையால் சனன மரணாதி சம்சாரமில்லாமல்முத்தனாகிப் பிரஹ்மமாத்திரமாகவே யிருப்பன்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பிரஹ்மசைதன்னியமே தானென்றும | பிரஹ்மமாகிய பூரண அறிவே |



வினா:--பிரஹ்மமே தானெனவும் மற்றைத்தத்துவங்கள் அன்னியமெனவும் அறிவதெதனாலெனின். (77)

விடை:—சற்குருவா லுபதேசிக்கப்படுவதாகிய மகா வாக்கிய விசாரத்தாலென அறிக.

வினா:—மகாவாக்கிய விசாரமாவது யாதெனின். (78)

விடை:--ஜீவேசுவரர்க்குள்ள ஏகத்துவத்தை விளக்கி வைப்பதாகிய தத்துவமசி யென்னும் மகாவாக்கிய சோதனை யென அறிக.

வினா:—இவ்வாக்கியம் கிஞ்சிஞ்ஞத்துவாதி யீனகுண விசிட்டனும் அசுதந்தரனும் பரிச்சின்னனும் பிரத்தியக்ஷனுமுள்ள ஜீவனும் சர்வஞ்ஞனும் கல்யாணகுணவிசிட்டனும் சுதந்தரனும் வியாபகனும் பரோக்ஷனுமுள்ள ஈசுவரனும் ஏகமெனல் கோடீசுவரனும் சோவணாண்டியும் ஏகமெனல்போல் விரோதமாகுமெனின். (79)

பதங்களுக்குள்ள சத்தி

குணி, விகாரம், அங்கிசாங்கிசி, விம்பப்பிரதிவிம்பவாத மென்னும் வாக்கியங்கள் போன்றதல்லாமல், சுருதிக்கு விரோதமின்றிய சுபாவசித்தார்த்த போதகவாக்கியங்கள் போன்றதேயாகும். ஆதலால் விரோதமில்லையென அறிக.

வினு:-அருத்தவாதமுதலிய வாக்கியங்களெவை? அவை கள் சுருதிக்கு விரோதமென்றது யாதினுலெனின் (80)

விடை :—ஒரு மலரைமாத்திரம் சிவலிங்கமாதிய தேவ தாசொரூபங்களில் அர்ச்சித்தால் அதற்குப் பலமாக சுவர்க் கம் கிடைக்குமெனக் கூறும் கன்மகாண்ட வாக்கியம்போல விரும்பியமாத்திரத்தால் அடையப்படாத ஐக்கியமுத்தியா னது வைராக்கியத்தாலுண்டான முமூட்சுத்துவத்தால் மாத் திரம் அடையப்படுவதாக (காலானமுதற் பூமிகைவந்தால் முத்தியுங்கை வந்ததாகும்)எனச்சாத்திரங்களிற் கூறும் வாக் கியம் முத்திவிருப்பத்தைத் தருவதாகிய அருத்தவாதவாக்கி யமாகும். சித்திரப்பாவையைத் தெய்வமெனக் கூறும் ஆஸ் திகர் வாக்கியம்போல மிருத்திகை சிலை தாரு தாம்பிரா திகளாலாகிய விக்கிரகங்களை உருத்திராதிய தெய்வங்களாக ஆகமங்களிற் கூறும் வாக்கியம் உபாசனுபர வாக்கி யமாகும். அரசனுகிய மனுஷனை யிந்திரனெனக் கீர்த் திக்கும் பாவலர்வாக்கியம்போலக் கிஞ்சிஞ்ஞ ஜீவனுகிய பூசக



னை பூச்சியசர்வஞ்ஞனுகிய ஈசுவரனென ஆஸ்திகர் கூறும் வாக்கியம் துதிபரவாக்கியமாகும். அடிமைவேலை செய்பவ னை அரசனெனப்புகழும் யாசகர் வாக்கியம்போல சிவனடி யார்களைச் சிவனுகபபுகழ்ந்து கங்கைவார்சடைக்கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரெனக் கூறும்பக்தர்வாக்கியம உபசாரிகவாக்கியமாகும். நிர்த்தோஷக் கிரியாவானுகிய நைட்டிகப்பிரமசாரியைக் குணவொப்பினுல் தோஷரகிதமாயுள்ள அக்கினியென்னும்உலகர்வாக்கியம்போல மனோநாசம் வாசனுக்ஷயமாய்த் திரிபுடித்தோற்றமின்றி நிரு விகற்பசமாதியிலிராநின்ற ஞானியாகியஜீவனை நிற்குணவொப் பினுல் நின்மல சிவசொரூபமெனக் கூறும் புராணவாக்கியம் சுகுணசாதிருசவாக்கியமாகும். அவயவரகிதமாகியபசுவென் னும ஜாதிக்கு அலைதாடிமுதலிய உறுப்புகளின் சமுதாய மாகிய உடம்பு உளதெனக் கூறும் உலகர் வாக்கியம்போல அவயவரகிதமாயுள்ள சிவத்துக்குப் பஞ்சபூதம் மதி, பருதி, ஜீவனென்னும் அட்டமங்கலவடிவ உடம்பு உளதெனப் புரா ணங்களிற் கூறும வாக்கியம் ஜாதிவியக்தி வாக்கியமாகும். காரியமாகியகடம் காரணமாகிய மண்ணுக்கன்னியமல்ல ஏக மென்னும் வாக்கியம்போலக் காரியமாகிய பிரபஞ்சம் கார ணமாகிய பிரஹ்மத்துக்கு அன்னியமல்ல இரண்டும் ஏக மென்று சாத்திரங்களிற் கூறும் வாக்கியம் காரியகாரண வாக் கியமாகும். நீலோற்பலமென்னும் வாக்கியம்போலக் குணகுணி

தமாயுள்ள பிரஹ்மத்துக்குக்குணத்தைக்கற்பித்துக் குணமாகியமாயை குணியாகிய பிரஹ்மத்துக்கு வேறல்ல ஏகமென்று புராணங்களிற் கூறும் வாக்கியம் குணகுணி வாக்கியமாகும் தயிர் பாலுக்கு வேறல்ல ஏகமென்னும் வாக்கியம்போல நிருவிகாரமாகிய பிரஹ்மத்துக்கு விகாரத்துவத்தைக்கற்பித்துப் பிரபஞ்சம் பிரஹ்மத்தின் விகாரமானமையால் பிரஹ்மத்துக்கு வேறல்லவென்னும் வாக்கியம் விகாரவாக்கியமாகும். சலமும் அலைதிவலையாதிகளும் வேறல்ல ஏகமென்னும் வாக்கியம்போல நிரம்சமாயுள்ள பிரஹ்மத்துக்குச் சீவர்களை யம்சங்களாகக்கொண்டு பிரஹ்மமும் ஜீவர்களும் ஏகமென்று விசிஷ்டாத்துவித நூல்கள் கூறும் வாக்கியம் அம்சாம்சிக வாக்கியமாகும். விம்பசூரியனும் பிரதிவிம்பசூரியனும் ஏகமென்னும் வாக்கியம்போல பிரஹ்மமும் பிரதிவிம்பர்களாகிய ஜீவேசுரர்களும் ஏகமென்னும் வாக்கியம் விம்பப்பிரதிவிம்பவாவ வாக்கியமாகும். இவ்வாக்கியங்களனைத்தும் பேதவஸ்துக்களுக்கு அபேதங்கூறுதலால் பிரஹ்மாத்மைக்கியங் கூறுஞ்சுருதிக்கு விரோதமாமென அறிக.

வினா:—சுபாவ சித்தார்த்தபோதக வாக்கியங்களெவை அவைகள் சுருதிக்கு விரோதமில்லாதனவென்றது யாதினாலெனின். (81)



விடை:—கடமடவுபாதிகளை நீக்கிக் கடாகாயமும் மடாகாயமும் ஏகமெனல்போலும், இராமன் மனிதனென்பதை நீக்கித் திருமாலென்பதுபோலும், கன்னன் இராதாபுத்திரனென்பதை நீக்கிக் குந்திபுத்திரனென்பதுபோலும், தசமன் மரித்தானென்னுந் துயரமகற்றி நீயே தசமனென்பது போலும் உள்ள வாக்கியங்கள் இயல்பாகவே சித்தித்திரா நின்ற வஸ்துக்களுக்கு ஏகத்துவங் கூறுகின்றவைகளானமை யால் தத்துவமசி வாக்கியத்தால் பிரஹ்மாத்மைக்கியங் கூறும். சுருதிக்கு விரோதமில்லன வென்றதென அறிக.

வினா:—பதத்துக்குள்ள சத்திவிருத்தி யாது அதனாலுணர்த்தப்படும் பொருள்யாது? இலக்கணவிருத்தியாது. அதனாலுணர்த்தப்படும் பொருள் யாதெனின். (82)

விடை—பதத்தில் அருத்தஞானத்தை யுண்டுபண்ணத் தக்கதாயுள்ள சாமர்த்தியமே சக்தி. அப்பதத்துக்கு அருத்தத்தோடுள்ள சம்பந்தமே சக்திவிருத்தியாம். கடபதத்துக்கு கலசரூபமாகிய அருத்தத்தோடுள்ள சம்பந்தம்(பிரவிருத்தி) கடபதத்தின் சக்திவிருத்தியாயிருப்பதுபோல பதத்தின் சக்திவிருத்தியாலுணர்த்தப்படும் அருத்தம் சக்கியார்த்தமாகும். இச்சக்கியார்த்தமே வாசகபோதகமாயுள்ள வாச்சியார்த்தம் அல்லது முக்கியார்த்தமெனப்படும். சக்கிய சம்பந்தம் இலக்கணையின் சொரூபமாம். அதுவே பதத்துக்குரியபொ-

ருளை விடுத்து அப்பொருளின் சப்பந்தியை யுணர்த்துவதா கிய இலக்கணுவிருத்தியாம். யாதோராருத்தஞானம் சத்தி விருத்தியாலுண்டாகாமல் இலக்கணுவிருத்தியா லுண்டாகுமோ அது பதத்தினுடைய இலக்கியார்த்தமாம். தருக்க நூலாரும் ரூடியினுலுண்டாகும் அருத்தத்துக்குப் பங்க முண்டாகும்போது உள்ளகருத்துக் கெடாதிருத்தற்கு வேறு அருத்தத்தைக் கற்பித்துக்கொள்வது இலக்கணையின் பொது விலக்கணமென்பர். இவ்விலக்கணையும் விட்டது விடாதது விட்டுவிடாதது என மூன்றும். இவைகளையே வடநூல் வல்லார் ஜகத்லக்ஷணை. அஜகத்லக்ஷணை ஜகதஜகத் லக்ஷணையெனக் கூறுவர். இவைகள் யாண்டு வாச்சியார்த்தம பொருந்தவில்லையோ ஆண்டுக் கிரகிக்கத்தக்கவைகளென அறிக.

வினு:—தத்துவமசியென்னும் வாக்கியம் இப்மூன்றிலக்கணைகளினுனும் பொருளுணர்த்துகிறதோ வெனின். (83)

விடை:—பாகத்தியாகமாகிய விட்டுவிடாத இலக்கணையாலன்றி மற்ற இலக்கணைகளாலல்லவென அறிக.

வினு:—அற்றேல் விட்டது விடாததென்னு மிரண்டிலக்கணைகளையும் சுருதி கூறியது வியர்த்தமாமே யெனின்.

விடை:—சுருதிகளிலுள்ள



மென்னும் வாக்கியம் விடாத இலக்கணையினுலும் பொருளுணர்த்துகின்றமையின் வியர்த்தமல்லவென அறிக.

வினு:—விட்ட இலக்கணையென்பது யாது. அதனுல் மனம் பிரஹ்மமென்னும் வாக்கியம் எங்ஙனம் பொருளுணர்த்துகிறதெனின். (85)

விடை:—வாசசியார்த்தங்கள் முழுமையும் விடுத்து அதன் சமபந்தியை யுணர்த்துவது விட்ட இலக்கணையாம். கங்கைபிற்றெரு விருக்கிறதென்னும் வாக்கியத்திலுள்ள கங்கை யென்னும் பதம் தன்வாச்சியார்த்தமாகிய தேவநதிப்பிரவாகத்திற்றெருவின் திதி கூடாததலின் விட்ட இலக்கணையினுல் தேவநதிப் பிரவாகமாகிய வாச்சியார்த்த முழுவதையும் விடுத்து அதன் சம்பந்தியாயுள்ள தீரத்தை யுணர்த்துவது போல மனம் பிரஹ்மமென்னும் வாக்கியத்திலுள்ள மனமென்னும் பதம் தன்வாச்சியார்த்தமாகிய அந்தக்கரணவிருத்தி சேதனமல்லாமையால் விட்ட இலக்கணையினுல் அந்தக்கரணவிருத்தியாகிய வாச்சியார்த்த முழுவதையும் விடுத்து அதன் சம்பந்தியாயுள்ள சேதனமாகிய பிரஹ்மத்தை யுணர்த்துகிறதென அறிக.

வினு:—விடாத இலக்கணையென்பது யாது அதனுல் ... வாக்கியம் எங்ஙனம் பொ (86)

விடை:—வாச்சியார்த்தங்கள் முழுவதையும் விடாமல் அதன் சம்பந்தியை யுணர்த்துவது விடாத இலக்கணையாம். கருப்பு நிற்கிறது, சிவப்பு ஓடுகிறதென்னும் வாக்கியத்திலுள்ள கருப்புச் சிவப்பென்னும் பதங்களின் வாச்சியார்த்தங்கள் கருநிறஞ் செந்நிறமாகிய குணங்களாம். குணங்கள் குணியைவிட்டுத் தனித்துநிற்கவும் ஓடவுங்கூடாவாதலின் அப்பதங்கள் விடாத இலக்கணையினால் கருநிறஞ் செந்நிறமென்னும் குணங்களாகிய வாச்சியார்த்தங்கள் முழுவதையும் விடாமல் அவைகளின் சம்பந்திகளாயுள்ள விசேஷிய பசுவையும் அசுவத்தையும் உணர்த்துவதுபோலச் சச்சிதானந்தப் பிரஹ்மமென்னும் வாக்கியத்திலுள்ள சச்சிதானந்தமென்னும் பதங்களின் வாச்சியார்த்தங்கள் பிரஹ்மத்தின் சுபாவமாயுள்ள சத்து சித்து ஆனந்தமாகிய குணங்களாம். அக்குணங்கள் சுத்தப் பிரஹ்மமாகிய குணியைவிட்டுத் தனியேயிராவாதலின் அப்பதங்கள் விடாத இலக்கணையினால் சச்சிதானந்தமாகிய வாச்சியார்த்தங்கள் முழுவதையும் விடாமல் அவைகளின் சம்பந்தியாயுள்ள பிரஹ்மத்தையும் உணர்த்துகிறதென அறிக.

வினா:—விட்டுவிடாத இலக்கணையென்பது யாது அதனால் தத்துவமசி மகாவாக்கியம் எங்ஙனம் பொருளுணர்த்துகிறதெனின்.





விடை:—வாச்சியார்த்தமாகிய பொருள்களில் ஓர் பாகத்தை விடுத்து மற்றோர் பாகத்தை விடாமலுணர்த்துவது பாகத்தியாகமாகிய விட்டுவிடாத இலக்கணையாம். காசியில் அரசன் யானையின்மேல் பவனிவருவதைப் பார்த்துவிட்டு இராமேசுவரத்தில் வந்திருக்கும் யாத்திரைவாசிகளில் தேவதத்தனென்பவன் அக்காசியரசனை ஓர் வேற்றரசன் இராச்சியத்தைக் கவர்ந்துகொண்டு துரத்திவிட அவன் அரையிற் கோவணமும் அங்கத்தில் விபூதியுருத்திராக்கமும் தரித்துக் கரத்திற்றிருவோடு தாங்கிப் பாதசாரியாகத் தீர்த்தயாத்திரை நிமித்தமாய்ப் புறப்பட்டுத் தலங்கடோறுஞ் சுற்றிக்கொண்டு இராமேசுவரத்துக்கு வரக்கண்டு தன்னோடுகூட வந்த அன்னிய யாத்திரைவாசியாகிய எஞ்ஞதத்தனை நோக்கி முன்னர்க் காசியிற் பவனிவர நம்மால் பார்க்கப்பட்ட அரசன் எவனோ அவன்தானிவனென்று கூற; எஞ்ஞதத்தன் கைகொட்டிநகைத்து அவன் அரசன், இவன் சந்நியாசி, அவன் ஆரகேயூரமகுட பீதாம்பரதாரி, இவன் விபூதியுருத்திராக்ககோவணதாரி, அவன் கரத்திற் செங்கோலேந்திய இராச்சியபரிபாலனன், இவன் கரத்திற்றிருவோடேந்திய பிக்ஷுகன், அவன் யௌவனன், இவன் வயோதிகன், விரோதாம்சங்களையுடைய அவனிவனன்று இவனவனன்று அவனிவனாமென்பது உனது புத்திப் பிரமயாமென்று மறுக்கத் தேவதத்தன் எஞ்ஞதத்தனை நோக்கி, எஞ்ஞதத்தா; அவனென்னும் பதத்துக்கு வாச்சியார்

த்தம் இளமைப்பருவம் இராஜரீகத்துவம் ஆகேயூர மகுடபீதாம்பரம் சுதந்தரத்துவம் முதலிய விசேஷணங்களையுடைய சரீரியாகிய அரசனும். இவனென்னும் பதத்துக்கு வாச்சியார்த்தம் வயோதிகப்பருவம் பிக்ஷகத்துவம் விபூதியுருத்திராக்ககோவணம் அசுதந்தரத்துவம் முதலிய விசேஷணங்களையுடைய சரீரியாகிய சந்நியாசியாம். ஆகலின் விட்டுவிடாத இலக்கணையினாலே அவனென்னும் பதவாச்சியார்த்தங்களில் இளமைப்பருவ முதலிய விசேஷணங்களாகிய ஓர் பாகத்தையும் இவனென்னும் பதவாச்சியார்த்தங்களில் முதுமைப்பருவ முதலிய விசேஷணங்களாகிய ஓர் பாகத்தையும் விடுத்து மற்றப் பாகமாயுள்ள விசேஷிய சரீரங்களிலுள்ள நிறம் மச்சமாதிய குறிகளைமாத்திரம் பார்ப்பாயென்று கூற எஞ்ஞதத்தன் அங்ஙனமே விசேஷண பாகங்களை நீக்கி விசேஷியபாகமாகிய சரீரத்திலுள்ள நிறம்மச்சமாதிய குறிகளை நோக்கி அந்தச் சரீரத்திலிருந்த நிறங்குறியாதிகளே இந்தச்சரீரத்திலிருக்கிறபடியால் அந்தச்சரீரமே இந்தச்சரீரமென்றறிந்து அவன்தானிவன் இவன்தானவனென ஒப்பினான். இங்ஙனமே எஞ்ஞதத்தனுக்குத் தேவதத்தன் உணர்த்தியதுபோலத் தத்துவமசி மகாவாக்கியத்திலுள்ள ததுவென்னும் பதத்தின் வாச்சியார்த்தம் காரியசகிதமாயை, மாயையின் கண்ணுள்ள ஆபாசம், அவையின் அதிட்டானசேதனம் ஆகிய மூன்றுஞ் சேர்ந்துள்ள சர்வஞ்ஞத்துவாதி தருமசகிதனை ஈசுரனும். துவமென்



னும் பதத்தின் வாச்சியார்த்தம், காரியசகித அவித்தை, அவித்தையின்கணுள்ள ஆபாசம், இவைகளின் அதிட்டான சேதனம் ஆகிய மூன்றுஞ் சேர்ந்துள்ள கிஞ்சிக்ஞத்துவாதி தருமசகிதனை ஜீவனும். விரோத தருமங்களையுடைய இவ்விருவர்க்கும் ஏகத்துவம் பொருந்தாமையின் அவ்வாக்கியம் பாகத்தியாகமாகிய விட்டுவிடாத இலக்கணையினால் தற்பதவாச்சியார்த்தத்தில் காரியசகித மாயை மாயையின் கண்ணுள்ள ஆபாசம் சருவஞ்ஞத்துவாதி தருமங்களாகிய ஓர் பாகத்தையும் துவம்பத வாச்சியார்த்தத்தில் காரியசகித அவித்தை வித்தையின் கண்ணுள்ள ஆபாசம் கிஞ்சிஞ்ஞத்துவாதி தருமங்கள் ஆகிய ஓர் பாகத்தையும் விடுத்து அவைகளின் சம்பந்தியாயுள்ள பிரஹ்ம கூடத்தரென்னும் அதிட்டான சேதனங்களை விடாமல் அசியென்னும் பதத்தால் பிரஹ்மமே கூடத்தர் கூடத்தரே பிரஹ்மமென விரோதமின்றி ஏகத்துவமுணர்த்துகிறதென அறிக.

வினா:—இம் மகாவாக்கியத்திலுள்ள தது துவமென்னுமிரண்டு பதங்களும் ததுவெனனும் பதவாச்சியார்த்தமே பிரஹ்மமெனவும் துவமென்னும் பதவாச்சியார்த்தமே கூடத்தரெனவும் தம்சக்தி விருத்திகளால் நேரே பொருளுணர்த்துகின்றனவெனக் கொள்ளாமல் இலக்கணாவிருத்தியெனப் பதசம்பந்தமின்றிய ஓர் விருத்தியை வருவித்தது அத

ஞல் பிரஹ்ம கூடத்தரை யுணர்த்துகின்றனவெனக் கொள்
ளுதல் வீண்பிரயாசமும் அசம்பவமுமா மெனின். (88)

விடை:—பதத்திற்கு வாச்சியார்த்தத்தோடு சம்பந்த
மிருப்பதுபோல வாச்சியத்துக்கு லக்ஷணையோடு சம்பந்த
முண்டு. பதத்துக்கு லக்ஷணையோடு சாக்ஷாத்சம்பந்தமில்லை.
வாச்சியவாயிலாகச் சம்பந்தமுண்டு. அது பரம்பராசம்பந்த
மாகும். இதனையறியாமல் பதத்திற்கும் லக்ஷணைக்கும் சம
பந்தமில்லையென்பது விசாரக்குறைவாம். இஃதன்றி தது
(அது) வென்னும்பதத்தின் சக்தி விருத்தியாலுணர்த்தப்
படும் பொருள் பரோக்ஷமாகவும் தூரத்திருப்பதாகிய கண்ட
ப்பொருளாகவும் உள்ளதானமையின் அப்பதம் அபரோ
க்ஷமாகவும் சமீபத்தினுஞ் சமீபமாகவும் பூரணமாகவுமுள்ள
பிரஹ்மத்தையும், துவம (நீ) யென்னும்பதத்தின் சக்தி
விருத்தியாலுணர்த்தப்படும் பொருள் பிரத்தியக்ஷமாகவும்
முன்னிலைவிஷயமாகவும் உள்ளதானமையின் அப்பதம் நிர்
விஷயமாகவும் தானகவுமுள்ள கூடத்தரையும் தம்தம்சக்தி
விருத்தியாலுணர்த்துகின்றன வெனக்கொள்ளுதலே வீண்
பிரயாசமும் அசம்பவமுமாகும். ஆகலின் இலக்கணவிரு
த்தியால் பொருளுணர்த்துகின்றனவெனக் கொள்ளுதலே
அமைவுடைத்தென அறிக.

வினு:—அற்றேல் சக்கியார்த்தமே வாச்சியார்த்தமென
வும், வாச்சியார்த்தசம்பந்தமே லக்ஷணையெனவும்கூறுகின்ற



படி வாச்சியார்த்தத்துக்கு லக்ஷியசேதனத்தோடு சம்பந்தம்
ஒப்பினுவ் லக்ஷியசேதனம் அசங்கமென்னுஞ்சுருதிக்கு வி
ரோதமாம். சம்பந்தமொப்பாவிடில் லக்ஷணைகூடாது. யாதினு
லெனின். சக்கியசம்பந்தம் லக்ஷணையென்று சொல்லப்படு
கிறது. அது அசங்கத்திற் சம்பவிக்காது. ஆதலால் லக்ஷணு
விருத்தியால் பொருள்கொள்ளுதலும் சுருதியாதிகட்கு
விரோதமாமெனின். (89)

விடை:—வாச்சியார்த்தத்தில் சேதனம் சடமென இர
ண்டுபாகமுளது இவ்விரண்டில் வாச்சியசேதனங்களுக்குச்
சொரூபம் லக்ஷியசேதனமேயாகும். ஆதலால் வாச்சியசே
தனங்களுக்கு லக்ஷியார்த்தத்தில் தாதாத்மியசம்பந்தமுளது.
வாச்சியமாகிய சடங்களுக்கு லக்ஷியசேதனத்தில் அதிட்டா
னத்துவ சம்பந்தமுளது. கற்பிதமாகிய கானற்சலசம்பந்தத்
தால் ஊஷரபூமி நனைதலாதிய விகாரங்களையடையாதது
போல கற்பிதமாகிய வாச்சியசடங்களின் சம்பந்தத்தால்
அதிட்டானமாகிய லக்ஷியசேதனத்தின் சுபாவம் மாறுப
டாது. ஆதலால் லக்ஷணைசம்பவிக்கிறதுபற்றி லக்ஷணுவிரு
த்தியால் பொருளுணர்த்துகிறதெனக்கொள்ளுதல் சுருதி
யாதிகட்கு விரோதமில்லையென அறிக.

வினு:—இந்தத்தத்துவமசிமகாவாக்கியம் எந்தவேதத்
தின்வாக்கியம் இதனைப்பூர்வம் யாருக்குயார் உபதேசித்திரு
க்கிருர்களெனின், (90)

விடை:—சாமவேதத்தின் சாந்தோக்கியவுபநிடதத்தின் ஆறுவது அத்தியாயத்திலுள்ளவாக்கியமாம். இதனைப் பூர்வம் உத்தாலகமுனிவர் தன்புத்திரனாகிய சுவேதகேதுவுக்கு உபதேசித்திருக்கிறாரென அறிக.

வினா:—சாமவேதத்திலிருப்பதுபோல மற்றைய மூன்று வேதங்களினுஞ் சீவப்பிரஹ்மங்கட்கு ஏகத்துவம் போதிக்கும் வாக்கியங்களுளவோவெனின். (91)

விடை:-இருக்குவேதத்தின் ஐதரேயவுபநிடதத்திற்பிரஞ்ஞானம் பிரஹ்மமெனவும், எசுர்வேதத்தின் தைத்திரியோபநிடதத்தில் அஹம் பிரஹ்மாஸ்மியெனவும், அதர்வணவேதத்தின் முண்டகோபநிடதத்தில் அயமாத்மா பிரஹ்மமெனவும், ஜீவபபிரஹ்மங்கட்கேகத்துவம் போதிக்கும் வாக்கியங்களுள்ளனவாகும். இவைகளில் தத்பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய ஈசுரனும் இலக்ஷியார்த்தமாகிய பிரஹ்மமுமே மற்றைமூன்று வாக்கியங்களிலுமுள்ள பிரஹ்மபதத்திற்கு வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களாம். துவம்பதத்திற்கு வாச்சியார்த்தமாகியஜீவனும், இலக்ஷியார்த்தமாகிய கூடஸ்தருமே மற்றைய மூன்றுவாக்கியங்களிலுமுள்ள பிரஞ்ஞானம், அஹம், அயமாத்மாவென்னும் மூன்றுபதங்களுக்கும் வாச்சியார்த்த இலக்ஷியார்த்தங்களாம். ஆதலால் தத்துவமசி மகாவாக்கியத்திற்குள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியமாகிய அர்த்தமே மற்றைய



மூன்று மகாவாக்கியங்களுக்குமுள்ள அர்த்தமாம். இவ்வா
க்கியங்கள் ஒரேவித அர்த்தங்களையுடையனவாக இருக்கி
னும், பிரஞ்ஞானம் பிரஹ்மமென்னும்வாக்கியம் இலக்ஷண
வாக்கியமும், அகம் பிரஹ்மாஸ்மியென்னும் வாக்கியம் அப்
பியாசவாக்கியமும், தத்துவமசியென்னும் மகாவாக்கியம் உப
தேசவாக்கியமும், அயமாத்மாப் பிரஹ்மமென்னும்வாக்கியம்
சாக்ஷாத்காரவாக்கியமுமாகும். இவ்வாக்கியங்கட்கு உற்ப
த்தி, பேதம், மகிமை, பிரகாசம் இலைகளால அஞ்ஞானநிவ
ாத்தி, அவதி, நிர்ணயம், அடைந்தவர்கதை, தியானம், உரை
யெனத்தசகாரியங்களுள்ளன. இவைகளையறிய விரும்பில்
ஸ்ரீமத்சங்கரபகவத்பாதாள் செய்தருளிய தசகாரியமகாவா
க்கியமென்னும் கிரந்தத்திற்காண்க.

வினா:—இவ்வாக்கியங்களை லக்ஷண அப்பியாச உபதேச
சாக்ஷாத்கார வாக்கியங்களென்றது யாதினாலெனின். (92)

விடை:—பிரஞ்ஞானம் பிரஹ்மமென்னும் வாக்கியம்
அறிவே பிரஹ்மமெனப் பிரஹ்மவிலக்கணங் கூறும் வாக்கிய
மும், அகம்பிரஹ்மாஸ்மியென்னும் வாக்கியம் நான் பிரஹ்ம
மென அப்பியாசிக்கும்வாக்கியமும், தத்துவமசியென்னும்
வாக்கியம் அதுநீயாகிறாயெனப்போதிக்கும் வாக்கியமும், அய
மாத்மா பிரஹ்மமென்னும் வாக்கியம் இந்த ஆத்மாவே

பிரஹ்மமெனத் திடாபரோக்ஷ அனுபவங்கூறும் வாக்கியமு
யாக இருத்தலினென அறிக

வினா:—இவ்வாக்கியங்களில் உபதேசவாக்கியம் யாருக்
குப்போதிக்கத்தக்கதாகுமெனின். (93)

விடை:—நிட்காமபுண்ணியத்தால் நான்குசாதனங்களும்
அவாந்தரவாக்கிய சிரவணத்தால் பரோக்ஷஞானமுமுள்ளா
ர்க்குப் போதிக்கத்தக்கதாகும். இவ்வாக்கியத்திற்குச் சிலர்
அதுபோல நீயாகிறாயெனவும், சிலர் அதன் தருமமாக நீயா
கிறாயெனவும், சிலர் அது நீயானாயெனவும், சிலர் அது நீயா
கிறாயெனவும் பொருள்தோன்றப்போதிக்கின்றனர். இவற்றில்
முற்சொல்லிய இரண்டும் சகுணமுத்திவிஷயமானமையால்
உபேக்ஷிக்கத்தக்கனவாகும். பிற்சொல்லியவைகளில் அது
நீயானாயென்பது சென்றகாலத்தைக் காட்டுகின்றமையால்
பூர்வம் பிரஹ்மமாகிய ஜீவனுக்குப்போதிக்கும் உபதேசம்
பயனற்றதாகும். ஆதலால் அவைகளைநீக்கி அது நீயாகிறா
யெனச் சுருதியின் தாற்பரியப்படி போதித்தலையே சிறந்த
தாகக் கொள்ளத்தக்கதென அறிக.

வினா:—சீடன் உத்தமாதிகாரியாக இ...
னாலுபதேசிக்கப்ப...



அது நீயாவாயென வருங்காலந் தோன்றக்கூறாமல் அது நீயா
கிறாயென நிகழ்காலந்தோன்றக் கூறுவது பொருந்தாதெ
னின். (94)

விடை:—காட்டாற்றை நீந்திக் கையயர்ந்து கரையினரு
கேவராநின்ற சினேகனை நோக்கிக் கரையிலிருப்பவன் கரை
யில் வந்தாயிற்றுப் பயம்வேண்டாமென்று கூறுவதுபோலப்
பிராந்திநீக்கத்தால் பிரஹ்மமாகத் தக்கவனைப் பிரஹ்மமாகி
றாயென்பது பொருந்துமென அறிக.

வினா:—ஜீவனும் பிரஹ்மமும் பேதப்பொருளானால்
எக்காலத்தினும் பேதப்பொருளாகவேயிருக்கும். அங்ஙன
மிராநின்ற ஜீவப்பிரஹ்மங்கட்கு ஏகத்துவங்கூறுதல் கடத்
துக்கும் படத்துக்கும் ஏகத்துவம் கூறுதல்போல அசம்பாவி
தமாம். அல்லது ஜீவனும் பிரஹ்மமும் அபேதப்பொருளா
னால் இயற்கையில் அபேதமாயிராநின்ற ஜீவப்பிரஹ்மங்க
ட்கு இப்போது அதுவே நீயென அபேதங்கூறும் வாக்கியம்
புருடனாயுள்ளவனைப் புருடனாகிறாயென்னும்வாக்கியம்போல
ப்பயனற்றதாகும். அல்லது ஜீவனால் தனக்கு முன்னில்லாத
... யப்படுகிறதைப் பற்றிக் கூறிய

பிரஹ்மமெனத் திடாபரோக்ஷ அனுபவங்கூறும் வாக்கியமுயாக இருத்தலினென அறிக

வினு:—இவ்வாக்கியங்களில் உபதேசவாக்கியம் யாருக்குப்போதிக்கத்தக்கதாகுமெனின். (93)

விடை:—நிட்காமபுண்ணியத்தால் நான்குசாதனங்களும் அவாந்தரவாக்கிய சிரவணத்தால் பரோக்ஷஞானமுமுள்ளார்க்குப் போதிக்கத்தக்கதாகும். இவ்வாக்கியத்திற்குச் சிலர் அதுபோல நீயாகிருயெனவும், சிலர் அதன் தருமமாக நீயாகிருயெனவும், சிலர் அது நீயானுயெனவும், சிலர் அது நீயாகிருயெனவும் பொருள்தோன்றப்போதிக்கின்றனர். இவற்றில் முற்சொல்லிய இரண்டும் சகுணமுத்திவிஷயமானமையால் உபேக்ஷிக்கத்தக்கனவாகும். பிற்சொல்லியவைகளில் அது நீயானுயென்பது சென்றகாலத்தைக் காட்டுகின்றமையால் பூர்வம் பிரஹ்மமாகிய ஜீவனுக்குப்போதிக்கும் உபதேசம் பயனற்றதாகும். ஆதலால் அவைகளைநீக்கி அது நீயாகிருயெனச் சுருதியின் தாற்பரியப்படி போதித்தலையே சிறந்ததாக் கொள்ளத்தக்கதென அறிக.

வினு:—சீடன் உத்தமாதிகாரியாக இருக்கினும் குருவினுலுபதேசிக்கப்பட்ட இரண்டாவது க்ஷணத்தில் மனனமும் மூன்ருவது க்ஷணத்தில் நிதித்தியாசனமும் செய்யாமல் அவனுக்குப்பிரஹ்மானுபவமுண்டாகமாட்டாது. ஆதலால் சுருதி



அது நீயாவாயென வருங்காலந் தோன்றக்கூருமல் அது நீயாகிருயென நிகழ்காலந்தோன்றக் கூறுவது பொருந்ாதெனின். (94)

விடை:—காட்டாற்றை நீந்திக் கையயர்ந்து கரையினருகேவராநின்ற சிநேகனை நோக்கிக் கரையிலிருப்பவன் கரையில் வந்தாயிற்றுப் பயம்வேண்டாமென்று கூறுவதுபோலப் பிராரப்தநீக்கத்தால் பிரஹ்மமாகத் தக்கவனைப் பிரஹ்மமாகிருயென்பது பொருந்துமென அறிக.

வினு:—ஜீவனும் பிரஹ்மமும் பேதப்பொருளானுல் எக்காலத்தினும் பேதப்பொருளாகவேயிருக்கும். அங்ஙனமிராநின்ற ஜீவப்பிரஹ்மங்கட்கு ஏகத்துவங்கூறுதல் கடத்துக்கும் படத்துக்கும் ஏகத்துவம் கூறுதல்போல அசம்பாவிதமாம். அல்லது ஜீவனும் பிரஹ்மமும் அபேதப்பொருளானுல் இயற்கையில் அபேதமாயிராநின்ற ஜீவப்பிரஹ்மங்கட்கு இப்போது அதுவே நீயென அபேதங்கூறும் வாக்கியம் புருடனுயுள்ளவனைப் புருடனுகிருயென்னும்வாக்கியம்போலப்பயனற்றதாகும். அல்லது ஜீவனுல் தனக்கு முன்னில்லாத பிரஹ்மசொரூபம் இப்போதடையப்படுகிறதைப் பற்றிக் கூறிய வாக்கியமானமையால் பயனுள்ளதேயாகுமெனின், அற்றேல் அடையப்படும் சுவர்க்கபலம்போல மோக்ஷமும் அநித்தியமாகும். ஆதலாலிவ்வாக்கியம்உபேக்ஷிக்கத்தக்கதெனின்.(95)

விடை:—தோற்றரவாகிய இரச்சுசர்ப்பத்தைத் தீபப்
பிரகாசங்கொண்டு பார்க்கும்போது சர்ப்பம் இரச்சுவுக்கு
வேருகாமல் இரச்சுவாகவே நிலைபெறுகிறபடியால் முன்னர்க்
கற்பிதபேதமாகவும் பின்னர் வாஸ்தவ அபேதமாகவுமிருப்ப
துபோலஜீவப்பிரஹ்மங்கள் முன்னுள்ள அஞ்ஞானகாலத்திற்
கற்பிதபேதமாகவும் பின்னர்ஞானகாலத்திற் வாஸ்தவ அபே
தமாகவுமிருக்கிறதுபற்றி யங்ஙனங்கூறியதாகுர். அற்றன்
றெனின் வேதத்தில் ஏகத்துவங் கூறும் வாக்கியமும், அதனை
உலகத்தில்அனுதிதொட்டுஉபதேசித்தும் சிரவணஞ்செய்தும்
வாராநின்ற குருசிஷ்யசப்பிரதாயமுமில்லாதிருக்கவேண்டும்.
அங்ஙனமின்றியிருக்கின்றமைபால் இவ்வாக்கியம் அசம்பாவி
தமும் பயனற்றதும் உபேக்ஷிக்கத்தக்கதுமாகாதெென அறிக.

வினு:—தத்துமசிவாக்கியத்துக்கு இங்ஙனம் பொருள்
கொள்ளாமல் வேறுவிதமாகப்பொருள் கொள்வாருமுளரோ
வெனின். (96)

விடை:—வைணவர்களாகிய விசிட்டாத்துவிதிகளும்
மத்துவாளாகிய துவிதிகளும் சுருதிக்குவிரோதமாக வேறு
விதமாய்ப் பொருள்கொண்டிருக்கிருர்களென அறிக.

வினு:-விசிட்டாத்துவிதிகள் சித்தாந்தமியாதெனின். 97

விடை:—விசிட்டம் விசேஷணங்களுடன்கூடியது.
அத்துவிதம் இரண்டற்று ஒன்ருயிருப்பது. ஒருபதார்த்தம்



வருணமாதியகுணங்கள் சேர்ந்துள்ளதாய்ப் பிரிவுபடாமல்
ஒன்ருகவேயிருப்பதுபோல பரமாத்மாவானது சித்து அசித்
துக்களாகிய விசேஷணங்கள் சேர்ந்துள்ளதாய்ப் பிரிவுபடா
மல் ஒன்ருகவேயிருக்கிறதென்னுங்கொள்கை. விசிட்டாத்
துவிதசித்தாந்தமாகும். இவ்விசிட்டாத்துவித நூல்கள் பர
மாத்மா சித்து அசித்து என்னுந்தத்துவத்திரயங்களில் பர
மாத்மாவென்பது பிரஹ்மமாம். அது ஒன்றே சத்தியம்.
மற்றவைகள் அதை ஆசிரயித்த சத்திய தத்துவங்கள், இந்
தத்தத்துவங்களில் சித்தென்பது சைதன்யமாகிய ஜீவாத்மா
அசித்தென்பது அசேதனமாகிய காலம். மூலப்பிரகிருதி
சத்துவ இராஜஸ தாமதகுணங்களாகிய இவைகளாம் இவை
களில் காலம் அநித்தியம். மூலப்பிரகிருதி நித்தியம். மண்
கடத்துக்கு உபாதானகாரணமா யிருப்பதுபோல மூலப்பிர
கிருதியே பிரமாண்ட சிருட்டிக்கு உபாதானகாரணம் சித்து
அசித்துகள் பரமாத்துமாவுக்குச் சரீரம் பரமாத்மாசரீரி
எனவும் தத்துவத்திரயங்களில் யதார்த்தஞானம் (க) ஆசா
ரியர் சரீரத்திற் பிரீதி (உ) வேதங்களிடத்திற் பக்தி (ஙு)
மோக்ஷ இச்சை (ச) வைராக்கியம் (ரு) கருமத்தில் ஆசக்தி
(சா) வேதாந்த அப்பியாசம் (எ) ஆகிய இவைகள் மோக்ஷ
மடைதற்குரிய அதிகாரிகட்குள்ள சாதனங்களெனவும்
கர்மயோகம் (க) ஞானயோகம் (உ) பத்தியோகம் (ஙு) பிர
பத்தி (ச) ஆகிய இவைகள் மோக்ஷமடைதற்கான வுபாயங்

களெனவும் மோக்ஷமானது கைவல்லியமோக்ஷம் பிரஹ்மானந்த மோக்ஷம் என இரண்டாம் இவ்விரண்டில் ஜீவன் தன் வாஸ்தவமான ஸ்திதியிலிருந்துகொண்டு ஆனந்தத்தையனுபவிப்பது கைவல்லியமோக்ஷமெனவும் இதை யடைந்தவன் பிரகிருதி மண்டலத்துக்கு வெளியில் விரசாநதிக்கு இக்கரையிலிருப்பதாகச் சிலர்களும், முத்தர்களடையும் வைகுண்ட லோகத்தை யடைகிறான் அடையினும்பரமாத்மாவிற்கு சமீபத்திற் செல்லுகிறதில்லை. வைகுண்டத்தில் பறைச்சேரிக்கு ஒப்பான ஒரு மூலையிலிருக்கிறானெனச் சிலர்களும் சொல்லுவர். ஜீவன் வைகுண்டலோகத்திற் பரமாத்மாவிற்குச் சமீபமாய்ச்சென்று பரமாத்மாவின் தருமமாகிப் பரமானந்தத்தை யனுபவித்தல் பிரஹ்மானந்தமோக்ஷமெனவும் பிரஹ்மத்தில் ஜீவன் லயமாகிறதில்லை சாலோக சாமீப சாரூப சாயூச்சியங்களை யடைகிறானெனவும் கூறுகின்றனவென அறிக.

வினா:—இவ்விசிட்டாத்துவிதிகள் தத்துவமசி மகாவாக்கியத்துக்கு எங்ஙனம் பொருள் கொண்டிருக்கிறார்களெனின். (98)

விடை:—தத் (தஸ்யா) துவம் (பாவா) அசியென்பதே தத்துவமசி யெனவும் இதன்பொருள் தஸ்யா (பரத்தின்) பாவா (தருமமாக) அசி, (ஆனாய்) பரத்தின் தருமமாக ஆனா



யெனவும் இவ்வாக்கியத்திலுள்ள துவமென்னும் பதம் தருமத்தை விளக்கியதெனவும் பொருள் கொண்டிருக்கிறார்களென அறிக.

வினா:—துவமென்னும் பதம் தர்மத்தை விளக்கியது; எதுபோலுமெனக் கொண்டிருக்கிறார்களெனின். (99)

விடை:—பிரஹ்மணத்துவம் சூத்திரத்துவம் சந்நியாசத்துவம், அந்தக்கரணத்துவம் என்பவற்றில் துவமென்னும் பதம் தர்மத்தை விளக்கி நின்றாற்போலுமெனக் கொண்டிருக்கிறார்களென அறிக.

வினா:—விசிட்டாத்துவிதிகள் பொருள் கொள்வது போலவேதாந்திகளும் பொருள் கொள்ளில் விரோத மென்னையெனின். (100)

விடை:—பிரஹ்மத்தைத் தருமமாதிய விசேடணங்களுடைய தென்பதும் ஆத்மாவைத் தருமியையன்றி யோர் பொருளாக நிலைபெறாத தருமமாகக் கொள்ளுதலும் நிர்குண நிரம்ச நிர்விசேடமாயுள்ளது பிரஹ்மமெனவும் அதுவே சத்தாகிய ஆத்மாவெனவும் போதிப்பதாகிய சுருதியாதிகட்கு விரோதமாமென அறிக.

வினா.—துவித சித்தாந்தமாவது யாதெனின். (101)

விடை:—திவ்வியகல்யாணகுண சம்பன்னனான விஷ்ணுவே பரமாகிய சர்வேசுரன் இவனே ஜடப்பிரகிருதியினின்றும் ஜகத்தைச் சிருட்டித்தமையால் ஜகத்துக்கு நிமித்தகாரணன் ஜடப்பிரகிருதி யுபாதானகாரணம், விஷ்ணு ஜீவன், பிரகிருதி மூன்றும் நித்தியம். நாசமற்றவை இவைகள் தனித்தனியே சத்தியம் ஒன்றுக்கொன்று வேறானவையென்னுங் கொள்கையே துவிதசித்தாந்தமாகும். இத்துவித சித்தாந்தநூல்கள் பிரகிருதியுஞ் ஜீவனும் விஷ்ணுவின் ஆள்கைக் குட்பட்டவைகள். பிரகிருதியின் சத்துவ ராஜச தாமசகுணங்களால் ஜீவன் பந்திக்கப்பட்டு அதனால் ஜனன மரணங்கட்குட்படுகிறானெனவும், முத்திக்குச் சாதனம் விஷ்ணுவின்பாலுள்ள பக்தியேயெனவும், இப்பக்தியால் விஷ்ணுவின் பிரசாதத்தையடைந்து அதனால் கர்மக்ஷயமாகும்போது பரமாகிய விஷ்ணுவைப்போ லிருப்பதாகிய முத்தியை யடைகிறானெனவுங் கூறுகின்றனவென அறிக

வினா:—இத்துவிதவாதிகள் தத்துவமசி மகாவாக்கியத்திற்கு எங்ஙனம் பொருள் கொண்டிருக்கிறார்களெனின் 102

விடை:—ததிவாதுவம் அசியென்பது தத்வமசியெனவும் இதன்பொருள். தத்(பரம்) இவா (போல) துவம் (நீ) அசி ஆனாய் (பரம்போல நீ யானாயெனவும்) இவ்வாக்கியத்தில் இவா வென்னும் உவம்வுருபு தொக்கு நின்றதெனவும் பொருள் கொண்டிருக்கின்றனரென அறிக.



வினா:—இவாவென்னும் உருபு தொக்கு நின்றதெது போலுமெனின். (103)

விடை:—மதிமுகம் பவளவாயென்பவற்றில் போலு மென்னும் உவமவுருபுதொக்கு நிற்பதுபோலுமென அறிக.

வினா:—துவிதவாதிகள் பொருள் கொள்வதுபோல வேதாந்திகளும் பொருள்கொள்ளில் விரோத மென்னையெனின். (104)

விடை:—பரமாகிய பிரஹ்மத்தைப்போல ஜீவனாகிய நீயானாயெனின் ஜீவர்களனேகரானமையால் அனேக ஜீவரும் சமசத்தையுடைய அனேகபிரஹ்மங்களாகி ஒன்றிருந்த விடத்து மற்றொன்றிராமல் பரிச்சின்னவத்துக்களேயாகும்; அங்ஙனமாயின் பிரஹ்மத்தை அத்துவிதம் அகண்டமெனக் கீர்த்திக்கும் சுருதியாதிகட்கு விரோதமாமென அறிக.

வினா:—இவ்வாக்கியத்துக்கு அது நீயாகிறாயென அவிரோதமாக நேரே பொருள் கோடற்பாலதாயிருக்க இம்மதாசாரியர்கள் சுருதிக்கு விரோதமாக வருந்திப் பொருள் கொள்வதற்குக் காரணம் யாதெனின். (105)

விடை:—பிரஹ்ம நிஷ்டராகிய குருவைத் தெரிந்தடையாமையும் நிட்காமகன்மக் குறைவால் வேதாதிகளின் உண்மைப்பொருள் விளங்காத புத்திதோடமும் மதாபிமானமுமென அறிக.

வினா:—ஜீவர்கள் வேதாந்தானுசாரமாக இம்மகாவாக்கிய விசாரஞ்செய்வதால் உண்டாகும் பலம் யாதெனின் 106

விடை:—துக்கமயமாகிய தேகாதிகளினின்றும் விடுபட்டு நித்தியாநந்த மயமாகிய முத்தியையடைதற்குறிய அபரோக்ஷஞானமென அறிக.

வினா:—ஜீவன் தேகாதிகளிலுள்ள அகம்புத்தியாதிகள் நீங்குதற்குத் துவம்பத விசாரமாத்திரஞ் செய்யவேண்டுமேயன்றித் தற்பத விசாரமேன் செய்யவேண்டுமெனின். (107)

விடை:—துவம்பத விசாரத்தாற் ஜீவன் தேகாதிகளிலுள்ள அகம்புத்தி நீங்கித்தான் பரமாத்மாவாகச் சேடிக்கினும் ஜகத்துச்சத்தியம் ஈசுரனொருவனுளனென்னும் புத்தி நீங்காமல் அடங்கிநிற்றலால் ஜீவன் பாகியப்படும்போது பிரகிருதியும் சகத்திற் பிரியாப்பிரியங்களை யுதிப்பித்து நல்வினை தீவினைகளிற் பிரவர்த்திப்பிக்கும் ஈசுரனும் அவ்வினைகட்குத் தக்கதாகப் பின்னும் சம்சாரங்களிற் சேர்ப்பிப்பன் ஆதலின் சகத்தும் ஈசுரனும் உண்டென்னும் புத்தி நீங்கும் நிமித்தம் தற்பதவிசாரமுஞ் செய்யவேண்மென அறிக.

வினா:—தற்பதவிசாரம் யாது. அதனால் சகத்துச் சத்தியம் ஈசுரனுளனென்னும் புத்தியும் சம்சாரமும் நீங்குமென்பது யாங்ஙனமெனின். (108)



விடை:—விராட்டு இரணியகருப்பம் அவ்வியாகிருதம் என்னும் சரீரத்திரயங்களும் வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமி யென்னும் அபிமானித்திரயங்களும் இவைகளுக்கதிட்டானமாகிய பிரஹ்மமும் தற்பதத்துக்கு வாச்சியார்த்தங்களாம். இவைகள் நாமம், ரூபம், அஸ்தி பாதிப் பிரியமென்னும் ஐந்தம்சங்களாக வுள்ளனவாகும். இவைகளில் நாமமும், ரூபமும், தோன்றல், திரிதல், கெடுதலாகிய விகாரங்களை யுடையனவாயிருத்தலின் மித்தையெனவும் சத்து (இருப்பு) சித்து (விளக்கம்) ஆனந்தம் (நல்லது)என்னும் மூன்றம்சங்களும் நிர்விகாரமா யிருத்தலால் பிரஹ்மத்தின் சொரூபமெனவும் சத்தியமெனவும் பிறித்தறிவதே தற்பதவிசாரமாகும். இவ்விசாரத்தால், சச்சிதானந்த மயப் பிரஹ்மமே துவம்பத விசாரத்தாற் தானாகச் சேடித்துள்ள கூடத்தரெனவும், கூடத்தரே பிரஹ்மமெனவும் அறிந்து சாக்ஷாத்கரிக்கில்ஜகத்துச்சத்தியம்ஈசுரனுளனென்னும் புத்தி நீங்கும் நீங்கவே சகல சம்சாரங்களும் நீங்கும். இஃதன்றி தற்பத வாச்சியார்த்தங்களிலுள்ள காரியங்களை யதனதன் காரணங்களாக அபவாதித்துப் பார்ப்பதாகிய லயசிந்தனையினாலும் சகத்துச்சத்தியம் ஈசுரனுளனென்னும் புத்தியும் நீங்குமென அறிக.

வினா:-லயசிந்தனைக்கிரமம் யாது. அதனால் ஜகத்துச் சத்தியம் ஈசுரனுளனென்னும் புத்தியும் சம்சாரமும் எங்ஙனம் நீங்குமெனின். (109)

விடை:—காரியங்காரணத்தையன்றி யோர்பொருளாக
நிலைபெறுதென்னும் நியாயவாயிலாக இரச்சுவிற்றோற்றமா
கிய சர்ப்பத்தையபவாதித்துப் பார்க்குமிடத்துக் காரணமா
கிய இரச்சுவைத்தவிர காரியமாகிய சர்ப்பம் ஓர்பொருளாக
நிலைபெறாமல் இரச்சுமாத்திரமாகவே ஒடுங்கும். அப்போது
அபவாதித்துப் பார்த்தபுருடனுக்கு சற்பஞ் சத்தியமென்
னும் புத்தியோடு அப்புத்தியாலுண்டாகிய பயகம்பமாதி
களும் நிவர்த்தியாவதுபோல பிரஹ்மத்திற் றோற்றமாகிய
தற்பதவாச்சியார்த்தங்களில் விராட்டுசரீரமாகவுள்ள சம
ட்டி தூலசரீரதத்துவங்களை யவைகளின் காரணங்களாக
அபவாதிக்கில் அவைகளனைத்தும் தமக்குக்காரணமாகிய
தூலபஞ்சபூதங்கட்கும் அவைகளும் தமக்குக்காரணமாகிய
சூட்சும பஞ்சபூதங்கட்கும் அன்னியமாகவோர்பொருளாக
நிலைபெறாமல் சூட்சும பஞ்சபூதமாகவே ஒடுங்கும். அப்
போது விராட்டுசரீரம் இரணியகருப்ப சரீரத்துக்கும்
விராட்டனாகிய வைசுவாநரன் இரணியகருப்பனாகிய சூத்தி
ராத்மாவுக்கும் அன்னியமாக இல்லை. அவ்விரணியகருப்ப
சரீரத்தை அதன்காரணமாக அபவாதிக்கில் சமட்டி சூட்
சும சரீரங்களனைத்தும் தமக்குக்காரணமாகிய சூட்சும பஞ்
சபூதங்கட்கும் அவைகளும் ஒன்றற்கொன்று காரணமாயி
ருத்தலின் பிருதிவு அப்புவுக்கும் அப்பு அக்கினிக்கும் அக்
னி வாயுவுக்கும்வாயுவு ஆகாயத்துக்கும் ஆகாயம் விக்ஷேபா



சத்திக்கும் விக்ஷேபசத்தியும்ஆவரணசத்தியும் சமட்டி அவி
த்தையாகிய அவ்வியாகிருத சரீரத்துக்கும் அன்னியமாக
நிலைபெறாமல் அவ்வியாகிருத சரீரமாகவே ஒடுங்கும். அப்
போது இரணியகருப்பசரீரம் அவ்வியாகிருத சரீரத்துக்
கும் இரணியகருப்பனாகிய சூத்திராத்மா அந்தரியாமியெ
ன்னும் ஈசுவரனுக்கும் அன்னியமாக இல்லை. அவ்வியா
கிருத சரீரத்தை யதன்காரணமாக அபவாதிக்கில் பிரகிரு
திக்கும் பிரஹ்கிருதி பிரம்மத்துக்கும் அன்னியமாகஓர்பொ
ருளாகநிலைபெறாமல் பிரஹ்மமாத்திரமாகவே ஒடுங்கும். அப்
போதுதூலசூட்சுமப் பிரபஞ்சங்கள் தமக்குக்காரணமாகிய
அவித்தைமாயைகளோடு சூனியமாய்விட்டமையால் ஜகத்
துச் சத்தியமென்னும் புத்தியும் சலப்பிரதிவிம்பாகாயம்
சலம்நீங்கியபோது தனக்கதிட்டானமான மகாகாயமாத்
திரமாக ஒடுங்கியதுபோல் அவ்வியாகிருத சரீரியாகிய அந்
தரியாமி ஈவரன் அவ்வியாகிருதசரீரம் நீங்கியபோது தன
க்கதிட்டானமாயுள்ள பிரஹ்மமாத்திரமாகவே ஒடுங்கிவிடு
வன். அப்போது ஈசுரனுளனென்னும் புத்தியும் நீங்கும்.
நீங்கவே துவம்பதவிசாரத்தாற் கூடத்தாக விளங்கிய தான்
அத்துவிதபரிபூரணப் பிரஹ்மசொரூபமாகச்சேடித்து நிற்
றலின் தனக்குப்பூர்வம் சம்சாரமிருந்ததென்பதும் பொய்
யாய்ப்போமென அறிக.

வினா:—வேதம் ஜீவேசுரரிருவருக்கும் ஏகத்துவம் கூறுகின்றனமையால் ஜீவனைப்போல ஈசுரனும் மகாவாக்கிய விசாரஞ்செய்யவேண்டுமேயெனின். (110)

விடை:—வேதம் நீயதுவாகிறாயெனப் பிரத்தியக்ஷனாகிய ஜீவனைமாத்திரம் நோக்கிக் கூறியதேயன்றிப் பரோக்ஷனாகிய ஈசுவரனைநோக்கிக் கூறியதன்று அற்றன்று. ஈசுவரனையும்நோக்கி அங்ஙனம் கூறியதாகுமெனின், அதுவென்னும்பதத்திற்கு ஜீவர்களும் நீயென்னும்பதத்திற்கு ஈசுவரனும் வாச்சியார்த்தமாகும் ஆயின் ஈசுவரன் பிரத்தியக்ஷனும் ஜீவர்கள் பரோக்ஷர்களுமாவர்கள். ஆகவே பிரத்தியக்ஷனாகிய ஈசுவரனைச் சகலஜீவர்களும் அடைந்து முன்னமே முத்தர்களாயிருக்கவேண்டும். அங்ஙனமில்லாலாமையினாலும் ஈசுவரன் தனக்குப் பரோக்ஷர்களாயிருக்கின்ற ஜீவர்களின் புத்திரவாசனைகளையறிந்து அவைகட்குத் தக்கதாக பிரேரிப்பிக்கிற பிரேரககர்த்தாவென்பதும் சருவஞ்ஞனென்பதும் இல்லாமற்போகின்றமையினாலும் பிரத்தியக்ஷத்தைப் பரோக்ஷமாகவும் பரோக்ஷத்தைப் பிரத்தியக்ஷமாகவும் சந்நிபாதநோயினாற் புலம்பாநின்ற பிராந்தர்கள் வாக்கியம்போல வேதவாக்கியமும் அப்பிரமாணமாம். ஆதலினாலும் வேதம் அங்ஙனங்கூறியதெனல் புத்திப்பிரமையும் அசங்கதமுமாகும். ஆதலினாலும் ஈசுரன் ஜீவனை



போலப் பந்தசகிதனாக இராமல் பந்தரகிதனாக இருத்தலினாலும் அவன் மகாவாக்கிய விசாரஞ்செய்யவேண்டுவதின்றென அறிக.

வினா:—வியட்டி சரீரங்களையுடையஜீவன் பந்தசகிதனாக இருப்பதுபோல சமட்டி காரணசரீரங்களாகிய அவ்வியாகிருதம் சமட்டிகாரியசரீரங்களாகிய இரணியகருப்பம் விராட்டாகிய சரீரங்களையுடைய ஈசுரனும் பந்தசகிதனாகவேயிருக்கவேண்டும் ஆதலால் ஈசுரன் துவம்பத விசாரஞ்செய்யாவிடினும் தற்பசவிசாரமேனுஞ் செய்யவேண்டுமெனின். (111)

விடை:—ஈசுரன் சமட்டியாகிய மூன்றுசரீரங்களையுடையவனாக இருக்கினும் அவைகளில் அபிமானமின்மையனாமையால் பந்தசகிதனன்று. ஆதலின் அவன் தற்பத விசாரமும் செய்யவேண்டுவதின்றென அறிக.

வினா:—ஈசுரன் தன் அவ்வியாகிருதமாகிய சமட்டிகாரணசரீரங்களில் அபிமானமின்மையனென்றது யாதினாலெனின். (112)

விடை:—ஈசுரன் காரணசரீரமாத்திரமாக இருக்குங்காலம் மகாசுழுத்தியாகிய மகாப்பிரளயமாகும் அக்காலத்தில் அபிமானஞ்செய்வதாகிய அகங்காரம் காரணத்தில்லயமாய் விட்டமைமையினென அறிக.

வினா:—அற்றேல் அகங்காரமுள்ளதாகிய இரணியகருப்பசரீரத்தில் ஈசுரன் அபிமானமின்மையனென்றது யாதினாலெனின். (113)

விடை:—இரணிகருப்பசரீரத்தை ஈசுரன் பொருந்தியிருக்கிறகாலம் மகாசொப்பனாவத்தையாகும் அச்சொப்பனாவத்தையில் அபிமானஞ் செய்வதாகிய அகங்காரமிருக்கினும் அபிமானத்துக்காசிரயமாகிய தூலசரீரப்பிரவேசமின்றியவனாக இருத்தலினென அறிக.

வினா:—அற்றேல் ஈசுரன் சமட்டிதூலதேகமாகிய விராட்டு சரீரத்தில் அபிமான மின்மையனென்றது யாதினாலெனின். (114)

விடை:—விராட்டுசரீரத்துக்கு அன்னியமாக ஒருசரீரமிருக்குமாயின் அதுபற்றி ஈசுரன் விராட்டுசரீரத்தில் அபிமானமுள்ளவனாகும், எண்பத்து நான்குலக்ஷபேதமாயுள்ள சகலதூலசரீரங்களும் தூலபஞ்சபூதங்களும் சேர்ந்துள்ளது விராட்டு சரீரமானமையினாலும் ஈசுரன்றன் அட்டமங்கல சொரூபத்திற்கு அன்னியமாக நானெனத்தோன்றற்கு ஒருவரேனுமில்லாமையினாலும் விராட்டுசரீரத்தினும் அபிமானமின்மையனென்றதென அறிக.



வினா:—ஈசுரனானவன் பிரம, விஷ்ணு, வுருத்திர இராமகிருஷ்ண, மஸ்ஷிய, கூர்மமாதிய வியட்டிசரீரியாயிருந்து சிருட்டி திதி சம்மாராதியவைகளைச் செய்கிறதாகக் கூறுகின்ற புராணேதிகாசங்களை ஆராயுமிடத்துச் சரீராபிமானமின்றிக்கிருத்தியங்கள் நிகழுதற்குக் காரணமில்லையென்பது பெறப்படுகின்றமையால் வியட்டிசரீரியாயிருந்து சிருட்டியாதிகள்செய்யும் ஈசுரனுக்குச் சரீராபிமானமும் அதனாற்பந்தமுமுள்ளதேயாகும். ஆகலால் பந்தநிவர்த்திக்காக ஈசுரன் மகாவாக்கியவிசாரஞ் செய்யத்தான் வேண்டுமெனின். (115

விடை:—ஈசுரன் அடைந்துள்ள பிரமவிஷ்ணுவாதிய வியட்டிரூபங்களில் அபிமானங்களிருக்கின்றதாகக் காணப்படினும் அது ஜீவாபிமானம்போல பந்தந் தருவதன்றாம் யாதினாலெனின். ஜீவர்களுக்குச் சரீரத்தில் அபிமானம் வாஸ்தவமாக இருக்கிறது. ஈசுரனுக்கு உலகரக்ஷகார்த்தமாக கிருபையினால் அவசியம் நேர்ந்தபோது கூத்தாடிவேடத்தில் அபிமானத்தைக் கற்பித்துக்கொள்வதுபோல கற்பித்துக் கொள்ளப்படுகிறதேயன்றி வாஸ்தவத்திலில்லாமையினாலும் ஈசுரன் பிரமத்தைத்தானென அறிந்துள்ளவனாமையினாலுமென அறிக.

வினா:—ஈசுரன் தற்பதவிசாரம்பண்ணாமல் எங்ஙனம் மாயாமயக்கம் நீங்கிப் பிரஹமத்தைத்தானாக அறிந்தானெனின். (116)

விடை:—ஈசுரன் இயற்கைஞானபரனானமையால் அவனுக்கு மாயைமயக்கத்தைச் செய்கிறதில்லை. ஆதலால் பிரஹமத்தை விசாரஞ்செய்யாமலே யறிந்தவனாகுமென அறிக.

வினா:—மதுபானம் பண்ணியவனுக்கு மதுமயக்கத்தைச் செய்யாதென்பதுபோல மாயையோடு கூடியிராநின்ற ஈசுரனுக்கு மாயைமயக்கமாகிய மறைப்பைச்செய்யாதென்பது பொருந்தாதெனின். (117)

விடை:—தருப்பணப் ‡ பித்திகையாலாகிய கிரகத்துளிராநின்ற புருடனுக்கும் அக்கிரகத்துக்கு வெளியிலிராநின்ற விஷயங்கட்கும் மத்தியிற் றருப்பணப் பித்திகையிருக்கினும் அதுகளங்கரகிதமானமையால் விஷயங்களைப்புருடனறிதற்குத் தடைசெய்யாததுபோல மாயையோடு கூடியிராநின்ற ஈசுரனுக்கு மாயை நின்மலவுபாதியானமையால் பிரஹமத்தையறிதற்குத் தடைசெய்யாதென்பது பொருந்துமென அறிக.

---

‡ பித்திகை-சுவர்.



வினா:—தருப்பணப் பித்திகையானது விஷயங்களையறிதற்குத் தடையின்றியதாக இருக்கினும் அடைந்தனுபவித்தற்குத் தடையாகவேயிருப்பதுபோல மாயையும் பிரஹமத்தையறிதற்குத் தடையின்றியதாயிருக்கினும் அடைந்தனுபவித்தற்குத் தடையாகவேயுள்ளதாகும். ஆதலின் அதன் நிவர்த்திக்கு ஈசுரன் தற்பதவிசாரஞ் செய்யவேண்டுமெனின். (118)

விடை:—அனுபவம் அறிவிற்கேயன்றிச் சடமாகிய சரீரங்கட்கில்லாமையினாலும் புருடனிடத்திராமல் அன்னியமாக மற்றோரிடத்திருக்கின்ற கண்டப்பொருளாகிய கடம்போலின்றிப் புருடனிடத்தினும் மற்றெல்லாவிடங்களினும் வியாபகமாக இராநின்ற ஆகாயம்போலப் பிரஹ்மம் ஈசுரசொரூபத்தினும் மற்றெல்லா வற்றினும் வியாபகமாக நிறைந்து நிற்கின்ற பூரணப்பொருளானமையினாலும் ஈசுரன் எப்போதும் பிரஹமானுபவியாகவேயிருப்பவனாகும். ஆதலின் அவன் தற்பதவிசாரஞ்செய்யவேண்டுவதின்றென அறிக.

வினா:—மகாவாக்கியங்களை ஜனகாதியர்க்குப்பூர்வம் உபதேசித்தருளிய ஈசுரன் அவ்வாக்கியார்த்தங்களை விசாரித்தறியாமல் எங்ஙனம் உபதேசித்தனரெனின். (119)

விடை:—பிணிகளையுடையாதவர்களும் ஔடதங்களைப் புசியாதவர்களுமாகிய அகத்தியர் தன்வந்தரி அச்சுவினிதே

வர்களும் இகலோகபண்டிதர்களும் பிணியாளர்களின் பிணி நிதானங்களையறிந்து அதனை நிவர்த்திப்பதாகிய ஔடதங்களை வெளிப்படக்கூறியதுபோலப் பந்தமுறுதவரும் பந்த நிவர்த்திக்காக விசாரஞ்செய்யாதவருமாகிய ஈசுரன் பந்தநிசையிலிராநின்ற ஜனகாதியர்கள் முத்தியடையும் நிமித்தம் மகாவாக்கியங்களை யுபதேசித்தவராகும். இங்ஙனமே வியாதிகளையும் ஔடதங்களையுங் கூறுவதாகிய ஆயுள்வேதத்தையும் வெளிப்படுத்தியவராகுமென அறிக.

விஞ:—காசிநகர்க்குச் செல்லாதவன் மற்றொருவனுக்குக் காசிநகர்க்கு மார்க்கங் கூறுதல் பயன்படாததுபோல மகாவாக்கிய விசாரஞ்செய்யாத ஈசுரன் ஜீவர்கட்கு மகாவாக்கிய விசாரங்கூறுதல் பயன்படாதெனின். (120)

விடை:-அஞ்சனமைக்காரன் புதையலிருக்குமிடத்தைச் சென்றறியாதவனுயிருக்கினும் அவனுல் பிறர்க்குப் பூமியில் மறைபட்டிராநின்ற நிக்ஷேபத்தை யடைந்தெடுக்கு மார்க்கங் கூறுதல் பயன்படுவதுபோல ஈசுரன் மகாவாக்கிய விசாரஞ்செய்யாதவனுக இருக்கினும் சர்ஞ்ஞனமையால் அவனுல் ஜீவர்கட்கு மகாவாக்கிய விசாரங்கூறுவது பயன்படுமென அறிக.

விஞ:—ஜீவனுடைய அந்தக்கரண விருத்திரூப ஞானத்துக்கு ஆவரணபங்கம் விஷயப்பிரகாசங்கள் பிரயோசனங்க



ளாக இருப்பனபோல ஈசுரனுடைய மாயாவிருத்தி ரூபஞானத்துக்கு முளவோ வெனின். (121)

விடை:—ஈசுரனுடைய எதார்த்தசொரூபம் ஆவரணரகிதமாயும் சுயம்பிரகாசமாயு மிருத்தலால் ஆவரணபங்கம் விஷயப்பிரகாசங்களாகிய பிரயோசனங்களில்லையென அறிக.

விஞ:—அற்றேல் ஈசுரனுக்குள்ள ஞானம் பிரயோசனங்களன்றிபிலெங்ஙன முண்டாகிறதெனின், (122)

விடை:—ஜீவன் முத்தனுக்கு ஆவரணரகிதமாயுள்ள ஆத்மாவை விஷயமாக்குகிற அகம் பிரஹ்மமென்கிற அந்தக்கரணவிருத்தி ரூபஞானம் ஆவரணபங்கமாதிய பிரயோசனமன்றி யிலுண்டாகிறதுபோல ஈசுரனுக்கு அகம் பிரஹ்மமென்கிற மாயாவிருத்தி ரூபஞானம் ஆவரணபங்கமாதிப் பிரயோசனங்களன்றி யிலுண்டாகிறதென அறிக. (வி-ச. த-உளஎ. த-உளசம.)

விஞ:—மாந்தரீகன் பிறர்க்குச் செபிப்பவர்களைக் கெடுத்துவிடுவதாகிய ஓர் மந்திரத்தையும் எவர்கள் செபிக்கினும் மாந்தரீசனுகிய தன்னைக் கெடுத்து விடுவதாகிய ஓர் மந்திரத்தையும் உபதேசித்ததுபோல ஈசுரன் ஜீவர்களுக்கு விசாரஞ்செய்பவர்களைக் கெடுத்துவிடுவதா

கிய துவம்பதவிசாரத்தையும் எவர்கள் விசாரஞ்செய்யினும் ஈசுரனாகிய தன்னைக் கெடுத்துவிடுவதாகிய தற்பத விசாரத்தையும் சுருதியாதிகளில் வெளிப்படக் கூறியது ஜீவர்கட்கும் தனக்கும் பாதகமல்லவோவெனின். (123)

விடை:-தேவத்துவத்தை யடையவேண்டுமென்னுமிச்சையுடையார்க்குக் கிரிபதனம், கங்காப்பிரவேசம், அக்கினிப்பிரவேசங்களைக் கூறும் சுருதிவாக்கியம் பாதகமாகாததுபோல அதிட்டானம் ஆரோபமிரண்டும் சொரூபமாயுள்ள ஜீவர்களில் மெய்யாகிய அதிட்டான சொரூபத்தை யடைய இச்சித்தவர்கட்கு அதனை மறைத்திராநின்ற பொய்யாகிய ஆரோப ஜீவத்துவாதிகளை வாதிப்பதாகிய துவம்பத விசாரத்தையும் மாறுவேடத்தனாய் நகரிசோதனை செய்யும் அரசனை அரசனென்றறியாமற் சோரனென மயங்கிக்கலக்க முறுநின்ற நகரவாசிகட்கு அரசனானவன் தன் மெய்வடிவத்தையறிந்து கலக்கம் நீங்கும்படி தன்னை மறைத்திருக்கும் பொய்வடிவமாகிய மாறுவேடத்தை நீக்கிப்பார்க்கும் உபாயத்தைத் தெரிவித்ததுபோல அதிட்டானம் ஆரோபமிரண்டுமே சொரூபமாயுள்ள ஈசுரன் தன் அதிட்டான சொரூபத்தை யறியாமல் ஆரோபசொரூபத்தைச் சத்தியமெனவும் அன்னியமெனவும் மயங்கிக் கலக்கமுறுநின்ற ஜீவர்கள் அதிட்டானமாகிய தன் நிசசொரூபத்தை யறிந்து கலக்கம் நீங்கும்படி அதனை மறைத்திருக்கும் ஆரோப சொரூபமாகிய மாயாவடி



வங்களை வாதிப்பதாகிய தற்பத விசாரத்தையும் சுருதியாதிகளில் வெளிப்படக்கூறியது ஜிவர்கட்குந்தனக்கும் பாதகமாகாதென அறிக.

| (பதம்.) | (பொருள்) |
|---|---|
| அகங்காரக் கிரந்தியற்றபடியினாலே இந்த (உஅ)ன் தொழிலையும் நான் செய்யவில்லை யென்றும் இந்த(உஅ)ம்புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை யென்றும் திடப்படத்தேரி, மயக்கமற்றிருக்கின்றமையால், இந்த (உஅ)னானும் ஆர்ச்சிககப்பட்ட புண்ணியபாவங்களினின்றும் விடுபட்டு கன்மசம்பந்த மில்லாமையால் சனனமரண சம்சாரமில்லாமல் முத்தனாகிப் பிரஹ்மமாத்திர மாகவே யிருப்பன. | வெளி. |

வினா:—இப்படிப் பிரஹ்மமாத்திரமாகவே நிலைபெறுவதாகிய முத்திமார்க்கம் ஒன்றோ யிரண்டோ வெனின். (124)

விடை:—வாமதேவ மார்க்கமெனவும், சுகர்மார்க்கமெனவு மிரண்டுண்டு. இவ்விரண்டில் வாமதேவராலடையப்பட்ட கிரமமுத்தி மார்க்கம், வாமதேவமரர்க்கம். சுகராலடையப்பட்ட சத்தியோ முத்திமார்க்கம். சுகர்மார்க்கமென அறிக.

வினா:—கிரமமுத்தி மார்க்கமாகிய வாமதேவமார்க்கம் யாது? சத்தியோ முத்திமார்க்கமாகிய சுகர்மார்க்கம் யாது

இம்மார்க்கங்களுள்ளனவென எங்கே சொல்லியிருக்கிறதெனின்.

(125)

விடை:—குறித்த இடத்திற்குக் கிரமங்கிரமமாக வூர்ந்து சொல்லுவதாகிய பிபீலிகாமார்க்கம்போல் இவ்வுலகத்திலிந்தத் தேகத்திலிருந்து அக்கினியாதிய தேவதைகளை அந்தந்தத் தேவதைகளாக வுபாசியாமல் பிரஹ்மமாகவே யுபாசித்து உபாசிய தேவதையாகிய அவ்வுலகத்தை யடைந்து இந்தப்பிரகாரம் கிரமங்கிரமமாக மேலுமேலும் உயர்வாகிய தேவதைகளை யுபாசித்து அந்தந்தத் தேவதைகளாகிய அந்த லோகங்களை யடைந்து முடிவில் சர்வ தேவதாசொரூபியாயும் பிரபஞ்சத்துக் காதியாயும் சத்தியலோக வாசியாயும் இராநின்ற இரணியகருப்பருடைய லோகத்தையடைந்து இரணியகருப்பர் பிரஹ்மத்தில் ஐக்கியமாகும்போது கூடவே பிரஹ்மத்தில் ஐக்கியமாகிறது. கிரமமுத்தி மார்க்கமாகிய வாமதேவ மார்க்கமாம். இந்த இடத்தைவிட்டுப் பறந்துசென்று குறித்த இடத்தையே யடைவதாகிய பட்சிமார்க்கம்போல தன்னாலுபாசிக்கப்பட்ட தேவதாசொரூப மெதுவோ அதற்குள்ள மாயாவுபாதியையும், தனக்குள்ள அவித்தையாவுபாதியையும் நீக்கித்தானே அது அதுவே தானாகிய பிரஹ்மமென உபாசித்துச் சீவன்முத்தனாகி இந்தப்பிராரப்த தேகம் நீங்கியவுடனே விதேகமுத்தியாகிய பிரஹ்ம கைவல்



லியததை யடைகிறது. சத்தியோ முத்திமார்க்கமாகிய சுகர் மார்க்கமாம். இம்மார்க்கங்களுண்டென வராகோபநிஷத்து ச-வது அத்தியாயத்திலும், மைத்திராண்ணியோபநிஷத்து ச-வது பிரபாடகத்திலும் ௬-வது பிரபாடகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறதென அறிக.

தத்துவவிவேசன நிருபகம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஓம்பரப்பிரஹ்மணேநம:

சிதம்பரதேசிகன் திருவடிவாழ்க.

## நாநுசீவவாதக்கட்டளை வியாக்கியானம்.

## சீவன்முத்தி நிரூபகம்.

அவதாரிகை.

(நூல் சஎ)

இவனைச்சீவன்முத்தனென்றும் திடபிரஞ்ஞனென்றும் பகவற்பத்தனென்றும் குணாதீதனென்றும் பிராமணனென்றும் அதிவருணாச்சிரமியென்றும் வாசிட்டமுதலிய சாத்திரங்கள் முறையிடுகின்றன. சகலருமிந்தத் தத்துவங்களை விசாரம்பண்ணி மோக்ஷமடையக்கடவர்.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| இவனை | பிரமமாத்திரமாக இராநின்ற இப்பிரமஹ்ஞானியை |
| சீவனமுத்தனென்றும் | சீவன் முத்தியையுடையவனெனவும் |

வினா:—சீவன் முத்தனிலக்கணமெங்கே சொல்லப்பட்டிருக்கிறதெனின். (1)



விடை:—வராகோபநிஷத்து (ச) வது அத்தியாயத்தில் (ய) விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறதென அறிக.

வினா:—ஜீவன் முத்தர்களை (ய) விதமாக எங்ஙனம் சொல்லப்பட்டிருக்கிறதெனின். (2)

விடை:—(க) பிரபஞ்சவியாபார முள்ளவனானாலும் இக் தப்பிரபஞ்சம் காணப்படாத ஆகாயம்போல எவனுக்குக்கா ணப்படுகிறதோ அவன் சீவன்முத்தன் (உ) சுகதுக்கங்களிலே எவனுடைய மனப்பிரகாசமானது உதயத்தையும் (சுகத் திற்பொங்குதலையும்) அஸ்தமனத்தையும் (துக்கத்தில் மயங்கு தலையும்) அடைகிறதில்லையோ அடையப்பட்டதை (சுகதுக் கங்களில் எது தனக்குநேரிட்டதோ அதை) அதிக்கிரமிக் காமலிருக்கும் இருப்பையுடையதோ (நேரிட்டஸ்திதியிலேயே விட்டுவிடுகிறதேயன்றிச் சுகத்தைவிருத்தி செய்யவாவது துக்கத்தைப்போக்கவாவது முயற்சிசெய்யாமலிருக்கு மிருப் பையுடையதோ) அவன் சீவன்முத்தன் (ந) சுழுத்தியிலிரு க்கிற எவன் விழித்துக்கொண்டவனாக இருக்கிறானோ எவனு க்கு விழித்துக்கொண்டிருப்பதில்லையோ. எவனுடையஞான மானது விஷயவாசனையற்றதாக இருக்கிறதோ அவன் சீவ ன்முத்தன் (ச) ஆசை துவேஷம் பய முதலியவைகட்கு அனு குணமாகநடந்தாலும் எவனுடைய உள்ளம் ஆகாயத்தைப் போல சுத்தமாயிருக்கிறதோ அவன் சீவன்முத்தன் (ரு) ஒரு

காரியத்தைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் எவனுக்குத் தான் கருத்தாவென்கிற எண்ணமில்லையோ எவனுடைய புத்திவிஷயங்களிற் பற்றுகிறதில்லையோ அவன் சீவன்முத்தன். (சு) எவனிடத்திலிருந்து சனங்கள் பயமடைகிறதில்லையோ சனங்களிடத்திலிருந்து எவன் பயமடைகிறதில்லையோ சந்தோஷம், கோபம், பயம் இவைகளைவிட்டிருக்கிறவனெவனோ அவன் சீவன்முத்தன் (எ) சகலமான விஷயங்களிலும் விவகரித்துக்கொண்டிருந்தாலும் பிறருடையவைகளிற்போல (பிறர்வஸ்துக்களிற் றனக்குப் பற்றில்லாததுபோற் பற்றின்றி) சீதளனும் (சாந்தனும்) பூரணமான ஆத்மாவாயும் (ஒரு விதகுறைவுமில்லாதவனும்) இருக்கிறவனெவனோ அவன் சீவன்முத்தன் (அ) ஓமுனியே யெப்போது சித்தத்திலுள்ள சகலகர்மங்களையும் தள்ளிவிட்டுச் சகலத்துக்கும் ஆத்மாவாயிருக்கப்பட்ட என்னிடத்தில் எவன் திருப்தியுள்ளவனாக இருக்கிறானோ அப்போதவன் சீவன்முத்தன் (கூ) சித்தத்தினுடைய சகலவியாபாரமுமற்ற சின்மாத்திரமேயாகிய பரமபாவனமான (மகாசுத்தமான) பதத்தில் (ஸ்தானத்தில்) எவன் கலங்காத மனதுடையவனாக இளைப்பாறுகிறானோ அவன் சீவன்முத்தன் (௰) எவனுடைய சித்தத்தில் இதுஜகத்து நான் அவன் இவன் வால்தவமல்லாததாய்க் காணப்படுகிறவஸ்துக்கள் என்கிறபேதம் உதயமாகிறதில்லையோ அவன் சீவன்.



முத்தனெனப் பத்துவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது இதையே வசிஷ்டர் இராகவருக்கு விஸ்தாரமாக வுபதேசித்திருக்கிறார். இதனையே வாசிட்டத்தினின்றுமெடுத்து வித்தியாரண்ணியாள் உலோகோபகாரநிமித்தம் தம்மாற்செய்தருளிய சீவன்முத்தி விவேகமென்னுங்கிரந்தத்தில் விரிவாகச் சொல்லியிருக்கிறாரென அறிக.

வினா:—இவ்வுபநிடதத்துக்கு வராகோபநிடதமெனப் பெயர்வந்தது யாதினாலெனின். (3)

விடை:—ரிபுமுனிவருக்கு விஷ்ணு வராகரூபியாக இருந்து உபதேசிக்கப்பட்டதானமையினென அறிக.

வினா:—சீவன்முத்தர்கள் பலபிரிவினர்களானால் இவர்கள் மேலடையத்தக்கமுத்தி சமமுத்தியோ விஷமமுத்தியோவெனின். (4)

விடை:—மார்க்கபேதத்தால் நேராகவும் கோணலாகவும் செல்லுதலையுடைய நதிப்பிரவாகங்கள் சாகரத்தையடைந்து சமமாகச் சாகரமேயாவதுபோல பிராரப்தவலியால் சீவன்முத்தர்கள் பலஒழுக்கங்களையுடையவர்களாக இருக்கினும் அகம்பிரஹ்மமென்னுஞ் சமஸ்காரங்கள் சமமாகவுள்ளவர்களானமையால் விதேகமுத்தியில் அதீதப்பிரஹ்மமேயாகின்றார்கள். ஆதலின் சமமுத்தியேயென அறிக.

வினா:—சீவன்முத்தர்களடையு முத்தி சமமாக இருக்கினும் ஒழுக்கபேதங்களுடையராதல்பற்றி யவர்களுக்கு நாமபேதங்களுளவோவெனின். (5)

விடை:—யோகியர் சாங்கியரென வுபயநாமபேதங்களையுடையராவர். இவர்களே பிரஹ்மவித்து பிரஹ்மவித்துவரன் பிரஹ்மவித்துவரியன் பிரஹ்மவித்துவரிட்டனென்னும் நாமபேதங்களையுமுடையராவரென அறிக.

வினா:—இவர்களில் யோகியர்கள் யாவர்களெனின். (6)

விடை:—தத்துவஞானத்தால் நாமரூபப்பிரபஞ்சங்களனைத்தும் சித்தவிருத்திலயமானமையால் உள்ளினும் புறம்பினும் தோற்றரவின்றிச் சுழுத்தியிற் சாக்கிரசொப்பனங்களடங்குவனபோற் றன்னிலடங்கிச் சொப்பிரகாசமான சிதாகாசமாகப் பிரகாசிப்பவர்களென அறிக.

வினா:—சாங்கியர்கள் யாவர்களெனின். (7)

விடை:—தத்துவஞானத்தால் புட்பசந்தன வனிதை வெகுமானாதிகளாற் சுகம்வரினும் தனதானிய மனைவிபுத்திரநாச அவமானாதிகளாற்றுக்கம்வரினும் நமக்குச் சுகம்வந்ததெனச் சந்தோஷித்து அதனை விருத்திசெய்யவாவது துக்கம் வந்ததெனக்கிலேசித்து அதனை நிவர்த்திசெய்யவாவது முயற்சிசெய்யாமல் அததுநேரிட்ட ஸ்திதியிலேயே விட்டுவிடுபவர்களென அறிக.



வினா:-இவர்களில் பிரஹ்மவித்துக்கள் யாவர்களெனின். (8)

விடை:—பிரஹ்மசாக்ஷாத்கார ஞானமடைந்தவர்களாயும் ஞானப்பேற்றிற்குப் பூர்வமிருந்த தங்கள் வருணாச்சிரமங்கட்கேற்கக் கன்மாதிகளை உலோகோபகாரநிமித்தம் மந்திரலோபம் கிரியாலோபம் திரவியலோபமின்றிச் செய்பவர்களாயும் பிராரப்தகன்மபேதங்கட்குத் தக்கதாகத் தவம் வாணிபம் இராசாங்கம் யுத்தம் ஐயமேற்றுண்ணலாகிய வியவகாரங்களைப்பற்றின்றி மிகுதி அல்லது குறைவாகச் செய்பவர்களாயும் பிரவிர்த்தி நிவர்த்திகளில் நியமமில்லாதவர்களாயும் போகானுபவகாலத்தில் போகவஸ்துக்களைச் சொப்பனவஸ்துக்கள்போல மித்தையாகப்பார்ப்பவர்களாயும் விருத்திசொருபாகாரமாகும்போது க்ஷணேக்ஷணே நிருவிகற்பசமாதியையுடையவர்களாயும் ஞானபூமிகளில் மூன்றுபூமிகட்குமேற்பட்ட நான்காம்பூமியையுடையவர்களாயு மிருப்பவர்களென அறிக.

வினா:—பிரஹ்மவித்துவரர்கள் யாவர்களெனின். (9)

விடை:—பிரஹ்மஞானானந்தரம் தேகலோகசாஸ்திரவாசனைகளைச் சின்மாத்திர வாசனாப் பிரயாச பலத்தாற்கெடுத்துச் சீவன்முத்திச் சுகத்தையனுபவிப்பவர்களாயும் சுழுத்தியிற்போல சாக்கிரப்பிரபஞ்சத்தோற்றமில்லாதவர்களாயும் சுழுத்தியிற் சகலவிருத்திகளும் நித்திராசத்தியிலடங்கி

யிருப்பனபோல சாக்கிரத்தில் சசலவிருத்திகளும் ஆத்ம சொரூபமாகிய தன்னில் நிருவிகற்பமாய்ச் சாந்தப்பட்டிருப் பனவாக வுள்ளவர்களாயும் சாக்கிரத்தி லிந்திரியங்களிருக் கினும் அவைகளால் விஷயக்கிரகணஞ்செய்யாத சுழுத்திய வஸ்தர்களாயும் ஓரோர்காலத்தில் உபதேசநிமித்தம் அல்லது தேகதாரணத்துக்கின்றியமையாத பிக்ஷாதிகளேற்றற் கானசஞ்சாரநிமித்தம் தானாகவெளிப்படுபவர்களாயும் ஞான பூமியில் ஐந்தாம்பூமியையுடையவர்களாயு மிருப்பவர்களென அறிக.

வினா:—பிரஹ்மவித்துவரியர்கள் யாவர்களெனின். (10)

விடை:—வாசனாக்ஷய மனோநாச சம்பன்னர்களாயும் சாக்கிரப் பிரபஞ்சத்தைக் காடசுழுத்திக்குச் சமமாகவுடைய வர்களாயும் காடசுழுத்தியன் தானே வெளிப்படாமல் அன் னியர் பிரயத்தனத்தால் வெளிப்படுவதுபோல சதாபிரஹ்ம த்தி லுபசாந்தமாகிய நிருவிகற்பசமாதியர்களாய் தாங்களே வெளிப்படாமல் சீடராதிய அன்னியர் பிரயத்தனத்தால் ஓரோர்காலத்து வெளிப்படுவர்களாயும் ஞானபூமியில் ஆறும் பூமியையுடையவர்களாயு மிருப்பவர்களென அறிக.

வினா:-பிரஹ்மவித்துவரிட்டர்கள் யாவர்களெனின். (11)

விடை:-பிரஹ்மாத்மைக்கிய ஞானானந்தரம் மனதும் வாச னையும் அத்தியந்தம் நாசமாயினவர்களாயும் அகண்டேகர



சப் பிரஹ்மத்திற் கலந்து தொய்தப்பிரதிதியின்றிப் பிரஹ்ம மாகவே சேடித்திருப்பதாகிய நிருவிகற்பசமாதியர்களாயும் தங்களாலும் அன்னியர்பிரயத்தனங்களாலும் ஓர்காலத்தி னும் வெளிப்படாதவர்களாயும் சலத்தாற் பூரிக்கப்பட்டு சலத் துள் வைக்கப்பட்ட பூரணகும்பத்துக்கு உள்ளினும் வெளியி னும் சலமே வியாபித்திருப்பதுபோல பிரமத்தால் உள்ளி னும் வெளியினும் வியாபிக்கப்பட்டுப் பிரஹ்மமாகவேயி ருப்பவர்களாயும் ஞானபூமிகளில்மேலான ஏழாம்பூமியை யுடையவர்களாயுமிருப்பவர்களென அறிக.

வினா:—ஞானபூமிகளெவையெனின். (12)

விடை:—சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவா பத்தி, அசஞ்சத்தி, பாதார்த்தாபாவனை, துரியமாகிய ஏழுமெ ன அறிக.

வினா:-சுபேச்சையென்னும் முதற்பூமியாதெனின். (13)

விடை:—(பூமியென்பது) சித்தத்தின் அவஸ்தாவிசேட ங்களின் நாமம். (சுபமென்பது) பிரமஞ்ஞான பலமாகிய மோக்ஷம். (இச்சையென்பது) விருப்பம், அதாவது சர்வ கன்மரகித விவேக வைராக சமாதிசட்கசம்பத்திகளாகிய மூன்று சாதனங்களின் பலத்தால் அதிகாரிகள் சித்தத்தில் துர்ச்சங்கத்தைக் கூடி யளவில் காலம் மூடமாயிருந்துவிட் டோம். இனித்தாமதிக்காமல் எவ்விதத்தேனும் துர்ச்சங்க

த்தைத் துறந்து சற்குருவையடைந்து அவராலும் சற்சாஸ்திரங்களாலும், மோக்ஷத்தையடையக் கடவேமெனத் தீவிரமாக வுதயமாகின்ற இச்சையென அறிக.

(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்)

நவையுறுமோகத்தோடு நாமடைவதென்னே நல்லோரானன்னூலானன்று ஞானச் சுவைபெறுதும் நிராசையினுலென்று நாடல் சுபம்விரும்பலாகு மிந்தச்சுபேச்சை முற்றி.

(வேதாந்தசூடாமணி)

தோற்றிடு நான் மூடனுயிருந்த காரணமென் சுருதிகுருவாலறிவலென நினைதல் சுபேச்சை.

(கைவல்லிய நவநீதம்.)

துற்சங்கநிவர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகும்.

வினு:—விசாரணையென்னு மிரண்டாம்பூமி யாதெனின். (14)

விடை:—சர்வகர்ம சந்நியாச பாலன சாதனசதுட்டய சகிதமாய்க் குருமுகமாகச் சிரவணஞ்செய்து அவ்வாக்கியார்



த்தங்களைச் சத்துக்களாசாரப்படி சுருதிகளுக்கு விரோதமின்றிய தருக்கயுத்தி அனுமானுதிகளோடு மனதிற் பதிவுறும் பொருட்டு மனனஞ் செய்குதலென அறிக.

(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்)

கவையறு நல்லோரியற்கை யாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல்வேண்டும்.

(வேதாந்தசூளாமணி)

மாற்றரிய சுருதிகுருவாற் சிறிது தோன்றும், வைராகத்துறுதல் சதாசாரம் விசாரணையே.

(கைவல்லியம்.)

நற்சங்கமொழிவினவி ஞானநூல்பழகல் விசாரணையாம்.

வினு:—தனுமானசியென்னும் மூன்றும்பூமி யாதெனின். (15)

விடை:—(தனுவென்பது) சுருங்கல், சுருங்குதலாகிய தன்மையை, மனதடைகுதல் தனுமானசியாம். அதாவது, சுபேக்ஷை விசாரணையென்னு முபயபூமிகளின் சகாயத்தால் மனது அநேகார்த்தக் கிரகணங்களை விடுத்து ஏகார்த்தமாகிய

சத்தே அகமெனும் பிரஹ்மாகார விருத்திப்பிரவாகமாக நிரந்தரம் தியானிப்பதாகிய நிதித்தியாசனத்தால் மலினவாசனைகளொழிந்து சவிகற்பசமாதியை யுற்று சூட்சுமத்தன்மையை யடைகுதலாம். இத்தனுமானசியும் சாமானிய சம்சர்க்கம் சிரேஷ்டாசம்சர்க்கமென் றிரண்டுவிதமாகுமென அகூதிபுபிடதத்திற் சொல்லப்படுகிறதென அறிக.

வினா:--அவ்விரண்டில் சாமான்யசம்சாக்கத் தனுமானசி யாதெனின். (16)

விடை:—நான்கர்த்தா போக்தா பாததியம் பாதகமல்லவென்றிங்ஙனம் சகலவிஷயங்களினுஞ் சேர்க்கையற்றிருக்கிறதும் சுகதுக்காதிகள் சகலமும் சென்மாந்தர கன்மங்களாக இருக்கட்டும், அல்லது ஈசுராதீனமாக இருக்கட்டும் இதனுல் நமக்கென்ன கர்த்தத்துவமிருக்கிறது. இல்லையென்றிருக்கிறதுமென அறிக.

வினா:-சிரேஷ்டா சம்சர்க்கத்தனுமாசி யாதெனின்.(17)

விடை:—நானுங் கர்த்தாவல்ல, ஈசுரனுங் கர்த்தாவல்ல எனக்குச் சென்மாந்திர கன்மங்களுமில்லையென நன்ருய் விடுத்து மகாவாக்கியவிசாரத்தை யுள்ளேபண்ணிக்கொண்டு பரிபூரணமாயும் உபசாந்தமாயு மிராநின்ற மேலான மௌனமென அறிக.



(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்.)

இனையசுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டு நிறைதலும் விடயத்திச்சை மாற்றி நினைவுகுவிவது சித்தஞ் சிறுகலாகும்.

(வேதாந்தசூளாமணி.)

மருவலுறுசுபேச்சை விசாரணைவலியால் விடயவலியறு தருன்றனுமானசி.

(கைவல்லியம்.)

முற்சங்கவேடணைகள் விடறனுமானசி.

வினா :-இம்மூன்று பூமிகளையுமுடையார்கள் யாவர்களெனின். (18)

விடை:-பிக்ஷான்ன போசனம் குருபணிவிடை சௌசமாதிய யதிதருமசகித சாதனசதுட்டய சம்பன்னர்களாய்க் குரு முகமாகச்சிரவணஞ்செய்யு மப்பியாசிகளென அறிக.

வினா:—சத்துவாபத்தியாகிய நான்காம்பூமி யாதெனின். (19)

விடை:—மனது பரமார்த்த சத்துரூபமாகச் சேடித்திருப்பது சத்துவாபத்தி. அது பூமிகாத்திரயாப்பியாசவலியால்

மனது சாக்கிரப்பிரபஞ்சங்களனைத்தும் சொப்பனப் பிரபஞ்சதுல்லியமாகவும் சர்வாதிட்டான சத்துரூபப் பிரஹ்மமே தானாகவும் அறிந்து சாக்ஷாத்கரித்து க்ஷணேக்ஷணே பிரஹ்மத்தில் க்ஷீரோதகம்போற் கலந்து திரிபுடிரகிதமாய் நிருவிகற்ப சமாதியை யுறுவதாகிய ஸ்திதியென அறிக.

(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்.)

நிகழ்த்திய விம்மூன்றாலு நெஞ்சந்தன்னில் வனைதரு மவ்விரத்தியினா லுண்மைப்போத மன்னுதலே யுண்மைநிலை மருவலாகும்.

(வேதாந்தசூளாமணி.)

விரவுநனவாய வுலகினைக் கனவென்றெண்ணி மெய்த்த வான்மா வுண்மைகருதல் சத்வாபத்தி.

(கைவல்லியம்.)

சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவாபத்தி தானே.

வினா:—அசம்சத்தியாகிய ஐந்தாம்பூமி யாதெனின் (20)

விடை:-சம்சத்தியென்பது விடயசம்பந்தம்; அஃதில்லாமை அசம்சத்தியாம். அஃது சத்துவாபத்தி யென்னும்



காலாம் பூமியிலுதயமாகிய பிரஹ்மசாக்ஷாத்காரவலியால் சொப்பனதுல்லியமாகக் கண்டபிரபஞ்சங்களையும் அறிவுமாத்திரமாகக் கண்டு சுழுத்தியன்போலப் பாஹ்யாந்தர வாகாரங்களோடும் அவைகளின் சம்ஸ்காரங்களோடுஞ் சம்பந்தமின்றி நித்தியாபரோக்ஷப் பிரஹ்மத்தில நிருவிகற்பமாயழுந்தியிருப்பதென அறிக.

(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்.)

அனையன விங்கான்காலு முண்மைப்போதத் தழுந்திய யற்சங்கமற லசங்கமாகும்.

(வேதாந்தசூளாமணி.)

பரவலுறுமுலகு தோன்றாது சுழுத்தியன்போற் பகரறிவுமாத்திரையாய் நிற்றலசஞ் சத்தி.

(கைவல்லியம்.)

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலாமறத்தல சஞ் சத்தியாகும்.

வினா:—பதார்த்தாபாவனையாகிய ஆறாம்பூமி யாதெனின். (21)

விடை:—பாஹியாந்தர பதார்த்தங்களின் அபாவப்பிர

திதியே பதார்த்தாபாவனையாகும். அஃது அசம்சத்தியென்னும் ஐந்தாம் பூமியின்வலியால் பிறராலேவுதலன்றிக் காரியப்பிரவிருத்தியின்றிய காடசுழுத்தியன்போற் றிடநிருவிகற்பசமாதியிற் பாஹியாந்தரத்திரிபுடிகள் அபாவமாகி யத்துவிதானந்தமயமாக நிற்றலென அறிக.

(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்.)

அறைந்தபதமைந்தானுந்தானும் போதத்தழுந்தியவின் பத்தமைவாற் புறனுமுள்ளு முறைந்தபதார்த்தங்கண் மறைந்தயலோர் வன்பாலுணர்வதுவே பதார்த்தநினைவொழிதலாகும்.

(வேதாந்தசூளாமணி.)

ஒருவிவாசனையனைத்து மிகுதுயிலோன்போல வுயிரானந்தத்தொடுங்கல் பதார்த்தாபாவனையாம்.

(கைவல்லியம்.)

அத்துவிதானந்தம் வருந்திரிபுடிபோம் பதார்த்தாபாவனையதாகும்.

வினா:—துரியமென்னும் ஏழாம்பூமியாதெனின். (22)

விடை:—சாக்கிராதி மூன்றவத்தைக்கு மப்பாற்பட்ட நான்காமவத்தை துரியமாம். அது பதார்த்தாபாவனையென்



னும் ஆறாம்பூமியின்வலியால் திரிபுடித்தோற்றமான நான்காம்பூமி ஐந்தாம்பூமிகளிற்போல பாவரூபப்பிரதீதியும் ஆறாம்பூமியிற்போல அபாவரூபப்பிரதீதியும் தன்னாலாவது பிறராலாவது பஹிர்முகமாதலுமின்றி அதிதானந்தமயமாகி ஆகாயத்திலுள்ள வெறுங்குடம்போலுள்ளினும் வெளியினுஞ் சூனியமாய் வஸ்து நிலையெப்படியோ அப்படியிருப்பதென அறிக.

(பிரமாணம்.)

(வாசிட்டம் உற்பத்திப்பிரகரணம்.)

நிறைந்தவிவையாறாலும் பேதம்போக்கி நிலைபெறுதற் சுபாவத்தேநிற்றானே மறைந்தபொருள் வெளியாக்குந்துரியமாகும்.

(வேதாந்தசூளாமணி.)

உண்டில்லையென்னுமலஸங்கிருதி நிரங்கிருதி யுறாமலறிவுருவாய அத்துவிதபதத்துட் கண்டதொருவறுங்குடம்போலுட் புறஞ்சூனியமாங்கதி துரியகாமியாம்.

(கைவல்லியம்.)

வத்துநிலைபிருக்கபடியிருந்த மவுனசுபாவந் துரியமாகும்

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| திடப்பிரஞ்ஞனென்றும் | நழுவுதலின்றிய சொரூபப் பிரஞ்ஞையுள்ளானெனவும். |

வினா:—இவனைத் திடப்பிரஞ்ஞனென்றது யாதினாலெனின். (23)

விடை:—இவன் அதிடப்பிரஞ்ஞையுடைய பிரதிபந்த ஞானியல்லனென்பது தோன்றற்கென அறிக.

வினா:—அதிடப்பிரஞ்ஞையாவது யாதெனின். (24)

விடை:—வைராக்கிய தியானாப்பியாச பலமின்றிய புருடனுக்கு ஏதாகினுமோர் புண்ணிய விசேடத்தாற் றத்துவ ஞான முதயமாயினும் அவன் புத்தி சுயபுருட காரியத்திலிராநின்ற நாரியானவள் சோரநாயக நாட்டத்தாற் சுயபுருட காரியத்தை யடிக்கடி மறந்துவிடுவதுபோல விடய நாட்டத்தாற் றத்துவசொரூபத்தை யடிக்கடி மறந்துவிடுவதென அறிக.

வினா:—திடப்பிரஞ்ஞையாவது யாதெனின். (25)

விடை:—வைராக்கிய தியானாப்பியாச வலியால் சுவாதீனமான சித்தவிருத்தியையுடைய புருடனுக்குத் தத்துவ ஞான முதயமாயின் அவன் புத்திசோர நாரியானவள் சுயபுருட காரியங்கள் செய்யுங் காலத்தினும் அவள் புத்தி சோர நாயகனையே சிந்தித்து அவனாகாரமாகவே யிருப்பதுபோல்



பிராரப்தவலியால் உலக வியவகாரங்கள் செய்யுங் காலத்தினும் தத்துவசொரூபத்தையே சிந்தித்துத் தத்துவாகாரமாகவே யிருப்பதாம். இப்பிரஞ்ஞையையுடையார்கள் சமாஹிதத்திடப் பிரஞ்ஞர்கள் உத்திதத் திடப்பிரஞ்ஞர்களென இருவிதமாக இருப்பார்களென அறிக.

வினா:—சமாஹிதத் திடப்பிரஞ்ஞர்கள் யாவர்களெனின். (26)

விடை:—சோரநாரியானவள் வீட்டினுள்ளிராநின்ற மணாளன் மக்கள், மாமி, மாமனையும், வெளியிலிராநின்ற, தாய், தந்தை, சகோதரர், பந்து சனங்களையும் வெறுத்துச் சோரநாயகனையே நாடிச்செல்வதுபோல உள்ளினும் வெளியினுமிராநின்ற சகல விஷயங்களையும் கைவிட்டு ஆத்மாவாகிய தன்னிடத்திற் றன்னாற்றானே யாத்மானந்தத்தை யனுபவிக்கிறவர்களாயும் கூர்மந்தன்னவயவங்களைத் தன்னிலடக்கிக் கொள்வதுபோல சகல இந்திரியங்களையும் விஷயங்களினின்றுந் திருப்பித் தம்மிலடக்கிக் கொள்பவர்களாயு மிருப்பவர்களென அறிக.

வினா:—ஆத்மா ஆனந்தரூபமானால் எப்போதும் ஆனந்தரூபமாக இருக்கவேண்டும். அங்ஙனமின்மையினானும் விஷயசம்பந்தத்தால் ஆனந்தந்தோன்றுகின்ற தனுபவமான

மையினும் ஆனந்தரூபம் விஷயமேயன்றி ஆத்மாவன்றும். ஆதலின் சமாஹிதத்திடப்பிரஞ்ஞன் ஆத்மானந்தத்தை யனுபவிக்கிறுனெனல் கூடாதெனின். (27)

விடை :—அஞ்ஞானத்தால் விஷயத்திலிச்சையுற்றுச் சஞ்சலிக்கின்ற புத்திவிருத்தியில் அலைதலுள்ள சலத்தில் முகச்சாயை தோன்றுததுபோல ஆத்மானந்தப் பிரதிபலினந் தோற்றுகிறதில்லை. இச்சித்த விஷயம் லபித்த காலத்தில் சற்றுப்போது சலனம் நீங்கி யகமுகப்படும். அப்போது அவ்விருத்தியில் ஆத்மானந்தப் பிரதிபலினந் தோன்றும் அவ்வானந்தத்தை யனுபவிக்கும் புருடன் தன்மயமாகிய ஆத்மானந்தமென் றறியாமல் வெற்றெலும்பைக்கடிக்கும் சுவானம் அவ்வெலும்பு தன் கடைவாயிற் குத்தி யதனுற் பெருகி வராநின்ற உதிரத்தைத் தன்னுதிரமென அறியாமல் எலும்பினின்றும் வராநின்ற உதிரமென நினைப்பதுபோல விஷயத்தினின்றும் ஆனந்தஞ் சனிக்கிறதென நினைக்கிறுன். அங்ஙனம் நினைப்பது பிராந்தியே யானமையால் விஷயம் ஆனந்தரூபமன்று. ஆத்மாவே ஆனந்தரூபமாகும் ஆதலின் சமாஹிதத்திடப் பிரஞ்ஞன் ஆத்மானந்தத்தை யனுபவிக்கிறுனெனல் கூடுமென அறிக.

வினு :—விஷயம் ஆனந்தரூபமல்லவாயின் ஒருவராயினும் விஷயங்களைச் சம்பாதிக்க முயலாதிருக்கவேண்டும்.



அங்ஙனமின்றி யாவர்களும் முயற்சிக்கின்றமையால் விஷயங்களே ஆனந்தரூபமாகு மெனின். (28)

விடை :—அற்றேல் (க) வது விஷயமுள்ள பரியந்தம் விஷய சகித புருடனுக்கு ஆனந்தமிருக்கவேண்டும். (உ) வது ஆனந்தம் நீங்கித் துக்கமுதியாதிருக்கவேண்டும். (ந) வது விஷயம் வெறுப்புக்கிடமாகிக் கைவிடப்படாமலிருக்கவேண்டும். (ச) வது விஷயமில்லாதிருக்குங் காலத்தில் ஆனந்த முதியாதிருக்க வேண்டும். அங்ஙனமின்றி முறையே (க)வது புருடனுக்கு யாதானுமோர் காரியத்தைப்பற்றி மனது சலிக்கும்போது முக்கிய விஷயமாகிய மனைவி, சமீபத்திருந்தும் ஆனந்தமில்லை. (உ) வது மிகுந்த ஆபத்து நேரிட்டபோது மனைவியைக் கட்டிக்கொண்டழுகிறுன்; அதற்கு ஆனந்தம் நீங்கித் துக்க முதயமாயிருக்கிறதே காரணம். (ந) வது கோபமுண்டாகியபோது மனைவியை நிந்தை கூறி அடித்துத்துரத்திவிடுகிறுன்; அப்போது முக்கிய விஷயம் வெறுப்புக்கிடமாகிக் கைவிடப்படுகிறது. (ச) வது மனைவி முதலிய விஷயசம்பந்தமின்றிய சுழுத்தி சமாதியவத்தைகளில் ஆனந்தமனுபவிக்கப்படுகிறது. ஆதலின் விஷயம் ஆனந்தரூபமன்றென்பதே சித்தாந்தமென அறிக.

வினு :—விஷயம் ஆனந்தமல்லவாயினும், விஷயலாபத்தால் புத்திவிருத்தியில் சலனநீக்கமும் அதனுல் ஆனந்தமு

முதயமாகின்றமையால் அவ்வானந்தத்துக்கு விஷயலாபமும் காரணமாகுமெனின். (29)

விடை :— சமாஹிதத்திடப்பிரஞ்ஞனனுபவிக்குமானந்தம் அவனுடைய புத்திவிருத்தி யகமுகப்பட்டு நிருவிகற்ப சமாதியில் திரிபுடித்தோற்றமின்றிப் பிரஹ்மத்திற்கரைந்தலயமாயிருக்கும்போது ஜனித்ததாக இருக்கின்றமையால் அதற்கு விஷயலாபமும் காரணமாகுமென்பது ஆராய்வுக் குறைவேயாகுமென அறிக.

வினு :—அவ்வானந்தம் விளங்குவது புத்தி விருத்தியினுலோ அல்லது ஆத்மாவினுலோவெனின். (30)

விடை :—நிருவிகற்பசமாதியிலுள்ள ஆனந்தம் புத்தி விருத்திரூபமாக இராமல் அதன் சம்ஸ்காரரூபமாக இருக்கின்றமையால் சவிகற்பசமாதியிலுள்ள ஆனந்தம்போல புத்தி விருத்தியால் விளங்கத்தக்கதன்று ; ஆத்மாவினுல் விளங்கத்தக்கதென அறிக.

வினு :—சமாஹிதத்திடப்பிரஞ்ஞன் ஆனந்தானுபவியாக இருக்கின்ருனென்பதை யாதினுலறியலாமெனின் (31)

விடை :—விருத்திகளின் உபசாந்தத்தால் முகமலர்ச்சியுற்றிராநின்ற முகப் † பிரசாதமாகிய அடையாளத்தாலறியலாமென அறிக.

† பிரசாதம்-தெளிவு.



வினு :-உத்திதத்திடப்பிரஞ்ஞர்கள் யாவர்களெனின் 32

விடை :—மூடர்கள் உரோகாதிகளாற் றுக்கம்வரின் நான் பாவி யென்னைச்சுடவேண்டுமென விதனமுறுவதுபோல விதனமுருதவர்களாயும் இராச்சிய தன புத்திர லாபாதிகளாற் சுகம்வரின் சுகசாதனங்களான புண்ணியத்தை யனுட்டிக்காமல் முன்வந்த சுகத்திற்குச் சமானமான சுகத்தை யபேக்ஷிக்கிறதுபோல அபேக்ஷியாதவர்களாயும் விவகாரகாலத்தில் இராகத்துவேஷங்க ளில்லாதவர்களாயும் தனக்குச் சுவாதீனமாக இராநின்ற இந்திரியங்களோடு கூடினவர்களாயும் அன்னியர் லாபநட்டங்களைத் தன்னுடையதாகத் தோற்றுவிக்குஞ் சித்தவிருத்திச் சிநேகமில்லாதவர்களாயு மிருப்பார்களென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பகவற்பக்தனென்றும் | பகவற்சொரூபத்திற்றிடபத்தியுடையவனென்றும். |

வினு :—திடபக்தியையுடைய பகவற்பத்தன் யாவனெனின். (33)

விடை :—சர்வப்பிராணிகளிடத்தினும் துவேஷமில்லாதவனும் மைத்திரி கருணை முதிதை உபேக்ஷைகளுடையவனும் அகங்கார மமகாரமில்லாதவனும் சொரூபத்தியான

பரனும் சத்துரு மித்துரு மானவமானம் சீதோஷ்ணம் துதிநிந்தை சுகதுக்கமுதலிய த்வந்துவங்களிற் சமதிருஷ்டியும் சதாசந்துஷ்டியுள்ளவனும் மௌனியாயும் நியமமாக ஓரிடத்தில் வாசப்பண்ணுதவனும் சகலசகத்தும் தன்னிடத்தில் வாசம்பண்ணுதலினானும் தான் அவைகளனைத்தினும் சர்வாத்மகமாக வியாபித்து வாசம்பண்ணுதலினானும் சுருதிகள் வாசுதேவமெனக் கீர்த்திக்கும் பிரஹ்மத்தில் சதா வாசுதேவோகமென்னும் அபேதபக்தியை யுடையவனாயு மிருப்பவனென அறிக.

வினா :-ஜீவன்முத்தர்பாலுள்ள மைத்திரி கருணை முதிதை உபேக்ஷையாகிய குணங்களெவையெனின். (34)

விடை :-சுகிப்பிராணிகள்பால் வைத்திரானின்ற சினேகமே மைத்திரியாம். பவக்கடலிலமிழ்ந்தி வருந்துந் துக்கிப் பிராணிகளை நோக்கி யிவர்களேனோ குருவினுபதேசமாகியபுணையினாலிப்பவசாகரத்தைக் கடவாது துக்கிக்கின்றனர். இவர்களுக்கெந்தக்காலம் இப்பவத்துன்பொழியுமென்னு மிரக்கமே கருணையாம். சகலசற்கருமங்களையும் ஈசுரார்ப்பணமாகச் செய்யும் புண்ணியர்பாலுள்ள விருப்பமே முதிதையாம். தீவினையாளர்களாகிய பாவிகளை வீதித்திரண துல்லியமாக விருப்பு வெறுப்பின்றி விட்டுவிடுதலே யுபேக்ஷையாமென அறிக (34)



| (பதம்) | (பொருள்) |
|---|---|
| குணாதீதனென்றும் | குணத்திரயங்கட்கப்பாற் பட்டவனென்றும். |

வினா :—பிறராலறியத்தக்கதாகக் குணாதீதனுக்குள்ள இலக்கணங்களெவையெனின். (35)

விடை :—சுகம் துக்கம் அவைகட்குச் சாதனங்களாகிய பிரியாப்பிரிய விஷயங்கள் துதி நிந்தை மித்துரு சத்துரு மானவமானம் வர்ணம் ஓடுமுதலியவைகளை விருப்பு வெறுப்பின்றிப் பார்க்கும் சமசித்தமும் யாதொரு முயற்சியுமின்றிய தீரமும் ஆத்மநிட்டையுமென அறிக.

வினா ;—குணாதீதனுடைய மனதின் சஞ்சாரப் பிரகாரமாகிய அமைதியாதெனின். (36)

விடை :—சாக்கிர சொப்பனங்களிலுதித்து சுழுத்தி சமாதி சூனியாவத்தைகளில் நீங்கிவிடுவதாகிய சத்துவாதி குணத்திரய விகாரங்களான பிரகாசம் பிரவிருத்தி மோகமென்னும் ஞான முயற்சி அவிவேகங்கள் சாக்கிர சொப்பனங்களிலுண்டாகிச் சுழுத்தி சமாதி சூனியாவத்தைகளில் நீங்கிவிடுகின்றன. மூடனானவன் சாக்கிரத்திற் றனக்குப் பிரதீகூலமாயுண்டாகின்ற பிரகாசாதிகளைக் கண்டு

துவேஷிப்பன். சூனியசித்தாவத்தையில் அனுகூலமான பிரகாசாதிகள் நீங்கும்போது அவைகளை யிச்சிப்பன். அங்ஙனமின்றிச் சண்டையைப் பார்க்கும் புருடன் சண்டை செய்பவர்களுக்கு உண்டாகுஞ் ஜெயாபஜெய சுகதுக்கங்கள் நமக்கில்லையென உதாசீனமாயிருப்பதுபோலப் பிரதிகூலமான பிரகாசாதிகளுதயமாகும்போதும் அனுகூலமான பிரகாசாதிகள் நீங்கும்போதும் மயங்காமல் குணவிகாரங்களான சட்சுவாதி இந்திரியங்கள் குண விகாரங்களான ரூபாதிகளில் பிரவர்த்தித்ததினாலும், அவைகளை நிவர்த்தித்ததினாலும் சாக்ஷிமாத்திரமாக அறிந்து கொண்டு அசங்கசித்ரூபமாக இராநின்ற நமக்கு யாதொரு லாபமும் நட்டமுமில்லை யென்று உதாசீனமாயிருப்பதென அறிக.

வினா:—குணாதீதன் எந்தச் சாதனத்தாற் குணங்களைக் கடந்தனனெனின். (37)

விடை:—வியபிசாரமின்றிய பத்தியோடு கூடிய தியானாப்பியாசபலத்தால் சர்வப்பிரத்தியக்கபின்னபரமார்த்தசொரூபமாயுள்ள தன்னையே சேவைசெய்வதாகிய சாதனத்தாலென அறிக.

| (பதம்) | (பொருள்) |
|---|---|
| பிராஹ்மணனென்றும் | பிரஹ்மஞ்ஞானபரனென்றும் |



வினா:—சீவன்முத்தர்களிற் பிராஹ்மணனென்பவன் யாவனெனின். (38)

விடை:—அரையிற் சோமனும் மேலில் உத்தரியமுமின்றியவனாயும், குப்பைகளிலுள்ள கந்தைகளாற் கௌபீனாதிகள் தரித்துக்கொள்பவனாயும், பாய் முதலிய சாதனங்களின்றி வெறுந்தரையிற் கையைத் தலையணையாக வைத்துச் சயனஞ்செய்பவனாயும், பிராரப்தகன்மங்களுக்குத்தக்கதாக வரப்பட்ட பிக்ஷான்னத்தாற் றேகதாரணஞ் செய்பவனாயும், தெண்டதாரியாயும், ஆத்மத்தியானபரனாயும், ஏகாங்கியாயும், பிரஹ்மமே தானெனத் திடமாயறிந்தவனாயும், சாந்திகளையுடையவனாயுமிருப்பவனென அறிக.

வினா:—சாந்திகளெத்தனை விதம்? அவைகளெவை யெனின். (39)

விடை:—உத்தமம் மத்திமம் அதமமென மூவிதமாகும். இவைகளில் மனது தன் விகாரத்தை விடுத்து இலக்ஷிய வஸ்து மாத்திரமாய் நிலைத்திப்பது பிரஹ்மநிருவாண லக்ஷணமாகிய உத்தமசாந்தியாம். பிரத்தியகாத்ம இலக்கணங்களைச் சதா அனுசந்தானஞ் செய்கிறதே சுத்தசத்துவ லக்ஷணமான மத்திம சாந்தியாம். மனது விஷய வியாபாரத்தை விடுத்துச் சிரவணமனனாதிகளைச் செய்து கொண்டிருக்

கிறது மலினசத்துவ லக்ஷணமான அதம சாந்தியாமென அறிக.

| (பதம) | (பொருள்) |
| --- | --- |
| அதிவருணாச்சிரமி யென்றும் | வருணாச்சிரமங்களுக் கப்பாற் பட்டவனென்றும. |

வினா :—வருணங்களெவை ஆச்சிரமங்களெவை யெனின். (40)

விடை :—பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திராதி நான்கும் வருணங்களாம். பிரஹ்மசரியம் கிரகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசமென்னும் நான்கும் ஆச்சிரமங்களென அறிக.

வினா :—நான்கு வருணங்களில் பிராஹ்மண வருணத்தர்கள் யாவர்களெனின். (41)

விடை :—பிராஹ்மண வருண உத்தமஸ்திரீயினிடத்துப் பிறந்தவர்களாயும், பிரஹ்மதேஜஸை விரும்பி (ரு)வது வயதிலாவது அல்லது (அ) வது வயதிலாவது அல்லது (யகூ) வது வயதிலாவது உபநயன சம்ஸ்காரஞ் செய்து கொள்பவர்களாயும், தினந்தோறும் அட்டவித பூஜாக்கிரியைகளுடையவர்களாயும், பிரஹ்மஞானநிட்டர்களாயும், வேதம் ஓதல், ஓது



வித்தல், யாகஞ்செய்தல், செய்வித்தல், தானங்கொடுத்தல், வாங்குதலாகிய ஆறு தொழில்களில் ஓதல், யாகஞ் செய்தல், தானங்கொடுத்தலாகிய முத்தொழில்களைப் புண்ணியத்தை யுத்தேசித்தும், ஓதுவித்தல், யாகஞ்செய்வித்தல், தானம் வாங்குதலாகிய முத்தொழில்களைச் சீவனோபாயத்தை யுத்தேசித்தும் செப்பவர்களாயுமுள்ளவர்களாம். இவர்களிற் சிலர் ருதம், அமிர்தம், பிரமிர்தம், சத்தியாநிர்தம், குசீதங்களினும் அல்லது சுநகவிருத்தியினும் ஆபத்கால விசேஷங்கட்குத் தக்கதாகச் சீவனஞ்செய்பவர்களுமாக இருப்பவர்களென அறிக.

வினா :—பிராமணர்கள் தினந்தோறுஞ் செய்வதாகிய அஷ்டவிதபூஜைகளெவையெனின். (42)

விடை :—ஆத்மா, சூரியன், சந்திரன், ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி ஆகிய எட்டையும் பூசித்தலென அறிக. (சித்போ)

வினா :—இவ்வெட்டுவித பூசாக்கிரமங்களெவையெனின். (43)

விடை :—பிறருக்கு சத்கிரியைகளால் திருப்திசெய்வது ஆத்மபூசாக்கிரமமாம். பிரவாசனுரூபமாயிருக்[illegible]ன்ற யனதை ஏகாக்[illegible]ஞ்செய்வது, ஆகாய பூசாக்கிரமமாம்.

பிராத மத்தியான சந்தியாகாலகர்மங்கள் செய்வது, சூரிய சந்திர பூசாக்கிரமமாம். பிராணாகுதிகர்மஞ்செய்வது, வாயு பூசாக்கிரமமாம். பிராதசாயம் † சிரவுதம் $ ஸ்மார்த்தாக்கினி கர்மஞ்செய்வது, அக்கினி பூசாக்கிரமமாம். ஸ்நானபானக்கிரியைகள்செய்வது, அப்புவின் பூசாக்கிரமமாம். நிவேதனான்ன போசனகர்மஞ்செய்வது பிருதிவி பூசாக்கிரமமாமென அறிக.

வினா:—ருதம், அமிர்தம், மிர்தம், பிரமிர்தம், சத்தியாநிர்தம், குசீதம், சுணகவிருத்தி யென்பவையெவையெனின். (44)

விடை:—(ருதமென்பது) ஆபத்கால சீவனோபாய நிமித்தம் கழனிகளினும், மற்ற இடங்களினும் சிந்தின நெற்களை இரண்டு விரல்களால் பொறுக்குதலும், நெற்கதிர்களைப் பொறுக்குதலுமாம். இவ்விரண்டில் தனி நெல்லைப் பொறுக்குதற்கு உஞ்சமெனவும், நெற்கதிர்களைப் பொறுக்குதற்குச் சிலமெனவுங் கூறப்படும். அமிர்தமென்பது யாசிக்காமற்றானே வருபவைகளாம். மிர்தமென்பது யாசித்து வருபவைக

† சிரவுதம் (தக்ஷிணாக்கினியம், காருகபத்தியம், ஆகவனீயமென்னும் யாகாக்கினி.)

$ ஸ்மார்த்தம்(ஸ்மிருதி யுக்தமாகச்செய்யப்பட்ட ஔபாசனாக்கினி.)



ளாம். பிரமிர்தமென்பது பயிரிடுதலாம். சத்தியாநிர்தமென்பது வியாபாரஞ் செய்குதலாம். குசீதமென்பது வட்டி வாங்குதலாம். சுநகவிருத்தி யென்பது நாயின் பிழைப்புக்குச் சரியாகத் தீனமனதோடு எசமானன் கண்டனைக்குட்பட்டு ஈனவேலை செய்குவதாகிய சேவகா விருத்தியாம்; இவைகளில் பிராமணர்கட்குச் சிறந்த தொழில் ஓதுவித்தலாமென அறிக.

வினா:-க்ஷத்திரிய வருணத்தவர்கள் யாவர்களெனின்(45)

விடை:—க்ஷத்திரிய வருண உத்தமஸ்திரீயினிடத்துப் பிறந்தவர்களாயும், பலத்தை விரும்பி (௯) வது வயதிலாவது அல்லது (௰௧) வது வயதிலாவது அல்லது (௨௨) வயதிலாவது உபநயன சம்ஸ்காரஞ் செய்து கொள்பவர்களாயும், பிராமணர்களுக்குரிய தொழில்களில் ஓதுவித்தல் யாகஞ் செய்வித்தல் தானம் வாங்குதலாகிய மூன்றும் நீங்கலாக வேதமோதல், யாகஞ்செய்தல், தானங்கொடுத்தலோடு உலகை யிரக்ஷித்தல், ஆயுதவித்தை பயிறல் போர்செய்தல் ஆகிய தொழில்களையுடையவர்களாயும் சீவனோபாயநிமித்தம் பிரஜைகளிடத்தில் ஆறிலொருபங்கு, அல்லது நாலிலொருபங்கு தீர்வை வாங்குபவர்களாயும், இந்திரன், சூரியன், வாயு, யமன், வருணன், சந்திரன், அக்கினி, பிருதிவி ஆகிய இவர்களின் நடையை அனுசரித்து இராச்சிய விவகாரஞ்செய்யும்

விரதமுடையவர்களாயும் இருப்பவர்களாகும். இவர்களுக்கு
உலகாள்வது சிறந்த தொழிலென அறிக.

(பிரமாணம்)

நிகண்டு.

ஓதலே வேட்டலீதலுலகோம்பல் படைபயிற்றல் மேதகு
போர்செய்திட்டல் வேந்தர்செய் தொழில்களாறே.

வினா :—க்ஷத்திரியனானவன் இந்திராதியர் நடையை
யனுசரித்து நடக்கும் விரதங்களெவையெனின் (46)

விடை :—இந்திரன், ஆவணிமாதமுதல் (௬) மாதம்வரை
மழைகளை வருஷிப்பித்துச் சனங்களைச் சந்தோஷிப்பிக்கச்
செய்வதுபோல அரசனும் தன் இராச்சியங்களிலிருக்கும்
பிரஜைகளுக்கு அபீஷ்டத்தை உண்டுபண்ணிக் கொடுக்கிறது
இந்திரவிரதமாம். சூரியன் மார்கழி மாதமுதல் (அ) மாதம்
வரையில் தன்னுடைய கிரணங்களால் மிகவும் தாபப்படுத்தா
மல் சலத்தைக் கொஞ்சங்கொஞ்சமாகக் கிரகிப்பதுபோல
அரசனும் சனங்களை உபத்திரவப்படுத்தாமல் மாதந்தோறும்
சிறிதுசிறிதாகத் தீர்வையை வாங்குவது சூரியவிரதமாம்.
வாயுவானது சகலசெந்துக்களிடத்திலும் பிராணரூபமாக உள்
ளே பிரவேசித்துச் சஞ்சரிப்பதுபோல அரசன் எதிரிப்பட்
டணங்களில் வேவுகாரர்களைப் பிரவேசிக்கச்செய்து அங்கு
ள்ள பலாபலங்களையறிந்து தனக்குத் தெரிவிக்கும்படி சஞ்ச



ரிக்கச்செய்வதும் தன்பட்டணத்தில் வேவுகாரர்கள்போலத்
தானும் பிரவேசித்து இராச்சிய தந்திர நியாயாநியாயங்களை
யறியும் நிமித்தம் சஞ்சரிப்பதும் வாயுவிரதமாம். யமன் தண்
டனை செய்யும்போது சத்துருவென்றும் மித்துருவென்றும்
பேதமாக நோக்காது யாவரையும் சரிபாகத் தண்டிப்பது
போல அரசன் குற்றஞ்செய்த பிரஜைகளை பக்ஷபாதமின்
றிச் சரியாகத் தண்டிப்பது யமவிரதமாம். வருணன்
தண்டனைக்கத்தக்க பாவஞ்செய்தவர்களைப் பாசங்
களாற்கட்டுகிறதுபோல அரசன் துட்டர்களைத் தளையில்
லாமல் சிறைச்சாலையில் பந்திப்பது வருணவிரதமாம். பூர
ணசந்திரன் மனிதர்கள் தன்னைப் பார்த்துச் சந்தோஷிக்கும்
படி சீதளமாயும் பிரகாசமாயுமிருப்பதுபோல அரசனானவன்
மந்திரி முதலிய பரிசனங்கள் தன்னைப்பார்த்துச் சந்தோஷிக்
கும்படி தயையுள்ளவனாயும் பூடணாலங்கிர்தனாயுமிருப்பது சந்
திரவிரதமாம். அக்கினி உஷ்ணசொரூபமாய் ஈரமின்றிய திர
ணகாஷ்டாதிகளைத் தகித்துக்கொண்டிருபபதுபோல அர
சன் சோம்பலின்றிப் பிரதாபமுள்ளவனாய்த்துஷ்டர்களையும்
தனக்கபகாரஞ்செய்யும் மந்திரிமுதலியவர்களையும் சிக்ஷித்துக்
கொண்டிருப்பது அக்கினி விரதமாம். பிருதிவியானது சரா
சரரூபமான சகலபிராணிகளையும் உயர்வு தாழ்வின்றிச்
சரியாகத் தாங்கிக்கொண்டிருப்பதுபோல அரசன் பண்டிதர்

பாமரரான சகலபேர்களையும் பேதமின்றிச் சரியாக இரக்ஷித்துக்கொண்டிருப்பது பிருதிவி விரதமாமென அறிக.

வினா:—வைசியவருணத்தவர்கள் யாவர்களெனின். (47)

விடை:— வைசியவருண உத்தமஸ்திரீயினிடத்துப் பிறந்தவர்களாயும் பொருளைவிரும்பி (௮) வயதிலாவது அல்லது (௰௨) வயதிலாவது அல்லது (௨௪) வயதிலாவது உபநயனஞ்செய்துகொள்பவர்களாயும் வேதமோதல் யாகஞ்செய்தல் தானங்கொடுத்தல் வியாபாரஞ்செய்தல் பசுவையிரக்ஷித்தல் பூமியை யுழுதுபயிரிடல் வட்டிவாங்குதலாகிய தொழில்களையுடையவர்களாயு மிருப்பவர்களாகும். இவர்களில் வியாபாரஞ்செய்பவர்கள் தனவைசியரெனவும், பசுக்களை இரக்ஷிப்பவர்கள் கோவைசியர்களெனவும், பூமியையுழுது பயிரிடுபவர்கள் பூவைசியரெனவும் சொல்லப்படுவார்களென அறிக.

வினா:—க்ஷத்திரியர் வைசியராகிய உபயவருணத்தவர்கட்கும் வேதம் ஓதுவித்தலாகிய தொழில் எப்போதுமில்லையோவெனின். (48)

விடை:—மோக்ஷவிச்சையுடைய பிரமசாரியானவன் பிராமணன் அகப்படாவிடின் க்ஷத்திரியரிடத்திலாவது வைசியர்களிடத்திலாவது அனுட்டானமில்லாத பிராமணனிடத்திலாவது வேதம் ஓதவேண்டியதெனவும், வேதம் ஓதி முடிவுபெறுகிறபரியந்தம் அக்குருவுக்குப் பணிவிடை செய்துவரவே



ண்டுமெனவும், மனுஸ்மிருதியிரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருத்தலால் க்ஷத்திரியர் வைசியர்களுக்கும் வேதம் ஓதுவித்தலாகிய தொழில் ஓரோர்காலத் துளதெனக் கொள்ளற்பாலதென அறிக.

வினா:—சூத்திரவருணத்தவர்கள் யாவர்களெனின். (49)

விடை:—மூவகைவைசியர்க்குரிய பசுவோம்பல் பொருளீட்டல் பயிரிடலோடு பிராமணர் முதலிய மூன்றுவருணத்தவர்கட்கும் பொறாமையின்றிப் பணிவிடைசெய்துகொண்டிருப்பவர்களாகும். இவர்களுக்குப் பிராமணர்களுக்குரிய அறுவகைத்தொழில்களில் தானங்கொடுத்தலாகிய தொழிலுண்டென அறிக.

வினா:--நான்காச்சிரமங்களில் பிரஹ்மசரியாச்சிரமத்தர்கள் யாவர்களெனின். (50)

விடை:—பிராமண க்ஷத்திரிய வைசியவருணத்திற் பிறந்தவர்களாயும் உபநயனமுதலிய (௪௰) வித சம்ஸ்காரங்களுள்ளவர்களாயும் குருவையடைந்து குருபணிவிடை செய்துகொண்டு (௰௨) வருடம் குருகுலவாசமாயிருந்து வித்தையப்பியாசஞ்செய்பவர்களாயும் பிராமண க்ஷத்திரிய வைசிய வருணங்கட்குத்தக்கதாக முறையே சணப்பனூர் பட்டுநூல் செம்மறியாட்டின் மயிர் இவைகளால் செய்யப்பட்டதை அரை உத்தரீயமாகவும் கருப்புமான்தோல் புள்ளிமான்தோல் வெள்ளா

ட்டின்தோல்களை மேலுத்தரீயமாகவும் பஞ்சினூலாலும் சணப்பனூலினாலும் வெள்ளாட்டின் மயிரினாலும் திரிக்கப்பட்டுள்ள வடத்தை மூன்றுவடமாகச் சேர்த்து தோளில் எக்யோபவீதமாகவும் வில்வம் அல்லது பலாசத்தில் நிலமுதல் சிரசினளவாகவும் ஆல் அல்லது கருங்காலியில் நிலமுதல் நெற்றியளவாகவும் இரளி அல்லது அத்தியில் நிலமுதல் நாசியளவாகவும் நறுக்கித்தண்டமாகத் தரிப்பவர்களாயும் சந்தியாவந்தன (திரிகால) கருமங்களையும், அக்கினியில் சமிதானமாகிய (சமித்தினால் செய்யப்பட்ட) ஓமங்களையும் கிரமமாகச் செய்பவர்களாயும், கமண்டலதாரிகளாயும், பிராமணவருணத்தாராகில் †பவதி பிக்ஷாந்தேகி அம்மா பிக்ஷைகொடு என்றும், க்ஷத்திரியவருணத்தராகில் பிக்ஷாம்பவதி தேகி (பிக்ஷை அம்மா கொடு) என்றும வைசியவருணத்தாராகில் தேகி பிக்ஷாம்பவதி (கொடு பிக்ஷை அம்மா) என்றும் கூறிப் பிச்சை கேட்பவர்களாயும் வாங்கிய பிச்சையைக் குருவுக்கு நிவேதனஞ்செய்து அவரனுமதி பெற்றுப் பின் கிழக்குமுகமாக இருந்து ஆசமனஞ்செய்து போசனஞ்செய்பவர்களாயும் போசனஞ்செய்யுங்கவளங்கள் கிரகஸ்தனுக்கு (௩௨) வானப்பிரஸ்தனுக்கு (௰௬) முனிக்கு (௮) உரியவைகளென்னும் நியமமிருப்பதுபோல இவ்வளவென்னும் நியமமில்லாதவர்களாயும் சரீரமுள்ளவரைக் குருபணிவிடை

† பவதிஎன்னுஞ் சொல் ஸ்ரீயை மரியாதையுடன் அழைப்பதைக் குறிப்பது



செய்துவருபவர்களாயும் குருவில்லாவிட்டால் குருபுத்திரனிடத்தும் புத்திரனுமில்லாவிடில் குருபத்தினியிடத்தும் சுவதந்திரனாக இராமல் அவர்களாதீனனாயிருந்து வருபவர்களாயும் அட்டவிதமைதுனங்களுமில்லாத இந்திரிய நிக்கிரகர்களாயுமிருப்பவர்களென அறிக.

வினா :—பிரமசாரியர்களுக்கு விலக்காகிய அட்டவித மைதுனங்களெவையெனின் (51)

விடை :-தரிசனம் பரிசனம் கேளி கீர்த்தனம் சங்கற்பம் குய்யபாஷணம் அத்தியவசாயம் கிரியாநிவர்த்தி ஆகிய எட்டுமாம். இவைகளில் காமவிச்சையால் ஸ்திரீகளைப்பார்ப்பது (தரிசனம்). அவர்கள்சரீரத்தைத்தீண்டுவது(பரிசனம்). ஸ்திரீகளோடு விளையாடுதல் (கேளி). அவர்களைப்புகழ்வது (கீர்த்தனம்). அவர்களையடிக்கடி நினைப்பது (சங்கற்பம்). அவர்களோடு ரகசியமாகப்பேசுதல் (குய்யபாஷணம்). அவர்களை ஆலிங்கனம் பண்ணுதல் (அத்தியவசாயம்). அவர்களைப்புணர்ந்து இந்திரியவிசர்ச்சனஞ் செய்குதல் கிரியாநிவர்த்தியென அறிக.

வினா :—கிரகாச்சிரமத்தவர்கள் யாவர்களெனின் (52)

விடை :-பிரஹ்மசாரியாயிருந்து ஆசாரியன் அனுஞ்ஞை பெற்று தன் ஜாதியிலுள்ள கன்னிகையைப் பிராமியம் தெய்வம் ஆருஷம் பிராஜாபத்தியம் ஆசுரம் காந்தருவம் இராக்ஷ

சம் பைசாசம் என்னும் நன்மைதி மைகளை விளைவிப்பதாகிய
(அ) விவாகங்களினுள் எந்தவருணத்தவருக்கு எது சிறந்த
தோ அதைச்செய்பவர்களாயும் நித்தியகருமானுட்டானர்களா
யும் இல்லறதருமங்களைவழுவாமல்நடத்துபவர்களாயும் மனைவி
மாதவிடாயானதுமுதல் நீக்கத்தக்க நான்குதினங்களையும்
அட்டமி தசமி ஏகாதசி திரயோதசி அமாவாசை பௌர
ணமி பானுவாரங்களையும் நீக்கி மற்றைத்தினங்களி னிரவில்
தன்னால் நடத்திவரும் இல்லறதருமங்களைத் தனக்குப்பின்ன
ரும் நடத்திவரும் நிமித்தமாகப் புத்திரனையப்பேக்ஷித்து மனைவி
யைப் புணர்பவர்களாயும் வழிபடுதெய்வங்கள் அதிதிகள் தாய்
தந்தையராதிய பிதிர்க்கள் வேலைக்காரர்கள் தன்னைத்துமா
வாகிய இவர்கட்கு அன்னத்தால் திருப்திசெய்பவர்களாயும்
பிரஹ்மமாதிபஞ்ச எஞ்ஞங்களைச் செய்துவருபவர்களாயும்
பிரஹ்மசரியர் வானப்பிரஸ்தர் சந்நியாசிகளாகிய மூன்றாச்சி
ரமத்தர்களையும் பாதுகாப்பவர்களாயும் ஓதுவித்தலாகிய கிரு
த்தியங்களைச் சீவனோபாயநிமித்தஞ் செய்பவர்களாயும் வேத
மோதுதலால் இருடிகடனையும் ஓமஞ்செய்தலால் தேவர்கட
னையும் பிள்ளைபெறுதலால் பிதிர்க்கடனையும் தீர்த்துவிட்டுச்
சந்நியாசிகள்போல் ஒன்றிலும் பற்றின்றியிருந்து ஆத்மத்தியா
னஞ் செய்பவர்களாயு மிருப்பவர்களென அறிக.

வினா:—பிராமியமாதிய எட்டு விவாகங்களவையெ
னின்.





விடை :-வேதமோதினவனையும், நல்லொழுக்கமுள்ளவ
னையு மிராநின்ற பிரஹ்மசாரியைத் தானாகவே யழைத்து
அவனை நூதனவஸ்திரங்களால் அலங்கரித்து, அவனுக்குத்
தன் கன்னிகையை வஸ்திராபரண அலங்காரத்தோடு தானஞ்
செய்வது பிராமியவிவாகமாம். சோதிஷ்டோமாதி எஞ்ஞத்
தில் தனக்குப் புரோகிதனாக இருப்பவனுக்குத் தன்பெண்ணை
அலங்கரித்துக் கொடுப்பது தெய்வவிவாகமாம். தான்
செய்யவேண்டிய யாகாதி தர்மத்துக்காக ஓரிடபம், ஓர்பசு,
அல்லது இரண்டுரிஷபம், இரண்டுபசு வாங்கிக்கொண்டு தன்
கன்னிகையைக் கொடுப்பது ஆருஷவிவாகமாம். பிரஹ்மசா
ரியையழைப்பித்துப் பூசித்துத் தன் கன்னிகையைத் தானம்
பண்ணும்போது நீங்களிருவரும் கருமங்களைச் செய்யுங்க
ளென்று சொல்லிக்கொடுப்பது பிரஜாபத்தியவிவாகமாம்.
பெண்ணின் தகப்பனுக்குக் கேட்கும் பணத்தைக் கொடுத்
துப் பெண்ணுக்கு வேண்டிய பூடணங்களும் போட்டுப் பெ
ண்ணை வாங்கி விவாகஞ் செய்து கொள்ளுவது, ஆசுரவிவாக
மாம். கன்னிகையும் புருடனும் ஒருவருக்கொருவர் புணர்ச்சி
யினாசையால் மனமொத்துச்சேருதல் காந்தருவவிவாகமாம்.
கன்னிகையும் சுற்றத்தார்களும் உடன்படாவிடின் அவர்கள்
சுற்றத்தாரை அடித்துக் கொன்றுவிட்டுக் கன்னிகையழு
தாலும் அவளைப் பலத்தினால் கொண்டுபோய்விடுகிறது.

இராக்ஷச விவாகமாம். கன்னிகை துயிலும்போதும் மதுவுண்டு மயங்கிக்கிடக்கும்போதும் பித்துக்கொண்டிருக்கும்போதும் அவளைப் புணர்வது முற்சொல்லிய ஏழு விவாவங்களுக்கும் கீழாகிய பைசாச விவாகமாமென அறிக.

வினா:—கிரகாச்சிரமத்தர்கள் செய்யும் பஞ்ச எக்கியங்களெவை யெனின். (51)

விடை:—பிரஹ்மஎக்கியம், பிதிரெக்கியம், தேவஎக்கியம், பூதஎக்கியம், மனுட எக்கியம் ஆகிய இவைகளாம். இவைகளில் வேதாத்தியயனஞ் செய்குதல் பிரஹ்ம எக்கியமாம். பிதிர்க்கள் திருப்தியடையும்படி அன்னத்தினாலாவது சலதருப்பணத்தினாலாவது சிரார்த்தங்கள் செய்வது பிதிரெக்கியமாம். தேவதைகளைக்குறித்து அக்கினியில் ஓமஞ்செய்வது தேவ எக்கியமாம். வாயசபலி முதலானது வைப்பது பூதஎக்கியமாம். அதிதிகட்கு அன்னமிடுவது மானுடஎக்கியமாமென அறிக.

வினா:—வானப்பிரஸ்தாச்சிரமத்தர்கள் யாவர்களெனின். (55)

விடை:—தன்தேகத்தில் நரையையும் தன்பிள்ளைக்குப் பிள்ளையையும் பார்க்கும் வயது வந்தபோது சகல ஆகார



மாதிபோகங்களையும் விடுத்து; மனைவியைப் பிள்ளைவசம் ஒப்பிவித்தாவது, அல்லது மனைவிக்குக் கூடவர இஷ்டமிருந்தால் அழைத்துக் கொண்டாவது அக்கினிகோத்திரத்தையும சுருக்கு சுருவமுதலிய பாத்திரங்களையும் எடுத்துக்கொண்டு வனத்திற்சென்று வசிப்பவர்களாயும், சாலியன்னம் பலகாய் கிழங்கு பழமாதியவைகளாற் கிரகாச்சிரமத்துக்குச் சொல்லிய பஞ்சஎக்கியங்களைச் செய்பவர்களாயும் ஜிதேந்திரியர்களாயும் மான்றோல் மரவுரியாதிகளைத் தரித்துக்கொள்பவர்களாயும் சடை மீசை தாடி நகங்களை வளர்ப்பவர்களாயும், வேதமோதுதலிற் சோம்பலில்லாதவர்களாயும் திரிகாலஸ்நானஞ் செய்பவர்களாயும், காட்டிலுதிர்ந்த பரிசுத்தமான சம்பா கார்நெற்களைப் பொறுக்கி அவைகளின் அரிசிகளால், புரோடாசம்சருக்கள்உண்டுபண்ணிஅவைகளைத்தேவர்கட்கு அக்கினியில் ஓமஞ்செய்து சேடித்து நின்றவைகளையும் பாகஞ்செய்த காய் கிழங்காதிகளையும் தானேபழுத்த கனிகளையும் புசிப்பவர்களாயும் தபசுவிருத்தியாகும்பொருட்டு வெயிற்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியினும் மழைக்காலத்தில் சலமத்தியினும பனிக்காலத்தில் ஈரத்துணியைப் போர்த்துக்கொண்டிருந்து தபஞ்செய்பவர்களாயும் வயது முதிர்ந்தபின்னர்ப் பிரஹ்மலோகத்தை விரும்பித் தேகநாசபரியந்தம் சலத்தையுங் காற்றையும் புசிப்பவர்களாயும் அல்லது தன் ஆயுளில் மூன்றுபாகத்தைக் காட்டிற்கழித்துவிட்டு நாலாவதுபாகத்திற்

சந்நியாசஞ் செய்துகொள்பவர்களாயு மிருப்பவர்களென அறிக. (மனு—சூ—அத்தி)

வினு:-சந்நியாச ஆச்சிரமத்தர்கள் யாவர்களெனின் (56)

விடை:—மந்தம், தீவிரம் தீவிரதரமென்னும் வைராகங்களில் துன்பநேரிட்டபோது குடும்பத்தை வெறுப்பதாகிய மந்தவைராகத்தால் சந்நியாசஞ்சித்தியாது. தீவிரம் தீவிரதரமென்னும் வைராகங்களால் எசுர்வேதத்திற் சொல்லியபிரகாரம் சகலபொருள்களையும் தக்ஷிணையாகவுடைய பிரஜாபதியிஷ்டியைச்செய்து அக்கினியை ஆத்ம சமாரோபணஞ்செய்துகொண்டு கிரகத்தினின்றும் நீங்கி †சந்நியஸ்தமயா §சந்நியஸ்தோகமென்னும் பிரேஷைமந்திரோச்சாரண பூர்வகமாகச் சந்நியாசஞ்செய்துகொண்டவர்களாயும் பரிசுத்தமான கமண்டலம் தண்டம் தருப்பை காஷாயங்களைத் தரிப்பவர்களாயும் தேங்காய்ப்பாத்திரம்சுரக்காய்ப்பாத்திரம் மரப்பாத்திரம் தொன்னை மண்பாத்திரம் மூங்கிற்படி இவைகளைச் சுவாயம்புமனு சந்நியாசிகளுக்குப் பாத்திரமாகச் சொல்லியிருத்தலால் சுவர்ணம் வெள்ளி தாம்பிராதிய லோகபாத்திரங்களைவிடுத்து மண்ணாதிய வோர்பாத்திரத்தில் ஏககாலத்தில் பிக்ஷைவாங்

† சந்நியஸ்தமயா—சகல மாயாப்பிரபஞ்சத்தையும் விடுகிறேன்.

§ சந்நியஸ்தோகம்—யான் சகலத்தையும் விட்டேன்.



கிப் புசிப்பவர்களாயும் ஜிதேந்திரியர்களாயும் ஏகாங்கியர்களாயுமிருப்பவர்களென அறிக,

வினு:—யதிகள் ஏகாங்கியர்களாக இருப்பது யாதுநிமித்தமெனின். (57)

விடை:—ஏகாங்கியர்களாக இருக்கில் பிக்ஷு, இரண்டு
பேர்கள்சேர்ந்தால மிதுனம், மூன்றுபேர்கள்சேர்ந்தால் கிரா
மம், அதற்குமேற்பட்டால் நகரமென்று சொல்லப்படும்.
இவைகளில் பிக்ஷுவாக இருத்தலன்றி மிதுனம் கிராமம் நகர
மாகச் சேர்ந்திருக்கில் ராஜசம்பந்தமான வார்த்தைகளும்
பிக்ஷைசம்பந்தமான வார்த்தைகளும் சினேகம் கோட்சொ
ல்லுதல் மாச்சரியமாதிகளு முண்டாகும். அதனால் யதியான
வன் தன் தருமத்தினின்றும் நழுவிவிடுவன் ஆதலின் யதி
தன் தருமத்தினின்றும் நழுவாதிருக்கும் நிமித்தமாகும். இங்
ஙனம் பிக்ஷுவாக இரானின்ற யதிகளிற் சிலர்கள் சீக்கிரத்திற்
சம்சாரத்தைக் கடத்தற்கு மூகர் (ஊமையர்) களாயும் நபுஞ்
சகர் (பேடியர்) களாயும், முடவர்களாயும், அந்தகர் (குருடர்)
செவிடர்களாயும் ஜடர்களாயுமிருப்பர்களென அறிக.

வினு:—உலகில் அநேகர்கள் ஊமையர்களாயும் நபுஞ்ச
கர்களாயும் முடவர்களாயும் குருடர்களாயும் செவிடர்களா
யும் ஜடர்களாயும் மரணபரியந்த மிருந்தும் அவர்களிலொரு
வராயினும் சம்சாரத்தைக் கடந்ததாகக் காணப்படவில்.

ஆதலின் ஊமையராதியர் சம்சாரத்தைக கடப்பர்களென்பது அசம்பாவிதமெனின். (58)

விடை :- 1 வாக்கிந்திரிய லோபத்தினாலாவது அல்லது பிரியாப்பிரிய காரியங்களை மனதில்வைத்துக்கொண்டு அவைகளை வாக்காற் றெரிவிக்காமல் பூமியாதிகளிலெழுதியும் கைச்சைக்கினைசெய்தும் பாராளுக்குத் தெரிவித்துக்கொண்டு தன்னை யாவரும் மௌனியென மதிக்கவேண்டுமென்னும் எண்ணத்தாலாவது ஆடுமாடுகள்போல வாய்பேசாதிருப்பவர்களை யிங்கு ஊமையர்களென்று சொல்லியதன்று. அன்னாதிகளைப் புசிக்கிறவர்களாக இருக்கினும் இது நன்றாயிருக்கிறது இது நன்றாயில்லையென்று சொல்லத்தக்கதாகிய விஷயங்களில் எவர்கள் அபிமானம் வைக்கிறதில்லையோ எவர்கள் இதமாயும் சத்தியமாயும் மிதமாயும் சங்கிரகமாயும் பேசுகிறார்களோ அவர்களை ஊமையர்களென்றதாகும். (2) வீரியமில்லாமையினாலும் அலித்தன்மையினாலும் ஸ்திரீகளிடத்தில் மோகமில்லா திருப்பவர்களை யிங்கு நபுஞ்சகர்களென்று சொல்லியதன்று. இப்போதுபிறந்த பெண்குழந்தையையும் நூறுவயதுள்ள கிழவியையும் பார்த்து எதனால விகாரமடைகிறதில்லையோ அதனால் ரதிபோன்ற அழகினையுடைய பதினாறுவயதுப் பெண்ணைப் பார்க்கினும் விகாரமடையாதிருப்பவர்களை நபுஞ்சகர்களென்றதாகும். (3) காலொடிவு கால்



முடக்கு பாதேந்திரியக்குறைவினால் நடக்குங்கிரியையில்லாதவர்களை யிங்கு முடவர்களென்று சொல்லியதன்று. பிக்ஷைக்காகவும் மலவிசர்ச்சனத்துக்காகவுமாத்திரம் எவர்கள் ஒருயோசனை தூரத்துக்கதிகப்படாமற் சஞ்சரிக்கிறார்களோ அவர்களை முடவர்களென்றதாகும். (4) நேத்திரேந்திரிய லோபத்தாலாவது காசபடலாதி வியாதிகளாலாவது ஒன்றையும் பார்க்காதிருப்பவர்களை யிங்கு குருடர்களென்று சொல்லியதன்று. நின்றாலும் நடந்தாலும் எவர்களுடைய பார்வை நாலு நுகத்தடி தூரத்துக்கப்பால் பூமியைவிட்டுப் போகிறதில்லையோ அவர்களைக் குருடர்க ளென்றதாகும். (5) சுரோத்திரேந்திரிய லோபத்தால் சப்தங்களைக் கிரகியாதிருப்பவர்களை யிங்குச் செவிடர்களென்று சொல்லியதன்று. மனதுக்குச் சந்தோஷ விசனமாதிகளை யுண்டுபண்ணத்தக்க வார்த்தைகளைக் கேட்டாலும் கேட்காதவர்கள் போலிருப்பவர்களைச் செவிடர்களென்றதாகும். (6) உன்மத்தமாதிய சித்தமயக்கங்களால் விஷயங்களைப்பற்றிக் கலங்காதிருப்பவர்களை யிங்கு ஜடர்களென்று சொல்லியதன்று. பிரியாப்பிரியத்துக்கு ஏதுவாகிய விஷயங்கள் சமீபத்திருக்கினும் அவைகளால் கலங்காத இந்திரியங்களை யுடையவர்களாய்த் தூங்குகிறவர்கள்போ லெப்போது மிருப்பவர்களை ஜடர்களென்று சொல்லியதாகும். ஆதலின் இங்ஙனம் ஆறுவிதமாக இருப்பவர்கள் சம்சாரத்தைச் சீக்கிரத்திற் கடப்பவர்கள் என்பதற்கையமின்று. இங்ஙனம் பலவிதமாக இராநின்ற சந்நியாசி ஆச்

சிரமத்தர்களில் தீவிரவைராகிகள் குடிசகம் வெகூதகமென்
னும் உபயசந்நியாசங்களையும், தீவிரதரவைராகிகள் அம்
சம் பரமாம்சமென்னும் உபயசந்நியாசங்களையும் உடைய
வர்களாவரென அறிக.

வினு :—குடிசகாதி நால்வகைச் சந்நியாசிகள் யாவர்
களெனின். (59)

விடை:-குடிசு என்பது சிறுவீடு. அகமென்பது இடம்.
தேசயாத்திரை செய்தற்குச் சத்தியின்றி, ஊர்ப்பொ
துவிலிராநின்ற குடிசையாகிய பன்னசாலையை யிடமாகக்
கொண்டு வசிப்பவர்களாயும் ஒரேயிடத்தில் அன்னம்புசிக்கிற
வர்களாயு மிருப்பவர்கள் குடிசகர்களாகும். வெகு என்பது
பல; உதகமென்பது பூமி அல்லது சலமாம். இருப்பது இன்ன
ஊர் இன்ன இடமென்னும் நியமமின்றிக் கிராமத்திலொரு
நாள் புரத்திலிரண்டுநாள் பட்டணத்தில் மூன்றுநாள் நகரத்
தில் ஐந்துநாள்களுக்கு அதிகப்படாமல் வசிப்பவர்களாயும்,
வருஷாகாலங்களில் கிராமம் அல்லது நகரங்களில் நான்கு
மாதம் வசிப்பவர்களாயும், மற்றக் காலங்களில் காடு, மலை,
வனமுதலிய இடங்களில் வசிப்பவர்களாயும் பலபல பூமிகளி
லுள்ள பலபல சலமாதிகளைப் புசித்துக்கொண்டு பயத்தினு
லோரிடத்தினும் தங்காது திரிகின்ற மானைப்போற் சஞ்சரிப்
பவர்களாயு மிருப்பவர்கள் வெகூதகர்களாகும். பிரமலோக
இச்சையால் முமுட்சுத்துவமின்றி யிருப்பவர்கள் அம்சர்களா



கும். நிட்காமபுண்ணிய பரிபாகபலமாகிய சித்தசுத்தியால்
முமுட்சுத்துவத்தை யடைந்திருப்பவர்கள் பரமாம்சர்களா
கும். இவர்களில் குடீசகரும், வெகூதகரும் மறுமைப்பய
னைக்குறித்த கருமசந்நியாசியர்களானமையால் மறுமைப்பய
னுகிய சுவர்க்கலோகங்களை யடைபவர்களாகும். இவர்கட்கு
வேறுக ஆதுரசந்நியாசி, கருமசந்நியாசி, கிரமசந்நியாசியென
மூவருண்டு. இம்மூவரில் ஆதுரமென்பது நோய்; தேகவியாதி
யதிகரித்தகாலத்திலாவது மரணசமீபகாலத்திலாவது பிரே
ஷைமந்திரோச்சாரண பூர்வகமாகச் சந்நியாசம் வாங்
கிக்கொள்பவர்களாயும், விதியாகச்சொல்லப்பட்ட சந்நியாச
கருமக்குறைவுள்ளவர்களாயு மிருப்பவர்கள் ஆதுரசந்நியாசி
களாவர். இவர்களே நிமித்தசந்நியாசிகளுமாவர்கள். பிரயசரிய
ஆச்சிரமத்திலிருந்து அதன் விரதத்தை முடித்துக் கிரகாச்
சிரமத்தர்களாகிப் பின் வானப்பிரஸ்தாச்சிரமத்தை யடை
ந்து வைராகமில்லாவிடினும், ஆச்சிரமக்கிரமானுசாரமாய் மந்
திரோச்சாரண பூர்வகமாகச் சந்நியாசம் வாங்கிக்கொள்பவர்
கள் கருமசந்நியாசிகளாவர். எங்குமாயுள்ள பிரஹ்மத்தைத்
தவிர மற்றவைகள் யாவும் அநித்தமென நிச்சயித்துக் கிரம
மாகச் சந்நியாசம் வாங்கிக்கொள்பவர்கள் கிரமசந்நியாசி
களாவர். இவர்களே அநிமித்த சந்நியாசிகளுமாவர்கள். அம்
ஸர்கள் பிரஹ்மலோகத்தை யடைந்து பிரஹ்மன் முன்னி
லையில் ஞானம் பெற்றுப் பின் முத்தியடைபவர்களாவர். பர

மாம்ஸர்கள் இந்த லோகத்திற்றானே ஞானம் பெற்றுச் சீக்கிரத்தில் முத்தியடைபவர்களாவர். இந்தப் பரமாம்ஸர்களும் விவிதிஷாசந்நியாசிகளெனவும் வித்துவத்சந்நியாசிகளெனவும் இரண்டுவிதமா யிருப்பார்களென அறிக.

வினா :—விவிதிஷாசந்நியாசமாவது யாதெனின். (60)

விடை :—ஞானபூமிகளுள் சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னும் மூன்று பூமிகளையுடையராய் (வேதிதும்) அறியத்தக்கதை யறியவேண்டுமென்னும் ஞான இச்சையாற் செய்துகொள்ளும் சந்நியாசம் விவிதிஷா சந்நியாசமாம். இதனை ஜிஞ்ஞாசுசந்நியாசமெனவும் கூறுவர். இச்சந்நியாசம் மேற்சனனத்தைத் தரத்தக்க சகலகன்மங்களையும் மனதினால் விடுவதாகிய மானசரூபமாகவும், மந்திரோச்சாரண பூர்வகமாகிய தண்டகமண்டலாதிதாரண ஆச்சிரமரூபமாகவு மிருக்கும். இவ்விரண்டில் முந்திய மானச சந்நியாசத்தில் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரரோடு ஸ்திரீகளுக்கு மதிகாரமுண்டு. இதற்கு மைத்திரி முதலிய ஸ்திரீகள் ஞானமடைந்திருக்கிறார்களென்கிற சுருதியே பிரமாணமாகும். பிரமசாரி கிரகஸ்தர், வானப்பிரஸ்தர்கட்குப் பிரசித்தமான வாசியசந்நியாசஞ் செய்துகொள்வதில் யாதானுமோர் நிமித்தத்தாற் பிரதிபந்த மிருந்தால் அவர்கள் தன்னாச்சிரம கருமங்களை விடாமல் ஞானசாதனமான மானசசந்நியாசஞ்



செய்துகொள்வதற்கு அதிகாரமுண்டு; விரோதமில்லையென அறிக.

வினா :—ஸ்திரீகளுக்கு மரனச சந்நியாசமேயன்றிப் பிரேஷை மந்திரோச்சாரணபூர்வகமாயுள்ள தண்டகமண்டலாதிதாரண ஆச்சிரமரூபமாகிய சந்நியாசமில்லையோ வெனின். (61)

விடை :—மைத்திரியைப்போல் விவாகம் பண்ணிக்கொண்டு நாயகனிடத்திராநின்ற ஸ்திரீகளுக்கு மானச சந்நியாசமாத்திர முண்டு. விவாகமின்றிய கன்னிகைகளுக்கும் நாயகனிழந்த விதந்துக்களுக்கும் சுருதிகளில் பிக்ஷுகியென்னும் வாக்கியமிருத்தலால் மந்திரோச்சாரணபூர்வக தண்டகமண்டலாதிதாரண ஆச்சிரமரூபமாகிய விவிதிஷாசந்நியாசமு முண்டென அறிக.

வினா :—ஸ்திரீகளுக்கு ஆச்சிரரூபமாகிய சந்நியாசம் உண்டென எங்கே சொல்லியிருக்கிற தெனின் (62)

விடை :—மோக்ஷதரும மென்னுங் கிரந்தத்தில் நாலாவது டீகா சனகர் சம்வாதத்தில் திரிதண்டாதிதாரண ஆச்சிரமிகளாய் ஈடணாத்திரயத்தியாகம், பிக்ஷான்னபோசனம், வேதாந்தசிரவணம், ஏகாந்தத்திருந்து பிரஹ்மத்தியானஞ் செய்குதலாகிய சந்நியாசம் சுலபமாக ஸ்திரீகளுக்கு உண்டெ

னைச் சொல்லியிருக்கிறது. இங்ஙனமே சாரீரபாஷியத்தினுஞ் சொல்லியிருக்கிறதெனப் பிரமாணமாக எடுத்து வித்தியாரண்ணியசுவாமிகள் சீவன்முத்திவிவேகமென்னுங் கிரந்தத்தில் விவிதிஷாசந்நியாசஞ் சொல்லுமிடத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்கள். இஃதன்றிப் போதாயனர் ஸ்திரீகளுக்கும் சந்நியாசங் கூறியிருக்கிறாரெனவும் அதை விஞ்ஞானேசுரர் ஒப்பியும் வருகிறாரெனவும் வசித்திராததீக்ஷிதீயம் வருணாச்சிரமகாண்டத்திற் சொல்லியிருக்கிறது. மனுதர்மசாத்திரம் எட்டாவது அத்தியாயம் ஸ்திரீசங்கிரகணத்தில் சந்நியாசம்பண்ணிக்கொண்ட ஸ்திரீகளுண்டெனவும் கூறுகிறது. ஆதலின் மானசசந்நியாசம் சகலமான ஸ்திரீகளுக்கும் உண்டெனவும், ஆச்சிரமரூபமாகிய சந்நியாசம் கன்னிகை, விதந்துக்களுக்கு மாத்திரம் உண்டெனவுங் கொள்ளற்பாலதெனவறிக.

வினா :—வித்துவசந்நியாசமாவது யாதெனின் (63)

விடை :—சிரவணமனன நிதித்தியாசன வலியால் பிரஷ்மத்தைத் தன் சொரூபமாக அறிந்துள்ள ஞானானந்தரம் வாசனாக்ஷய மனோநாச தத்துவஞானங்களின் அப்பியாசவாயிலாக சீவன்முத்திசுகத்தை யபேக்ஷித்துச் செய்துகொள்வதாகிய பரமாம்சசந்நியாசமே வித்துவசந்நி



ா :—விவிதிஷாசந்நியாசத்துக்கும் வித்துவசந்நியா
த்துக்கும் ஏதுக்களெவை யெனின் (64)

விடை :—மிகுந்த பசியுள்ளானுக்கு மற்றொன்றிலும் விருப்பமின்றி அன்னத்தில்மாத்திரம் விருப்பமுண்டாவதுபோல சன்மங் துக்கமென் றறிந்தவனுக்குச் சன்மஏதுக்களாகிய கருமங்களி லிச்சையின்றிச் சன்மநிவர்த்தியை யபேக்ஷித்துத் தீவிரமாக வுதயமாகின்ற சிரவணாதி சாதனசகித ஞான இச்சையாகிய விவிதிஷையே விவிதிஷாசந்நியாசத்துக் கேதுவாகும். அவதிபரியந்தமுள்ள ஞானமாகிய வித்துவத்துவமே வித்துவசந்நியாசத்துக் கேதுவாகுமென அறிக.

வினா:—விவிதிஷாசந்நியாச பலமாகிய அவதிபரியந்தமான தத்துவஞானத்தால் சஞ்சிதத்தோடு ஆகாமியகன்மமும் பற்றாது நீங்கிவிடுகின்றமையினாலும் யாதொரு பிரயதனமுமின்றிச் சும்மாவிருக்கினும், தேகாந்தத்தில் முத்தி தானே சித்திக்கின்றமையினாலும் வர்த்தமான சன்மசேஷமான பிராரப்தபோகங்களை யனுபவித்தே தீரவேண்டியிருத்தலினாலும் இந்த வித்துவசந்நியாசப் பிரயாசம் பயனற்றதாகும். ஆதலால் கைவிடத்தக்க தெனின் (65)

விடை:— வித்துவசந்நியாசம் சீவன்முத்திசுகத்துக்கே யனுள்ளதேயாகும். இஃதன்றி, அச்சுக

அதனைக் கொடுப்பிக்கும் நிமித்தம் பிராரப்தகன்மத்தாற் செலுத்தப்பட்டுச் செய்துகொள்ளப்படுவது வித்துவசந்நியாசமானமையினாலும் கைவிடத்தக்கதன்றென அறிக.

வினா:—வித்துவசந்நியாசம் எந்தத் தத்துவஞானியாலடையப்பட்டிருக்கிறது. இஃதுண்டென்பதற்குப் பிரமாணங்களெவை யெனின். (66)

விடை:—தத்துவஞானியாகிய யாக்கியவல்கியரா லடையப்பட்டிருக்கிறது. இங்ஙனஞ் சொல்லுகிற பிருகதாரணியமும் வித்துவசந்நியாசிகளின் ஆசாரங்களைக் கூறுவதாகிய பரமஹம்ஸவுபநிடதம் சாபாலவுபநிடத முதலிய சுருதிஸ்மிருதிகளும் வித்துவசந்நியாசமுண்டென்பதற்குப் பிரமாணங்களென அறிக.

வினா:—வித்துவசந்நியாசிகளின் ஆசாரங்களெவையெனின். (67)

விடை:—விவிதிஷாசந்நியாசத்தி லங்கீகரிக்க



என்னுஞ் சுருதிவாக்கியப்படி சலமாயும் அசலமாயுமுள்ள வாசஸ்தலத்தையுடையனாயும் லாபாலாபங்களிற் சமனாயும், விசனப்பிரதேசமாயுள்ள வீடு, மடம், கோவில், புற்றரை, புற்றடி, மரத்தடி, அக்கினிகோத்திரசாலை, நதிதீரம், மணல்மேடு, பருப்பதகுகை, பருப்பதசிகரம், மலையருவிவீழுமிடம், வெறுந்தரைமுதலிய இடங்களில் ஒன்றை இதுவே நமது தியானஸ்தலமென்னும் நியமமின்றியிருந்து தியானஞ் செய்வதும் சதா பிரஹ்மமே நாமென்பதாகிய ஞானாக்கினியினால் சகல கருமங்களையுந் தகிப்பதும் பாலர் பேயர் பித்தர் கூலியாள்கள்போலிருப்பதும் வர்த்தமான தேகம் நிவர்த்தியாகும்போது நிருபாதிகப் பிரஹ்மசொரூபமாகச் சேடிக்கிறதும் ஆசாரங்களென அறிக;

வினா:—ஞானியானவன் எங்ஙனம் சலமாயும் அசலமாயுமுள்ள வாசஸ்தலத்தையுடையவனாயிருக்கிறானெனின் (68)

விடை:—சலமாயுள்ளது அடிக்கடி மாறுதலுடைய சரீரம். அசலமாயுள்ளது எந்தக்காலத்தினும்மாறுதலின்றிய ஸ்தி

ஞானியானவன் பிக்ஷைவாங்

வினா:-முன் 67-வது விடையில் வித்துவசந்நியாசிகளா
கிய ஞானிகள் பாலர் பேயர் பித்தர் கூலியாள்கள்போலி
ருப்பரென்றது யாதினாலெனின். (69)

விடை:-பாலர் இதுவேண்டும் இது வேண்டாமென ஒன்
றினும் இராகத்துவேஷங்களை யடையா திருப்பதுபோல
ஞானிகள் தேகாதிப்பிரபஞ்சங்களை மித்தையாக அறிந்த திட
த்தால் அவைகளில் இராகத்துவேஷங்க ளில்லா திருப்பவ
ரானமையால் பாலர்போலும், பேயர் வீரன் காட்டேரி முத
லிய பேய்களால் பிடிக்கப்பட்டுப் பிடித்த பேயாகாரமாக
இருப்பதுபோல ஞானிகள் பிரஹ்மத்தைத் தன்மயமாக அறி
ந்து பிரஹ்மாகாரமாக இருப்பவரானமையால் பேயர்போ
லும், பித்தர் தேகாதியபிமானமின்றி இருப்பதுபோல ஞானி
களும் தேகாதிப்பிரபஞ்சங்களில்யானெனதென்னும் அபிமா
னமின்றி யிருப்பவரானமையால் பித்தர்போலும், கூலியாட்
கள் சூரியன் அஸ்தமனமடைதலை யெதிர்பார்த்துக்கொண்டி
ருப்பதுபோல ஞானிகளும் பிராரப்தக்ஷயத்தை யெதிர்
பார்த்துக்கொண்டிருப்பவரானமையால் கூலியாட்கள்போலு
மிருப்பரென்றதென அறிக.

வினா:—அதிவருணாச்சிரமியென்பவன் வருணாச்சிரமங்
களுக் கப்பாற்பட்டவ னென்றது யாதினாலெனின். (70)



விடை:—ஈசுவரனைப்போல சகலமான வருணிகர்களுக்
கும் ஆச்சிரமிகளுக்கும் அதிகாரிகளுக்கும் குருவாயிருப்பதே
யன்றிச் சீடனாக இராதவனும் வருணாச்சிரமங்களையும்
அவைகட்குரிய ஆசாரங்களையும் மாயாகற்பிதமென்றறிந்து
நழுவவிட்டவனும் மகதத்துவாதி சகத்தனைத்தும் பொன்
னிற் பூடணமும் இப்பியில் வெள்ளியும்போல் தன்னிற்கற்பித
மெனவும், சூரியசந்நிதானத்தில் உலகங்கள் சேட்டிக்கிறது
போல சகல உலகங்களும் நமது சந்நிதானத்திற் சேட்டிக்
கிறதெனவும், சொப்பனப்பிரபஞ்சம் சொப்பனதிருஷ்டா
வுக்கன்னியமாக இல்லாததுபோலச் சாக்கிரப்பிரபஞ்சமும்
சாக்ஷியாகிய தனக்கு அன்னியமாகஇல்லையெனவும், திக்குப்பி
ரமம் விவேகத்தால்நீங்கியபின்னரும் ஒருதிக்கு மற்றொருதிக்
காகத் தோற்றுவதுபோலத் தத்துவஞானத்தால் நாசமாகிய
சகத்துப் பின்பு தோற்றினும் எதார்த்தமல்லவெனவும், சகல
சகத்தும் மித்தையானமையால் கிரகிக்கத்தக்கனவும் விடத்தக்
கனவுமாகிய விதி நிடேதங்கள் தனக்கில்லையெனவும், சரீரேந்
திரிய அவத்தாத்திரயங்கட்குச் சாட்சியாய் மிருகசண்டாளன்
சரீரமுதல் பிரமன்சரீரமீறாகிய சகல சரீரங்களினும் நிறைந்
திருந்தும் அவைகளிற் சம்பந்தமின்றிய அசங்கசச்சிதானந்த
நித்தசுத்த பரிபூரண மகாதேவசொரூபமே பிரத்தியகாத்ம
சொரூபமாகிய நாமெனவும் நாமே மகாதேவசொரூபமென

வும் மகாவாக்கியசிரவண மனனாதிகளால் அப்பிரதிபந்த அபரோக்ஷமாக அறிந்தவனாயு மிருப்பவனாதலின் அப்பாற்பட்டவ னென்றதென அறிக.

வினா:—தன்னைப் பிரத்தியகாத்மாவென்றது யாதினாலெனின். (71)

விடை:—தூலசூக்கும காரணமென்னும் சரீரத்திரயம், சாக்கிரசொப்பன சுழுத்தியென்னும் அவத்தாத்திரயம், விசுவதைசத பிராஞ்ஞனென்னும் அபிமானித்திரயம் ஆகிய (௩)ம் தோற்ற வொடுக்கங்களை யடைவதுபோல, தான் ஓர்காலத்திலும் தோற்ற வொடுக்கங்களை யடையாமல் அவைகளின் தோற்ற வொடுக்கங்களைச் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டு அவைகளின் சம்பந்தமின்றிப் பிரத்தியேகமா யிருத்தலினென அறிக.

வினா:—பிராரப்தநாசமாகிய தேகாந்தத்தில் அநாயாசமாகவே விதேகமுத்தி யடையத்தக்கவர்களாகிய பிரஹ்மஞானிகளுக்கு மத்தியிலடையத்தக்கதாகிய சீவன்முத்தி யொன்றுள தென்பதற்குப் பிரமாணங்களெவையெனின் (72)

விடை:–கடவல்லி பிருகதாரணியம் தாபநீயம் வராகம் முதலிய சுருதிகளும், சீவன்முத்தன்முதல் அதிவருணாச்சிரமி யீறாகச்சொல்லப்பட்ட நாமப்பிரசங்கங்களால் சீவன்முத்தி யுண்டென்பதையும் அதற்குச் சொரூப சாதனப் பிரயோச



னங்களையுந் தெரிவிப்பதாகிய வசிட்டமுதலிய ஸ்மிருதிகளுமென அறிக.

வினா:—சீவன்முத்திக்குச் சொரூபம் யாதெனின். (73)

விடை:—சரீரமிருக்கும்போது கர்த்திருத்துவ போக்திருத்துவ சுகதுக்காதிரூபமாகிய பந்தப்பிராந்தி நிவர்த்தியென அறிக.

வினா:—கர்த்திருத்துவாதி பந்தமானது சாக்ஷியினிடத்தினின்றும் நீக்கப்படுகிறதா அல்லது சித்தத்தினின்றும் நீக்கப்படுகிறதா வெனின். (74)

விடை:—சாக்ஷிசைதன்னியம் எப்போதும் அகர்த்தாவாயும் நிருவிகாரமாயும் சாக்ஷிமாத்திரமாயும் தொய்தமின்றியதாயும் அசங்கமாயு முள்ளதெனச் சுருதிகள் கூறுகின்றமையினானும் விளக்கப்படுவதாகிய உலகவிவகாரம் உலகத்தினிடமாக இருக்கிறதேயன்றி அதனை விளக்கிவைப்பதாகிய சூரியனிடத்திராததுபோல அறியப்படுவதாகிய சித்தவிகாரமான கர்த்திருத்துவாதிரூப பந்தமானது சித்தத்தினிடமாக இருக்கிறதேயன்றி அதனையறிந்துகொண்டு நிருவிகாரமாக இராநின்ற சாக்ஷியினிடத்தினின்று. ஆதலின் சாக்ஷியினிடத்தினின்றும் நீக்கப்படுகிறதன்றாம்; சித்தத்தினின்றும் நீக்கப்படுகிறதென அறிக.

வினா:-சலத்தில் நெகிழ்ச்சி அக்கினியிற் சூடுபோல் சித்தத்திலுள்ள கர்த்திருத்துவாதி விகாரரூப பந்தமானது சித்

தத்தின் சுபாவமானமையால் சித்தத்தினின்றும் பந்தநீக்கங் கூடாது. ஆகலின் சீவன்முத்தி எங்ஙனஞ் சித்திக்குமெனின். (75)

விடை:—சித்தத்தினின்றும் பந்தநீக்கம் அத்தியந்தங் கூடாவிடினும் சலத்தினெகிழ்ச்சிக்கு மண்சம்பந்தத்தினுனும் அக்கினிப் பிரிவினுனும் அக்கினியின் சூட்டுக்கு மணிமந்திரங்களினுனும் அடக்கங்கூடுவதுபோலத் தியானுப்பியாசத்தால் கருத்தருத்துவாதி விகாரரூப பந்தம் அடக்கமாம். இவ்வடக்கமே சீவன்முத்திக்குச் சொரூபமானமையின் சித்திக்குமென அறிக.

வினு:—அஞ்ஞானம் அஞ்ஞானகாரியங்களை நாசஞ் செய்வதில் சாமர்த்தியமுடைய தத்துவஞானத்தையும் பிரதிபந்தித்துக்கொண்டு தேகாதிகளைத் தோற்றிவைத்து சுகதுக்கமாகிய பலத்தைக்கொடுக்குஞ் சாமர்த்தியமுடையது பிராரப்த கன்மமானமையால் அஃதுள்ளபோது சுகதுக்கபோகானுபவங்கட் கேதுவாகிய சித்தவிருத்திகளின் அடக்கங்கூடுமெனல் பொருந்தாதெனின். (76)

விடை:—சித்தவிருத்திகளின் அடக்கத்தாற் சித்திப்பதாகிய சீவன்முத்தியானது சுகாதிசயரூப மானமையால் அதுவும் பிராரப்தகருமகாரியங்களிற் சேர்ந்ததேயாகும். ஆதலால் பொருந்துமென அறிக.



வினு:-சீவன்முத்திக்குச் சாதனங்களெவையெனின் (77)

விடை:—தத்துவஞானம் வாசனுக்ஷயம் மனோநாசமாகிய மூன்றுமென அறிக.

வினு:—தத்துவஞானமாவது யாதெனின். (78)

விடை:—கானற்சலம் கானலுக்கு அன்னியமாக ஓர் பொருளாக இல்லையெனவும், மித்தையாகத் தோற்றுகிறதெனவும் இருக்கிறது கானலேயெனவும் அதன் உண்மையையறிவதுபோல நாமரூபப்பிரபஞ்சம் பிரஹ்மத்துக்கன்னியமாக ஓர் பொருளாக இல்லையெனவும் மித்தையாகத் தோற்றுகிறதெனவும் இருக்கிறதுபிரஹ்மமேயெனவும் அதுவே பிரத்தியகாத்மசொரூபமாகிய தானெனவும் எதார்த்தத்தை யறிவதாகிய ஞானமென அறிக.

வினு:—வாசனையாவது யாது அஃதெதனுல் நிவர்த்தியாகுமெனின். (79)

விடை:—பூருவாபரமொன்றையும் விசாரியாமற் சீக்கிரத்திலுதயமாகுங் குரோதாதி விருத்திகளுக் கேதுவாகிய சித்தத்தின் சூட்சுமாவஸ்தையாகிய சம்ஸ்காரமே வாசனை யாகும். இது மானசிகவாசனை விடயவாசனையென இரண்டாயிருக்கும். இவ்விரண்டில் சத்தமுதலிய விடயங்களை இச்சிக்குங்காலத் துண்டாகிற சம்ஸ்காரம் மானசிகவாசனையாகும்,

அவ்விடயங்களை யனுபவிக்குங்காலத் துண்டாகிற சம்ஸ்காரம் விடயவாசனையாகும். தேகவாசனை, லோகவாசனை, சாஸ்திரவாசனை, அசுரவாசனையாகிய நான்கும் மானசிகம் விடயமென்னு மிரண்டுவாசனைகளி லடங்கும். இவ்விரண்டும், மலினமாகிய அசுபவாசனைகளாம். இவைகள் புருடப்பிரயத்தனத்தா லுதிப்பதாகிய விஷயதோஷ விவேகத்தினானும் மைத்திரியாதிவாசனை சின்மாத்திரவாசனையாகிய சுபவாசனைகளாலும் நிவர்த்தியாகுமென அறிக.

வினா:—விஷயதோஷ விவேகமாவது யாதெனின். (௮0)

விடை:—சத்தமாதிய விடயங்களிலுள்ள தோஷங்களையும் அவ்விடய இச்சையாற்பொருந்திய சனனமரணாதிகளால் வருந் துக்கங்களையும் சாத்திரங்களினானும் தன்னனுபவத்தானும் ஆராய்தலாகும். இவ்விவேகத்தை விரிவஞ்சி விரித்திலேம். அறியவிரும்பில் வாசிட்டம் வைராக்கியப்பிரகரணத்தினும், விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்தினும், சீவன்முத்திவிவேகமென்னுங் கிரந்தத்தினும் காண்க.

வினா:—சின்மாத்திரவாசனையாவது யாதெனின். (௮1)

விடை:—சர்வாதிட்டான சின்மாத்திர பரிபூரணமாகிய பிரஹ்மத்திற் பாஹியாந்தரமான சகலசகத்தும் கற்பிதம்; பிரஹ்மத்துக் கன்னியமாக இல்லை; எப்போதுமிருப்பது அகண்டேகரசப் பிரஹ்மம்; அதுவேதான்; தானே அதுவென அறிந்து பாவிப்பதாலுண்டாகும் சம்ஸ்காரமென அறிக.



வினா:-மலினவாசனைகளாகிய அசுபவாசனைகளைச் சின்மாத்திரவாசனை யொன்றுமே நிவர்த்திக்கத்தக்கதானமையால் அதனைமாத்திரம் அப்பியாசிக்கலாம், மைத்திரியாதி வாசனைகளை யப்பியாசிக்க வேண்டாமெனின். (82)

விடை:—சுவர் திடப்படாவிடில் வீடெங்ஙனம் திடப்படாதோ, மலவிரோசனமாத்திரை புசித்துத் தூர்மலங்களை நிவர்த்திசெய்யாமல் புசிக்கப்பட்ட ஔடதம் எங்ஙனம் வியாதியை நிவர்த்திசெய்யமாட்டாதோ, அங்ஙனம் ராகத்துவேஷ குரோத அசூயையாதிகளை நிவர்த்திப்பதாகிய மைத்திரியாதி பாவனை திடப்படாவிடில் சின்மாத்திரவாசனை திடப்படாது. திடப்படாத சின்மாத்திரவாசனையால் மலினவாசனைகள் அத்தியந்தம் நிவர்த்தியாகாவாம். ஆதலின் சின்மாத்திரவாசனை திடப்படும்நிமித்தம் மைத்திரியாதிய வாசனைகளையும் அப்பியாசிக்கவேண்டுமென அறிக.

வினா:—அசுபவாசனையை நிவர்த்திசெய்வதாகிய சுபவாசனையை யுண்டுபண்ணுவதற்குக் கர்த்திருகாரணானுசந்தானரூபமான புருடப்பிரயத்தினம் வேண்டுமோனால் சுபவாசனை

னை நிவர்த்தித்தற்கு மற்றொருபிரயத்தினமும், அதனைநிவர்த்தித்தற்கு மற்றொரு பிரயத்தினமுமாக மேலுமேலும் வேண்டப்பட்டு முடிவுபெறுவாம். ஆதலின் மனதுக்கு ஒரு வாசனையுமின்றிச் சாந்தமடையுங்காலஞ் சித்திக்கமாட்டாதெனின். (83)

விடை :—பிணஞ்சுடுதடி தன்னைச் சுடுவதற்கு வேறுதடி வேண்டுவதின்றிப் பிணத்தோடுதானுந் தகனமாய்விடுவதுபோலும் கலங்கற்சலத்திற் போடப்பட்ட கதகரேணு சலத்திலுள்ள மலினங்களை நிவர்த்திசெய்துகொண்டு தானுமோர்பிரயத்தினமுமின்றி நிவர்த்தியாய்விடுவதுபோலும், சுபவாசனையும் அசுபவாசனையை நிவர்த்திசெய்துவிட்டுத் தானும் ஓர் பிரயத்தினமுமின்றி நிவர்த்தியாய்விடும். அப்போது மனது ஓர் வாசனையுமின்றிச் சாந்தமாய்விடுமென அறிக.

வினா:-வாசனாக்ஷய மெதனா லிரக்ஷிக்கப்படுமெனின்(84)

விடை :—இந்திரியநிக்கிரகத்தாலென அறிக.

வினா :—இந்திரியநிக்கிரகமாவது யாதெனின். (85)

விடை :—சுரோத்திராதி யிந்திரியங்களைச் சத்தமாதிய விடயங்களிற் செல்லவிடாமற் றத்தங்கோளகங்களிற் கிரமமாக நிறுத்துதலென அறிக.



வினா :—மனதென்பது யாது அஃதெதனால் நாசமாகுமெனின். (86)

விடை :—சாவயவமாய், அரக்கு, சுவர்ணம், மெழுகு முதலியனபோல வெகுவித பரிணாமயோக்கியத் திரவியமாய், பிரகாசம் பிரவிருத்தி மோகமே சொரூபமாகிய சத்துவ இராஜத தாமதகுணாத்மகமாய், தமோகுணவிகசிதத்தால் அசுரசம்பத்தையும், ரஜோகுணவிகசிதத்தால் தேகவாசனை லோகவாசனை சாஸ்திரவாசனைகளையும், சத்துவகுணவிகசிதத்தால் ஞானமுதலிய தெய்வசம்பத்தையும் உண்டுபண்ணுவதாய், தியானாப்பியாசவலியால் தாமதமிராசதமாகிய இரண்டு குணங்களும் நிவர்த்தியாகத்தக்க செயற்கைக்குணங்களாகவும், சத்துவகுணம் ஒன்றினாலும் நிவர்த்தியாகாத இயற்கைக்குணமாகவும் உள்ளதாயிருப்பதால் இம்மனது அடநிக்கிரகத்தால் நாசமாகாது கிரமநிக்கிரகமாகிய அத்தியாத்மவித்தை சாதுசங்கம் வாசனாக்ஷயம் பிராணசலனநிரோதமாகிய உபாயங்களால் நாசமாகுமென அறிக.

வினா :—ஹடநிக்கிரகமாவது யாதெனின். (87)

விடை :—ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை அதனதன் கோளகங்களைத் தகைந்து நிக்கிரகஞ் செய்வதாம். இதுபோல மனதையும் நிக்கிரகிக்கக்கூடாதென அறிக.

வினு :-மனதை அடநிக்கிரகத்தால் நிக்கிரகிக்கக்கூடா தென்றது யாதினுலெனின். (88)

விடை :—இந்திரிய கோளகங்கள் பாஹியத்திலுள்ளன வானமையால்அவைகளைத் தகைதற்குக் கூடும். மனதின்கோ ளகையாகிய இருதயகமலம் ஆந்தரத்திருப்பதுபற்றி யதனைத் தகைதற்குக் கூடாமையினெனை அறிக.

வினு :—கிரமநிக்கிரகமாகிய நான்குபாயங்களில் அத்தி யாத்மவித்தையாவது யாது? அதனுல் மனது எங்ஙனம் நாச மாகுமெனின். (89)

விடை :—உள்ளதாகிய ஆத்மாவை யறியச்செய்வதா கிய விசாரஞான தியானங்கள் அத்தியாத்மவித்தைகளா கும். இவைகளில் விசார ஞானம் திருசியமாயுள்ள அனைத் தும் மித்தை; திருக்காயுள்ள பிரத்தியகாத்மா சத்தியமாகிய சொப்பிரகாசமென அறிவிக்கின்றமையால் மனதுமித்தையா கிய திருசியத்திற் பிரயோசனமில்லை யெனவும், சத்தியமா யும் சொப்பிரகாசமாயுமுள்ள பிரத்தியகாத்மாவை விஷய மாகப் பண்ணிக்கொள்ளும் யோக்கியதை தனக்கில்லையென வும் விவேகத்தாலறிந்து, விறகில்லாத அக்கினிபோலத் தன் காரணத்திற் ருனே சாந்தியடைந்துவிடும். தியானமானது மனதின் இராஜததாமதகுணங்களைநிவர்த்திசெய்து சத்துவகு



ணமாத்திரமாகச் சேடிக்கச்செய்கின்றமையால் மனது ஏகாக் கிரமுற்று, சூட்சுமமாகி ஆத்மானுபவத்துக்குரிய யோக்கிய தையுடையதாய் ஆத்மப்பிரகாசத்திற்ருனே சாந்தமாய்விடு மென அறிக.

வினு :—இராசததாமதகுண நிவர்த்தியால் மனதுக்கு ஏகாக்கிரமும் சூட்சுமத்தன்மையும் ஆத்மானுபவத்துக்குரிய யோக்கியதையும் உண்டாகுமென்றது யாதினுலெனின். (90)

விடை :--சஞ்சலவிருத்திக் கேதுவாயது ரஜோகுணமா னமையால் அதனிவர்த்தியால் ஏகாக்கிரமும், அனுத்மரூப மான தூலபதார்த்தாகாரத்துக் கேதுவானது தமோகுணமான மையால் அதனிவர்த்தியால் சூட்சுமத்தன்மையும், ஞானத்துக் கேதுவானது சத்துவகுணமானமையால் சத்துவகுணமாத் திரமாகச் சேடித்தலால் ஆத்மஞானத்துக்குரிய யோக்கி யதையும் மனதுக்குண்டாகுமென அறிக.

வினு :—சாதுசங்கவுபாயமாவது யாதெனின். (91)

விடை :—குருமுகமாகச் செய்யப்பட்ட சாஸ்திர சிரவ ணுதிகளால் பிரஹ்மாத்மைக்கிய ஞானுனுபூதியை யடைந்து ள்ள சித்தசாந்தர்களோடு கூடியிருத்தலென அறிக.

வினு:—சாதுசங்க வுபாயத்தால் மனது நாசமாகுமென் றது யாதினுலெனின். (92)

விடை :—குருமுகமாகச் சிரவணாதிகள் செய்திருக்கினும் பிரஹ்மத்தை நன்றாயறியாதவனும், அறிந்தபோதிலும் மறந்துவிடுகிறவனும் சாதுக்களை யெப்போதுஞ் சேர்ந்திருக்கில், அவர்கள் அடிக்கடி யொருவர்க்கொருவர் தத்துவவிசாரஞ் செய்வதைக் கேட்பதினாலும் அல்லது அவர்கள் கருணையினால் நேரே சுருதி யுத்தியனுபவங்களுக்கேற்பப் போதித்தலினாலும் நன்றாயறியப்படாதிருந்த பிரஹ்மத்தை நன்றாயறிதலும் மறந்த சொரூபப்பிரஞ்ஞை ஸ்திரமாயுதயமாதலும் சித்திக்கும். அப்போது மனது பிரஹ்மசொரூபத்தையே நாடிப் பிரஹ்மப் பிரகாசத்திற் கரைந்து லயமாய்விடும். ஆதலின் சாதுசங்க வுபாயத்தால் மனது நாசமாகுமென்றதாம். வித்தியாமத முதலிய துர்வாசனையால் சாதுசங்கங்களை யனுசரிக்கச் சம்மதமில்லாதவன் விஷயதோட விவேகத்தால் வாசனாக்ஷயஞ்செய்து அதனால்மனதை நிக்கிரகிக்கவேண்டும், மிகவும் துர்வாசனைகளால் மனம் நாசமாகாவிடிற் பிராணசலன நிரோதமாகிய வுபாயத்தால் மனோநாசஞ் செய்யவேண்டுமென அறிக.

வினா :—பிராணசலனமாவது யாதெனின். (93)

விடை :—பிராணனானது இருதயமுதல் நாசிபரியந்தஞ் சலித்துக்கொண்டிருத்தலென அறிக.

வினா :—பிராணசலன நிரோதமாவதுயாதெனின். (94)



விடை :--ரேசக பூரக கும்பகரூபப் பிராணாயாமப் பழக்கத்தால் பிராணவாயுவு பாஹியத்திலாவது, ஆந்தரத்திலாவது அல்லது பாஹியாந்தரங்களில் ஒரே காலத்தில் சமமாகவாவது தன்கதி யோய்ந்து நின்றுவிடுதலென அறிக.

வினா :—பிராணசலன நிரோதத்தால் மனது நாசமாகுமென்றது யாதினாலெனின். (95)

விடை :—மனது சலித்தற்கு மலினவாசனை காரணமாயிருப்பதுபோலப் பிராணசலனமுங் காரணமெனவும், மனமும் பிராணனும் ஒரே பூதத்தின் அம்சமெனவும், மனமடங்க வாசியும் வாசியடங்க மனமும் அடங்குமெனவும் சாத்திரங்கள் கூறுகின்றமையினாலும் வித்தியாமல முதலிய அசுரசம்பத்தின்றிய யோகிக்குப் பிரஹ்மத்தியானத்தால் மனது நிக்கிரகமாகும்போது அவாந்தரபலமாகப் பிராண நிரோதஞ் சித்திப்பதும், அவ்வசுரசம்பத்துடைய யோகிக்குப் பிராணாயாமப்பழக்கத்தால் பிராணசலன நிரோதமாகும்போது அவாந்தரபலமாக மனோநிக்கிரகஞ் சித்திப்பதும், யுத்தமாதிய யாதானுமோர் காரணத்தால் அடிபட்டு மூர்ச்சித்தவர்க்குப் பிராணசலனம் அடங்கியிருக்கும்போது மனதுஞ் சலனமில்லாதடங்கியிருத்தல் சித்திப்பதும் அனுபவமானமையினென அறிக.

வினா :— இந்திரியநிக்கிரகத்தால் வாசனாக்ஷய மிரக்ஷிக்கப்பட்டு எப்போது திடப்படுகிறதோ, அப்போது மனது தானே நாசமாய்விடும். ஆதலால் இந்திரியநிக்கிரகமும், வாசனாக்ஷயமும் வந்தவன் மனோநாசஞ் செய்வதற்கு வேறுபாயங்களைத் தேடுவது மிகையா மெனின். (96)

விடை :—வாசனாக்ஷய மிந்திரியநிக்கிரகத்தா லிரக்ஷிக்கப்படுவதுபோல இந்திரியநிக்கிரகமும் மனோநாசத்தா லிரக்ஷிக்கப்படுவதினால் மனோநாசமின்றி இந்திரியநிக்கிரகமும், இந்திரியநிக்கிரகமின்றி வாசனாக்ஷயமும் திடப்படாவாம். ஆதலின் அவைகள் திடப்படுநிமித்தம் மனோநாசத்துக்கான வுபாயங்களை யனுட்டிப்பது மிகையன்றென அறிக.

வினா :—தனக்கு வாசனாக்ஷயம் மனோநாசஞ் சித்தித்திருப்பதை யாதினாலறியலா மெனின். (97)

விடை :—விவேகத்தா லுண்டாகிய சாந்தியாதியவாசனைகளின் திடம்பற்றி பாஹியநிமித்தங்களால் குரோதாதி விருத்திகளுதயமாகா திருப்பதினால் வாசனாக்ஷயமும், மனது விருத்திரூப பரிணாமத்தை விடுத்து நிரோதாகாரமாகப் பரிணமிப்பதினால் மனோநாசமும் சித்தித்துளவென்பதை யறியலாமென அறிக.

வினா :—சீவன்முத்திக்குப் பிரயோசனங்களெவை யெனின். (98)



விடை :—ஞானரக்ஷை, தபசித்தி, சர்வசம்வாதம், துக்கநாசம், சுகாவிற்பாவமாகிய ஐந்துமென அறிக.

வினா :—சீவன்முக்திக்கு முதற்பிரயோசனமாகிய ஞானரக்ஷையாவது யாதெனின். (99)

விடை :—தத்துவஞானத்துக்கு ஒன்றினாலும் கெடுதி நேரிடாமலிருக்கும்படி அதனை யிரக்ஷிப்பதென அறிக.

வினா :—ஞானரக்ஷை சீவன்முத்திக்குப் பிரயோசனமென்றது யாதினாலெனின். (100)

விடை :—சீவன்முத்தியானது ஞானத்தை யிரக்ஷிக்குந் தன்மையுடையதா யிருத்தலினென அறிக.

வினா:-பிராந்திஞானம் கெடுதியடைவதுபோலத் தத்துவஞானம் கெடுதியடையத்தக்கதாயின் அதனைச் சீவன்முத்தியா லிரக்ஷிக்கக்கூடும். தத்துவஞானம் ஒன்றினாலுங் கெடத்தக்கதல்லாமையால் அது சீவன்முத்தியா லிரக்ஷிக்கப்படுகிறதென்பதும் சீவன்முத்திக்குப் பிரயோசன மென்பதும் கூடாதெனின். (101)

விடை :—தத்துவஞான முதயமாயினும், சீவன்முத்தியில்லாதவனுக்கு மனோநாசம் வாசனாக்ஷயமாகிய சித்தவிசிராமமில்லாமையால் பின்னும் சம்சயாதிகளுதயமாகி ஞானத்

தைப் பிரதிபந்திக்கும் மணிமந்திரங்களாற் பந்திக்கப்பட்ட
அக்கினிக்குக் காஷ்டாதிகளைத்தகிக்கும் சாமர்த்தியமில்லா
ததுபோலச் சம்சயாதிகளாற் பந்திக்கப்பட்ட ஞானத்துக்குக்
கருத்திருத்துவாதி சீவத்துவங்களைக் கெடுத்தற்கு சாமர்த்தி
யமின்றாம். இதனால் ஞானபலமாகிய மோக்ஷம் சித்தியாது.
மனோநாசம் வாசனாக்ஷயமாகிய சீவன்முத்தியுளதேல் மத்திய
பானம்பண்ணினவனுக்குத் தேகாதிகள் மறக்கப்படுவனபோ
லச் சகமறக்கப்பட்டுத் தோற்றமில்லாமற் போகின்றமையால்
ஐயமாதிகளுதயமாகா. அதனால் ஞானமும் பந்திக்கப்பட
மாட்டாது. அதனால் ஞானபலமாகியமோக்ஷமுஞ் சித்திக்கும்.
ஆகலின் சீவன்முத்தியால் ஞானமிரக்ஷிக்கப்படு மென்பதும்
சீவன்முத்திக்கு ஞானரக்ஷை பிரயோசனமென்பதுங் கூடு
மென அறிக.

வினா :-சீவன்முத்திக்கு இரண்டாம் பிரயோசனமாகிய
தபசித்தியாவது யாதெனின். (102

விடை:-மனோநிக்கிரக இந்திரியநிக்கிரகரூபமான ஏகாக்
கிரமென அறிக.

வினா :—ஞானமடைதற்குப் பூர்வம் ஞானத்துக்கும்
பரம்பராசாதனங்களாக அதிகாரியிடத்துள்ள சமம்தமமென்
னும் மனோநிக்கிரகஇந்திரியநிக்கிரகங்களை ஞானமடைந்த
ஆருடனிடத்துள்ள தத்துவஞானத்தையு மிரக்ஷிப்பதாகிய



சீவன்முத்திக்குப் பிரயோசனமாகக் கூறுதல் அடிமைத்தொ
ழில் அரசனுக்குச் சிறந்ததொழிலென்பதுபோல அசங்கத
மாமெனின். (103)

விடை :—ஞானமடைதற்குப் பூர்வம் அதிகாரியினிடத்
துள்ள மனோநிக்கிரக இந்திரியநிக்கிரகங்கள் பெலத்தினால்
வளைத்துப் பிடித்திராநின்ற மரத்தின் கிளையைப்போலப் புரு
டப்பிரயத்தனத்தால் சம்பாதிக்கப்படுவனவாகிய சாதனங்
களாக இருந்தன. ஞானமடைந்த பின்னர் அங்ஙனமின்றித்
தானே வளைந்துள்ள மரத்தின் கிளையைப்போல சீவன்முத்
தர்கட்குப் பிரயத்தினமின்றித் தாமே யிலக்கணங்களாக
அமைந்திருப்பனவாம். ஆதலின் அவைகள் சீவன்முத்திக்
குப் பிரயோசனமெனல் அசங்கதமாகாதென அறிக.

வினா :—சிறந்த பிரயோசனத்தைத் தரத்தக்கது தபசா
கும். அடையத்தக்கவை யனைத்தையு மடைந்திராநின்ற
சீவன்முத்தர்பாலுள்ள மனோநிக்கிரக இந்திரியநிக்கிரகங்
கள் அவர்கட்குமேல் யாதொரு பிரயோசனத்தையுந் தரத்
தக்கனவல்லாமையால் அவைகளைத் தபசெனல் பொருந்தா
தெனின். (104)

விடை :—மனோநிக்கிரக இந்திரியநிக்கிரகங்கள் சீவன்
முத்தர்கட்குப் பிரயோசனத்தைத் தரத்தக்கனவா யிராவிடி

னும், உலோகானுக்கிரக ஏதுவாயிருத்தலின் அவைகளைத் தபசெனல் பொருந்துமென அறிக.

வினா :—உலகமென்பது யாதெனின். (105)

விடை :—சிஷ்யர்கள் பக்தர்கள் தடஸ்தர்களென்னும் மூன்றுவிதமனுஷர்களாகப் பார்க்கப்படுபவர்களென அறிக

வினா :—சீவன்முத்தர்பா விராகின்ற தபசு உலகானுக்கிரகத்துக்கு ஏதுவாயுள்ளதென்றது யாதினாலெனின். (106)

விடை :—சிஷ்யர்களாகிய சனங்கள் அந்தர்முகர்களாயிருக்கப்பட்ட சீவன்முத்தர்களுபதேசிக்கும் வாக்கியங்களில் நம்புதலுற்றுச் சீக்கிரத்தில் விசிராமமடைகிறார்கள். பக்தர்களாகிய சனங்கள் சீவன்முத்தர்கட்கு ஆகாராதிகள் கொடுப்பதினாலும், மடமுதலியன உண்டுபண்ணிக் கொடுக்கின்றமையினாலும், ஆத்மாதிய பணிவிடைகள் செய்கின்றமையினாலும் அவர்களுடைய தபசுக்குச் சமானமான புண்ணிய விசேஷங்களையடைந்து கிருதார்த்தர்களாகிறார்கள். தடஸ்தர்களென்பவர்கள் ஆஸ்திகர் நாஸ்திகரென இருவகுப்பினராவர். இவர்களில் சாஸ்திரங்கள் கூறுவது சத்தியமென நம்புபவர்கள் ஆஸ்திகர்களாவர். இவர்கள் சீவன்முத்தர்களுடைய ஆசாரங்களைப் பார்த்து மகான்களாகிய இவர்களே ஆசாரங்களைய



னுட்டிப்பார்களானால் அஞ்ஞானிகளாகிய நாமனுட்டியாதிருப்பது பெருங்குறைவென நினைந்து அனாசாரங்களை விடுத்து ஆசாரங்களை யனுட்டித்து அதன்வழியாகக் கிருதார்த்தர்களாகிறார்கள். சாஸ்திரங்கள் நரகமோக்ஷசுவர்க்கமுண்டென்பது சத்தியமன்று. இவைகளில் ஒன்றையேனுமறிந்தவன் ஒருவனாயினுமில்லாமையால் பின்யாது சத்தியமெனின், பிரத்தியக்ஷமாகக் காணப்படுகிற தனுகரணபுவனபோகங்களே சத்தியமாகுமென்னும் *குதர்க்கபுத்தியுள்ளார்களே நாஸ்திகராவர். இந்நாஸ்திகர்கள் அந்தர்முகர்களாயிருக்கிற சீவன்முத்தர்களைத் தோடதிருஷ்டியின்றி நோக்குபவர்களானமையால் இவர்களும் சீவன்முத்தர்கள்திருஷ்டி பட்டு வெகுவிதபாவவிமோசனர்களாகிறார்கள். ஆதலினென அறிக.

வினா :—சீவன்முத்திக்கு மூன்றும் பிரயோசனமாகிய சர்வசம்வாதமாவது யாதெனின். (107)

விடை :—சீவன்முத்தர்கட்கு லௌகீகர்களாலும் சாஸ்திரஞ்ஞர்களாலும் வரப்பட்ட கலகம், நிந்தையென்னும் உபயவிதவிஷமவாதமில்லாமையென அறிக.

வினா :—சீவன்முத்தர்கட்கு லௌகீகர்களால் வரப்பட்ட கலகரூப நிந்தாரூப விஷமவாதமில்லை யென்றது யாதினாலெனின். (108)

* குதர்க்கம்- சுருதியுத்தியனுபவ விரோதமாகிய தர்க்கம்.

விடை :—சீவன்முத்தர்கள் கலக ஏதுவான குரோத மாதிய சித்தவிகாரங்களில்லாதவர்களாயும் சதா அந்தர்முகாளாயு மிருப்பவர்களானமையால் லௌகீகர்களால் கலகஞ்செய்தற்கான ஏதுவும் இன்ன நடையையுடையவர்களென நிச்சயிக்கக்கூடாமையினால் நிந்தித்தற்கான ஏதுவுமில்லாமையினென அறிக.

வினா-:சீவன்முத்தர்கட்குச் சாத்திரஞ்ஞர்களால் வரப்பட்ட கலகரூப நிந்தாரூப விஷமவாதமில்லையென்றது யாதினாலெனின். (109)

விடை:-சீவன்முத்தர்கள் சதாஆத்மத்தியானம் பண்ணவேண்டுமெனவும் வார்த்தைகள் வசனிக்கப்படாதெனவும், வசனிப்பதால் வாக்குக்கு வருத்தமும் மனதுக்குச் சலனமுமேயன்றி யாதொரு பிரயோசனமுமில்லையெனவும், சொல்லாநின்றவுபநிடதவாக்கியார்த்தங்களை யுட்கொண்டிருப்பவர்களானமையால், மற்றச்சாஸ்திரஞ்ஞர்கள்முன்பு அவர்கள் சாஸ்திரங்களைத் தூஷித்தற்கும், தானியங்கிடைத்தபின்னர் வைக்கோலைத் தள்ளிவிடுவதுபோலப் பிரஹ்மத்தையறிந்து பிரஹ்மாகாரநிட்டை கூடியபின்னர்ச் சாஸ்திரத்தையும் விட்டுவிடவேண்டுமென்னும் உபநிடத தாற்பரியங்களையும் எந்தச்சாஸ்திரஞ்ஞர்களையும் தமது சொரூபமாகப்பார்க்கும் தன்மைய திருஷ்டியுடையவர்களானமையால் மற்றச்சாஸ்



திரஞ்ஞர்கள்முன்பு தங்கள் சாஸ்திரார்த்தங்களைச் சாதித்தற்கும் போகாதவர்களாய் மௌனமாகவே யிருப்பார்கள். ஆதலின் மௌனம் கலகநாஸ்தியென்னும் வாக்கியப்படி மற்றைச் சாஸ்திரஞ்ஞர்கள் சாஸ்திரார்த்தங்களாற் கலகஞ்செய்தற்கான ஏதுவும், அருகபுத்த தார்க்கீக சாத்த சாங்கிய சைவ வைணவ யோகமாதிய மதசாஸ்திரங்களிற் கூறப்பட்டபொருணிச்சயங்கள் நானாவித பேதமாக இருக்கினும், அச்சாத்திரங்களில் மோக்ஷசாதனமான இயமாதி அட்டாங்கங்கள் ஹடயோகச் சார்பாகவே சொல்லப்பட்டிருக்கின்றன. அவ்வட்டாங்கசகித ஹடயோகத்தின் பலமாகச் சிறந்துள்ள இராஜயோகமும் ஜீவன்முத்தர்கள்பால் பிரயத்தனமின்றித் தானே யமைந்திருக்கின்றமையால் எந்த மதஸ்தர்களாலும் நிந்தைசெய்தற்கான ஏதுவுமில்லாமையினென அறிக.

வினா:—ஹடயோகமாவது யாதெனின். (110)

விடை:-ஹ- சூரியன்; ட-சந்திரன்; யோகம்-சேர்க்கை சந்திரசூரியர்களின் ஐக்கியமென அறிக.

வினா:—ஹடயோகச் சார்பாகிய அட்டாங்கங்களெவையெனின். (111)

விடை:-இயமம், நியமம், ஆசனம், (இருப்பு) பிராணாயாமம் (உயிர்நிலை) பிரத்தியாகாரம் இந்திரியமனநிரோதம் தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டுமென அறிக.

வினு:—இவைகளில் இயமமாவது யாதெனின். (112)

விடை:—அஹிமிசை (கொல்லாமை), சத்தியம், அஸ்தேயம் (திருடாமை), பிரமசரியம், க்ஷமை (பொறை), திருதி (தைரியம்), தயை, ஆர்ச்சவம் (நேர்மை), மிதாகாரம், சௌசம் ஆகிய பத்து மென அறிக.

வினு:—(க) அஹிம்சையாவது யாதெனின். (113)

விடை:—வேதத்தில் விதித்துள்ள யாகாதிகளுக்குச் சொல்லியபிரகாரமன்றி மற்றெல்லாவிதத்தானும் உயிர்களை ஹிம்சியாமலிருத்தலாம். நானே தேக மன இந்திரியங்கள் ஆத்மா இல்லையென்னும் ஆத்மஹத்தியை மனதில் நினையாதிருத்தலையும் ஆத்மா சர்வாத்மகம் நித்தியம் நிருவிகாரமென்னும் புத்தியை விடாதிருத்தலையும் மேலோர் அஹிமிசையென்பரென அறிக.

வினு:—(உ) சத்தியமாவது யாதெனின். (114)

விடை:—நேத்திரமுதலிய இந்திரியங்களால் கண்டவை கேட்டவை செய்தவை அனுபவித்தவைகளை யுள்ளபடி சொல்லிவிடுதலாம். பிரஹ்மம் சத்தியம் மற்றவை அசத்தியமென்னும் புத்தியையும் மேலோர் சத்தியமென்பரென அறிக.

வினு:—(ந) அஸ்தேயமாவது யாதெனின். (115)



விடை:—அன்னியர்களின் திரண ரத்தின சுவர்ணமாதிய எந்தப்பொருள்களையும் கவர எண்ணாதிருத்தலாம். ஆத்மாவினிடத்து அநாத்மத்தன்மையை விவகரியாதிருத்தலை மேலோர் அஸ்தேய மென்பரென அறிக.

வினு:—(ச) பிரஹ்மசரியமென்பது யாதெனின். (116)

விடை:—சாத்திரங்களில் விதித்துள்ள காலத்தில் மாத்திரம் தன்மனைவியைப் புணர்தலும், அன்னியமாதரை மனவாக்குக் காயங்களால் விலக்கி யிருத்தலுமாம். விலக்கியிருத்தலாவது அட்டவித மைதுனங்களு மில்லாதிருத்தலாம். பிரஹ்மபாவனையில் மனஞ்சரித்தலை மேலோர் பிரமசரிய மென்பரென அறிக.

வினு:—(ரு) க்ஷமையாவது யாதெனின். (117)

விடை:—சத்துருவாதிகளால் தனக்குத் துன்பம் வரினும் கலங்காதிருத்தலாம். சரீரவியோககாலம் சமீபிக்கினும் கலங்காதிருத்தலை மேலோர் க்ஷமையென்பரென அறிக.

வினு:—(சா) திருதியாவது யாதெனின். (118)

விடை:—வேதாந்தவிசாரமே சம்சாரநிவர்த்திக் கேதுவென்னுந் திடமாம். யான் ஆத்மா அன்னியமல்லன் என்னும் உறுதியை மேலோர் திருதியென்பரென அறிக.

வினா:—(எ) தயையாவது யாதெனின். (119)

விடை:-சகலவுயிர்களையுந் தன்னைப்போற் காணுதலென அறிக.

வினா:—(அ) ஆர்ச்சவமாவது யாதெனின். (120)

விடை:—புத்திர மித்திர களத்திரர்களிடத்தும் பகைவர்களிடத்தும் தன்னிடத்தும் சதா சமபாவனை வைத்தலென அறிக.

வினா:—(கூ) மிதாகாரமாவது யாதெனின். (121)

விடை:—லோகத்தில் அனுகூலமான போசனம் தேவாமிர்தமாக இருக்கினும் வாயு சஞ்சரிக்கிறதற்கு கால்வயிறு வறிதிருக்கும்படி அரைவயிறுமாத்திரம் ஆகாரமும் கால்வயிறு சலமாகவுங் கொள்ளுதலென அறிக.

வினா:—(௰) சௌசமாவது யாதெனின். (122)

விடை:—பாஹ்யம் ஆந்தரமென சௌசமிருவகையாம். அவற்றுள் தன்னுடம்பில் மண் முதலியவைகளிட்டு நீரினாற் கழுவுதல் பாஹ்யசௌசம். நான் அமலன் சுத்தனென்னும் ஞானம் ஆந்தரசௌசம். இவ்விருவகைச் சௌசமுமுடையோன் பரிசுத்தனாம். ஆந்தரசௌசமின்றிப் பாஹ்யசௌச



மாத்திரமுடையவன் தோடரகிதனாகான், பாஹ்யசௌசமின்றி ஆந்தரசௌசமுடையவன் தோடசகிதனாகானென அறிக.

வினா:—நியமமாவது யாதெனின். (123)

விடை:—தவம் சந்தோஷம் ஆஸ்திக்கியம் விசுவாசம் தானம் ஈசுரபூசை சித்தாந்தசிரவணம் இலஜ்ஜை (நாணம்) மதி ஜெபம் விரதமென்னும் பத்துமென அறிக.

வினா:—(க) இவைகளில் தவமாவது யாதெனின். (124)

விடை:—வேதத்திற் சொல்லியபடி கிரிச்சிரசாந்திராயண முதலியவற்றால் சரீரத்தை யுலர்த்துதலாம். பந்தமென்பது யாது? முத்தியென்பது யாது? பந்தமெப்படி வந்தது? அஃதெதனால் நிவர்த்தியாகும்? பிறவி யறும்படியான சீவன்முத்தனாவதெப்போதெனச் சுத்தமனத்தனாய் விசாரித்தலை மேலோர் தவமென்பரென அறிக.

வினா:—(உ) சந்தோடமாவது யாதெனின். (125)

விடை:-கிடைத்ததிற் றிருப்தியடைதலாம். பிரஹ்மலோகபரியந்தமாக வுண்டாகின்ற அவாக்களை யொழித்து ஆத்மஞான விருப்பமாத்திரமாக இருத்தலை மேலோர் சந்தோடமென்பரென அறிக.

வினா:—(ங) ஆஸ்திக்கியமாவது யாதெனின். (126)

விடை:—சுருதி ஸ்மிருதிகளில் சொல்லியவற்றை விசுவசித்தலென அறிக.

வினா:—(௪) தானமாவது யாதெனின். (127)

விடை:—நியாயமாகச் சம்பாதித்தபொருளைச் சாதுக்களுக்கு அன்பினோடு அளித்தலாம். உடல்பொருளாவி மூன்றையுங் குருவுக்குத் தத்தஞ்செய்தலை மேலோர் தானமென்பரென அறிக.

வினா:—(௫) ஈசுரபூசையாவது யாதெனின். (128)

விடை:—பிரமனாதிய மூர்த்திகளைத் தன் சக்தியனுசாரமாகப் பூசித்தலாம். இராகாதி குணங்களொழிந்து உண்மைவசனம் நல்லொழுக்க முடையவனாய் ஹிம்சையாதிகளின்றிக் கர்மங்களைச செய்தலும் ஈசுரபூசை யெனப்படுமென அறிக.

வினா:—(௬) சித்தாந்தசிரவணமாவது யாதெனின்(129)

விடை:—பிரஹ்ம விஷ்ணு வுருத்திரர்களா லறிதற்கரியவன்; சச்சிதானந்த சொரூபன்; நித்தியன்; முக்தன்; ஒப்பிலாதவன்; பிரத்தியக்கு (அந்தராத்மா) என்றுணர்த்தும் வேதசித்தாந்தத்தை யறிவதென அறிக.

வினா:—(௭) இலஜ்ஜையாவது யாதெனின். (13)



விடை :—வைதீக லௌகிக கருமங்கட்கு விரோதமாகிய கருமங்களிற் பிரவர்த்தித்தற்கு நாணுதலென அறிக.

வினா :—(௮) மதியாவது யாதெனின். (131)

விடை :—வைதிக கருமங்களனைத்தினு முண்டாகின்ற சிரத்தையென அறிக.

வினா :—(௯) ஜெபமாவது யாதெனின். (132)

விடை :—ஆசாரியன் உபதேசித்த மந்திரத்தை வேத விதிப்படி யப்பியாசித்தலாம். கற்பசூத்திர வேத தரும சாஸ்திர புராணேதிகாசங்களை யப்பியசித்தலும் ஜெபமெனப்படும். ஜெபம் வாசிகம் மானசமென இருவகையாம். அவற்றுள் வாசிகம், உபாம்சு, உச்சமென இரண்டாம். பிறர்காதுக்குக் கேட்காமல் ஜபித்தல் உபாம்சுவாம். உரத்து ஜபித்தல் உச்சமாம். மானசம் மனனத்தியானமென இரண்டாம். உச்சத்தைவிடஉபாம்சு 100மடங்கும்,உபாம்சுவைவிடமானசமாகிய மனனத்தியானங்கள் கோடிமடங்கும் அதிக பலனைத் தருவனவாம். உச்சத்தாற் பலனுண்டாவதாக இருக்கினும் அது நீசர்காதிற் படுமாயின் நிஷ்பலமாம். இஜ்ஜெபங்களும் வேதவிரோதமாகிய நூலையனுசரித்துச் செய்யப்படுமாயினும் நிஷ்பலமாமென அறிக.

விஞ :—(ல) விரதமாவது யாதெனின்.

விடை:—வேதத்திற்கூறிய விதிநிடேதங்களை யநுட்டித் (133)
தலாகிய நித்திய கருமங்களாம். இதனை மகமென்றுங் கூறு
வர். ஆசாரியனுரைத்தபடி யுபவாசாதிகள் செய்துவருதலும்
விபூதியுருத்திராக்கமணிகள்பூண்டு சிவபூசை செய்துவருத
லும் விரதமென்று சொல்லப்படுமென அறிக.

விஞ :—இயமம் பத்து, நியமம் பத்தெனச் சகல சாஸ்
திரங்களிலுஞ் சொல்லப்படுகிறதோ வெனின். (134)

விடை :—வராகோபநிஷத்து (ரு)வது அத்தியாயத்தி
லும், தரிசனோபநிஷத்திலும் சாண்டில்லியோப நிஷத்திலும்
ஞானசமுத்திரம் திரிதியோல்லாசத்தினும், சூதசம்மிதை
ஞானயோக காண்டத்திலும், ஹடயோகப்பிரதிபிகையிலும்.
இயமம் பத்து நியமம் பத்தெனச் சொல்லப்படுகிறது. பதார்த்
தமஞ்சூஷா ஜீவன்முத்திப்பிரகரணம் விசாரசாகரமாதிய
கிரந்தங்களில் இயமம்பத்தையும், அஹிம்சை சத்தியம் அஸ்
தேயம் பிரஹ்மசரியம் அபரிக்கிரகமென ஐந்தாகவும், நியமம்
பத்தையும் சௌசம், சந்தோடம், தவம், ஸ்வாத்தியா
ஈசுரப்பிரணிதானம் என...



வேதாந்தரீதியாகவும் பண்டிதர்கள் கொள்ளற்பாலதென்ப
ரென அறிக.

(135)

விஞ :—ஆசனமாவது யாதெனின்.

விடை :—சுவத்திகம் கோமுகம் வீரம் கூர்மம் பதுமம்
குக்குடம் உத்தானம் மத்ஸயம் பச்சிமதானம் மயூரம் சவம்
சிம்மம் பத்ரம் சித்தமுதலிய ஆசனங்கள் பலவுளவாம். இவை
களை யோகநூல்களிற் காணலாமென அறிக;

(136)

விஞ :—பிராணயாமமாவது யாதெனின்.

விடை :—விஜனப்பிரதேசத்தில் ஆகார ஆசனநியமங்க
ளோடிருந்து நாசிநுனி நாட்டம் வைத்துக்கொண்டு பிராண
வாயுவை இடைகலையென்னும் நாடியால் தன் சக்தியுள்ளமட்
டுக்கும் வெளியில் விடுவதாகிய இரேசகமும், பிங்கலையென்
னும் நாடியால் தன் சக்தியுள்ள மட்டுக்கும் உள்ளே பூரிப்ப
தாகிய பூரகமும், சுழுமுனையில் சலிக்கவிடாமல் தம்பிக்குத
லாகிய கும்பகமும் சேர்ந்து பிராணயாமமாம். இது பிரண
வோச்சாரண சகிதமாய்ச் செய்வது சகர்ப்பமென்றும், பிர
ணவோச்சாரணமின்றிச் செய்வது அகர்ப்பமென்றும் இரு
...த்தைச் சிலர் ஆப்பியந்தரம் பாஹி ... இவைகளில்

ஆப்பியந்தரம். வெளியில் விடப்பட்டு அதன்கதி நின்றுபோ
தல் பாஹ்யம். உள்ளிலும் வெளியிலும் ஒரே காலத்தில்
அதன் கதி நின்றுபோதல் ஸ்தம்பவிருத்தியென அறிக.

வினா:—பிரத்தியாகாரமாவது யாதெனின். (137)

விடை:—சத்தாதி விஷயங்களினின்றும் சுரோத்திராதீ
யிந்திரியங்களோடு மனதை அந்தர்முகமாகத் திருப்பிக்கொள்
ளுதலென அறிக.

வினா:—தாரணையாவது யாதெனின். (138)

விடை:-அந்தர்முகமாகத்திருப்பப்பட்ட மனதைப் பிரத்
தியகாத்மசொரூபத்தில் நிறுத்துதலென அறிக.

வினா:—தியானமாவது யாதெனின். (139)

விடை:—இலக்கியவஸ்துவின்பாற் செல்கின்ற அந்தக்
கரணத்தின் ஸஜாதீயவிருத்திப்பிரவாகமென அறிக.

வினா:—சமாதியாவது யாதெனின். (140)

விடை:—வெளிப்படும் சம்ஸ்காரங்களின் திரஸ்காரங்
களும் அடங்கும் சம்ஸ்காரங்களின் பிரகடமும் உடைய
அந்தக்கரணவிருத்தியின் ஏகாக்கிரபரிணாமமாம். இஃதன்றித்
தியானி தியான மிரண்டையும் விடுத்து நிவாததீபம்போலச்
சித்தம் தியானிக்கப்படும் பொருளொன்றைமாத்திரம் விஷ



யஞ்செய்வதும் சமாதியாம். நானே பிரஹ்மம், பிரஹ்மமே
நானென்றுள்ள சர்வவிருத்தி நிரோதமாகிய நிலைமையும்
சமாதியாம். சலத்திற் சைந்தவங் கலந் தெப்படி ஐக்கியத்தை
யடைகிறதோ அப்படி ஆத்மாவிற்கும் மனதிற்குமுண்டாகும்
ஐக்கியமும் சமாதியாம். பிராணன் தேய்ந்து மனதுமொடுங்
கும்போதுண்டாகும் ஐக்கியமும் சமாதியாம். சீவாத்ம பர
மாத்ம ஐக்கியமாகிய சமத்தன்மையுண்டாகிச் சகல சங்கற்பங்
களும் நஷ்டமாதலும் சமாதியாம். கருவிகரணங்களனைத்
தும் தன்னிலையில் ஒத்துநிற்றலுஞ் சமாதியாமென அறிக.

வினா:—அட்டாங்கங்கள் வேறுவிதமாக எங்கேனுஞ்
சொல்லப்பட்டிருக்கிறதோ வெனின். (141)

விடை:—திரிசிகியுபநிஷத்தில் தேகேந்திரியங்களிலு
ண்டாகும் வைராகம் இயமமென்றும், பரதத்துவத்தி லிடை
விடாதுண்டாகும் விருப்பம் நியமமென்றும், சகல வஸ்துக்க
ளிடத்தினும் உதாசீனமாக இருத்தல் ஆசனமெனறும், சகல
சகத்தும் மித்தையாகத் தோற்றுதல் பிராணாயாமமென்றும்,
சித்தத்தின் அந்தர்முகத்தன்மை பிரத்தியாகாரமென்றும், சித்
தத்தின் நிச்சலத்தன்மை தாரணையென்றும், அந்தச் சின்மாத்
திரமே நானென்று சிந்தித்தல் தியானமென்றும், தியானத்தை
யும் நன்றாய் மறத்தல் சமாதியென்றுஞ் சொல்லப்படுகிற
தென அறிக.

வினா:—ஹடயோக பலமாகிய ராஜயோகம் எங்கே சொல்லப்படுகிறதெனின். (142)

விடை:—தேஜோபிந்து உபநிஷத்திலும் அபரோக்ஷானுபூதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அது (௰௫) அங்கங்களையுடையதென அறிக.

வினா:-இராஜயோகத்திற்குள்ள (௰௫) அங்கங்களெவையெனின். (143)

விடை:—இயமம் நியமம் தியாகம் மௌனம் தேசம் காலம் ஆசனம் மூலபந்தம் தேகசமத்துவம் லக்ஷியதிருஷ்டி பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி ஆகிய இவைகளென அறிக.

வினா:-(௧) இவைகளில் இயமமாவது யாதெனின் (144)

விடை—எல்லாம் பிரஹ்மமென்னும் விசாரத்தால் இந்திரியசமூகநிரோதத்தை யடிக்கடி பழகுவதென அறிக.

வினா:—(௨) நியமமாவது யாதெனின். (145)

விடை:—அந்தக்கரணவிருத்தியே விஜாதீயப் பிரபஞ்சத்திற் செல்லவிடாமற் சஜாதீயமாகப் பிரஹ்மத்திற் செல்லும்படி நியமித்தலென அறிக.

வினா:—(௩) தியாகமாவது யாதெனின். (146)



விடை:—பொன்னிற்கற்பிதமாகிய பூடணங்கள் யாவும் பொன்னுக்கன்னியமாக இல்லாதனபோல் பிரஹ்மத்திற் கற்பிதமாகிய பிரபஞ்சங்கள் யாவும் அதிட்டானமாகிய பிரஹ்மத்துக் கன்னியமாக இல்லையென அறிந்து அவைகளிலுள்ள சத்தியபுத்தியை விட்டுவிடுகிறதென அறிக.

வினா:—(௪) மௌனமாவது யாதெனின். (147)

விடை:—சகலவாக்குகளினாலும் மனதினாலும் விஷயீகரிக்கப்படாததாயும், யோகீசுரர்களா லடையத்தக்கதாயுமிராநின்ற நித்திய மௌனசொரூபத்தைச் சதாநினைத்துக்கொண்டிருத்தலாகும். வாக்குமாத்திரம் மௌனமாயிருப்பவர்கள் அவிவேகிகளே யன்றி விவேகிகளல்லவென அறிக.

வினா:—(௫) தேசமாவது யாதெனின். (148)

விடை:—யாதொரு வஸ்துவின் சொரூபம் மேல் கீழ் மத்தியாகிய முழுமையும் சதாசனசமூகங்களின்றிய இடமாக இருக்கிறதோ ஆகாயம்போல சகல வஸ்துக்களினும் வியாபித்திருப்பதும் தன்மயம்விடாமற் றானாய் விளங்குகிறதோ அதுவே இராஜயோகிகள் வசிக்கத்தக்க புனிததேசமென அறிக. (149)

வினா:—(௬) காலமாவது யாதெனின்.

விடை :-அகண்டாத்வைதப் பிரஹ்மத்திற் கற்பிதமாகிய பிரஹ்மாதிஸ்தம்பமீறாகிய சகல பிரபஞ்சங்களும் நிமிடமேனும் பிறிவுற்று வேறாகத் தோன்றாமல் ஐக்கியமுற்றிருக்கிறதென அறிக.

வினா :—(எ) ஆசனமாவது யாதெனின். (150)

விடை:— எந்த நிலைமையில் தேகாவயவங்களை வைத்துக்கொண்டிருந்தால் மனதுக்கு வருத்தந்தோணாமல் எப்போதும் பிரஹ்மானுசந்தானஞ் சுகமாய் நடக்குமோ அந்த நிலைமையாம. அல்லது சமஸ்தபூதங்கட்கு மாதியாய் விசுவத்துக் கிருப்பிடமாய் நாசரகிதமாயுள்ள வஸதுவே யோகீசுரர் வகிக்கத்தக்க ஆசனமென அறிக.

வினா:—(அ) மூலபந்தமாவது யாதெனின். (151)

விடை:—யாதொரு சொரூபமானது சகல பிரபஞ்சங்கட்கும் அவைகளைத் தோற்றுவிப்பதாகிய சித்தத்திற்கும் மூலமாயிருக்கிறதோ அந்தச்சொரூபத்தில சர்வகாலமும் சித்தத்தைப பந்திப்பிக்கிறதே ராஜயோகிகட்கு யோக்கியமான மூலபந்தமென அறிக.

வினா:—(கூ) தேகசமத்துவமாவது யாதெனின். (152)



விடை:—சலனமின்றிய பருவதத்திலுண்டாயிராநின்ற பதுமைகள் சலனமின்றிப் பருவதாகாரமாக நிலைபெற்றிருப்பதுபோல சமமாகிய பிரஹ்மசொரூபத்தில் சித்தத்தைச் சலனமின்றிச் சமமாக நிலைத்திருக்கும்படி நிறுத்துகிறதே அங்கசாமிய மென்னும் தேகசமத்துவமாகும். இஃதன்றிக் காய்ந்த காட்டம்போல ஒழுங்காகத் தேசத்தை வைத்துக்கொள்ளுதலன்றென அறிக.

வினா:—(ய) லக்ஷியதிருஷ்டியாவது யாதெனின். (153)

விடை:—விவேகஞானமாகிய பார்வையால் சகல சகத்தையும் பிரஹ்மமயமாகப் பார்க்குதலாகும். அல்லது திரிபுடிரூபமாகிய சகத்து யாதொரு சொரூபத்திலுண்டா யடங்குகிறதோ அச்சொரூபத்தில் திருஷ்டியை வைப்பதாகும். அல்லது ஞாதுரு ஞானம் ஞேயமூன்று மெவ்விடத்திலில்லையோ அவ்விடத்தில் திருஷ்டியை வைப்பதாகும். இஃதன்றி மூக்குநுனிமுதலியவைகளில் திருஷ்டியை வைப்பது லக்ஷியதிருஷ்டியன்றென அறிக.

வினா:—(கக) பிராணாயாமமாவது யாதெனின். (154)

விடை:—சித்தமுதலிய சகலகற்பித வஸ்துக்களையும் அதிட்டானப்பிரஹ்மசொரூபமாகப் பார்த்து சகலவிருத்திக

ளையும் நிரோதிப்பது பிராணாயாமமாகும். இதில் அஞ்ஞான தற்காரியமாகிய சகல பிரபஞ்சங்களையும் நாமன்றென நியதி பண்ணித் தள்ளுவது ரேசகமாகும். நிருபாதிகமாக பிரஹ்மமே நாமென்னுஞ் சித்தவிருத்தியைச் சம்பாதிப்பது பூரகமாகும். அந்தச் சித்தவிருத்தியைச் சலிக்கவிடாமல் நிறுத்திக் கொள்வது கும்பகமாகும். இந்தப் பிராணாயாமம் விவேகிகளான ராஜயோகிகளுக்குச் சொல்லப்பட்டது. அவிவேகிகளான ஹடயோகிகளுக்குப் பிராணசலன நிரோதரூபமான பிராணாயாமஞ் சொல்லப்பட்டிருக்கிறதென அறிக.

வினா:—(௱௨) பிரத்தியாகாரமாவது யாதெனின். (155)

விடை:—திருசியங்களனைத்தையும் ஆத்மசொரூபமாகப் பார்த்து மனதைத் திருக்குரூபமான பிரத்தியகாத்மாவினிடமாகத் திருப்பிக்கொள்ளுதலாம். எவை பார்க்கப்படுகின்றனவோ அவைமுழுவதும் பிரஹ்மமெனக்காண்டல் பிரத்தியாகாரம். நித்தியகர்மத்தின் பலத்தை விட்டுவிடுதல் பிரத்தியாகாரம் சகல விஷயங்களிலும் பராமுகமாக இருத்தல் பிரத்தியாகாரமென தரிசனோபநிஷத்து சாண்டில்லியோபநிஷத்து சூதசம்மிதைகளிற் சொல்லப்படுகிறதென அறிக.

வினா:—(௱௩) தாரணையாவது யாதெனின். (156)

விடை:—மனதாற் பற்றப்படும் விஷயங்களனைத்தையும்



பிரஹ்ம சொரூபமாகப் பார்த்து அச்சொரூபத்தை மனதிற்றிடமாய்த் தரித்துக்கொள்ளுதலென அறிக.

வினா:—(௱௪) தியானமாவது யாதெனின். (157)

விடை-எங்கும் நிறைந்துள்ள பிரஹ்மமே அறிவு சொரூபமாகிய நான், நானே பூரணமாகிய பிரஹ்மமென விஜாதிய விருத்தியின்றித் தயிலதாரைபோல மேலுமேலு முதயமாகா நின்ற சஜாதிய அகண்டாகார விருத்திப்பிரவாகமென அறிக.

வினா:—(௱௫) சமாதியாவது யாதெனின். (158)

விடை:—அந்தக்கரணவிருத்தி பஹிர்முகப்படாமல் அகண்டேகரசப்பிரஹ்மாகாரமாக இருப்பது. அல்லது தியாதிரு தியேயாகாரவிருத்திகளின்றி யிருப்பது. அல்லது நிருவிகாரமாயும் பிரஹ்மாகாரமாயும் உண்டாகின்ற விருத்தியே திரும்பத்திரும்பப் பழகி அந்த விருத்தியையும் மறந்திருப்பதென அறிக.

வினா:—சமாதி யெத்தனைவித மெனின். (159)

விடை:—சவிகற்பம் நிருவிகற்பமென இரண்டு வகையாம். இவைகளில் பஹிர்முகாட்டமின்றித் திரிபுடி விளக்கத்துடன் அத்விதீயப் பிரஹ்மத்தினிடமாக இராநின்ற அந்தக்கரணவிருத்தியின் நிலைமை சவிகற்பசமாதியாம். அவ்வந்தக்கரணவிருத்தி பிரஹ்மத்திற் கரைந்து தியானமும் தியானிக்

கின்ற புருடனுமிழந்து தியானவஸ்துமாத்திரமாகச் சேடித்துத் திரிபுடித்தோற்றமின்றி யிருப்பது நிருவிகற்பசமாதி யென அறிக.

வினா:—புத்திவிருத்தி பஹிர்முக நாட்டமின்றி யகமுக நாட்டத்தை யடைந்திராநின்ற இரண்டு சமாதியையும் ஒரு சமாதியாகக் கூறாமல் பேதமாகக் கூறிய தென்னையெனின். (160)

விடை:—இரண்டு சமாதிகளும் சொரூபத்தினானும் சாதனங்களினானும் பேதமுடையனவாக இருத்தலினென அறிக.

வினா:—இரண்டு சமாதிகளும் சொரூபத்தினானும் சாதனங்களினானும் பேதமுடையன வென்றது யாதினாலெனின். (161)

விடை:—இவ்விரண்டு சமாதிகளில் சவிகற்பசமாதி சாதனமாயிருக்கிறது; நிருவிகற்பசமாதி பலமாயிருக்கிறது. சவிகற்பசமாதியில் திரிபுடித்துவைதம் பிரதீதியாகிறது. நிருவிகற்பசமாதியில் திரிபுடிரூபத்துவைதமிருக்கினும், சலத்திற்கரைந்தலவணஞ் சலத்திலிருந்தும் நேத்திரத்துக்குப் பிரதீதியாகாததுபோலப் பிரதீதியாகிறதில்லை. ஆதலால் சொரூபத்தினானும் சவிகற்பசமாதியில் விருத்தி யிருக்கின்றமையால்



விருத்தியோடு தாரணை, தியானம், சமாதி மூன்றுஞ் சேர்ந்து சஜாதியமாயிருக்கின்றன. ஆதலால் அவைகள் சவிகற்ப சமாதிக்கு அந்தரங்கசாதனங்களாகின்றன. நிருவிகற்பசமாதியில் திரிபுடிரூபத் துவைதவிருத்தி யில்லாமையால் விருத்தியோடு கூடிய தாரணை தியான சமாதிகள், நிருவிகற்பசமாதிக்குப் பகிரங்கசாதனங்களாகின்றன. ஆதலின் சாதனங்களினானும் இரண்டு சமாதிகட்கும் பேதமுண்டென அறிக.

வினா:-நிருவிகற்பசமாதிக்குத் தாரணை தியான சமாதிகள் அந்தரங்கசாதனங்களாகாவோ வெனின் (162)

விடை:—சவிகற்பசமாதியின் பரிபாகத்தாலுதயமாகின்ற ரிதம்பரப்பிரஞ்ஞையாகிய ஞானம் விகற்பத்தோடு கூடிய தானமையால் நிருவிகற்பசமாதிக்குப் பிரதிபந்தமாகப் பஹிரங்கசாதனங்களிற் சேர்ந்துள்ளதேயன்றி யந்தரங்கசாதனமன்றாம். ஆதலின் அதுவே பஹிரங்கசாதனமாக இருக்கும்போது அதற்குக் கீழ்ப்பட்ட தாரணைதியானசமாதிகள் எங்ஙனம் அந்தரங்கசாதனங்களாகும். ஆகாதென அறிக.

வினா:—ரிதம்பரப்பிரஞ்ஞையாவது யாதெனின். (163)

விடை:—சவிகற்பசமாதி யப்பியாசபலத்தால் சித்தம் நிருமலமாகிச் சூட்சுமமாயும், தூரத்திருப்பவைகளாயும்

சமீபத்தி லிந்திரியகோசரமின்றியில் குட்டியமாதிகளால் மறைக்கப்பட்டவைகளாயு மிராநின்ற சகலவஸ்துக்களையும் அறிவதாகிய பிரஞ்ஞையென அறிக.

வினா :—நிருவிகற்பசமாதிக்கு அந்தரங்கசாதன மெவையெனின். (164)

விடை :—ரிதம்பரப்பிரஞ்ஞையாதிய சகலவிஷயாகார விருத்திகளின் நிரோதமாகிய அப்பியாசமென அறிக.

வினா :—மந்திரஜெப தேவதாத்தியான முதலியவை கிரியாரூபமானமையால் அவைகளை மேலுமேலும் ஆவர்த்தி பண்ணுவதாகிய அப்பியாசங்கூடும். சர்வவியாபார சூனியரூபமான சமாதிக்கு எங்ஙனம் அப்பியாசங்கூடுமெனின் (165)

விடை :—பஹிர்முகமாகிய சித்தவிருத்திப்பிரவாகத்தைத் தகைதலாகிய † உத்சாகத்தை மேலுமேலும் ஆவர்த்திபண்ணுவதே அப்பியாசமானமையால் கூடுமென அறிக.

வினா :—விருத்திகளை நிரோதிப்பதாகிய அப்பியாசம் யாதெனின். (166)

விடை:-வேகமாய்ச்செல்லுகின்ற நதிப்பிரவாகத்தை அணையினாற் றகைந்து கழனியை யடைய வாய்க்காலிற் றிருப்ப

† உத்சாகம்-முயற்சி.



மற்றொருபிரவாகத்தை யுண்டுபண்ணுவதுபோலப் பஹிர்விஷயத்தில் செல்லுகின்ற சித்தவிருத்திப்பிரவாகத்தை நிராசையாகிய வைராக்கியங்களாற் றகைந்து ஆத்மாபிமுகமாக்குவதாகிய விருத்திநிரோதமென்னும் சாந்திப்பிரவாகத்தைச் சம்பாதிக்கிறதென அறிக.

வினா :—வைராக மெத்தனைவிதம் அவைகளெதற்குச் சாதனங்களாகு மெனின். (167)

விடை :—அபரவைராகம், பரவைராகமென வைராக மிரண்டுவிதமாம். இவ்விரண்டில் அபரவைராகம் அட்டாங்கயோகத்துக்குக் காரணமாயிருப்பது மன்றி சவிகற்ப (சம்பிரஞ்ஞாத) சமாதிக்கு அந்தரங்கசாதனமும் நிருவிகற்ப (அசம்பிரஞ்ஞாத) சமாதிக்கு விருத்தியோடுகூடிய தாரணைதியான சமாதிகள்போலப் பஹிரங்கசாதனமுமாகும். பரவைராகம் நிருவிகற்ப (அசம்பிரஞ்ஞாத) சமாதிக்கு அந்தரங்கசாதனமாகும். இவ்வைராகங்களுள் அபரவைராகம் யதமானம் வியதிரேகம் ஏகேந்திரியம் வசீகாரமென நான்குவிதமாக இருக்கும். இந்நான்கில் சவிகற்பசமாதிக்கு முன்னுள்ள யதமானாதிகள் மூன்றும் பஹிரங்கசாதனங்களெனவும், பின்னுள்ள வசிகார வைராகமொன்றுமாத்திரம் அந்தரங்கசாதன மெனவும் கொள்ளற்பாலதென அறிக.

வினு :—யதமானவைராகமாவது யாதெனின் (168)

விடை :—புட்பசந்தன வஸ்திராபரண சுகபோஜன
ஸ்திரீபுத்திர கிரகக்ஷேத்திர தனதானியாதிய பிரத்தியக்ஷ
விஷயங்களினும், சுவர்க்கலோகமாதிய பரோக்ஷவிஷயங்
களினும், இச்சையிருக்கினும் விவேகதாரதம்மியங்களால்
யதமானம், வியதிரேகம், ஏகேந்திரியமாகிய மூன்றுவைராகங்க
ளும் உதயமாம். இவைகளில் இந்தச்சகத்தினது சாரமெது
அசாரமெது எனக் குருசாஸ்திரங்களா லறியவேண்டுமெ
ன்னும் முயற்சியே யதமானவைராகமென அறிக.

வினு:—வியதிரேகவைராகமாவது யாதெனின் (169)

விடை :—கீரிப்பிள்ளை நகுலக்கொடியை யாசிரயித்துக்
கொண்டு பாம்புடன் சண்டைசெய்வதுபோலச் சற்சங்கப்பழ
க்கத்தால் துர்க்குணங்களை விடுதலும், தன்சித்தத்திற் பூருவ
மிருந்த இராகாதிதோடங்களினுள் இப்போ தப்பியாசிக்கப்
பட்ட விவேகத்தா லிவ்வளவுதோடங்கள் சாந்தமாயிருக்கின்
றன. இவ்வளவுதோடங்கள் சாந்தமின்றிச் சேடித்திருக்கின்
றனவென்று பகுத்தறிதலுமென அறிக.

வினு :—ஏகேந்திரியவைராகமாவது யாதெனின் (170)

விடை :—பிரத்தியக்ஷ பரோக்ஷ விஷயங்களைப்பற்றி
யுண்டாகிற பிரவிருத்திகள் துக்ககாரணமென்றறிந்து அவை



களை விடுத்து மனதிற் றூலரூபமான இச்சையோடுமோத்திர
மிருத்தலென அறிக.

வினு :—வசீகாரவைராகமாவது யாதெனின். (171)

விடை :—சித்தத்தி லிச்சை தூலமாக எழாமற் சூட்சும
சம்ஸ்காரமாத்திரமாக இருத்தலென அறிக.

வினு :--விருத்திசகித அபரவைராகமும், தாரணை தியா
னசமாதிகளும் விருத்தியின்றிய நிருவிகற்பசமாதிக்குப் பஹி
ரங்கசாதனமாகவேணும் எங்ஙனமாகுமெனின். (172)

விடை :—சமாதிக்கு விரோதமாகிய அநேகவித அநாத்
மாகார விருத்தியை நிரோதிப்பதாகிய உபகாரங்களைச் செய்
கின்றமையினென அறிக. (173)

வினு :—பரவைராகமாவது யாது அஃதெத்தனைவிதமா
மெனின்.

விடை :—சவிகற்பசமாதியப்பியாசபலத்தால் சரீரத்
திரயவிலக்ஷணமாகிய பிரத்தியகாத்மசாக்ஷாத்கார முண்
டாகி அதனுல் குணத்திரயாத்மகமான சகல விவகாரங்களி
னும் சூட்சுமரூபமான இச்சையு மில்லாதிருப்பதாகும். இது
நிருவிகற்பசமாதியையடையுங்கால் அளவின்றாரதம்மியபே
தத்தால் மிருது மத்திமம் தீவிரமென மூன்றுவிதமாம். இவை
களிற் றீவிரமும் மிருதுதீவிரம் மத்திமதீவிரம் அதிதீவிர

மென மூன்றுவிதமாகும். இவைகள் ஒன்றற்கொன்று ன்னு
முள்ளதற்குப் பின்னுள்ளது மிகவுஞ் சீக்கிரத்தில் நிருவிகற்ப
சமாதியையடைதற்கேதுவாகும். ஆதலின் பரவைராகய் ஆறு
விதமாமென அறிக.

வினு :--அபரவைராக்ய்ங்களைச் சாதனமாகவுடைய சவி (174)
கற்பசமாதி யெத்தனைவிதமெனின்.

விடை :—சப்தாநுவித்தம், சப்தாநுவித்தமென இர
ண்டுவிதமாம். இவ்விரண்டில், அகம்பிரஹ்மாஸ்மி யென்னுஞ்
சப்தத்துடன் கூடியது சப்தாநுவித்தமாம். சப்தரகிதமா
யுள்ளது சப்தாநுவித்தமாம். இச்சப்தாநுவித்த சவிகற்ப
சமாதியும் பாஹியதிருசியாநுவித்தம், பாஹியசத்தாநுவித்
தம், ஆந்தரதிருசியாநுவித்தம், ஆந்தரசத்தாநுவித்தமென
நான்குவிதமாம். இந்நான்கில் கடாதிவிடயங்களிலொன்றற்
குள்ள நாமம், ரூபம், அஸ்தி, பாதி, பிரியம் என்னும் ஐந்தம்
ஸங்களில் நாமரூபமிரண்டும் மாயையின் அம்ஸங்களென
நீக்கி, அஸ்தி பாதி பிரியமாகிய மூன்றும் பிரஹ்மத்தின் அம்
சங்களெனச் சதாசிந்தித்தல் பாஹியதிருசியாநுவித்த சவி
கற்பசமாதியாம். அஸ்திபாதிபிரிய சொரூபமாகிய பிரஹ்
மமே தானெனச் சிந்தித்தல், பாஹியசத்தாநுவித்த சவிகற்ப
சமாதியாம். மனதிலுள்ள இராகாதிகளுக்கு நாமே சாக்ஷி
சொரூபமெனச் சிந்தித்தல், ஆந்தரதிருசியாநுவித்த சவிகற்ப



சமாதியாம். சாக்ஷியாகிய நாமே சச்சிதானந்தப் பிரஹ்ம
சொரூபமெனச் சிந்தித்தல், ஆந்தரசத்தாநுவித்த சவிகற்ப
சமாதியாமென அறிக.

வினு :—இச்சமாதிகளுக்கு சவிகற்பசமாதியெனப் பெ (175)
யர்வந்தது யாதினலெனின்.

விடை :—திரிபுடியாகிய விகற்பசகிதமாக இருத்தலி
னென அறிக.

வினு :—சாக்கிர சொப்பனங்களில் திரிபுடிரூபத்து
வைதம் பிரதீதியாவதுபோலச் சவிகற்பசமாதியினும் பிரதீதி
யாகுமாயின் சாக்கிரசொப்பனங்கட்கும் சவிகற்பசமாதிக் (176)
கும் பேதமில்லையேயெனின்.

விடை :—சாக்கிரசொப்பனங்களில் திரிபுடிரூபத்து
வைதம் மாயாமயமாகப் பிரதீதியாகிறது. அங்ஙனமின்றி
மண்விகாரமாகிய கடாதிகள் பிரதீதியாயினும், விவேகிகளு
க்கு மண்ணாகவே பிரதீதியாவதுபோலச் சவிகற்பசமாதியில்
பிரதீதியாகின்ற திரிபுடிரூபத் துவைதம் பிரஹ்மமயமாகவே
பிரதீதியாகின்றமையால், சாக்கிரசொப்பனங்கட்கும் சவி
கற்பசமாதிக்கும் பேதமுண்டென அறிக.

வினு:—நிருவிகற்பசமாதி யெத்தனைவிதமெனின் (177)

விடை :—பாஹியநிருவிகற்பம் ஆந்தரநிருவிகற்பமென
இரண்டாம். இவ்விரண்டில் பாஹியதிருசியாநுவித்த பா
ஹியசத்தானுவித்த சவிகற்பசமாதிகளின் அப்பியாசபலத்
தால் பிரஹ்மசொரூபத்தில் மனம்கரைந்து திரிபுடிலயமாய்
நிஸ்தரங்கசமுத்திரம்போலச் சலனமின்றியிருப்பது பாஹிய
நிருவிகற்பசமாதியாம். ஆந்தரதிருசியாநுவித்த ஆந்தரசத்
தாநுவித்தசவிகற்பசமாதிகளின் அப்பியாசபலத்தால் திரி
புடி லயமாய்ப் பிரஹ்மாத்மைக்கியாநுபூதிச்சுகாவேசத்தில்
மனம்கரைந்து சித்திரதீபம்போற் சலனமின்றியிருப்பது ஆந்
தரநிருவிகற்பசமாதியாம். இச்சமாதியும் அத்வைதபாவனு
ரூபம், அத்வைத அவஸ்தானரூபமென இரண்டுவிதமாம்.
இவ்விரண்டில் அத்வைதப்பிரஹ்மாகாரமாகிப் பிரஹ்மத்தை
ஞாதம்பண்ணாமல் பாவனுமாத்திரமாக இராநின்ற அந்தக்கர
ணத்தின் அஞ்ஞாதவிருத்திசகித நிருவிகற்பசமாதி அத்வைத
பாவனுரூப நிருவிகற்பசமாதியாம். இச்சமாதியினப்பியாசமி
குதியால் பிரஹ்மாகாரவிருத்தியும், தப்தாயபிண்டத்திற்
றெரிக்கப்பட்ட சலத்திவலை தப்தாயபிண்டத்திற்றனே லய
மாய்விடுவதுபோல அத்தியந்தப்பிரகாசமயமான பிரஹ்மத்
திற்றனே லயமாகிவிடுகிறது. ஆகலால் விருத்தி லயமாயுள்ள
நிருவிகற்பசமாதி அத்வைதஅவஸ்தானரூப நிருவிகற்பசமாதி
யாம். இவ்விரண்டிலும் அத்வைதபாவனுரூப நிருவிகற்ப



சமாதி சாதனமாம். அத்வைத அவஸ்தானரூப நிருவிகற்ப
சமாதி பலமாமென அறிக.

வினு :—அத்வைத அவஸ்தானரூப நிருவிகற்பசமாதி
யில் விருத்தி பிரஹ்மப்பிரகாசத்தில் லயமாகுமென்பது சித் (178)
தாந்தமோவெனின்.

விடை :—விருத்திக்குபாதானகாரணம் அந்தக்கரண
மானமையால் விருத்தி தன்காரணத்தை விடுத்து மற்றென்
றில் லயமாகாது. சுழூத்தியில் அந்தக்கரணம் அஞ்ஞானத்தில்
லயமாகும்போது விருத்தியும் அதனோடு லயமாவது போலப்
பிராரப்தக்ஷயத்தில் பிரஹ்மத்தி லந்தக்கரணம் லயமாகும்
போது அதனோடு லயமாகுமென்பதே சித்தாந்தமாகும். நிரு
விகற்பசமாதியில் அந்தக்கரணம் லயமாகாமலிருக்கின்றமை
யால் அதன்காரியமாகிய விருத்தி தன்காரணமிருக்க அதனை
விடுத்துப் பிரஹ்மத்திற் றனியே லயமாகுமென்பது உபசாரி
கமாகும்; சித்தாந்தமன்றென அறிக.

வினு:-விருத்தி பிரஹ்மப்பிரகாசத்தில் லயமாகுமென்ற (179)
தெதுபோலு முபசாரிகமென்றதெனின்.

விடை :—தப்தமாயிராநின்ற அயப்பிண்டத்திற் றெரிக்
கப்பட்ட சலத்திவலை தனக்குக் காரணமாகிய அக்கினியில்
லயமாகிறதில்லை. ஆவி
லயமாகிறதேயன்றி அயப்பிண்டத்தில் லயமாகிறதில்லை. ஆவி

னும் அயப்பிண்டத்தில் அக்கினிகலந்திருக்கும் ஒற்றுமை பற்றி அயப்பிண்டத்தில் லயமாகிறதெனக் கூறப்படுகிறது. ஆதலின் உபசாரிகமாவதுபோல அத்வைத அவஸ்தானரூப நிருவிகற்பசமாதியில் விருத்தி அந்தக்கரணத்தில் லயமாகிற தேயன்றி பிரஹ்மப்பிரகாசத்தில் லயமாகிறதில்லை. ஆயினும் அந்தக்கரணத்தில் பிரஹ்மம் வியாபித்துப் பிரகாசிக்கின்ற ஒற்றுமைபற்றியும், பிரஹ்மப்பிரகாசம் விளங்குநிமித்தத்தால் விருத்தி லயமாகின்றதுபற்றியும், பிரஹ்மப்பிரகாசத்தில் விருத்திலயமாகிறதெனக் கூறப்படுகிறது. ஆதலின் அது உபசாரிகமென்றறிதென அறிக.

வினா:—சுழுத்தியும் நிருவிகற்பசமாதியும் விஷயத் தோற்றமில்லனவாயும், சுகானுபவ ஏதுக்களாயு மிருக்கின்ற படியால் இரண்டுக்கும் பேதமில்லையே யெனின். (180)

விடை:-சுழுத்தியில் அந்தக்கரணவிருத்தி பிரஹ்மாகார மாகிறதில்லை; நிருவிகற்பசமாதியில் பிரஹ்மாகாரமாகிறது. சுழுத்தியில் விருத்திசகித அந்தக்கரணம் அத்தியந்தம் அபா வமாய்விடுகிறது. ஆதலின் வாயு [illegible]



சலிக்காமலெரிவதுபோலச் சரீரம் வீழ்ந்துவிடாமல் நிற்கிறது. இஃதன்றிச் சமாதியில் விருத்தியில்லையாயின் சமாதியின் ஸ்மரணை சமாதியினின்றும் வெளிப்பட்டபோது உண்டாகமாட்டாது. உண்டாகின்றமையால் சமாதியில் விருத்தியிருக்கிறது. சுழுத்தியில் பிரஹ்மானந்தம் அஞ்ஞானவிருத மாக இருக்கிறது. நிருவிகற்பசமாதியில் பிரஹ்மானந்தம் ஆவரணமின்றியில் விளங்குகிறது. இங்ஙனம் சுழுத்திக்கும் நிருவிகற்பசமாதிக்கும் பலபேதங்களுளவென அறிக.

வினா:—நிருவிகற்பசமாதிக்குப் பிரதிபந்தங்களுளவோ வெனின். (181)

விடை:—ஏகாந்தத்திலிருந்து தியானிக்கும்போது சொரூபானுசந்தானம் மறந்துபோதல், பின்பு தியானம்பண்ணிக் கொள்ளுவோமென்னும்படி சோம்பலுண்டாதல், போகங்களிலிச்சையுண்டாதல், நித்திரைவருதல், அந்தகாரந்தோன்றுதல், விஷயங்களைப்பற்றி மனது மேலுமேலும் சலித்தலாகிய விக்ஷேபமுண்டாதல், பிரகாசந்தோன்றுதல், வேர்வையுண்டாதல், திருசியங்களை நீக்கினால் அவைகட்குவேறாக ஒன்றுங் [illegible] ன்னுஞ் சூனியபுத்தியுண்டாதல் ஆகிய [illegible] உள்ளனவாகும். இவ் [illegible]

வினு :—இந்நான்கு பிரதிபந்தங்களினுள் லயமாவது யாதெனின்.

(182)

விடை :—தியானநிமித்தம் விடயங்களினின்றுந் திருப்பப்பட்ட அந்தக்கரணவிருத்தி அகண்டவஸ்துவை யவலம்பிக்காமல் நித்திரையாலஸ்யாதிகளால் தன் உபாதானகாரணமாகிய அந்தக்கரணத்திற் சங்கோசமாகிச் சுழூத்தியவஸ்தைக்குச் சமானுவத்தையை யுறுவதென அறிக,

வினு :—இதனை யெதனுல் நிவர்த்தி செய்யலாகுமெனின்.

(183)

விடை:-லயத்துக்குக் காரணமாகிய நித்திராசேட ஆலஸ்யாதிகளை நிரோதஞ்செய்து விருத்தியை யெழுப்புவதாகிய சித்தசம்போதனத்தாலென அறிக.

வினு :—நித்திராசேட ஆலஸ்யாதிகளை எங்ஙனம் நிவர்த்திசெய்யலாகுமெனின்.

(184)

விடை :—அற்பநித்திரையில் நித்திரை சேடப்படுகிறது. ஆகலின் குறைவற நித்திரைசெய்வதால் நித்திராசேடத்தையும், அசிரணம் அதிகபோசனம் சரீரசிரமங்களால் ஆலஸ்யாதிக ளுண்டாகின்றன, ஆகலின் முன் ... ஆலஸ்
சீரணிக்கும்பரியந் ...



சரீரசிரமங்களை
தலால் முறையே அசீரணம் அதிகபோசனம் சரீரசிரமங்ளை நீக்குதலாலேனும் அல்லது பிராணுயாமத்தாலேனும் ஆலஸ்யாதிகளையும் நிரோதஞ்செய்யலாகுமென அறிக.

(185)

வினு :—விக்ஷேபமாவது யாதெனின்.

விடை :-பூனையாதிகளுக்கஞ்சி வீட்டினுள் பிரவேசித்த சிட்டுக்குருவி பயவியாகூலத்தால் வீட்டினுள்ளிருத்தற்குத் தக்கஇடம் இன்னஇடமென் றறியாமல் பின்னரும் வெளிப்பட்டுப் பயம் அல்லது மரணரூபதுக்கங்களை யடைவதுபோல அனுத்பஏதுக்களைத் துக்கஏதுக்களாக அறிந்து அத்வைதானந்தத்தை விஷயமாக்கும் நிமித்தம் அந்தர்முகமாகிய விருத்தியானது தினந்தோறும் பழகிய சாக்கிரசம்ஸ்காரபலத்தால் அற்பகாலமேனும்ஏகாக்கிரமாயிருத்தற்குக் கூடாமையினுனும், அச்சொனுனும்,சேதனரூபம்அதிசூட்சுமமானமையினுனும், அச்சொரூபத்தை யவலம்பித்துப் பிரஹ்மானந்தத்தை யனுபவியாமல் சுருதிப் பஹிர்முகமா விடயங்களையும் விடயபோகங்களையும் கச் சலிக்குதலென அறிக.

(186)

வினு :—இதனை யெதனுல் நிவர்த்தி செய்யலாகுமெனின்

... போக்கிய விஷயங்களின் அசுத் ... லருந்

துக்கங்களையும், பிரஹ்மத்தின் சச்சிதானந்தமாதிய இலக்கணங்களையும், அதனையடைதலால் வரும் பரமசுகத்தையுஞ் சிந்தித்துப்பார்க்குதலாலேனும், அல்லது சாக்கிரசொப்பனங்கள் சுழுத்தியில்லாதனபோல அசத்துரூபமாகிய போக்கிய விடயங்களியாவும சத்துரூபமாகிய பிரஹ்மத்திலில்லையெனப் பார்ப்பதாகிய வாததிருஷ்டியினாலேனும், அல்லது விடயங்கள் தோன்றினும் கானற்சலம் சொப்பனபதார்த்தம் போலப் பொய்யெனப் பார்ப்பதாகிய மித்தியாதிருஷ்டியினாலேனும், அல்லது நானாவித பேன தரங்க புற்புத திவலைகளனைத்தையும் தனதுசொரூபமாகப் பார்ப்பதாகிய தன்மய திருஷ்டியினாலேனும் நிவர்த்திசெய்யலாகுமென அறிக.

வினா:—கஷாயமாவது யாதென்னின். (18)

விடை:—மனதை லயவிக்ஷேபங்களிற் செல்லவிடாமல் நிரோதித்துத் தியானஞ்செய்துகொண்டு வரும்போது பாஹ்யாந்தரமென்னு மிருவகையாயுள்ள தீவிரராகத்துவேஷாதிகளால் துக்கங்களில் மூழ்கிச் சமாதியிலிருப்பது போல ஏகாக்கிரமாயிருப்பதென அறிக.

வினா:—அந்தக்கரணங்கள் க்ஷிப்தம் (உழல்நிலை), மூடம் (உறக்கநிலை), விக்ஷிப்தம் (இருமைநிலை), ஏகாக்கிரம் (ஒருவழிநிலை), நிருத்தம் (தன்னிலை) என்னும் ஐந்துபூமிகளை



யுடையனவெனவும், இவ்வைந்தில் அனாத்ம வாசனைகளாகிய, உலகதேக சாஸ்திரவாசனைகளைப் பொருந்தியதும், இருவினைக்காற்றினா லனுபவிக்கப்படும் பலபொருள்களினும், ஆசையுடையதாய்ச் சுழலும்படி செலுத்தப்பட்ட இராசதகுணபரிணாமமுமாகிய மனதின் நிலைமை க்ஷிப்தமெனவும், நித்திரை (உறக்கம்) ஆலஸ்யம் (சோம்பல்) பிரமோகம் (மயக்கம்) நெடுநீர் (வறிதுகாலந்தாழ்த்தல்) முதலியவற்றோடு கூடிய தமோகுண பரிணாமமாகிய மனதின்நிலைமை மூடமெனவும், எப்போதாயினு மோர்போது தியானப்பிரவிருத்தியின் வலியால் சமாதிநிலையையடைந்தும், அந்நிலை வேகமாகியகாற்றினால் சலிக்கப்படுந் தீபம்போலவிக்ஷேபப்பிரதானத்தால் ஸ்திரப்படாமல் பஹிர்முகப்பட்டு விஷயங்களிற் சுழலுகின்றநிலைமை விக்ஷிப்தமெனவும், சமாதியில்அந்தக்கரணத்தின் அதீதபரிணாமமும், வர்த்தமானபரிணாமமும், பிரஹ்மத்தையடைந்து சமானாகாரமாகிறது. அல்லது இயமாதியட்டாங்கயோகப்பயிற்சியின் வலியால் ஒரேவஸ்துவில் இடைவிடாது தொடர்ந்துசெல்லும் வெள்ளம்போலச் செல்லும் அந்தக்கரணத்தின் சஜாதிய விருத்திப்பிரவாகம் ஏகாக்ரமெனவும் மனம் தன்னை மறந்து சோர்ந்துபோகாமல் விழித்திருந்தும் அன்னியமான ஓர்விடயத்திலும் உணர்ச்சி பிறவாதிருத்தலும், அவ்வுணர்ச்சி யொருகால்வேண்டும்போது பிறப்ப

தற்கு ஏதுவாகிய அதன்காரியம் பீஜம்போல வாசனாமாத்தி
ரையில் சேடப்பட்டுக் கெடாதுநிற்றலுமாகிய அங்கிலை நிருத்
தமெனவும், முன்னர்க் கூறிய க்ஷிப்தம் மூடமிரண்டற்கும்
சமாதியி லதிகாரமில்லையெனவும், மத்தியிற்கூறிய விக்ஷிப்தத்
துக் கதிகாரமுண்டெனவும், ஈற்றிற்கூறிய ஏகாக்கிரமும், நிரு
த்தமும் சமாதியைச் சார்ந்துள்ளனவெனவும் யோகசாஸ்திர
ங்கள் கூறுகின்றன. அவைகளை உய்த்துநோக்குமிடத்துச்
சமாதியில் அதிகாரமில்லாததாகச் சொல்லப்பட்ட இராகாதி
தோடத்தோடுகூடிய க்ஷிப்தமே இங்கே சமாதிக்கு விக்
கினமாக இருக்கிறதெனச் சொல்லப்பட்ட தீவிர இராகத்து
வேஷங்களால் துக்கத்தில் மூழ்கியிராநின்ற கஷாயமாகும்.
ஆகையால் சமாதியில் அதிகாரமில்லாத க்ஷிப்தம்போலக்
கஷாயமும் அதிகாரமில்லாததே யாகும். இங்ஙனம் சமா
தியில் அதிகாரமில்லாத கஷாயம் சமாதிக்கு விக்கினமாக
இருக்கிறதெனல் அரசன் நித்திரைசெய்யும் அந்தப்புரத்து
க்குச்செல்லும் அதிகாரமின்றிய வெட்டியான், அரசன் நித்
திரைக்கு விக்கினமாக இருக்கின்றானெனல்போல் விருத்தமா
மெனின். (188)

விடை:—இராகாதிகள் பாஹியம், ஆந்தரம், வாசனை
யென மூவகைப்படும். வர்த்தமானகாலத்திலுள்ள ஸ்திரீபுத்
திர தனாதிகளைப்பற்றி வருவனவாகிய இராகத்துவேஷாதிகள்



பாஹியமாகும். சென்றகால வருங்காலங்களைப்பற்றிச் சிந்
தனாரூபமாக வராநின்ற மனோராச்சியம் ஆந்தரமாகும்.
அனேக சன்மங்களில் அனுபவிக்கப்பட்டிருந்த பாஹிய ஆந்
தர இராகத்துவேஷாதிகளின் சம்ஸ்காரம் வாசனையாகும்.
இவைகளில் பாஹிய ஆந்தர இராகாதிகள் க்ஷிப்தாந்தக்கரணத்
தி லுண்டாகின்றமையால் க்ஷிப்தாந்தக்கரணத்துக்குச் சமா
தியில் அதிகாரமில்லை. சன்மாந்திரங்களி லனுபவித்த இராகா
திகளின் சூட்சுமசம்ஸ்காரமாகிய வாசனை, விக்ஷிப்த அந்தக்
கரணத்தினு மிருக்கக்கூடும். இந்த இராகத்துவேஷாதிகளின்
சம்ஸ்காரங்களுக்குக் கஷாயமென்று பெயரேயன்றி, இராகத்
துவேஷங்களுக்குக் கஷாயமென்று பெயரில்லை. இந்தச் சம்ஸ்
காரம் அந்தக்கரணம் நீங்குகிறவரையில் நீங்குகிறதில்லை;
சமாதிகாலத்தினுமிருக்கும். இருக்கினும் இது அனுத்பூதம்,
உத்பூதமென இரண்டாயிருக்கும். அனுத்பூதமென்பது
அடக்கமாயிருப்பது. உத்பூதமென்பது வெளிப்படுவது.
சமாதிக்கு அனுத்பூதசம்ஸ்காரம் விரோதமன்றாம். இராகா
திகளின் உத்பூதசம்ஸ்காரம் விரோதமாம். என்னையெனின்,
யோகியின் பிரயத்தினத்தால் விருத்தி அந்தர்முகமாகியும்
பிரஹ்மத்தை விஷயீகரிக்கவொட்டாமல் உத்பூதசம்ஸ்காரத்
தால் தகையப்படுகிறது. ஆதலால், உத்பூதசம்ஸ்காரமாகிய
கஷாயம் சமாதிக்குப் பிரதிபந்தமென்பது விருத்தமன்றென
அறிக.

வினா :—* ரசாஸ்வாதமாவது யாதெனின். (189)

விடை :—லய விக்ஷேப கஷாயங்களின்றிச் செய்யுந் தியானவலியால் அடையத்தக்க சவிகற்பசமாதியி லுதயமாகின்ற ஆனந்தானுபம், அல்லது விக்ஷேபதுக்க நிவர்த்தியா லுதயமாகிய ஆனந்தானுபவமென அறிக.

வினா :—இவ்விருவித ஆனந்தானுபவமாகிய ரசாஸ்வாதத்தையும் நிருவிகற்பசமாதிக்கு விக்கினமென்றது யாதினாலெனின் (190)

விடை:--ரசாஸ்வாதமென்னுந் திரிபுடி விகற்பசகித சோபாதிகமாகிய ஆனந்தானுபவத்தைத் தியாகம்பண்ணாமல் இதுவே நிருபாதிகமான பிரஹ்மானந்தமெனக் கருதி, அவ்வானந்தானுபவத்திற்றானே யோகியானவன் திருப்தியடைந்துவிடில் அவனுக்கு விருத்தி பிரஹ்மத்தில் லயமாய்த் திரிபுடிவிகற்பமின்றிய நிருவிகற்பசமாதியும் அதனாலுண்டாவதாகிய நிருபாதிகப் பிரஹ்மானந்தானுபவமும் சித்தியாமற்போய்விடும்: ஆதலினென அறிக.

வினா :--விக்ஷேபதுக்க நிவர்த்தியில் ஆனந்தானுபவமுண்டென்பதும் அவ்வானந்தானுபவத்திற்றானே திருப்தியடைந்

* ரசம்-சுகம்; ஆஸ்வாதம்-அனுபவம்.



துகொண்டிருப்பவனுக்கு நிருபாதிகமாகிய பிரஹ்மானந்தஞ் சித்தியாதென்பதும் எங்ஙனமெனின். (191)

விடை :--சுமைசுமப்பவனுக்குச் சுமையை யிறக்கிவிடுதலால் ஆனந்தமுண்டாகிறது. அவ்வானந்தத்துக்குச் சுமையாலுண்டாகிய துக்கநிவர்த்தியே காரணமாகும். இஃதன்றிச் சர்ப்பத்தாற் காக்கப்பட்டுப் பூமிக்குளிராநின்ற புதையலை யெடுக்க முயன்றவனுக்கு நெடுநாளாகத் தடையாக இருந்த சர்ப்பம் நீங்கிவிட்டபோது ஆனந்த முண்டாகிறது. அப்போது அவன் சர்ப்பநிவர்த்தியாலுண்டாகிய ஆனந்தத்திற்றானே திருப்தியடைந்துகொண்டு புதையலையெடுக்கு முயற்சியைவிட்டுவிடில் புதையல்கிடைத்தலா லுண்டாகும் ஆனந்தம் அவனுக்குண்டாகாது. அதுபோல, அத்வைதப் பிரஹ்மரூபமாகிற புதையலை யடைதற்குத் தடையாயுள்ள, தேகாதியனாத்மபதார்த்தப்பிரதீதிரூப விக்ஷேபமாகிற சர்ப்பநிவர்த்தியா லுண்டாகும் அவாந்தரானந்தானுபவமாகிய ரசாஸ்வாதத்திற்றானே திருப்தியடைந்துகொண்டு அத்வைதப் பிரஹ்மரூபமாகிய புதையலையடைதற்கு முயலாது விட்டுவிடில் அத்வைதப் பிரஹ்மப்பிராப்தியா லுதயமாகும் நிருபாதிகமாகிய பிரஹ்மானந்தஞ் சித்தியாதென அறிக.

வினா :—ரசாஸ்வாதத்தை யெதனால் நிவர்த்தி செய்யலாகுமெனின். (192)

விடை :—அதிசூக்குமமாகச் சித்தசலனமின்றி யூகிக்கின்ற விவேகத்தினாலும் ஈசுவரகிருபையினாலுமென அறிக.

வினா :—நான்காம் பிரயோசனமாகிய துக்கநாசமாவது யாதெனின். (193)

விடை :—இகலோகதுக்க பரலோகதுக்கங்களாகிய இருவகைத் துக்கங்களுமில்லாமற் போவதென அறிக.

வினா :—இகலோக பரலோக துக்கங்களெவை? அவைகள் சீவன்முத்தர்களுக்கில்லாமற் போனது யாதினாலெனின். (194)

விடை :—தூலதேகத்தைப்பற்றிய கபவாதபித்த வித்தியாசத்தாலாகிய வியாதிகளினாலும் சூக்குமதேகத்தைப்பற்றிய காமக் குரோத லோப மோக மத லச்சை பயமாதிகளினாலும் காரணதேகத்தைப்பற்றிய அறியாமையினாலும் வரப்பட்ட தாபங்களே இகலோகதுக்கங்களாகும். அஞ்ஞான சந்தேக விபரீதங்களின்றி அசங்க சித்துருபமாகிய பரமாத்ம சொரூபமே நாமெனத் திடமாயறிந்து சாக்ஷாத்கரித்துச் சித்த



சாந்தமுற்றுப் பிரஹ்மமாத்திரமாக இராநின்ற சீவன்முத்தர்களுக்குச் சீவேசுரசகங்கள் பொய்யாய்ப்போயினமையால் புசிக்கின்றவனாகிய போத்துருவும் புசிக்கப்படுவனவாகிய போக்கியங்களும் நட்டமாய்விட்டன. ஆதலின், சரீரத்திரயங்களைப்பற்றி வராநின்ற இகலோக துக்கங்கள் தைலமில்லாத தீபம்போல் நாசமாயின. புண்ணியமென்று வரும் பாவமென்று போமென்னும் சிந்தனாரூபமான தாபமே பரலோக துக்கமாகும். ஞானாக்கினியினால் சஞ்சிதகன்மம் நெருப்புப்பற்றிய பஞ்சுபோல் வெந்துபோயினமையினாலும் சீவன்முத்தர்கள் கமலபத்திரோதகம்போல புண்ணிய பாவகன்மங்களைப் பொருந்தினும் பொருந்தாதவர்களாயும் காஷ்டத்தில் நெருப்பிருக்கினும், நெருப்பிற் காஷ்டமிராததுபோல ஓரோர் காலத்திற் கன்மவிவகாரங்களிற் றாங்களிருக்கினும் தங்களிற் கன்மவிவகாரங்களில்லாதவர்களாயுமிருத்தலால் நெருப்புப்பற்றிய பருப்பதத்தை மிருகபட்சிகள் சேராதனபோல சீவன்முத்தர்களை ஆகாமிய கன்மங்கள் சேராமையினாலும் அவர்கட்குப் புண்ணிய பாவசிந்தனாரூபமான பரலோகதுக்கங்கள் நாசமாயின. ஆதலின் இவ்விருவகைத் துக்கங்களுமில்லாமற் போனதே நான்காம் பிரயோசனமாகிய துக்க நாசமென அறிக.

வினா :—ஐந்தாம் பிரயோசனமாகிய சுகாவிற்பாவமாவது யாதெனின். (195)

விடை :—சீவன்முத்தர்கள் ஞானசாக்ஷாத்கார பலத்தால் ஆவரணவிக்ஷேபம் நீங்கியுள்ளார்களானமையால், அளவின்றிய போகங்களை அளவின்றிய பேர்களாயிருந்து நாமொருவனே அனுபவிக்கிறேமென்னும் பூரணபாவனையினுல் அவர்கள் மனது ஆனந்தசொரூபமாகிய பிரஹ்மத்திற் க்ஷீரோதகம்போலேகரசமாகக்கலந்து சூக்குமமாகச்சேடித்திருக்கும். இங்ஙனஞ்சேடித்திராநின்றமனதில் மனுடானந்தமுத விரணியகருப்பானந்தம்வரை ஒன்றற்கொன்று நூறுபங்கு உத்தரோத்தரமாகவுள்ள பதினொருவகை ஆனந்தங்களும் ஓர் சிறிய திவலையென்னும்படியான அபாரமாகிய மகோததிபோன்ற பிரஹ்மானந்தம் ஆவிர்ப்பவிக்கிறது. இதுவே சீவன்முத்திக்குப் பிரயோசனமாகிய சுகாவிற்பாவமென அறிக.

வினு :—துக்கநாசமும் சுகாவிற்பாவமும் தத்துவஞானத்தால் சித்தித்துள்ளனவாதலின் தத்துவஞானத்துக்குப் பிரயோசனமாகுமேயன்றிச் சீவன்முத்திக்குப் பிரயோசனமாகாதெனின். (196)

விடை :—தத்துவஞானத்தாற் றுக்கநாசஞ்சுகாவிற்பாவமுண்டாயிருக்கினும் எப்படித் தத்துவஞானம் ஐயவிபரீ



தங்களாற் கெடுதியுருமல் சீவன்முத்தியா விரக்ஷிக்கப்படுகிறதோ அப்படித் துக்கநாசம் சுகாவிற்பாவங்களும் விக்ஷேபத்தாற் கெடுதியுரும விரக்ஷிக்கப்படுகின்றன. ஞானரக்ஷைபைப்போல துக்கநாசசுகாவிற்பாவங்களும் சீவன்முத்திக்குப் பிரயோசனமாகுமென அறிக.

வினு :-சீவன்முத்தர்களுக்கு ஆகாமியசஞ்சிதகன்மங்கள் நீங்கினும் பிராரப்தகன்மங்கள் நீங்காதிருக்கின்றமையால் மேலுஞ் சன்மத்தை யுதிப்பித்தற்குக் காரணமாகாதோவெனின். (197)

விடை:—வறுபட்ட வித்து தினிக்கு மாத்திரம் உபயோகமாகுமேயன்றி அங்குரத்தை யுதிப்பித்தற்குக் காரணமாகாததுபோல சீவன்முத்தர்பாலிராநின்ற பிராரப்தகன்மம் ஞானக்கினியாற் றகிக்கப்பட்டுப் போயினமையால் போகானுபவத்துக்குமாத்திரம் காரணமாகுமேயன்றி மேலுஞ் சன்மத்தை யுதிப்பித்தற்குக் காரணமாகாதென அறிக.

வினு :-சீவன்முத்தர்கள் பிராரப்தக்ஷயத்தில் அடையத்தக்கது யாதெனின். (198)

விடை :—சரீரோபாதிகள் விடுபட்டு அதீதானந்தமயப் பிரஹ்மசொரூபமாகி அகம் புறம் பெயர் சாதி குறிகளின்றிப் பொருளெப்படியோ அப்படியே யிருப்பதாகியவிதேகமுத்தியென அறிக.

ஜீவன்முத்திநிரூபகம் முற்றிற்று.

நாஞ்சிவவாதக்கட்டளைவியாக்கியானம் முற்றிற்று.

சிதம்பரதேசிகன் திருவடி வாழ்க.

